டாக்டர் நா. மகாலிங்கம்

திருஞான சம்பந்தர்



சுந்தரர்



திருநாவுக்கரசர்



# ஞானபரம்பரை

தொகுதி 1

வர்த்தமானன்

அருட்செல்வர்

டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள்

வழங்கும்

# ஞான பரம்பரை

அருளாளப் பெருமக்களின்

வாழ்வு – வாக்கு – பணி

பற்றிய நூல் தொகுப்பு

## தொகுதி ஒன்று

வர்த்தமானன் பதிப்பகம்

சென்னை – 17.

முதற் பதிப்பு : 2006
*(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)*

இரண்டாம் பதிப்பு : 2009
*(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)*

மூன்றாம் பதிப்பு : 2014
*(வர்த்தமானன் பதிப்பகம்)*

பத்து தொகுதிகளும் சேர்த்து
**விலை ரூ. 2500/-**

*வெளியீடு :*
**வர்த்தமானன் பதிப்பகம்**
21, இராமகிருஷ்ணா தெரு, சென்னை -17.

*அச்சிடல் :*
அருணா கிராபிக்ஸ், சென்னை -17. போன் : 24345058
ஈஸ்வரி ஆப்செட், சென்னை -5. போன் : 28480481, 42157817

# அருட்செல்வர் முன்னுரை

ஞானம் என்றால் என்ன?

மெய்யுணர்வினை – செம்பொருளைக் கட்டிக்காப்பது ஞானம். ஞாத்தல் என்றால் கட்டுதல். ஞாண் கட்டும் கயிறு என்று பொருள்படுவதைக் காணலாம்.

ஐம்புலன்களைக் கட்டி உள்ளத்தை ஓரிடத்தே நிறுத்துவது ஞானம்.

திருவள்ளுவர்,

*"சென்ற இடத்தால் செலவிடா தீது ஒரீஇ*
*நன்றின்பால் உய்ப்பது அறிவு"*

என்கிறார்.

புலன்களை அவை மேயும் பக்கமெல்லாம் அலையவிடாமல் தடுத்து, ஒரு நல்ல குறிக்கோளோடு பிணைப்பது அறிவு என்பது இத்திருக்குறளின் பொருள்.

ஆன்மிகவாதிகளின் குறிக்கோள் "பிரமத்தில் - பரம்பொருளில் லயிப்பது - ஒன்றுவது"; அறிவியல்வாதிகளின் குறிக்கோள் "ஒரு பௌதீகப் பொருளின் அல்லது நிகழ்வின் காரண காரியங்களை ஆராய்ந்து அவற்றை உறுதிசெய்து உலக நன்மைக்குப் பயன்படுத்துவது."

ஆன்மிகம்கூட அறிவியலின் ஒரு பகுதியே என்பார்கள். களங்கள் வேறானாலும் நோக்கம், சமுதாய நன்மையாகவே முடியவேண்டும்.

பாரதியார் மிக அழகாகக் கூறினார்:

*"ஊருக்கு உழைத்திடல் யோகம் - நலம்*
*ஓங்கிடுமாறு வருந்துதல் யாகம்*
*போருக்கு நின்றிடும்போதும் - உளம்*
*பொங்கல் இலாத அமைதி மெய்ஞ்ஞானம்."*

உள்ளுணர்வாகிய மெய்யுணர்வால் உலக ஈடேற்றத்தைப் பற்றிச் சிந்திப்பது ஞானம்.

அவ்வறிவால் காணப்படுவது செம்பொருள். ஆகையால், ஞானியருடைய உபதேச மொழிகளைச் செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் என்பர்.

பாரதியார் கூறும் மெய்ஞ்ஞானம் வாய்க்கவேண்டுமானால் ஒருவன் தன் புலன்கள்மீது முழு அதிகாரம் செலுத்த வல்லவனாக வேண்டும்.

கண்ணபிரான் போர்க்களத்தில் பார்த்தனுக்குக் கீதையைப் போதித்தான். போர் தொடங்க ஆயத்தமாய் அணிவகுத்திருந்த போது 18 அத்தியாயம் கொண்ட முழு நூலைப் போதிப்பது சாத்தியமா எனில், சாத்தியமே! சீடனோ புலன்களை வென்ற புண்ணியன். ஆசிரியனோ கடவுளின் அவதாரம். அருளாளர்களுக்குக் காலம் இடம் அவர் வசத்திற்கு உள்ளாகும். ஒரு நொடியில் மாணவன் உள்ளத்தில் எழுந்த கேள்வி களுக்கெல்லாம் விடையும் கிடைத்தது, விளக்கம் கிடைத்தது.

கல்லால மரத்தின்கீழ் மௌனத்திலேயே கைவிரல் காட்டிக் குறிப்பினால் விளங்கவைக்கும் உபதேசம் மாணவர்களுக்குக் கிடைத்தது. வள்ளற்பெருமான் தமக்கு ஒரு நொடிப்பொழுதிலே இறைவன் சாகாக்கலையை உணர்த்தினாரெனக் கூறுவார்.

ஆக, மெய்ஞ்ஞானிகள் ஐந்தவித்தவர் என்பதும் அருள் ஞான வித்தகர்கள் என்பதும் அவர்கள் காலத்தையும் இடத்தையும் கட்டியாள வல்லவர்கள் என்பதும் தம் அனுபவங்களைத் தம் மாணவப் பரம்பரை வாயிலாக இன்றுவரை உலகிற்கு வழங்கி வருகின்றனர் என்பதும் நாம் உணரலாம்.

இந்திய நாட்டில் அப்படி என்னதான் இருக்கிறது என்று கேட்டால், பாரதியார் கூறிய உரை நம் நினைவில் நிற்க வேண்டும்:

*பல்விதமாயின சாத்திரத்தின் மணம்*
*பாரெங்கும் வீசும் தமிழ்நாடு,*

*பன்னரும் உபநிட. நூல் எங்கள் நூலே,*
*பார்மிசை ஏதொரு நூலிது போலே!*

*பூரண ஞானம் பொலிந்த நன்னாடு*
*புத்தர் பிரானருள் பொங்கிய நாடு.*
*பாரத நாடு பழம்பெரு நாடு.*
*பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே*

என்று போற்றுகிறார்.

இன்றைய நிலை என்ன?

*புத்தம் புதிய கலைகள் - பஞ்ச*
*பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்*
*மெத்த வளருது மேற்கே*
*அந்த மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை*

என்பது ஓரளவு உண்மைதான். அறிவியல் மேற்கே தோன்றி வாழ்க்கை நிலை மெத்தவும் உயர்ந்துவருகிறது. எங்கும் தொழில்கள் வளர்கின்றன. செல்வம் கொழிக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் அமெரிக்காவிற்கும் ஆஸ்திரேலியாவுக்கும் நம் இளைஞர்கள் தங்கள் வாழ்க்கை முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு, 'விமானமே வீடுபேற்றுக்குரிய தவம்' என்று காத்துள்ளனர்.

எல்லாமிருந்தும் அங்கே வழிகாட்டுவாரில்லை! வாழ்வில் எல்லாப் போகங்களையும் அனுபவிக்க அங்கே வசதி இருக்கிறது. அந்த இன்பங்கள் நிறைவளிக்காமல் மக்கள் மன இறுக்கத்தால் அவதிப்படுகிறார்கள். அதிகார போதை ஒரு புறம். மித மிஞ்சிய போகத்தால் குடும்ப வாழ்க்கை சீர்குலைந்து போவது ஒருபுறம். அன்புப் பிணைப்பு அறவே மாறி, வெற்று முகமன் வார்த்தைகளாக அவற்றின் முகவரி அமைந்துவிட்டது.

இதனால்தான் மகான்களைத் தேடி இந்தியா நோக்கி வருகிறார்கள் வெளி நாட்டவர்கள். அப்படியானால் இந்துமதம் என்று சொல்லப்படுகிற இந்தியப் பண்பாட்டினைக் காலங்காலமாகக் கட்டிக் காத்து வருகிறவர்கள் யார்? அதுதான் நமது ஞான பரம்பரை. 'ஞானம் என்ற சொல்லுக்கே கட்டிக்காத்தல் என்றுதான் பொருள்' என்று முன்பு சொன்னோம்.

திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரைச் சமய குரவர் என்கிறோம். குரவர் என்றால் முதல்நிலையில் பெற்றோர்கள் என்று பொருள்படும். இரு முதுகுரவர் என்றால் தாய் தந்தையர் என்று பொருள்.

அடுத்த நிலையில் ஆசிரியன் குரவனாகிறான். குரவன்தான் குரு. பெரியவன் என்று பொருள். அருமையாகக் கிடைப்பதுதான் பெருமை. ஆகையால் அருமையுடையன் ஆசிரியன் ஆகிறான். ஆசிரியன் = குரு.

இந்தியப் பண்பாடு குருவைப் போற்றுவது

*தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே*

என்று திருமந்திரம் கூறுகிறது.

தெளிவு என்பது அறிவு - தெள்ளிய அறிவு - குற்றங்களைந்து இதுவென்று அறிந்து குணம் கொள்ளும் அறிவு - அதாவது ஞானம். ஆசிரியன் ஞானத்தைத் தருகிறான். எழுத்தறிவித்தவன் இறைவன் என்று கூறுவார்கள்.

*கல்வி கொடுத்தவன் வித்தியா குரு*
*தீக்கை அளிப்பவன் தீட்சா குரு*
*ஞானம் அளிப்பவன் ஞான குரு*

தீட்சா குரு தனிப்பட்டவனுக்கு ஞானம் அளிப்பவன். ஞான குருமார் சந்ததிகளுக்கே ஞானம் அளிப்பவர்கள். அவர்கள் உலக குரு என்றே சொல்லப்படுபவர்கள். புத்த பெருமான், திருஞானசம்பந்தர், ஏசு பெருமான், நபிகள் நாயகம், வள்ளற் பெருமான் முதலியயாவரும் உலக குருக்கள்.

மெய்கண்டார் முதலியவர்களைச் சந்தான குரவர் என்கிறோம். சந்தானம் என்பது தொடர்ச்சி. நமது மரபு தொடர்வது பிள்ளைகளால்தானே! ஆகையால், பிள்ளைகளுக்குச் சந்தானம் என்று பெயர்.

சந்தான ஆசாரியார்கள் சைவ சமய குரவர்களின் கருத்துக்களைத் தந்தை > மகன் என்னும் உறவுவழியே பரப்புவதை மேற்கொண்டார்கள். ஆழ்வார்கள் கூறிய கருத்துக்களை ஆச்சாரியர்கள் மக்களிடையே பரப்பினார்கள்.

இந்த ஞானத்தை இறையருளால் பெற்ற சான்றோர்கள் தங்கள் மாணவர்களுக்குச் சொன்னார்கள். அவர்கள் ஞானத்தைப் பெறக் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறைகளைப் பரம்பரையில் காப்பாற்றிவந்தார்கள். இந்தப் பரம்பரையில் வந்தவர்களில் சிலர் மடங்களை உருவாக்கினார்கள். வைணவர்களும், சைவர்களும் இவர்களில் அடங்குவார்கள்; நூல்களை இயற்றினார்கள். போதனைகள் செய்தார்கள். சமூதாயத் தொண்டுகள் செய்தார்கள். சிலர் இயக்கங்களையே உருவாக்கினார்கள். குரு நானக் சீக்கிய இயக்கம் தோன்றக் காரணமானார். குரு கோவிந்த சிங் முதலாக இந்த இயக்கம் ஒரு சமயமாகவே உருவாகிவிட்டது. வள்ளற்பெருமான் அவ்வாறு ஓர் இயக்கத்தை உருவாக்கியவர்தான்.

பகவான் ரமணர் முதலியவர்களின் கொள்கை உலகெங்கும் பரவினாலும் மடங்களாக - இயக்கங்களாக மாறாமலேயே ஆன்மிக நாட்டமுடையவர்களுக்கு வழிகாட்டி வருகின்றது.

எப்படியிருந்த போதிலும் பாரதப் பெரும் பண்பாடு என்னும் ஜீவ நதியில் தோய்ந்து நீராடித் திளைத்து மகிழும் துறைகளாக இந்த ஞான பரம்பரை விளங்குகிறது.

வள்ளற் பெருமான் 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ' என்று தம்மை அந்த ஞான பரம்பரையில் வந்தவராகக் காட்டிக்கொள்வதைக் காண்கின்றோம்.

பரம்பரையில் பெறுவதைத்தான் நாம் சிறப்பாக ஞானம் என்று கொள்கிறோம்.

பாரதியார் சொல்கிறார் : 'ஒரு தேசத்தின் நாகரிகத்துக்கு அந்தத் தேசத்தின் இலக்கியமே மேலான அடையாளம்.'

இந்திய நாட்டின் மிகப் பெரிய அறிவுக் கருவூலமாகப் பெரியோர்கள் செய்த இலக்கியங்கள் கொட்டிக் கிடக்கின்றன. வடமொழியிலும் தமிழிலும்தான் ஆயிரக்கணக்கான நூல்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வற்றாத அறிவூற்றாக விளங்கிவருகின்றன.

வேதம், உபநிடதம், அவைகளிலிருந்து பிறந்த அறிவாராய்ச்சி நூல்கள், மனித வாழ்க்கையின் படப்பிடிப்புக்களாகிய இலக்கியங்கள், தேவாரம், திவ்வியப்பிரபந்தம் முதலாகிய அருள் நூல்கள், தத்துவ சாத்திர நூல்கள், புராணங்கள், இதிகாசங்கள் என இந்நூல்கள் பல வகைப்படுகின்றன. பெரியவர்களின் வாக்குகள் அல்லாமல் அவர்கள் வாழ்க்கையும் இந்த இலக்கியங்களில் ஒரு பகுதியே. அவை பெரியபுராணம், பக்த விஜயம் முதலிய நூல்களாக அமைகின்றன.

இந்தியத் தத்துவ ஞானம் வேதங்களில் வேரூன்றி, உபநிடதமென்னும் மரமாய் வளர்ந்து, பல கிளைகளைப் பரப்பி, அரிய கனிகளை வழங்கிவந்துள்ளது. இந்த மரம் இன்னும் வேர்களையும் விழுதுகளையும் நெடுகப் பரப்பி இந்த நிலத்தின் பண்பாட்டைக் காப்பாற்றிவரும் என்பது உறுதி.

விவேகானந்தர் சிகாகோ மாநாட்டில் முழங்கினார்: ''ஒரு ஹிந்து நடந்து செல்கையில் அவன் தனியாக நடந்து செல்வதில்லை. அவனுக்குப் பின்னால் ஐந்தாயிரம் ஆண்டுக் கலாசாரம் அணிவகுத்துச் செல்கிறது'' என்றார்.

மாக்ஸ்முல்லர் கூறியதை இங்கு நாம் நினைவுகூர்வது நல்லது.

'மறுபிறப்பு என்று ஒன்று உண்டென்றால், நான் இந்தியாவில்தான் பிறக்க ஆசைப்படுகிறேன். அதுவும் ஒரு புழுவாகப் பிறந்தால் கூடப் போதும்.' தம் நண்பர்களிடம் இவ்வாறு எழுதிவைக்குமாறு அவர் கூறிச் சென்றார்.

இந்து மதம், மாணிக்கவாசகர் சொல்வதைப் போல், ''முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்; பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியது;'' என்றுமிருப்பது. அதனுடைய உலகளாவிய பொருள் தன்மையால் யாவரையும் தன் வசமாக்கும் இயல்புடையது. சத்தியம் எந்தத் திசையிலிருந்து வந்தாலும் அதை வரவேற்கத் தன் கதவுகளை அகலத்திறந்து வைத்துள்ளது. ஆகவே, நம் ஞானிகள் இந்தியாவுக்கு மட்டுமல்ல. உலகத்துக்கே சொந்தமானவர்கள்.

''இந்து தேசத்திலுள்ள ஜீவனை யுகயுகாந்தரங்களாக அழியாதபடி பாதுகாத்து வருவோர் அந்த யோகிகளே. கடூரமான கலியில் உலகம் தலைகீழாகக் கவிழ்ந்துபோகும் சமயத்தில்கூட இந்துஸ்தானம் அழியாமல் தானும் பிழைத்து மற்றவர்களையும் காக்கக்கூடிய ஜீவசக்தி இந்நாட்டிற்கு இருப்பது அந்த யோகிகளின் தபோபலத்தாலன்றி வேறில்லை.''

— குள்ளச்சாமியார் என்னும் சித்தர் வாக்காக இவ்வாறு சொல்லிக் கொண்டேவரும் பாரதியார், ''மனவலிமையும் பொருள் வலிமையுமற்ற இந்திய அரசர்களாலோ, வேதமந்திரங்களைப் பொருள் தெரியாமல் திரும்பத் திரும்பத் சொல்லிக்கொண்டிருக்கும் பிராமணர்களாலோ, கொடைக்குணம் மறந்த வணிகர்களாலோ, மூடத்தன்மை மிக்க மற்றவர்களாலோ இந்தியாவுக்கு அமரத்தன்மை கிடைக்கவில்லை'' என்கிறார்.

இந்து தர்மத்தின் பெருமையைச் சொல்ல வந்த பாரதியார்,

''எல்லா உயிர்களிலும் நானே யிருக்கிறேன் என்றுரைத்தான் கண்ணபெருமான். எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையை இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் ஆம் இந்தியா உலகிற்களிக்கும். வாழ்க'' என்று கூறினார்.

அமர கவியின் கண்களில் நமது ஞானபரம்பரை ஒன்றே சர்வ மத சமரசத்தைப் பேணிப் பாதுகாக்க வல்லது; அது ஒன்றே உலகிற்குத் தலைமை தாங்கி வழிகாட்டி உலகையே வாழ்விக்க வல்லது என்ற உண்மை தெரிகிறது.

அவரது வாக்குப் பொய்க்கவில்லை. பிற நாடுகளுக்கு நம் பெரியோர்கள் சென்றார்கள். சுவாமி விவேகானந்தர், சுவாமி இராமதீர்த்தர், பரஹம்ஸ யோகானந்த கிரி, இன்று மகேஷ் யோகி, முக்தானந்தர், பிரபுபாத பக்திவேதாந்த மகராஜ், சுவாமி சச்சிதானந்தர், பகவான் ரஜனீஷ், ரவிசங்கர், சின்மயாநந்தர், வேதாத்திரி மஹரிஷி ... என்று எத்தனை எத்தனை பேர்!

இவர்கள் சென்று ஆன்மிக ஒளியைப் பரப்பினார்கள். இங்கிருந்தவாறே தம் கதிரொளி பாய்ச்சியவர்களில் ரமண மகரிஷி, அரவிந்தர், சிவானந்தர், சத்திய சாயி இவர்களைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். எண்ணற்ற வெளிநாட்டவர்கள் தங்கள் ஒளியிழந்து, வாழ்க்கைக் களையிழந்து, மன இறுக்கத்தின் பிடியிலிருந்து விடுபட வேண்டுமானால் இந்தியாவே கதி என்று இங்கு வருகிறார்கள்.

சுவாமி சச்சிதானந்தர் இரண்டு லட்சத்திற்கு மேலான அமெரிக்கர்களின் வாழ்க்கைமுறையைச் செம்மைப்படுத்தி யிருக்கிறார்கள். வெளிநாட்டு உபதேசியார்கள் பொதுவாகக் கடைப்பிடிக்கும் மதமாற்ற வேலையை இவர்கள் செய்வதில்லை. ஒழுக்கம், இறையுண்மை, சமுதாயத் தொண்டுணர்வு என்பனவற்றில் மட்டும் அவர்களுடைய மனம் செல்லும் வண்ணம் மடை மாற்றினார்கள்.

ஞான பரம்பரையைக் காத்துவந்த நல்லாசிரியர்கள் வாழ்ந்த காலத்தைப் பலவாறு ஆராய்ந்து நிர்ணயித்துள்ளார்கள். புத்தர் முதல் சேக்கிழார்வரை இந்த நிலையே நீடிக்கிறது. பெரியோர்களின் வாழ்க்கை வரலாறு காலநெறிப்படி முறையாக எழுதப்படாத காரணமென்ன? இதற்கு முக்கியக் காரணம் ஒன்றைச் சொல்லலாம். மனிதர்கள் வாழ்வைக் காட்டிலும் மனிதர்களின் வாக்கு அல்லது அவர்கள் கடைப்பிடித்த நெறிகளே மேலானவையாக நம் முன்னோர்க்குத் தோன்றியிருக்க வேண்டும். புத்தருடைய வாழ்வைவிட அவர் போதனைகளே நாம் நினைவில் வைக்க வேண்டியவை. இராமானுஜர் செய்த அற்புதங்களைவிட அவர் தொண்டே நாம் போற்ற வேண்டியது. எனினும், பெரும்பாலும் உலகத்தின் ஏனைய பகுதிகளில் பெரியோர்களின் வாழ்க்கைகளைக் கால முறைப்படி நன்கு கணித்துப் பதிவு செய்திருக்கிறார்கள். நாம் அதுபோல நம் பெரியோர்களின் வரலாற்றைச் செம்மையாகப் பதிவு செய்து வைப்பது இன்றைய நிலையில் கட்டாயமானதுதான்.

இவர்களுடைய கால வரலாற்றின் பின்னணியில் நமது இதிகாச புராண வரலாறுகளின் காலங்கள் மறு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இந்த மறு ஆய்வு அடிப்படையில் சங்க காலச் சான்றோர்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் காலங்களை வரையறுத்து நிறுவும் முயற்சியையும் நாம் இப்போது செய்துகொண்டுவருகிறோம் என்பதைத் தெரியப்படுத்திக்கொள்கிறேன்.

நம் பெரியோர்கள் வானத்தில் சப்தரிஷி நட்சத்திரங்களின் இயக்கத்தைக் கவனித்து, வைவஸ்தவ மனுகாலத்திலிருந்து கணக்கிட்டுவந்திருக்கிறார்கள்.

சப்தரிஷி மண்டலத்தின் இயக்கத்தை வைத்தே சப்தரிஷி சகாப்தம் என்பது வைவஸ்தவ மனுவின் காலத்தில் தொடங்கப்பட்டது. அது கி.மு. 15261 ஆகும்.

இதனடிப்படையில் வழக்கத்தில் உள்ள யுகக்கணக்கு முறையில் திருத்தம் காண முடிந்தது. இப்போது நடைபெறுவதாக நாம் சொல்லும் கலியுகம் என்றோ முடிந்துவிட்டது. கிருதயுகம் முடிந்து, உண்மையில் இப்போது திரேதாயுகம்தான் நடைபெறுகிறது.

சென்னையில் நாம் அமைத்துள்ள அனைத்துலகத் தொன்மை வரலாற்று ஆய்வுக் கழகத்தின்மூலம் இந்த ஆய்வுகள் செய்யப் பட்டுவருகின்றன. அதன்மூலம் பழைய ஆய்வு முடிவுகள் திருத்தம் பெற்றன.

ஆதிசங்கரருடைய காலம் கி.மு. 509 என்றும், ஒரு சதுர்யுகம் 12160 ஆண்டுகள் கொண்டது என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

ஆழ்வார்களில் ஐந்து பேர் கிருஷ்ண பரமாத்மாவுக்கு முந்தியவர் என்று தெரிகிறது. சப்தரிஷி மண்டலம் (Great Bear) பற்றி இதுவரை வான நூலுள் விரிவான ஆய்வு செய்யப்படவில்லை. நாம் இப்போது அந்த ஆய்வுக்கு ஏற்பாடு செய்துள்ளோம். கூடிய விரைவில் சரியான கணக்குகள் நிர்ணயம் செய்யப்படும்.

பொள்ளாச்சி நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி வாயிலாக நூல் வெளியீட்டுப் பணி மிகச் சிறப்பாக நடந்துவருகிறது.

மாணவர்களுக்கு நமது இந்தியப் பண்பாடு நாகரிகம் குறித்த பாடத் திட்டத்தைப் பத்து ஆண்டுகளுக்குமுன் நடைமுறைப்படுத்தி, அதற்கான சிறுசிறு நூல்களைத் தக்கவர்களைக் கொண்டு அக்கல்லூரி வெளியிட்டது. அப்புத்தகங்கள் வேறு சில கல்லூரிகளுக்கு முன் மாதிரியாக அமைந்தன.

பழனியப்பா பிரதர்ஸ் நிறுவனத்தினர் நம்முடைய தேசியத் தலைவர்கள், விடுதலைப் போராட்ட வீரர்கள், பெரியோர்கள் வரலாறுகளைச் சிறுசிறு நூல்களாக வெளியிட்டார்கள்.

ஈரோடு திரு. ஸ்டாலின் குணசேகரன் அவர்கள் சுதந்திரப் போராட்ட வரலாற்று வீரர்களின் சரித்திரத்தை இரண்டு தொகுதிகளாக வெளியிட்டார்கள். அதுபோல் நமது இந்திய ஞான பரம்பரையைச் சேர்ந்த அருளாளர்கள் வரலாற்றைச் சிறு நூல்களாகக் கொண்டு வரவேண்டுமென்ற எனது விருப்பத்தைத் தமிழ்ச் சான்றோரும்

பேரறிஞருமாகிய டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களிடம் கூறி, நிறைவேற்றித் தருமாறு வேண்டினேன்.

என்னுடைய வேண்டுகோளை ஏற்று, மூதறிஞர் ம.ரா.போ. குருசாமி அவர்கள் நமது ஞான பரம்பரையைச் சேர்ந்த 30 அருளாளர்கள் - காரைக்காலம்மையார் முதல் சித்பவானந்தர் வரை - வாழ்க்கை பற்றியும் அவர்களின் வாக்குகள் பற்றியும் பல நல்லறிஞர்களைக் கொண்டு எழுதுவித்து, அரிய முறையில் மேற்பார்த்துத் தொகுத்து நூல்கள் வெளிவரச் சிறந்த முறையில் உதவியிருக்கிறார்கள்.

டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். நூல்களை அரிய முறையில் எழுதியுதவிய அறிஞர் பெருமக்களைப் பாராட்டுகிறேன்.

இந்த வரலாறுகளை ஐந்து தொகுதிகளாக* அழகிய முறையில் முதல் பதிப்பாக வெளியிட்ட பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், பதிப்புத்துறையில் உதவிசெய்த ஏனையோர்களுக்கும் எனது நன்றி.

முதல் பதிப்பு வந்து சில மாதங்களிலேயே பிரதிகள் தீர்ந்து விட்டன. இப்போது இரண்டாம் பதிப்பு எனது தலைமையில் இயங்கும் இராமானந்த அடிகளார் அறக்கட்டளை ஆதரவாலும் அந்த அறக்கட்டளையின் மூலம் நடைபெறும் குமரகுரு பொறியியல் கல்லூரியின் உதவியாலும் வெளிவருகிறது.

நூல்களை அற்புதமாக அச்சிட்டு முடித்த ருக்மணி அச்சக மேலாளர் திரு. பாலசண்முகம் அவர்களுக்கும், வேண்டிய படங்களைப் பயன்படுத்திக்கொள்ள உதவிய பெரியோர் களுக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தமிழ் உலகமும், இளைஞர் சமுதாயமும் இதனை வரவேற்றுப் பயனடைய வேண்டும் என்பது என் பேரவா.

நா. மகாலிங்கம்

*முதற் பதிப்பிற்கானது

# பதிப்புரை

## முதற் பதிப்பிற்கானது

மாணவர்களின் முழுமையான ஆளுமை வளர்ச்சிக்கு வெறும் ஏட்டுக்கல்விமட்டும் போதாது. அதனுடன் விழுப்பொருள் உணர்வும் (sense for higher values) மாணவர்களிடையே பதிந்திட வேண்டும் என்பது எங்கள் நிர்வாகத்தின் லட்சியமாகும். இந்தக் குறிக்கோளை முன் நிறுத்தி அறவியல் மற்றும் சமயம் முதலான செவ்வியல் கருத்துக்களை மாணவர்களிடையே பரப்பி வருகிறோம்.

அந்தப் பணியின் வளர்நிலையில் தமிழ் ஞானிகள் முப்பதுபேர்பற்றி நூல்கள் வெளியிட வேண்டும் என்று அருட்செல்வரவர்கள் விரும்பினார்கள். எங்களை எல்லா வகையிலும் வழிநடத்துகின்ற அருட்செல்வரவர்களின் விருப்பத்தை முழுமனத்தோடு ஏற்று, இந்த நூல்வரிசையை வெளியிடுவதில் எம் அறக்கட்டளை பெருமை கொள்கிறது.

இந்தப் பணியில் உறுதுணையாக இருந்து பணியாற்றிய பேராசிரியர் ம.ரா.போ. குருசாமிக்கும், அவருக்கு உதவியாகப் பிழைதிருத்தம் முதலான பணிகளை உவப்போடு செய்த பேராசிரியர் இருசுப் பிள்ளை, புலவர்மணியன், பேராசிரியர் தரணி பாஸ்கர், முனைவர் மனோன்மணி ஆகியோர்க்கும் எம் நன்றி உரியது.

வெளியிட்டுள்ள நூல்களை இளைஞர் உலகம் ஏற்றுப் போற்ற வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறோம்.

இராமானந்த அடிகளார் அறக்கட்டளை
கோயமுத்தூர்

## நுழையுமுன் ஒரு சொல்

நரை திரை இன்றி இளமை நலத்தோடு விளங்கிய முதியவர் பிசிராந்தையார்; அவர் தம் இளமைத் தோற்றத்துக்குப் பல காரணம் சொல்லியுள்ளார். அவற்றுள் ஒன்று: 'சான்றோர் பலர் யான் வாழும் ஊரே!' அதாவது, 'நான் வாழும் ஊரில் சான்றோர்கள் பலர் வாழ்கின்றனர்; அதனால் நரை திரை மூப்புத் தோன்றாமல் நான் வாழ்கிறேன்' என்கிறார். வாழும் முறையாலும் வழங்கும் மொழிகளாலும் மனநலம் காத்தவர்கள் அந்தச் சான்றோர்கள். அவர்களுடைய வாழ்க்கையைப் பார்த்தும் வாசகங்களைக் கேட்டும் பிசிர் என்ற ஊரில் இருந்தவர்கள் மனவளம் பெற்றிருந்தார்கள். மனவளம் பெற்றமையால் வாழ்க்கையில் நிறைவு இருந்தது. பொறாமை, பொய் போன்ற தீமைகள் சாராமல் அன்பு, அருள், அறம் போன்ற நல்லவற்றில் நாட்டம் கொண்டவர்களுக்கு முதுமை நோய் வாராது. இது பெரியோர் அனுபவ மொழி.

அத்தகைய சான்றோர்களின் வாக்கு, வாழ்வு, வழிகளைத் தெரிந்து போற்றினால், சமூக வாழ்வு சிறக்கும்; குறிப்பாக, இளைஞர்கள் நலம் பெற்று, நாட்டை நன்கு வளர்ப்பார்கள்.

இந்தக் குறிக்கோளை நெஞ்சில் நிறுத்தித் தமிழகத்துச் சான்றோர் சிலரைப் பற்றி நூல்கள் வெளியிடும் முயற்சியில் உருவானது இது.

நல்லிளைஞர் மனவளம் பெற்று - அறிவு, அறம், அன்பு, பண்பாடு ஆகியவற்றைப் பேணி, நாட்டுக்கு நலம் செய்வர் என்ற நம்பிக்கையோடு அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள் இந்த நூல் வரிசை பற்றித் திட்ட மிட்டார். அவர் தந்த திட்டத்தின் பயன் மக்களைச் சென்று அடைய நூல்களை வெளியிடும் பொறுப்பைப் பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி* நிர்வாகம் ஏற்றுக் கொண்டது.

பயன் பெறுக! பயன் பெறுக!

ம.ரா.போ. குருசாமி
ஒருங்கிணைப்பாளர்

---

*முதற் பதிப்பிற்கான செய்தி

புறச்சமயப் புயலிலே சிக்கியதோடு, வேத நெறியும் தமிழ் நெறியும் மயங்கிக் குழம்பிய காலத்தில் தெளிவூட்டிய திருப்பணிக்கெனவே அவதரித்தவர் திருஞானசம்பந்தர். போராட்டங்களுக்கிடையே புனிதப் பணியாற்றி வழிகாட்டிய ஆளுடைய பிள்ளையாராகிய திருஞானசம்பந்தரைப்பற்றி இந்த வரிசையில் நூல் வடித்திருப்பவர் மரபின் மைந்தன் ம. முத்தையா அவர்கள். பிறந்த குடும்பத்தால் மட்டுமல்லாமல் பின்பற்றும் நெறியாலும் மரபினைப் போற்றும் புதுமைச் சிந்தனையாளர் இவர்; மாத இதழ்கள் இரண்டின் ஆசிரியர். இளைஞர்களைக் கவர்ந்து, முதியவர்களின் பாராட்டுதலைப் பெற்றுள்ள இவர் பணியால் எதிர்காலம் வளம் பெறும் என்பது உறுதி.

சைவ நெறியாளர்க்கு அப்பன் ஒருவன்; சிவபிரான். அப்பர் ஒருவர்; திருநாவுக்கரசர். மருள் நீக்கியார் என்ற இயற்பெயரே சிறந்த ஒன்றுதான். அதன் மேலும் சிறப்புக்கு உரியவராகத் தேர்ந்து, சிவபெருமானால் 'நாவுக்கரசர்' என்று ஆக்கப் பெற்றவர். 'நமக்குத் தொழில் கவிதை, நாட்டிற்கு உழைத்தல், இமைப்பொழுதும் சோராதிருத்தல்' - இதுவே தம் வழி என்று 20ஆம் நூற்றாண்டில் பாரதியார் விளக்கினார். அந்த மகாகவிக்கு முன்னோடியாக 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று வாழ்ந்தவர் திருநாவுக்கரசர். 'அப்பரே' என்று திருஞான சம்பந்தரால் வணங்கப் பெற்றவர். ஆண்டவன் நெறியில் நிற்போர்க்கு அச்சமிராது என்பதை 'நாம் ஆர்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்' என்றபடி நிலைநாட்டியவர். அப்பரின் வாழ்வையும் வாக்கையும் வழிப்படுத்தி நூலாக வழங்கி யிருப்பவர் பேராசிரியர் அருள்நிதி இராம. இருசுப்பிள்ளை அவர்கள். தென்தமிழ்ப் புலமையும் தெய்வ நெறி வாழ்க்கையும் இருசுப் பிள்ளையை அடையாளம் காட்டுவன. இலட்சியத் தெளிவு கொண்டு, இலக்கிய / சமயத் தொண்டாற்றும் யோக குரு இவர். இவர் பணியால் வாழ்வின் பொருள் புரிந்தவர்கள் மிக மிகப் பலராவர்.

இறைவனையே தோழராகப் பெற்றவர் நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள். சீர்திருத்தத்தைப் பல பேர் மேடையலங்காரத்துக்காகப் பயன்படுத்துவர். ஒன்பதாம் நூற்றாண்டிலேயே சீர்திருத்தம் என்பது சொல்லலங்காரத்துக்காக அன்று, சொந்த வாழ்க்கையில் பதித்துக் கொள்வதற்குரியது என்பதில் ஊன்றி நின்றவர், ஆரூரர். பரம்பொருளாகிய சிவபிரானே 'தோழமையாக எம்மைத் தந்தனம்' என்று அருளப் பெற்ற அருளாளராகிய இவரைப்பற்றி இங்கே சொல்லோவியம் தீட்டித் தந்தவர் புலவர் மணியன். ஆம், புலவர்களிடையே மணியாய்த் திகழும் திரு. சுப்பிரமணியன். மகாவித்துவான் மூதுமுனைவர் ச.தண்டபாணி தேசிகரையாவிடம் குருகுலவாசியாய்த் தமிழ் பயின்றவர். ஆய்வாளர்க்கு உதவி புரியும் சொல்லகராதிகள் பல படைத்த அகராதி நாயகர் இவர்; ஆராய்ச்சிப் பாங்கு இயல்பாக வாய்த்த பாங்கினர்.



# தொகுதி ஒன்று

## திருஞானசம்பந்தர்

கலைமாமணி
மரபின் மைந்தன் ம. முத்தையா

## திருநாவுக்கரசர்

பேராசிரியர் இராம. இருசுப்பிள்ளை

## சுந்தரர்

புலவர் மணியன்

# திருஞானசம்பந்தர்

## பொருளடக்கம்

# திருஞானசம்பந்தர்

## 1. தென்னகத்தின் முதல் தமிழர் தலைவர்

சைவம், தென்திசையின் வாழ்க்கைமுறை; எத்துணையும் பேதமுறாது உலக உயிர்களின் ஈடேற்றத்திற்கு வழிகாட்டும் நன்னெறி. சைவத்தின் பெருந்தலைமைத் தெய்வம், தென்னாடு உடைய சிவனாகவும் எந்நாட்டவர்க்கும் இறைவனாகவும் போற்றப்படுவதும் இது கருதித்தான்.

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், நவீனமயமாதல், உலகமயமாதல் போன்ற சமூக மாற்றங்களின் போது, BE LOCAL, THINK GLOBAL என்றொரு வாசகம் வழங்கி வரலானது.

பண்பாட்டு அடிப்படையில் இதனினும் பலமடங்கு மேம் பட்ட கருத்தியலோடு பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே 'சிவம்' எனும் தன்மையின் செம்மாந்த தனித்தன்மை, பேதமிலாப் பொதுத்தன்மை ஆகியவற்றின் அடிப்படையில் வார்க்கப்பட்ட வாசகம் ''தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி'' என்பதாகும்.

எனவே, சைவம் ஒரு மதமென்றும் அந்த மதத்தின் வழிபடு கடவுள் சிவனென்றும் வரையறுத்துக்கொள்வது பொருந்தாது. பல்லாயிரம் ஆண்டுக் கால மரபுடைய பண்பட்ட வாழ்க்கை முறையும் அத்தகைய வாழ்க்கை முறை சார்ந்த கலைகளும் அந்தக் கலைகள் வழி வெளிப்படும் விழுமங்களும் ஒன்றுசேர்ந்த பெருநெறியே சைவ நெறியாகும்.

தென்னகத்தின் அடிப்படை வாழ்க்கை நெறியோடு முரண் படும் தத்துவங்கள் இயக்கமாய் வடிவெடுத்து வந்த போதெல்லாம் சைவம் அதனை எதிர்த்து நின்றிருக்கிறது.

சமய முரண்பாடுமட்டு மன்றித் தென்னகத்தின் வாழ்வியல் மற்றும் பண்பாட்டுக் கோட்பாடுகளோடு முரண்பட்ட காரணத் தாலேயே சமணம், பௌத்தம், ஆசீவகம் போன்ற சமயங்களோடு சைவம் மோதல்கள் கண்டது.

இவற்றில் சைவத்திற்கும் சமணத்திற்குமே பெரும் போர் நிகழ்ந்தது. இதன் காரணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமே யானால், சமணம் தென்னாட்டில் நுழைந்த வரலாற்றையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

சந்திர குப்தன் காலத்தில் தென்னாட்டில் சமணம் நுழைந்ததாகக் கருதப்படுகிறது. நிக்கந்தர் என்று குறிக்கப்படும் திகம்புரர்களே தமிழகத்தில் வாழ்ந்தவர்கள். இவர்களில் பெரும்பாலோர் வடநாட்டினர். காவிரிப்பூம்பட்டினம், வஞ்சி, காஞ்சி, மதுரை போன்ற பெருநகரங்களில் வசித்துவந்தனர். கி.பி. 4ஆம் நூற்றாண்டு தொடங்கி வட இந்தியாவிலிருந்து பல திகம்பர சமணர்கள் தமிழகத்தில் வந்து குடியேறினர். தமிழகமெங்கும் பிரசாரம் மேற்கொண்டனர். திருப்பாதிரிப்புலியூர் எனப்படும் பாடலிபுரத்தில் இருந்த சமண மடம் செல்வாக்குப் பெற்றது. அவர்கள் பிராகிருத மொழியில் சிறந்தவர்கள். தம் சமகாலச் சமணர்களைக் குறிப்பிடும் போது வட மொழியும் தென் மொழியும் அறியார் என்கிறார் ஞானசம்பந்தர்.

இவர்களில் மதுரை மடத்தைச் சார்ந்தவர்கள்மட்டுமே தமிழ் நூல்கள் இயற்றுவதில் ஈடுபட்டனர். இவர்கள் தமிழர்களிலிருந்து மதம் மாறிய சமணர்கள் என்று கருத இடமிருக்கிறது. இறைவனை இசைவடிவாய்க் காணும் இயல்புடைய தென்னகத்தில் ''பண்ணொடு இசைகேளார்'' என்று குறிக்கப்பட்டவர்கள் சமணர்கள். கலை, மொழி, பண்பாடு போன்ற தளங்களிலும் தென்னகத்திற்குப் பொருந்தாதது திகம்பரச் சமணநெறியென்ற கோணத்தில் அடிப்படையில் இந்தப் போர் நடந்தது. சைவமும் தமிழும் செழிக்கும் விதமாக மக்களிடையே சென்று சைவக் கொள்கைகளைப் பரப்பும் பக்தி இயக்கத்தின் மறுமலர்ச்சி, திருஞானசம்பந்தர் திருவவதாரத்தால் நிகழ்ந்தது.

திருஞானசம்பந்தர், தம் பதிகங்களின் திருக்கடைகாப்புப் பாடல்களில் ''தமிழ் ஞான சம்பந்தன், முத்தமிழ் தான் மறைஞான சம்பந்தன், தமிழ் வீரகன், தமிழ்கெழு விரகினன், அருந்தமிழ் ஞானசம்பந்தன், தமிழ்க்கிழமை ஞானன், நல்ல செந்தமிழ் வல்லபன்'' என்றே தம்மைக் குறிப்பிடுகிறார்.

அவர் அருளிய தேவாரம், ''செந்தமிழுரை, தமிழ் மாலை, ஞானத் தமிழ், செந்தண் தமிழ், மூடிவில் இன்தமிழ்'' என்றெல்லாம் அடையாளப்படுத்தப்படுகிறது.

தமிழர் வழிபாடு, தமிழிசை ஆகியவற்றின் மறுமலர்ச்சிப் பயணமாய்த் திருஞானசம்பந்தரின் தலயாத்திரைகள் திகழ்ந்தன.

அதனால்தான் திருஞானசம்பந்தர் திருவவதார நோக்கினைச் சுட்ட வந்த சேக்கிழார், ''திசையனைத்தின் பெருமையெல்லாம் தென்திசையே வென்றேற அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறைவெல்ல இசை முழுதும் மெய்யறிவும் இடம் கொள்ளும் நிலைபெருக'' என்று குறிப்பிடுகிறார்.

பற்பல சமயங்களின் தாக்கங்கள் அதிகரித்துவந்த வேளை யிலும், சைவத்தின் தனித்தலைமையிடமாகச் சோழநாடு திகழ்ந்தது. சோழநாட்டில், சைவத்தின் தலைமையகமாகிய தில்லைக்கு மிக அருகில், மறைகள் பல கற்றுணர்ந்த வேதியர்கள் மத்தியில் தோன்றி வளர்ந்தவர் சம்பந்தப் பிள்ளையார்.

சைவத்தின் அருள்முரசமாய் அவர் திகழ்வதற்குச் சைவ நெறியும், சிவவேள்வி நெறியும் பெரிதும் துணை செய்தன. அன்றியும், பிள்ளையார் ஞானம் பெற்ற வரலாறே அரியதோர் அதிசயமாதலின், அவர் புகழ் பல திசைகளிலும் பரவிற்று.

மிகவும் இளம் வயதினராய்ப் பிள்ளையார் திகழ்ந்த பாங்கும், சைவர்கள் அனைவரையும் அவரை நோக்கி ஈர்த்திருக்க வேண்டும்.

சமீப காலத்தில் நம்முடன் வாழ்ந்த அருளாளர், பகவான் ரமணர், மிகவும் இளம் வயதிலேயே திருவண்ணாமலை வந்து கடுந்தவம் மேற்கொண்டார். அவரது தன்மையும் இருப்புமே பலரையும் அவர்பால் ஈர்த்தன.

''பிராமண சாமியாம் பச்சைக் குழந்தையாம்'' என்று பலர் அவரைக் குறித்துப் பேசிக்கொண்டனர்.

அதிக விளம்பரமின்றித் தவவாழ்வை மேற்கொண்ட ரமணரையே அவரது இளம் வயது முதல் பற்பலரும் தேடி வந்தனர் என்கிறபோது, சிவபெருமான் அருளால் ஞானப்பாலுண்டு, சிவபெருமான் ஈந்த தாளம், முத்துச் சிவிகை, சின்னங்கள், முத்துப்பந்தர் சகிதமாய் வலம் வந்த பிள்ளையாரின் செல்வாக்குப் பெருகியதில் வியப்பொன்றுமில்லை.

திருநாவுக்கரசர் பெருமானின் சமகாலத்தவராகத் திகழ்ந்து, திருநாவுக்கரசரை ''அப்பரே'' என்று போற்றினாலும், சைவ இயக்கத்தின் தலைமைப்பீடம் இயல்பாகவே திருஞான சம்பந்தரைச் சென்று சேர்ந்தது. இதில் அடியார்களுக்கிடையே உயர்வு தாழ்வு என்று பொருளில்லை.

எனினும், மக்கள் ஈர்ப்பு என்பது திருஞானசம்பந்தரிடம் இறையருளால் பெருகியது. உற்றவர்கள், சுற்றத்தினர் உடன் இருந்து அதனைப் பேணினர்.

பதிகள்தோறும் சென்று பாடி வழிபட்டாலும் சீர்காழி மீதும் தோணிபுரத்தீசன் மீதும் தனியான பற்று திருஞானசம்பந்தருக்கு இருந்தமைக்கு இதுவும் காரணம்.

" மற்றொரு பற்றிலை நெஞ்சமே மறைபல
கற்றநல் வேதியர் கழுமல வளநகர்ச்
சிற்றிடைப் பேரல்குல் திருந்திழை யவளொடும்
பெற்றெனை ஆளுடைப் பெருந்தகை இருந்ததே "

என்று மதுரையம்பதியில் இருந்தபடி கழுமல வளநகரில் கோயில் கொண்ட கண்ணுதற் கடவுளை நினைத்து மனமுருகிப் பாடுகிறார் பிள்ளையார்.

அன்றியும், சீர்காழித் திருத்தலத்தில் வாழ்ந்தவர்கள், புலவர் களையும் தமிழ்க் கவிதைகளையும் பெரிதும் ஆதரித்த புரவலர்க ளாகவும் திகழ்ந்திருக்கிறார்கள். இதனை,

" உரவார் கலையின் கவிதைப் புலவர்க் கொருநாளும்
கரவா வண்கைக் கற்றவர் சேரும் கலிக்காழி "

என்று பாராட்டுகிறார் சம்பந்தப் பெருமான்.

அந்தணர்களும் அடியார்களும் சூழ்ந்திருக்க, எப்போதும் ஞானசம்பந்தப் பெருமானின் இல்லம் சிவலோகம் போலப் பொலிந்தது என்கிறார் சேக்கிழார்.

" வந்ததிருத் தொண்டர்க்கும் மல்குசெழு மறையவர்க்கும்
சிந்தைமகிழ் வுறமலர்ந்து திருவமுது முதலான சிறப்பின்செய்கை
தம்தம்அள வினில்விரும்பு தகைமையினால் கடனாற்றும் சண்பைமூதூர்
எந்தைபிரான் சிவலோகம் எனவிளங்கி "

என்பது அவர்தம் வாக்கு.

தொண்டர்களையும் அடி யார்களையும் உடனிருந்த அனை வரையும் அமுது செய்விக்கும் பழக்கம் மிகுந்திருந்தமையால், சைவ

இயக்கத்தின் தலைமையகமாகவே திருஞானசம்பந்தரின் இருப்பிடம் திகழ்ந்ததை அறியமுடிகிறது.

இத்திருப்பணிக்குப் பலரும் உதவியிருப்பார்கள். அன்றியும், அந்தணர்தம் குடி முதல்வராய் விளங்கிய சிவபாத இருதயரின் செல்வவளமும் இதற்குப் பயன்பட்டிருக்க வேண்டும்.

தானாக வரும் உதவியைப் பெறுவதன்றி மற்றவர்கள் யாரையும் சென்று கேளாத இயல்பினர் சிவபாத இருதயர் என்பது வேள்வி நிகழ்த்துவதற்கு ஞானசம்பந்தப் பிள்ளையாரிடம் அவர் பொன் வேண்டியதிலிருந்து தெளிவாகிறது.

இறைவன் திருவடிகளைப் பாடிப் பரவி, தலந்தோறும் சென்று அடியார்களுடன் தங்கி, அருள்நெறி வாழ்க்கை நடத்தும் ஆளுடைய பிள்ளையாரிடம் பெரும்செல்வம் இருக்க வாய்ப்பில்லை என்றாலும், வேள்வி இயற்றப் பிறரிடம் சென்று பொருள் கேட்கும் விருப்பம் சிவபாத இருதயருக்கு இல்லை என்பது இந் நிகழ்ச்சிமூலம் புலனாகிறது.

சைவம் தழைக்க இயக்கம் கண்ட தோணிபுரத் தோன்றலின் பொருளாதாரம் மற்றும் வாழ்க்கைச்சூழல் குறித்த விவரங்களையும் இத்தகைய நிகழ்ச்சிகளால் உய்த்துணர முடிகிறது.

சைவ இயக்கத்தின் வலிமைமிக்க தலைவராகத் திருஞான சம்பந்தர் திகழ்ந்தாலும், 'தாழ்வெனும் தன்மை சொல்லும்' அடியவராகவே வாழ்ந்தவர் என்பதும் புலனாகிறது.

திருப்பூந்துருத்தியில் திருநாவுக்கரசரைக் காணும் பேராவலால், அருகே வந்தவுடன் 'அப்பர் எங்குற்றார்' என வினவ, 'தவம் செய்த காரணத்தால் தங்கள் சிவிகையைச் சுமக்கும் பேறு பெற்றேன்' என்று சிவிகைக்குக் கீழிருந்து திருநாவுக்கரசர் குரல் கொடுக்கிறார்.

பதறிப்போய்ச் சிவிகையிலிருந்து குதித்து நாவுக்கரசரைப் பணிகிறார் சம்பந்தர். அப்போதுதான் சூழ்ந்திருந்த அடியார்களும் திருநாவுக்கரசரை அடையாளம் கண்டுகொள்கின்றனர். கைத் தொண்டு, தமிழ்த்தொண்டு போன்றவற்றிலேயே மிகுந்த கவனம் செலுத்திவந்தவர் திருநாவுக்கரசர்.

சைவர்களின் வழிபாட்டுக்குரிய அருளாளராய்த் திகழ்ந்தாலும் ஓர் இயக்கத்தின் வலிமைமிக்க தலைவராக அவர் தம்மை வெளிப்படுத்திக்கொள்ளவில்லை என்று தெரிகிறது.

திருஞானசம்பந்தருக்குக் காலத்தால் பிற்பட்டவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கோலக்காவிற்கு வருகிறார். அங்கே

ஈசன் திருஞானசம்பந்தருக்குப் பொற்றாளம் தந்த சம்பவத்தை நினைவுகூர்ந்து பாடும்போது,

" நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும்
ஞான சம்பந்தனுக்கு உலகவர்முன்
தாளம் ஈந்தவன் "

என்கிறார். எனவே, திருஞானசம்பந்தர் மேற்கொண்ட பணி தமிழ் வளர்க்கும் பணி. தமிழரின் தொன்மையான வழிபாடு, நுண்ணிசை ஆகிய அருங்கூறுகளைப் புதுப்பித்த பெரும்பணி. எனவே, தென்னகத்தின் முதல் தமிழர் தலைவர் திருஞானசம்பந்தர் என்கிற புரிதலோடு அவர் குறித்த பிற செய்திகளை நோக்கி நாம் நகர்வோம்.



## 2. புனிதவாய் மலர்ந்தழுதார்

ஒரு நாயனாரின் அருள் வரலாற்றைப் பாடப் புகும்போது அவர்தம் வாழ்வில் திருப்புமுனையாய் அமைந்த சம்பவத்தைக் குறிப்பிட்டு, அந்நாயனாரை முதல் பாடலில் அறிமுகம் செய்வது தெய்வச் சேக்கிழாரின் திருவுள்ளப் பாங்கு. அப்படித் திருஞான சம்பந்தர் புராணத்தைப் பாட மேற்கொள்ளும்போது சேக்கிழார் பாடும் முதல் பாடல்:

" வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலிய புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயல்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம் "

புனிதவாய் மலர்ந்தழுததுதான், திருஞானசம்பந்தர் வரலாற்றின் திருப்புமுனைச் சம்பவம். இந்தச் சம்பவம் எங்கே நடந்தது?

சோழ வளநாட்டில் சீர்காழி என்கிற திருத்தலம் சிறப்புப் பெற்றது. சீர்காழி என்கிற இந்தத் திருத்தலத்திற்குப் பன்னிரண்டு பெயர்கள் உண்டு. பிரம்மபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, திருத்தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புரவம், செண்பை, சீர்காழி, கொச்சைவயம், கழுமலம் ஆகியவை இந்தப் பன்னிரண்டு பெயர்கள்.

பன்னிரண்டு என்கிற எண்ணுக்கும் சீர்காழிக்கும் இன்னொரு பொருத்தம் உண்டு. பன்னிரண்டு முறை கடல் பெருக்கினால் தாக்குண்டும் அழியாமல் தன்னை நிலைநிறுத்திக் கொண்டது சீர்காழி. அதனால்தான் நம்பியாண்டார் நம்பிகள் தாம் பாடிய ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை என்கிற நூலில்

" மண்ணிருகால் வேளைவளர் வெள்ளத்து உண்பரொடும்
பன்னிருகால் நீரில் மிதந்த ஊர் "

என்று பாடுகிறார். அது மட்டு மல்ல, இந்தக் காரணத்தினாலேயே சீர்காழி சைவ சமயத்திற்கு உவமை சொல்லப்படுவதும் உண்டு.

பன்னிரு முறை கடல்கோளால் சீர்காழி தாக்குண்டது போலவே சைவ சமயமும் பன்னிரண்டு முறை தாக்குண்டும் தன் தனித் தன்மையை நிலை நிறுத்திக்கொண்டது. எனவே, சீர்காழி என்கிற திருத்தலத்தைச் சைவத்திற்கு உவமை சொல்வது நம் பழைய மரபு. அத்தகைய பெருமை வாய்ந்த சீர்காழியில் அந்தணர் குடியின் தலைவராகத் திகழ்ந்த சிவபாத இருதயர் என்கிற அந்தணருக்கும் பகவதி அம்மையார் என்கிற அன்னைக்கும் திருமகவாக அவதரித்தவர்தான் திருஞானசம்பந்தர். அவருடைய கோத்திரம் கவுணியர் கோத்திரம். சங்ககாலம் தொட்டுத் தமிழகத்தில் புகழ் பெற்றுத் திகழ்கிற ஒரு கோத்திரம் இது. ஆவூர் மூலங்கிழார் என்கிற சங்க காலப்புலவர் வேணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் வெண்ணந்தாயன் என்கிற ஒருவரின் கல்வித் திறத்தையும் தூய வேள்வித் திறத்தையும் பாடியிருக்கிறார். எனவே, இந்த வேணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணிய வெண்ணந்தாயன், கடைச் சங்க காலத்தைச் சேர்ந்தவன் என்பது நமக்குத் தெரிய வருகிறது. இத்தகைய பாரம்பரியச் சிறப்பு வாய்ந்த கௌணியர் கோத்திரம் விளங்கும் விதமாக வாழ்ந்து வந்த சிவபாத இருதயர் அடிப்படையில் சைவ சமயத்தினுடைய மேம்பாட்டின் மீது அளப்பரிய ஆர்வம் கொண்டவர். பிற சமயங்களுடைய தாக்கம் காரணமாக ஆதி அருமறையினுடைய வழக்கம் குறைந்து திருநீறு பூசுதல், உருத்திராக்கம் தரித்தல் போன்ற மரபுகள் போற்றப்படாமல் ஒழியக் குறைந்துவருவதைக் கண்டு சிவபாத இருதயர் பெரிதும் இருதயம் வருந்தினார்.

தமக்கு ஒரு பிள்ளை பிறக்க வேண்டும். அது பிற சமயங்களை நிராகரித்துச் சைவ சமயத்தை நிலைநாட்டும் விதமாக விளங்க வேண்டும் என்கிற தவத்தைச் சிவபாத இருதயர் மேற்கொண்டார். இத்தகைய பெற்றோர்களுக்குரிய அரிய மகவாகத்தான் திருஞானசம்பந்தப் பெருமான் வந்து அவதாரம் செய்கிறார். அவர் அவதார வேளையில் நவகோள்களும் உச்சநிலையிலே நின்றதாகச் சேக்கிழார் சொல்கிறார். 'சராசரங்கள் எல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் திரு அவதாரம் செய்தார்' என்பது சேக்கிழாருடைய திருவாக்கு.

பொதுவாகவே பிள்ளையார் என்கிற சொல் விநாயகரைக் குறிப்பதாகத்தான் பெரும்பாலானவர்கள் அறிந்திருக்கிறார்கள். ஆனால், சைவமரபிலே பிள்ளையார் என்பது பொதுச்சொல். முருகப் பெருமான் பிள்ளையார் என்று குறிக்கப்பெறுகிறார். விநாயகப் பெருமான் மூத்தபிள்ளையார் என்று குறிக்கப்பெறுகிறார்.

சைவ மரபில் நான்கு பேர் இறைவனுடைய திருமகனார்கள் என்கிற அடிப்படையில் பிள்ளையார் என்று குறிப்பிடப் பெறுவதுண்டு. ஒருவர் மூத்த பிள்ளையாராகப் போற்றப்படுகிற விநாயகர். அடுத்தவர் சக்தியிடத்திலே வேல் பெற்ற முருகப்பெருமான். மூன்றாவதாக வருபவர் அன்னையின் ஞானப்பாலை உண்ட திருஞானசம்பந்தர். நான்காவதாக சேய்ஞலூர்ப் பிள்ளையார் என்று அழைக்கப்படுகிற சண்டீச நாயனார். பெரிய புராணத்திலே மொத்தம் 1256 பாடல்களில் திருஞானசம்பந்தப் பிள்ளையாரின் புராணம் விளக்கப் பெறுகிற காரணத்தினால் ‘பிள்ளை பாதி புராணம் பாதி’ என்கிற சொற்றொடரும் நிலவிவரலாயிற்று.

ஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு மூன்று வயது நிரம்பியிருந்த நேரம். அவர்தம் தந்தையாராகிய சிவபாத இருதயர், நீராடும் பொருட்டுக் குளக்கரைக்குப் புறப்பட்டார். தாமும் உடன் வருவதாய்ப் பிள்ளையார் அழத் துவங்கினார். அவர்தம் அழுகையை ஆற்ற மாட்டாதவராய்ப் பிள்ளையாரையும் தூக்கிக் கொண்டு திருத்தோணிபுரத்துத் தீர்த்தக் குளத்தை வந்தடைந்தார் சிவபாத இருதயர்.



*சிவபாத இருதயர் சிறுகோல் கொண்டு ஓச்சுதல்*

பிள்ளையாரைக் குளக் கரையில் விட்டுத் தாதையார் குளத்தில் தலைமுழுகி நீராடினார். தாதையாரைக் காணாமலும், தன்னுள் இருந்த முன்னுணர்வின் தூண்டுதலாலும் பிள்ளையார் அழத் துவங்கினார் என்பதைக் கூறவரும் சேக்கிழாரடிகள், பிள்ளையார் அழுத திருக்கோலத்தை வர்ணிக்கிறார்.

“ கண்மலர்கள் நீர்ததும்பக் கைம்மலர்களால் பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணிஅதரம் புடைதுடிப்ப
எண்ணில்மறை ஒலிபெருக எவ்வுயிரும் குதுகலிப்ப
புண்ணியக்கன்று அனையவர்தாம் பொருமி அழுதுஅருளினார் ”

கண்களில் நீர்பெருக, கைகள் பிசைந்து, உதடு துடிதுடிக்க அழுத அழுகையில் மறையொலி பெருகிற்று.

மாடமோங்கிச் சிகரம்போல் தோன்றும் திருத்தோணிக் கோபுரத்தைப் பார்த்துப் பிள்ளையார் அழுதார்.

'அம்மே.... அப்பா என்று அழுதருளி அழைத்தருள' என்கிறார் சேக்கிழார். அவர் அழுததோடு நிற்கவில்லை. அழைக்கவும் செய்தார். இங்கேதான் ஞானசம்பந்தப் பெருமானின் முற்பிறவி பற்றிய மறைமுகக் குறிப்புகள் நிரல் பெறுகின்றன. 'பண்டு திருவடி மறவாப் பான்மை' என்றும் 'முறை புரிந்த முன்னுணர்வு மூள அழத் தொடங்கினார்' என்றும் இதற்கு முன் குறிப்பிட்ட சேக்கிழார், முன்பு தமக்குத் திருத்தொண்டு புரிந்தவருக்கருள் புரிய தோணிபுரத்தீசர் பெரியநாயகியம்மையுடன் விடைமேல் காட்சி கொடுத்தருளியதாக இங்கே சொல்கிறார்.

எனவே, பிள்ளையார் அழுதருளியது 'மேலைச் சார்பு உணர்ந்தோ? சாரும் பிள்ளைமைதானோ' என்று,. விளக்க வொண்ணா அருமையினைப் புலப்படுத்துகிறார் சேக்கிழார்.

அழும் பிள்ளையாரை நோக்கிய இறைவர், இறைவியைப் பார்த்துத் திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்தில் ஊட்டுமாறு பணிக்கிறார். கருணையே வடிவாகிற உண்ணாமுலை அம்மையும், திருமுலைப்பாலுடன் சிவஞானத்தமுதையும் குழைத்து, பிள்ளை யாரின் கண்களைத் துடைத்துக் கைகளில் பொற் கிண்ணம் தந்தருளினார்.

அந்த ஞானப்பாலைப் பருகிய நிலையில், பிள்ளையாருக்கு, சிவனின் திருவடிகளையே சிந்திக்கிற செம்மைமிக்க சிவ ஞானமும், பிறவி நோயை அறவே களையும் உயர் ஞானமும், ஈடுசொல்ல வியலாத கலை ஞானமும், பெறுவதற்கரிதான மெய்ஞ் ஞானமும் உண்டாயின.

நீராடி முடித்துக் கரையேறி வந்த சிவபாத இருதயர், பாலறாவாயராய் நிற்கும் பிள்ளையாரைக் கண்டு துணுக்குற்றார். 'யாரளித்த பாலடிசில் உண்டது நீ' என்று வெகுண்டார். பரவசப் பேரானந்தத்தில் ஒரு கால் உயர்த்திக் கூத்தாடிய சிறிய பெருந் தகையாம், திருஞானசம்பந்தர் திருத்தோணிபுரத்துக் கோபுரத்தைச் சுட்டிப் பதிகம் பாடியருளினார்.

" தோடுடைய செவியன் விடையேறிஓர் தூவெண்மதி சூடிக்
காடுடைய சுடலைப்பொடிபூசிஎன் உள்ளம்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன்அன்றே "

சைவர்கள் உச்சிமேல் வைத்துக் கொண்டாடும் பன்னிரு திருமுறைகளில், முதல் திருமுறையின் முதல் திருப்பாடல் இது. பெண்ணொரு பாகனாகிய ஈசனின் திருச்செவியைச் சிறப்பித்துப் பாடலைத் தொடங்குகிறார் சிறிய பெருந்தகை.

தம் அழுகையைக் கேட்ட காரணத்தால் திருச்செவியை முதன்மைப்படுத்தியதாகவும் பொருள் கொள்ளலாம். தோடுடைய செவி என்று அம்மையைச் சுட்டியதாகவும் பொருள் அமைந்திருக்கிறது. பன்னிரு திருமுறையில் முதல்திருமுறை 'தோடுடைய செவியன்' என்று தொடங்குகிறது. பன்னிரண்டாம் திருமுறையின் நிறைவுப் பாடல் 'நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்' என்று நிறைவடைகிறது.

தோ என்கிற ஒலியின் ஓங்காரம், உலகெலாம் என்று முடிவடையும் மகரம், இவற்றால் பன்னிரு திருமுறையே ஓங்காரத்தின் தொகுப்பென்று சொல்வார் உண்டு.

'பண்டு திருவடி மறவாப் பான்மை' என்று தொடங்கி ஞானசம்பந்தப் பெருமானின் முற்பிறவி குறித்த செய்திகளைக் குறிப்பால் சேக்கிழார் உணர்த்துதல் போலவே ஞானசம்பந்தப் பெருமானும் முதல் பாடலிலேயே..... 'ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்தேத்த - அருள் செய்த' என்று குறிப்பிடுகிறார்.

அதுமட்டுமா? திருத்துருத்திப் பதிகத்தில், தம்மை இம்மண்ணில் பிறக்க வைத்தான் இறைவன் என்று,

" ........திருந்தடி
மறக்குமாறு இலாதஎன்னை மையல்செய்து இம்மண்ணின்மேல்
பிறக்குமாறு காட்டினாய், பிணிப்படும் உடம்புவிட்டு
இறக்குமாறு காட்டினாய்க்கு இழுக்குகின்றது என்னையே "

என முற்பிறவித் தொடர்பை உணர்த்துகிறார்.

அதே போலத் திருநீலகண்டப் பதிகத்தில்

" மறக்கும் மனத்தினை மாற்றி, எம் ஆவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் திருந்தடிக்கீழ்ப் பிழையாத வண்ணம்
பறித்த மலர்க்கொடு வந்துமை ஏத்தும் பணியடியோம் "

என்றும் குறிப்பிடுவதால், திருஞானசம்பந்தர் திருவவதாரம் இறைவனின் திருவுளப்பாங்கின்படி நிகழ்ந்ததென்று தெளிவாகிறது.

தேவார மூவரில் மற்றை இருவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியோருக்கும் இத்தகைய முற்பிறவி வரலாறுகள் உள்ளதைத் தமிழுலகம் நன்கறியும்.

தோடுடைய செவியன் என்று தொடங்கிப் பதிகம்பாடி, பதினோராவது பாடலில் திருக்கடைக்காப்பும் சார்த்தியருள்கிறார் சம்பந்தப்பிள்ளையார். தந்தையார் பெருமகிழ்வெய்த, இச்செய்தியைக் கேட்டவர்களுக்கும் உடல் சிலிர்த்தது. இத்தகைய அற்புதம் வேறெங்கு நிகழ்ந்தது என்று அதிசயித்துத் தோணிபுரத் திருக்கோவிலில் சூழ்ந்தனர்.

அனைவரும் பின்தொடர, பிள்ளையார் திருக்கோவிலுக்குள் சென்றார். இறைவனையும் இறைவியையும் வழிபட்டு, மறுநாள் திருக்கோலக்காவில் தரிசனம் செய்யச் சென்றார் என்பதாகச் சரிதம் தொடர்கிறது.

தலங்கள் தோறும் சென்று வழிபடும் அருள் நெறியாம் பதிகப் பெருவழி சம்பந்தருக்குக் காலத்தால் முற்பட்டவரான காரைக்காலம்மையாரால் ஏற்படுத்தப்பட்டது. அந்நெறியைப் பலப்படுத்தி அதன் மூலம் சைவத்தில் மகத்தான மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர் திருஞானசம்பந்தர்.

பிள்ளையாரின் இந்தப் பெரும்பணிக்குப் பிள்ளையார் சுழியாய் அமைந்ததுதான் திருக்கோலக்காத் தலயாத்திரை.

மூன்று வயதில் மேற்கொண்ட திருக்கோலக்காத் தலயாத்திரை தொடங்கி, பதினாறு வயதில் நிறைவாக மேற்கொண்ட நல்லூர்ப் பெருமண யாத்திரை வரையிலான ஆளுடைய பிள்ளையாரின் அருட்பயணங்களை ஏழு பகுப்புகளாகக் காட்டுகிறார் சிவகுருநாத பிள்ளை.

3-7 வயது வரையிலான 4 யாத்திரைகள், 7-14 வயது வரையிலான ஐந்தாவது தலயாத்திரை, 14-16 வயது வரையிலான ஆறாவது தலயாத்திரை, 16ஆவது வயதில் மேற்கொண்ட ஏழாவது தலயாத்திரை.

இந்த அருட்பயணங்கள் வாயிலாக ஆளுடையபிள்ளையாரின் சமயப்பணி, இசைப்பணி, சமூகப்பணி என்று பலவற்றையும் நம்மால் அறிந்துகொள்ள முடிகிறது. இவையனைத்தையும் இந்நூலில் தொகுப்பது இயலாதெனினும் முக்கியத்துவம் மிக்க நிகழ்வுகளை ஒவ்வொன்றாக நிரல்படக் காணலாம்.

திருக்கோலக்காவினில் 'மடையில்வாளை' எனும் பதிகத்தைத் தம் பிஞ்சுக் கைகளால் தாளமிட்டபடி பாடுகிறார் திருஞானசம்பந்தர். அது கண்டு சிவபெருமான் பஞ்சாக்கரம் பொறிக்கப் பெற்ற பொற்றாளம் பிள்ளையார் கைகளுக்கு வரும் விதமாய் அருளினார்.

பதிகம் பாடிப் பேருவகை கொண்டு நடந்து செல்லத் தொடங்கினார் திருஞானசம்பந்தர். அவர் கைத்தாளம் போடுதல் கண்டு பொறாது பொற்றாளம் தந்தார் சிவபெருமான். இப்போது பிள்ளை நடப்பது பொறாமல் அவர்தம் தந்தை சிவபாத இருதயர் தம் தோளின்மீது தூக்கிக் கொண்டு செல்லத் தொடங்கினார்.

இதனைச் சேக்கிழார் இங்கே சொல்வதற்கென்ன காரணம்? சிவபாத இருதயர் இந்தப் பிறவியில்தான் சம்பந்தப் பிள்ளை யாருக்குத் தந்தை. சிவபரம்பொருளோ ஆளுடையபிள்ளையின் ஆன்மாவிற்குத் தந்தை. தம்மகவு கால்நோக நடப்பதைப். பொறாமல் சிவபாத இருதயர் தோளில் சுமப்பது போலவே சிவபெருமான், தம்மால் ஆட்கொள்ளப்பட்ட பிள்ளையார் கை நோகத் தாளமிடுதலைக் காணப் பொறாது பொற்றாளம் ஈந்தார்.

இதற்கு முன் நீராடப் புறப்பட்டபோது 'நானும் உடன் வருவேன்' என்று பிள்ளையார் அழுதது பொறாமல் சிவபாத இருதயர் குளக்கரைக்குக் கூட்டி வந்தார். குளக்கரையில் பிள்ளை அழுதது பொறாமல், சிவபரம்பொருள் உமையம்மையைத் திருமுலைப்பால் ஊட்டச் செய்தார்.

பிள்ளைபால் பெரும்பரிவு காட்டுவதில் இறைவனுக்கும் சிவபாத இருதயருக்கும் ஒரு போட்டியே நடைபெறுகிறது.

திருக்கோலக்காவினில் இறைவனிடம் பொற்றாளம் பெற்றமை யால் தொண்டுமுறை ஆற்றுவதற்கான ஏழிசைப் பெருநெறியைப் பெற்றார் என்கிறார் அறிஞர் வை. இரத்தினசபாபதி. சீர்காழியில் ஞானப்பால் உண்டபோது பெற்ற ஞானம் பதிகமாக வெளிப் பட்டதெனினும் அது செயல்முறைக்கு வந்தது திருக்கோலக்காவில் தான் என்பது அவர்தம் கருத்து.



## 3. அடுக்கடுக்காய்ச் சில அதிசயங்கள்

சராசரி மனிதர்களின் வாழ்வியலுக்குட்பட்ட காலம், தூரம் போன்ற கணக்குகளைக் கடந்த நிலைதான், கடவுளுக்கும் ஞானியருக்கும். அதனால்தான் கம்பர், இராமனைப்பற்றிச் சொல்லும் போது,

" மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத் தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன் "

என்று குறிப்பிடுகிறார்.

சாத்தியமேயில்லாத அதிசயங்களாய் நம் சிந்தனைக்குத் தெரிபவை, அவர்களைப் பொறுத்தவரை சாதாரணமான சம்பவங்கள்தான்.

பெரியபுராணத்தின் தொடக்கமே ஓர் அதிசய நிகழ்ச்சியைச் சொல்கிறது. முதல் காண்டத்திலேயே மனுநீதிச் சோழன் வரலாறும், உயிரிழந்த பசுங்கன்று, இளவரசன், அமைச்சர் ஆகியோர் உயிர் பெற்று எழுந்ததும் விளக்கப்பட்டுள்ளன. பெரிய புராணத்தின் நிறைவுப் பகுதியாகிய வெள்ளானைச் சருக்கத்தில், சுந்தரமூர்த்தி சுவாமிகள், முதலைவாய்ப் பிள்ளையை மீட்ட வரலாறு குறிக்கப் பட்டுள்ளது.

பெரிய புராணத்தின் தொடக்கத்திலும் நிறைவிலும் இத்தகைய அதிசய நிகழ்வுகளைச் சேக்கிழார் வைப்பதற்குக் காரணம், இறைவன் திருவுள்ளம் ஒன்றைக் கருதுமாயின், அதன்பின் எதுவும் சாத்தியம் என்பதை விளக்கத்தான்.

அதனால்தான், முதற் காண்டத்திலேயே, மனுநீதிச்சோழன் வரலாற்றை விளக்குகிற சேக்கிழார், 'யார்க்கும் முன்னவனே முன் நின்றால் முடியாத செயலுளதோ' என்கிறார். இந்தத் தெளிவு வந்துவிடுமேயானால் அதிசயங்களைக் கண்டு வியந்து நிற்பதோ, அதிசய நிகழ்வுகள்தான் ஆன்மிகம் என்று கருதி அதிலேயே சிக்குண்டு போவதோ, நிகழா.

திருஞானசம்பந்தர் வாழ்வில் இத்தகைய அதிசயங்கள் மிக இயல்பாக நடந்தேறுவதைப் பார்க்கிறோம்.

திருக்கோலக்காவினில் பொற்றாளம் பெற்ற பிறகு சம்பந்தர் எழுந்தருளுகிற தலம் திருநனிபள்ளி. அவருடைய தாயார் பகவதி அம்மையார் பிறந்த ஊர் அது. திருநனிபள்ளி நோக்கித் தந்தையார் தோளிலமர்ந்து செல்கிற பிள்ளையார், எதிரிலுள்ள சோலைக்கு என்ன பெயர் என்று வினவுகிறார். திருநனிபள்ளி பாலைநிலமாய் இருந்ததென்றும் சம்பந்தர் பாடிய பிறகு அது காடாக மாறி, பிறகு நெய்தல் நிலமானதென்றும் கூறுவாருண்டு.

சேக்கிழார் பாடிய பெரியபுராணத்தில் இத்தகவல் இல்லை. ஆனாலும், பதினோராம் திருமுறையில் நம்பியாண்டார் நம்பிகள் இது குறித்த செய்திகளைச் சொல்கிறார்

" ஞாலத்தினர் அறிய மன்னுநனி பள்ளியது
பாலைதனை நெய்தல் ஆக்கியும் "

" கள்ளம் பொழில்நனி பள்ளித்தடம் கடம்ஆக்கி அஃதே
வெள்ளம் பணிநெய்தல் ஆக்கிய வித்தகன் "

" நாதன் நனிபள்ளி சூழ்நகர் கானகமாக்கி, அஃதே
போதான் மலிவயல் ஆக்கிய கோன் "

என்றெல்லாம் குறிப்பிடுகிறார் நம்பியாண்டார் நம்பிகள். சைவ சாத்திர நூலாகிய திருக்களிற்றுப்படியார் அருளிய திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனாரும் இச்சம்பவத்தைக் குறிப்பிடுகிறார்.

" பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனை அன்றேவிக் கராங்கொண்ட - பாலன்
மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம் போல் அல்லாமை காண் "

என்பது திருக்களிற்றுப்படியார்.

திருநனிபள்ளியைத் தம் பதிகங்களில் வர்ணிக்கும் பிள்ளையார், நெய்தல் நிலத்திற்கான அத்தனை குறிப்புகளையும் ஏற்றிப் பாடுதலால், பாலை நெய்தல் ஆனமைக்கான அகச்சான்றாகவே இப்பதிகம் விளங்குகிறது.

திருநனிபள்ளிப் பதிகத்தின் இன்னொரு தனிச்சிறப்பு யாதெனில், பதிகத்தின் பதினோராம் பாடலாகிய திருக்கடைக் காப்பில், தந்தை தோளில் அமர்ந்து பாடிய பாடலை ஓதி, 'திருநனி

பள்ளியிறைவனை நினைப்பவர்கள் வினை கெடும். இது நமது ஆணை' என்று முதல் முதலாகக் குறிப்பிடுகிறார் பிள்ளையார். இப்பதிகம் ஓதுவார் வினை கெடுமாறு ஆணை பிறப்பிப்பதன் மூலம், தம் அருள் திறத்தின் பிரகடனமாய்ப் பாடலை அமைக்கிறார்.

" இடுபறை ஒன்ற அத்தர் பியன் மேல் இருந்து
இன்னிசையால் உரைத்த பனுவல்
நடுவிருள் ஆடும் எந்தை நனிபள்ளி உள்க
வினைகெடுதல் ஆணை நமதே "

என்கிறார்.

ஞானப்பால் ஊட்டியதும் திருக்கோலக்காவினில் பொற்றாளம் ஈந்ததும் இறைவன் நிகழ்த்திய அற்புதம். இறைவனருளால் சம்பந்தப்பிள்ளையார் நிகழ்த்திய முதல் அற்புதம் திருநனிபள்ளியில் பாலையை நெய்தலாக்கியது என்கிறார் வை. இரத்தினசபாபதி. இது குறித்துச் சேக்கிழார் வெளிப்படையாகப் பாடாதது வியப்பே.

திருநனிபள்ளி நோக்கிச் செல்வதில் ஆளுடையபிள்ளையாரின் இரண்டாவது தலயாத்திரை துவங்கியதாகக் கொள்ளலாம். திருவலம்புரம் வழிபாடு நிகழ்த்திப் பதிகங்கள் பாடி, மீண்டும் சீர்காழி வந்து சேர்ந்து, இரண்டாவது தலயாத்திரையை நிறைவு செய்தார் பிள்ளையார்.

அதன் பிறகு சீர்காழிக்குக் கிழக்கேயுள்ள திருமயேந்திரப் பள்ளி, திருக்குருகாவூர், திருமுல்லைவாயில் ஆகிய தலங்களில் உள்ள இறைவனை வழிபட்டு, பதிகங்கள் பாடி மூன்றாவது தலயாத்திரையைப் பிள்ளையார் நிறைவு செய்தார்.

நான்காவது தலயாத்திரைக்கு எழுந்தருளப் பிள்ளையார் ஆயத்தமாகும் முன்பு நாயன்மார்களில் ஒருவரும், யாழிசை வல்லவருமாகிய திருநீலகண்ட யாழ்ப்பாணர், தம் துணைவியார் மதங்க சூளாமணியாருடன் சீர்காழிக்கு வந்து சேர்ந்தார்.

பிள்ளையாரின் பதிகங்களுக்குப் பண்ணமைத்துப் பாடியதோடு பிள்ளையாரின் தலயாத்திரைகளில் உடன்வரவும் திருவுள்ளம் கொண்டார் திருநீலகண்ட யாழ்ப்பாணர். பிள்ளையாரிடம் அவர் வேண்ட, அவரும் மகிழ்ந்திசைந்தார்.

தில்லையுட் கூத்தனைக் கண்டு வழிபடும் பேராவல் காரணமாய் நான்காவது தலயாத்திரையை மேற்கொள்கிறார் சம்பந்தர். தில்லைத் திருக்கோயிலின் தென்வாசல் வழியே புகுந்து இறைவனைப் பாடிப் பரவினார். பல்வேறு தலங்களிலும் பரமனைத் தொழுது பதிகங்கள்

இசைத்தவாறு பயணம் மேற்கொண்ட போது வேனிற்காலமும் வந்தது. திருநெல்வாயில் அரத்துறையின் ஈசனை வணங்கும் பெருவிருப்போடு, தந்தையின் உள்ளம் வருந்தும்படி, பிஞ்சுப்பாதங்கள் நோக, நடந்தே வந்தார் பிள்ளையார்.

உடன் வந்தவர்கள் பயணக் களைப்பெய்தியமையால் மாறன்பாடியெனும் பதியில் அனைவரும் அன்றிரவு தங்கினர். திருநெல்வாயில் அரத்துறை இறைவன், அவ்வூர் அந்தணர்களின் கனவில் சென்று ஞானசம்பந்தரின் பெருமையைக் கூறி, 'அவருக்கு முத்துச்சிவிகை, அழகிய மணிக்குடை மற்றும் சின்னங்களை எம்மிடம் பெற்றுச் சென்று வழங்குங்கள்' என்று ஆணையிட்டருளி மறைந்தான்.

அந்தணர்கள் ஒன்று கூடித் திருக்கோவிலுக்குள் சென்று பார்த்த போது, சிவிகை, குடை, மற்றும் சின்னங்கள் இருப்பது கண்டு அதிசயித்தனர்.

அவற்றைச் சம்பந்தரிடத்திற் சேர்ப்பித்தனர். பிள்ளையாரும் ஈசனது பெருங்கருணையை நினைத்துப் பதிகம் பாடி முத்துச் சிவிகையில் எழுந்தருளினார். பாற்கடல்மீது வெண்ணிலவு எழுந்தாற்போல் அக்காட்சி இருந்ததாய் அக மகிழ்ந்து பாடுவார் தெய்வச் சேக்கிழார்.

" உய்யஞான சம்பந்தன் வந்தான் பாலறா வாயன் வந்தான்
முத்தமிழ் விரகன் வந்தான் பரசமயக் கோளரி வந்தான் "

என்று எக்காளம் முழங்க, தொண்டரெல்லாம் தொழுதேத்த, திருநெல்வாயில் அரத்துறைக் கோவிலுக்குள் எழுந்தருளினார் பிள்ளையார். அதன்பிறகு அவரது பயணம் முத்துச் சிவிகையிலேயே தொடர்ந்தது.

பல்வேறு சிவத் தலங்களைப் பாடித் தொழுதேத்திப் பயணம் தொடர்ந்த சம்பந்தப் பிள்ளையார், நாயன்மாராகப் பிறந்து சிவபெருமானின் திருக்குமாரர் என்னும் சிறப்பினைப் பெற்ற சண்டீசப்பிள்ளையாரின் திருவவதாரத் தலமாகிய சேய்ஞலூர்ப் பதியை நெருங்கினார்.

அதன் விளைவாகவே சிவிகையில் செல்ல மனமில்லாது தரையில் இறங்கி நடந்த பிள்ளையாரை, அவ்வூர் மறையவர்கள் எதிர்கொண்டனர். தங்கள் சண்டீசப் பிள்ளையாரே சம்பந்தப் பிள்ளையார் திருவுருவில் வந்ததாய்க் கருதி உள்ளம் பூரித்தனர்.

சண்டீசப் பிள்ளையாரின் சிறப்பையும் சேர்த்தமைத்துப் பதிகம் பாடி மகிழ்ந்தார் சம்பந்தர். திருப்பந்தணைநல்லூர், திருஓமாம் புலியூர் உள்ளிட்ட தலங்களையும் தரிசித்துக்கொண்டு மீண்டும் சீர்காழி திரும்புகிறார் திருஞானசம்பந்தர்.

இன்னும் பல அதிசயங்களை நிகழ்த்தவுள்ள ஐந்தாவது தலயாத்திரைக்குப் புறப்படும் முன்னர், பல்வேறு புதிய யாப்பு முறைகளும் அரிய பண்வகைகளும் பொலிகிற திருமொழிமாற்று, திருமாலைமாற்று, திருவழி மொழித்திருராகம், திருஏகபாதம் போன்ற பதிகங்கள் பலவற்றைப் பாடியருளினார் பிள்ளையார். திருநீல கண்ட யாழ்ப்பாணரும், மதங்க சூளாமணியாரும் அவற்றுக்குரிய பண்களை அமைத்துப் பாடி மகிழ்ந்தனர்.

ஐந்தாவது தலயாத்திரையைப் பிள்ளையார் தொடங்கினார். தந்தையாகிய சிவபாத இருதயர், யாகங்கள் செய்ய வேண்டி யிருந்ததால் சில நாட்கள்மட்டும் உடன் வருவதாகச் சொன்னார். பிள்ளையாரைப் பிரியா நிழல் போல் இதுகாறும் தொடர்ந்து வந்தவர்தான் சிவபாத இருதயர். தாயினும் சாலப்பரிந்து பிள்ளையாருக்குச் சிவபெருமான் ஞானப்பாலூட்டச் செய்ததும், பொற்றாளம் தந்ததும், முத்துச்சிவிகையும், குடையும் வழங்கி ய்மையும், தந்தையாரது இதயத்தை ஆற்றியிருக்க வேண்டும். எல்லாம் வல்ல இறைவனின் அருள் நோக்கிலும் அரவணைப்பிலும் பிள்ளையார் வளர்வது கண்ட நிறைவு, சிறிது காலம் சென்று பிள்ளையாரை யாத்திரையில் தனித்து விடும் மனத் துணிவைத் தந்திருக்க வேண்டும். ஐந்தாவது தலயாத்திரையைப் பிள்ளையார் தொடங்குகிறார். விரிவான இந்தப் பயணத்தில் பல்வேறு தலங்களையும் கடந்து திருப்பாலாச்சிராமம் எனும் பதிக்கு வருகிறார்.

அங்கே ஆட்சி செய்யும் சிற்றரசனாகிய கொல்லி மழவனின் மகள் முயலக நோயால் பீடிக்கப்பட்டிருந்தாள். உணர்வற்ற நிலை, வலிப்பு நோய் ஆகியவற்றின் கூட்டாகப் பெருந்துன்பம் விளைவிக்கும் நோய் இது. பிள்ளையார் எழுந்தருளப்போவதை அறிந்த கொல்லி மழவன், நகரெங்கும் அலங்காரம் செய்து வரவேற்பு ஏற்பாடுகளைச் செய்ததோடு, தன் மகளைச் சுமந்துபோய் இறைவன் திருக்கோவிலில் கிடத்தியிருந்தான்.

பிள்ளையாரை எதிர்கொண்டழைத்துக் கோவிலிற் புகும் போது உணர்வற்றிருந்த மழவன் மகளைக் கண்டு வினவினார். உடனே சிவபரம் பொருளைப் பணிந்து பதிகம் பாடினார்.

" துணிவளர் திங்கள் துளங்கி விளங்கச் சுடர்ச் சடை சுற்றி முடித்துப்
பணிவளர் கொள்கையர் பாரிடஞ் சூழவாரிட மும்பலிதேர்வர்
அணிவளர் கோல மெலாஞ்செய்து பாச்சி லாச்சி ராமத் துறைகின்ற
மணிவளர் கண்டரோ மங்கையை வாட மயல்செய் வதோஇவர் மாண்பே "

என்று தொடங்கி, திருக்கடைகாப்புச் சார்த்தும்போது, பிணி தெளிந்தெழுந்தாள் மழவன் மகள். தந்தையும் மகளுமாய்ப் பிள்ளையாரைப் பணிந்தனர்.

இன்னும் தொடர்ந்தது இப்பயணம். கொங்குநாட்டை வந்தடைந்த பிள்ளையார், திருக்கொடி மாடச்செங்குன்றூர் வழியாகத் திருநணா என்றழைக்கப்பெறும் பவானியை வந்தடைந்தார். திருநாணவில் வழிபாடு முடித்தபின் மீண்டும் திருச்செங்குன்றூர் (திருச்செங்கோடு) வந்து தங்கினார்.

அது பனிக்கால மாதலால் உடல் நடுக்கம் கொடுக்கும் சுர நோய் கண்டு, பிள்ளையாருடன் வந்தவர்களில் பலரும் வாடினர். அவர்கள் துயர் போக்கத் திருவுள்ளம் கொண்ட பிள்ளையார், திருநீலகண்டப் பொதுப்பதிகம் பாடியருளினார். அந்நோய் உடன் வந்தவர்களை விட்டு நீங்கியதுமட்டு மன்றி அந்நாட்டை விட்டே நீங்கியது. இன்றளவும் பக்தியோடு ஓதப்பெறும்போது நோய் தீர்க்கும் அருளாற்றலுடன் திகழும் பதிகங்களில் திருநீலகண்டப் பதிகம் குறிப்பிடத்தக்கது.

" அவ்வினைக்கு இவ்வினையாம் என்றும் சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடாதிருப்பது உந்தமக்கு ஊன மன்றே
கைவினை செய்து எம்பிரான் கழல்போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம் "

என்பது திருநீலகண்டப் பதிகத்தின் முதல் பாடல.

பிறகு திருக்கருவூர், திருவானிலை, திருப்பராய்த்துறை, திருச்சிராப்பள்ளி போன்ற தலங்களில் இறைவனைத் தரிசித்துக் கொண்டு, திருச்சத்திமுற்றம் வந்து சேர்கிறார் திருஞானசம்பந்தர்.

அது வேனிற் காலமாதலால், வெப்பம் மிகுந்திருந்தது. திருப்பட்டீச்சரம் நோக்கிப் பயணப்படும்போது, சிவபெருமான் ஆணையால் பூதகணங்கள், பிள்ளையாரின் தலைக்கு மேலாக முத்துப் பந்தல் தாங்கின. அந்தப் பந்தர் நிழலில், சிவபெருமான் திருவடி நிழலின்கீழ் இருப்பது போல் உணர்ந்தார் பிள்ளையார்.

அங்கிருந்து பல தலங்களையும் கண்டு ஆவடுதுறை நோக்கிச் செல்லும்போது வேள்வி நிகழ்த்தும் பொருட்டு விடைபெற வந்த

சிவபாத இருதயர், வேள்விக்குப் பொன் வேண்டினார். ஆவடு துறை ஈசனை நினைத்துப் பிள்ளையார் பதிகம் பாட, சிவபூதம் ஒன்று விரைந்து வந்து ஆயிரம் பசும்பொன் கொண்ட பொற்கிழி ஒன்றினைப் பலிபீடத்தின்மீது வைத்தகன்றது.

அதனைத் தந்தையாரிடம் தந்த பிள்ளையார், ''நீங்கள் மட்டுமன்றிச் சீர்காழியிலுள்ள மறையோர் அனைவரும் வேள்வி செய்யும் அளவு இதில் பொன் இருக்கிறது'' என்று வழங்கி யருளினார்.

பின்னர் மேற்கொண்ட பயணத்தில் திருமருகல் எனும் தலத்தை வந்தடைந்தார் சம்பந்தர். அங்கிருந்து சிவவழிபாடு நிகழ்த்திவரும் காலத்தில் ஒருநாள் திருக்கோவிலில் அழுகுரல் கேட்டது. சென்று பார்த்தார். வணிக குலத்தைச் சேர்ந்த இளைஞனொருவன் அரவம் தீண்டி இறந்து கிடக்கப் பெண் ஒருத்தி அழுதுகொண்டிருந்தாள்.

ஏது நிகழ்ந்ததென்று அவள்பால் வினவினார் சம்பந்தர். இறந்த இளைஞனும் இளம்பெண்ணும் ஒருவருக்கொருவர் திருமணமுறை உள்ளவர்கள். பெண்ணின் தந்தை தாமன் என்ற வணிகன். அவனுக்கு ஏழு பெண்கள். இவனுக்கு மூத்த பெண்ணை மணமுடித்துத் தருவதாகச் சொல்லியும் வேறு யாரிடமோ பணம் பெற்றுக்கொண்டு வேறு ஒருவனுக்கு மணமுடித்துத் தந்தான். ஒவ்வொரு பெண்ணையும் வெளியே மணமுடித்துத் தந்து விட்டான். இப்பெண் தன் முறை மாப்பிள்ளைமீது அன்பு வைத்து அவனுடன் உடன்போக்காக வந்துவிட்டாள். இருவரும் திருக்கோவிலில் தங்கியிருந்தனர். திருமணம் ஆகாமையால் தனித் தனியே படுத்து உறங்க, அந்த ஆடவனை அரவம் தீண்டியதால் மாண்டான். மணவினை நிகழப் பெறாமையால் தீண்டியழவும் முடியாமல் தனித்தழுதாள் இந்தப் பெண். உடனே திருமருகல் இறைவனை நினைத்துப் பதிகம் பாடினார் சம்பந்தப் பிள்ளையார்.

'' சடையா யெனுமால் சரண்நீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள்உள் மெலிவே ''

என்று பதிகம் பாடியதும் அந்த இளைஞன் விடம் நீங்கி மீண்டும் உயிர் பெற்றெழுந்தான்.

இந்தச் சம்பவத்தை நன்கு நோக்கினால் ஒன்று புலனாகும். உயிர் நீத்த காதலனுக்காக அழுதுகொண்டிருந்த பெண் திருமருகல் ஈசனிடம் முறையிட்டுப் புலம்பினாள்.

சம்பந்தப் பெருமான் வந்து நின்று ஆதரவாய் வினவும் போது, அந்த அருள் நிரம்பிய சொற்களே அவளுக்குப் பெரும் ஆறுதலாய் இருந்தன. வந்து நிற்பவர், பேரருளாளரென்றோ, ஞானப்பால் உண்டவரென்றோ அவள் அறிந்திருக்க நியாயமில்லை.

'ஆதரவில்லாத எனக்குச் சுற்றத்தினர் போல் வந்து ஒரு வார்த்தை கேட்டீர்களே' என்றுதான் அவள் பிள்ளையார் திருவடி களில் வீழ்ந்து கதறினாள்.

" மற்றிவனும் வாளரவு தீண்ட மாண்டான்
மறிகடலில் கலங்கவிழ்ந்தாள் போல நின்றேன்
சுற்றத்தார் எனவந்து தோன்றி, என்பால்
துயரமெலாம் நீங்க அருள் செய்தீர் "

என்கிறாள். அப்போதுகூடத் தன் காதலனை உயிர்ப்பிக்க வல்ல ஞானத்தின் திருவுருவம் அவர் என்பதனை அவள் அறிந்திருக்க வில்லை.

அவளின் அவலநிலை கண்டு ஆறுதல் சொல்லவும் வகை யின்றி ஊரார் சூழ்ந்திருந்தனர். சம்பந்தப் பெருமான் தன்னுள் பீறிட்டெழும் கருணையால் தாமாகவே அப்பெண்ணுக்காகப் பதிகம் பாடத் தொடங்குகிறார்.

" கற்றவர்கள் தொழுதேத்தும் காழி வேந்தர்
கருணையினால் காரிகையாள் தனக்கு நல்கப்
பற்றியவா ளரவின்விடம் தீரு மாறு
பணைமருகல் பெருமானைப் பாட லுற்றார் "

என்பது சேக்கிழார் வாக்கு.

இதற்குமுன் நடந்த அதிசயங்களெல்லாம் சம்பந்தப் பெருமானின் அருள் திறம் அறிந்தவர்கள் அவ்ர்பால் விண்ணப்பிக்க, அவர் இறைவனை வேண்டி அருள் செய்த நிகழ்ச்சிகளாகும்.

கொல்லி மழவன் மகளுக்கு நோய் தீர்த்ததும், திருநணாவில் நளிர்சுரம் போக்கியதும் அப்படித்தான்.

ஆனால், திருமருகல் நிகழ்ச்சி தாமாக முன்வந்து அருள் செய்யும் பிள்ளையாரின் பெருங்கருணைத் திறத்திற்குச் சான்றாகத் திகழ்கிறது.

இந்த இளைஞனை மீண்டும் உயிர்ப்பித்ததோடன்றி அவர்கள் திருமணத்தையும் நடத்திவைத்து விடைகொடுக்கிறார் திருஞான சம்பந்தர்.



# 4. உடனுறைவின் பயன் பெற்றார்

ஈர அன்பினராய்த் திகழும் அடியார்கள், தன்னடக்கத்தின் திலகங்கள். இன்றைய சூழலில், ஒரே சமயத்தைச் சார்ந்த மடாதிபதிகள் இருவர் சந்தித்துக்கொள்ளும் போதெல்லாம் தன்முனைப்பும் அகங்காரமும் வெளிப்படத் தோன்றுவதைக் காண்கிறோம். பெரியபுராணத்தில், அடியார்கள் சந்திப்பு நிகழும் போதெல்லாம் ஒருவருக்கொருவர் தாழ்ந்து போவதிலேயே பெரும் போட்டி நிகழ்வதைப் பார்க்கிறோம். அதனால்தான் முற்றிச் செழித்த நெற்கதிர்கள் சாய்ந்திருப்பதைக் காணும் சேக்கிழாருக்கு, சிவனடியார்கள் ஒருவரையொருவர் வணங்கிக்கொள்வதை உவமையாகச் சொல்லத் தோன்றுகிறது.

" தத்தமில் கூடினார்கள் தலையினால் வணங்குமா போல் "

என்பது சேக்கிழாரின் சொற்சித்திரம்

தம்முடைய சமகாலத்து நாயன்மார்கள் என்கிற அளவில், திருஞானசம்பந்தருடன் நேரடித் தொடர்பு கொண்ட நாயன்மார்கள் ஒன்பது பேர்:

1. திருநாவுக்கரசர் 2. திருநீலகண்ட யாழ்ப்பாணர், 3. சிறுத் தொண்டர் 4. திருநீலநக்கர், 5. முருகர், 6. குங்குலியக்கலயர், 7. மங்கையர்க்கரசியார், 8. குலச்சிறையார், 9. நின்ற சீர் நெடுமாறர். திருஞானசம்பந்தர் காலத்தில் வாழ்ந்து வந்தவராயினும் அவரை அப்பூதி அடிகள் நேரில் சந்தித்ததாகத் தகவல் இல்லை. மேற்குறித்த ஒன்பது அருளாளர்களோடும் உடனுறைந்து உவகை கொண்டிருக்கிறார் ஆளுடைய பிள்ளையார். இந்தச் சந்திப்புகள் நமக்குணர்த்தும் உண்மைகள் பற்பல. அவற்றை ஒவ்வொன்றாகக் காண்போம்.

## திருநாவுக்கரசர்

பெரியபுராணத்தில் நம் நெஞ்சை அள்ளும் பகுதிகளாகத் திகழ்வன திருநாவுக்கரசருக்கும் திருஞானசம்பந்தருக்கும் நிகழ்ந்த நான்கு சந்திப்புகள். சைவ சமய ஆச்சாரிய மூர்த்திகளில் இருவருமே குறிப்பிடத்தக்கவர்கள். காலத்தால் ஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு முற்பட்டவராக திருநாவுக்கரசர் தம்முடைய வழிபாட்டுப் பயணத்தைத் தொடங்கியிருந்தால்கூட அவர் வாழ்ந்திருந்த வட தமிழகம் சமணத்தின் பிடியிலே நீண்டகாலம் இருந்த பகுதி. ஆனால், திருஞானசம்பந்தர் அவதரித்து வளர்ந்துவந்த சோழநாடு சைவத்தைத் தன்னுடைய உயிர்நாடியாகக் கருதிய பிரதேசம். எனவே, மக்கள் மத்தியில் ஞானசம்பந்தப் பிள்ளையார் அளவுக்கதிகமான செல்வாக்குடன் திகழ்ந்தவர். ஞானசம்பந்தர் தம்முடைய நான்காவது யாத்திரையை நிறைவுசெய்துகொண்டு சீர்காழிப்பதியில் தங்கியிருக்கிற காலகட்டத்தில் திருநாவுக்கரசு பெருமான் முதல்முறையாகச் சம்பந்தப் பிள்ளையாரைச் சந்திப்பதற்காகச் சீர்காழி நோக்கி வருகிறார். திருநாவுக்கரசர் வருகிற செய்தி அறிந்து, திருஞானசம்பந்தர் அடியார் புடைசூழ விரைந்து சென்று ஆளுடைய அரசரை எதிர்கொள்கிறார். இருவரும் ஒருவரை ஒருவர் வணங்கி, தோணியப்பருடைய திருக்கோவிலுக்குச் சென்று வழிபாடு நிகழ்த்துகிறார்கள். பிறகு ஆளுடைய அரசர் ஆளுடைய பிள்ளையாருடைய இல்லத்தில் எழுந்தருள்கிறார். அவருக்கு அமுதுபடைத்து இருவரும் அன்பிலே ஒருவரோடு ஒருவர் உறைந்து நின்றார்கள் என்பதைச் சேக்கிழார் முதல் சந்திப்பின் முத்திரை நிகழ்ச்சியாக வருணிக்கிறார். இதில் இன்னொரு செய்தி நம் சிந்தனைக்குரியது. முதல் முதலாகத் திருநாவுக்கரசருடைய தோற்றத்தைக் காணுகிற திருஞான சம்பந்தரின் திருஉள்ளத்தில் ஒரு மெல்லிய மகிழ்ச்சி பரவுகிறது.

'' கண்ட கவுணியக் கன்றும் கருத்தில் பரவும் மெய்க்காதல்
தொண்டர் திருவேடம் நேரே தோன்றியது என்று தொழுது ''

என்று சேக்கிழார் சொல்கிறார். இது குறித்து விளக்கம் தருகிற போது அறிஞர் அ.ச. ஞானசம்பந்தன் அவர்கள் ஒரு முக்கியமான குறிப்பை நம் முன்னே வைக்கிறார். இளம் வயதினராகிய திருஞானசம்பந்தர் பழுத்த சிவனடியார் யாரையும் அதுவரையில் நேரில் கண்டதில்லை என்றாலும், ஒரு சிவனடியார் இப்படித்தான் இருப்பார் என்று தம் மனதிற்குள்ளே ஒரு சித்திரத்தை வரைந்து வைத்திருந்தார். அந்த இலக்கணச் சித்திரத்திற்கு இலக்கியம் எழுதியது போல...

" சிந்தை இடையறா அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தை மிகையாம் கருத்தும் கைஉழ வாரப் படையும்
வந்துஇழி கண்ணீர் மழையும் வடிவில் பொலிதிருநீறும் ஆகிய
அந்தமில்லாத் திருக்கோலத்தோடு "

திருநாவுக்கரசர் வந்து தோன்றுகிறார். அதைப் பார்த்த மாத்திரத்தில் இப்படித்தான். ஒரு சிவனடியார் இருப்பார் என்று தம் மனத்தில் இருக்கிற தோற்றமே உருக்கொண்டு வந்ததாக ஞானசம்பந்தப் பிள்ளையார் மகிழ்கிறார். இதை,

" கருத்தில் பரவுமெய்க்காதல் தொண்டர் திருவேடம்
நேரே தோன்றியது "

என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். இந்தச் சம்பவத்தைச் சுட்டிக் காட்டி அறிஞர் அ.ச. ஞானசம்பந்தன் அவர்கள் இருவருக் கிடையிலே இடையறா அன்பு பெருகியமைக்கு இந்த முதல் சந்திப்பே அடிகோலியது என்பதை மிக நயமாகச் சுட்டிக் காட்டுகிறார்.

திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் இரண்டாவது முறை யாகச் சந்தித்துக்கொள்வது திருப்புகலூரில். 63 நாயன்மார்களில் ஒருவராகிய முருக நாயனார் முன்னிலையில் இந்தச் சந்திப்பு நிகழ்கிறது. திருவாரூரிலிருந்து வருகிற திருநாவுக்கரசர் திருமருகல், திருச்செங்காட்டங்குடி போன்ற தலங்களிலிருந்து வந்துகொண் டிருக்கிற திருஞானசம்பந்தரைத் திருப்புகலூரில் சந்திக்கிறார். அப்போதுதான் திருவாரூரில் நடந்த திருவாதிரை விழா குறித்துத் திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தருக்கு விளக்குகிறார். திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசரை அப்பர் என்று குறிக்கிற அற்புதம் இங்கேதான் நடக்கிறது. சேக்கிழார் வரிகளில் சொல்ல வேண்டுமேயானால்,

" மெய்த்திரு ஞானசம்பந்தர் வாக்கின் வேந்தரை நோக்கி
விருப்பினாலே அப்பரே இங்கு அணையப் பெறும் பேர்
அருளுடையோம் யாம் "

என்று சொல்கிறார். 'அப்பரே' என்று இங்குத் திருஞானசம்பந்தர் உருகி அழைத்த பாங்கினைப் பார்க்கிறபோது திருநாவுக்கரசர் அவர் உள்ளத்தில் எத்தகைய இடம் பெற்றிருந்தார் என்று நமக்குத் தெரியவருகிறது. திருவாரூரின் தரிசனச் சிறப்பை யெல்லாம் திருநாவுக்கரசர் விளக்கிச் சொல்ல ஆரூரர் பெருமானைப் பணிய வேண்டும் என்கிற பேராவல் காரணமாகத் திருவாரூருக்குத் திருஞானசம்பந்தப் பெருமான் செல்கிறார்.

ஆரூரில் சில நாட்கள் இருந்தபிறகு மீண்டும் திருநாவுக்கரசரைச் சந்திக்க வேண்டும் என்று திருப்புகலூர்க்குத் திரும்புகிறார். அவர் வருகிற செய்தி அறிந்து திருநாவுக்கரசரும் முருக நாயனாரும் மற்றத் தொண்டர்கள் எல்லாரும் சேர்ந்து மீண்டும் சீர்காழிப் பிள்ளையாரை, திருஞானசம்பந்தப் பிள்ளையாரை எதிர்கொள்கிறார்கள். அங்கேதான் திருப்புகலூரிலே திருநீலநக்கரும், சிறுத்தொண்டரும் வந்து சேர்ந்துகொள்கிறார்கள். எனவே, திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், முருகநாயனார், திருநீலநக்கர், சிறுத்தொண்டர் ஆகிய



*திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் படிக்காசு பெற்றது (திருவீழிமிழலை)*

ஐந்து நாயன்மார்களும் சிவபெருமானுக்கே உரிய ஐந்து எழுததைப் போலத் திருப்புகலூரில் ஒன்றுசேர்ந்து சிறிது காலம் உடன் உறைகிறார்கள். அதற்குப் பிறகு வெவ்வேறு தலங்களுக்குச் செல்லலாம் என்று கருதித் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் புறப்படுகிறார்கள். பல்வேறு தலங்களைத் தரிசித்துக்கொண்டே வருகிற வேளையில், இருவருமாகத் திருவீழிமிழலை வந்து சேர்கிறார்கள். திருப்புகலூரில் நடந்தது இரண்டாவது சந்திப்பு. ஞானசம்பந்தப் பிள்ளையார் திருவாரூக்குச் சென்று விட்டு மீண்டும் திருப்புகலூர் திரும்பியபோது நடைபெற்றது, மூன்றாவது

சந்திப்பு. இந்த மூன்றாவது சந்திப்பின் தொடர்ச்சியாகத்தான் திருவீழிமிழலைக்கு இருவரும் வருகிறார்கள். திருவீழிமிழலையிலே வானம் பொய்த்ததனாலே காவிரி வளம் குறைந்து பஞ்சம் பரவியிருந்தது. தங்கள் அடியார்களுக்கு இந்தப் பஞ்சத்தினாலே கவலை நேருமோ என்று கருதி, திருவீழிமிழலை ஈசனை இருவரும் நினைத்தனர். பெருமான் அவர் கனவில் தோன்றி ஒவ்வொரு நாளும் ஆலயத்தின் கீழ்ப்பீடத்திலும், மேல்பீடத்திலும் ஒவ்வொரு பொற்காசினை வழங்குவோம் என்று அருள் செய்தார். இதிலே திருநாவுக்கரசருடைய திருமடத்திலேயும் அப்பொற் காசுகளைக் கொண்டு அடியார்களுக்கு அமுதும் செய்வித்தார்கள். அதே போலத் திருஞானசம்பந்தர் திருமடத்திலேயும் அப்பொற் காசுகளைக் கொண்டு அடியார்களுக்கு அமுது செய்வித்தார்கள். திருநாவுக் கரசருக்குக் கிடைத்தது காசு, வாசியில்லாக் காசு. எனவே, அது விரைவிலே கடைத்தெருவில் செல்லுபடியானது. ஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு வாசியுள்ள காசைச் சிவபெருமான் முதலில் வழங்கினார். அதனாலே அது செல்லுபடியாகச் சற்றே தாமதமானது. (வாசி: நாணய மாற்றுக்கு உரிய கழிவு விகிதம் - கமிஷன்).

அப்பர் கைத்தொண்டு செய்தமையால் வாசியில்லாக் காசு பெற்றார் என்று நினைத்த பிள்ளையார் இறைவனை நினைத்து ‘வாசிதீரவே காசு நல்குவீர்’ என்று திருப்பதிகம் பாட, அவருக்கும் நல்ல காசுகள் கிடைக்கலாயின.

" அல்லார் கண்டத்து அண்டர்பிரான் அருளால் பெறற படிக்காசு
பல்லாறு இயன்ற வளம் பெருகப் பரமன் அடியார் ஆனார்கள்
எல்லாம் எய்தியுண்க எனஇரண்டு பொழுதும் பறைநி கழ்த்தி
சொல்லால் சாற்றிச் சோறிட்டார் "

என்று பஞ்சக் காலத்திலும் இறைவன் திருவருளினால் அடியார் களுக்கு இந்த இரு பெரும் அருளாளர்களும் அமுது படைத்த அற்புதத்தைச் சேக்கிழார் பெருமான் எழுதிக் காட்டுகிறார்.

திருநாவுக்கரசர் முன்னும் திருஞானசம்பந்தர் பின்னுமாகத் தொடர்ந்து செல்கிற வழக்கத்தின் படி பல்வேறு தலங்களை மீண்டும் வணங்கிக்கொண்டே திருமறைக்காட்டிற்கு வந்து சேர்கிறார்கள். திருமறைக்காட்டில் ஆலயத்தின் திருக்கதவுகள் மூடப் பட்டிருப்பதைப் பார்த்து ‘இது என்ன’ என்று வினவுகிறார்கள். ‘வேதங்கள் இறைவனை வழிபட்டுக் கதவைத் தாழிட்டு விட்டுச் சென்றுவிட்டன. எனவே, மூடப்பட்டேயிருக்கிறது. அதனால் புதியதாக ஒரு வாயிலை உருவாக்கி அதன்மூலம் எல்லோரும்

வழிபடச் செல்கிறோம்' என்று அங்கிருந்தவர்கள் கூறினார்கள். உடனே ஞானசம்பந்தப் பெருமான் திருநாவுக்கரசரை நோக்கி ''அப்பரே, நாம் இறைவனை நேர்வழியில் சென்று வணங்க வேண்டும். அதனால் கதவு திறக்க நீங்களே பாடுங்கள்'' என்று கேட்டுக்கொண்டார். ''திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே'' என்று இறைவனை வேண்டித் திருநாவுக்கரசர் பாடத் தொடங்கினார். நிறைவுப் பாடலில் கதவு திறந்தது. இருவரும் சென்று வழிபட்டனர். "இந்தக் கதவினை நாள்தோறும் திறக்கவும் அடைக்கவும் வழக்கம் வர வேண்டும். எனவே, இந்தக் கதவை அடைக்கும்படியாக நீங்கள் பாடுங்கள்'' என்று திருஞான சம்பந்தரைத் திருநாவுக்கரசர் கேட்டுக் கொள்ளச் 'சதுரம் மறை' என்ற பதிகத்தைத் தொடங்கினார். உடனே திருக்கதவு சாத்திக்கொண்டது.

இந்தச் சம்பவம் திருநாவுக்கரசருடைய திருஉள்ளத்திலே ஒரு சிறுநெருடலை ஏற்படுத்தி இருக்கக்கூடும். இறைவன் அவரை 'வாய்மூருக்கு வா' என்று அழைத்ததாகவும் அவர் தொடர்ந்து போக, சம்பந்தப் பிள்ளையாரும், திருநாவுக்கரசர் எங்கே என்று தேடிக்கொண்டு போக இருவருமாகச் சென்று திருவாய்மூரில் சில நாட்கள் இருந்து மீண்டும் திருமறைக்காட்டிற்கு வந்ததாகவும் வரலாறு சொல்கிறது.

சிவபெருமான் தலைமைப் புலவனாக அமர்ந்து தமிழ் வளர்த்த மதுரையில் சமணம் பெருகியது. மதுரையை ஆண்டுவந்த பாண்டியனும் சமண மதத்தைச் சார்ந்தான். பல குடிமக்களும் மதம் மாறினார்கள். சோழ நாட்டின் இளவரசியாகப் பிறந்த பாண்டிய நாட்டின் அரசியார் மங்கையர்க்கரசியாரும், பாண்டிய நாட்டின் அமைச்சரான குலச்சிறையாரும் சைவத்திலேயே ஆழ்ந்த பற்றோடு திகழ்ந்தார்கள். அவர்கள் திருஞானசம்பந்தரின் பேரருள் திறத்தைக் கேள்விப்பட்டு, அவர் திருமறைக்காட்டில் எழுந்தருளியிருக்கிற செய்தியையும் கேட்டுச் சில ஒற்றர்களை அனுப்பி வைத்தார்கள். அந்த ஒற்றர்கள் வந்து விவரத்தைச் சொல்ல, தாம் உடனே பாண்டிய நாட்டில் எழுந்தருளிச் சமணத்தினுடைய ஆதிக்கத்தை முறியடிக்க வேண்டும் என்று திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவுள்ளம் கொண்டார். சமணசமயத்தை விடுத்துச் சைவசமயத்திற்குத் திரும்பிய காலகட்டத்திலேயே சமணர்களுடைய அருங்கொடுமைகளுக்கு ஆளாகி இறைவன் அருளால் மீண்டவர் திருநாவுக்கரசர். அவர் திருஞானசம்பந்தரிடம் ''எல்லையில்லாத வஞ்சனை செய்யக் கூடியவர்கள் சமணர்கள், எனவே, தாங்கள் இப்போது அங்கே எழுந்தருள வேண்டாம்'' என்று வேண்டினார். இதுவரையில் புராண

நிகழ்வில் திருநாவுக்கரசரை 'அப்பரே' என்று சம்பந்தப் பெருமான் அழைத்திருக்கிறார். இப்போதுதான் முதல் முறையாகச் சம்பந்தரைப் பார்த்துத் திருநாவுக்கரசர் 'பிள்ளாய்' என்று அழைக்கிற அருமைப் பாட்டையும் காண்கிறோம். 'கோள் நிலையும் இப்போது சரியாக இல்லை' என்று திருநாவுக்கரசர் சுட்டிக் காட்ட, ''இறைவனுடைய அடியவருக்கு நவகோள்களால் தீமை விளையாது. அனைத்துக் கோள்களும் நன்மையே செய்யும்'' என்று திருஞானசம்பந்தர் கோளறு திருப்பதிகம் பாடினார்.

இன்றளவும் கோள்களுடைய மாற்றத்தால் ஏற்படுகிற தீமையிலிருந்து தம்மை விடுவித்துக்கொள்ள நினைப்பவர்கள் பக்தியோடு ஓதுகிற பதிகமாகக் கோளறு திருப்பதிகம் திகழ்கிறது.

இதனைச் சொல்கிற முழுமையான தகுதி திருஞானசம்பந்தப் பெருமானுக்கு இன்னொரு காரணமாகவும் அமைந்திருக்கிறது. காரணம், அவர் அவதரித்த நன்னாளை முதலில் சொல்கிற சேக்கிழார் அந்த அவருடைய அவதார நேரத்தில் அனைத்துக் கிரக நிலைகளும் உச்ச நிலையில் இருந்தன எனச் சொல்கிறார்.

''அருக்கன் முதல் கோள் அனைத்தும் அழகிய உச்சங்களிலே பெருக்க வலியும் நின்று பேணிய நல்ஓரை'' யென்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். எனவே, கோள்கள் சிவனடியார்களுக்கு உதவியாக இருக்குமே தவிர இடையூறு செய்யா என்று சொல்லிவிட்டுச் சம்பந்தப் பெருமான் மதுரை நோக்கிப் புறப்படுகிறார். இங்கேதான் இரண்டு அருளாளர்களுடைய மூன்றாவது சந்திப்பு நிறைவு பெறுகிறது. அவர்களுடைய நான்காவது சந்திப்பு நிறைவான சந்திப்பு. அது மிக உருக்கமான சம்பவம். மதுரையிலே சமண சமயத்தை வென்று சைவத்தை நிலைநிறுத்திவிட்டு ஞானசம்பந்தப் பிள்ளையார் திரும்புகிறார். சோழ வள நாட்டிலே பல்வேறு தலங்களைத் தரிசித்துக்கொண்டே வருகிற சம்பந்தப் பிள்ளையார், திருக்கடவூரில் மறுபடியும் வந்து தங்குகிறார். அப்போது அவருக்குத் திருநாவுக்கரசர் பெருமானின் நினைவு தோன்றவே 'அவர் எங்கேயிருக்கிறார்' என்று உடனிருப்போர்களை வினவ, 'ஆளுடைய அரசர் திருப்பூந் துருத்தியில் எழுந்தருளியுள்ளார்' என்று அடியவர்கள் சொன்னார்கள். உடனே அப்பரைக் காணப் புறப்பட்டார் ஞானசம்பந்தப் பிள்ளையார். திருப்பூந்துருத்தியை நெருங்கியவுடனே அப்பர் எங்கேயிருக்கிறார் என்று வினவுகிறார் பிள்ளையார். அப்போது அவருடைய சிவிகைக்குக் கீழேயிருந்து ஒரு குரல் வருகிறது. ''நான் நிறைந்த தவம் செய்த காரணத்தினாலே உங்கள் திருவடிகளைச் சுமந்து வருகிற பெரும் பேற்றினைப்

பெற்றேன்'' என்று திருநாவுக்கரசருடைய குரல் கேட்கிறது. திருப்பூந்துருத்தியின் நகர எல்லைக்கு வெளியில் இருந்தே அடியாரோடு அடியாராகத் தாமும் சேர்ந்து சம்பந்தப் பிள்ளையாரின் சிவிகையைத் திருநாவுக்கரசர் சுமந்து வந்திருக்கிறார். இதைக் கேட்ட மாத்திரத்திலேயே அஞ்சிச் சிவிகையிலிருந்து கீழே குதித்து ''இப்படிச் செய்வது தகுமா?'' என்று அவர் திருநாவுக்கரசரை வணங்க, திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தரை வணங்க, சூழ்ந்திருந்த தொண்டர்கள் எல்லாரும் அது கண்டு மனம் கசிந்து விழுந்து வணங்கித் தலைமேல் கைகுவித்து இந்த இரண்டு பெரும் அருளாளர்களையும் வணங்கப்பெற்றமையாலே நம்முடைய பிறப்பெனும் பிணி ஒயப்பெற்றோம் என்று மகிழ்ச்சியடைந் தார்கள். திருநாவுக்கரசர் ஞானசம்பந்தப் பிள்ளையாரைப் பார்த்து அவருடைய மதுரைப் பயணத்தைப்பற்றி வினவ, மதுரையின் மேன்மையையும் மங்கையர்க்கரசியார் கொண்டிருந்த அன்பினை யும் குலச்சிறையாரின் தொண்டினையும் விளக்கிச் சொன்னார். இதையெல்லாம் கேட்டுத் திருநாவுக்கரசர் மனம் மகிழ்ந்தார். உடனே மதுரையம்பதி சென்று ஆலவா யுடையானைத் தரிசிக்க வேண்டும் என்கிற ஆவல் ஆளுடைய அரசருக்குத் தோன்றியமையாலே அவர் சம்பந்தப் பிள்ளையாரிடம் விடைபெற்றுக்கொண்டு பாண்டிய நாட்டை நோக்கிப் புறப்பட்டார்.

இந்த நான்கு சந்திப்புகளும் ஒருவர் மேல் ஒருவர் வைத்திருந்த அளப்பரிய ஈடுபாட்டை உணர்த்து கின்றன. சிவபாத இருதயரையும் சிவபெருமானையும் அப்பர் என்று அழைக்கிற ஞானசம்பந்தப் பிள்ளையார் திருநாவுக்கரசரையும் அப்பர் என்று அழைத்து அகமகிழ்ந்தார். திருஞானசம்பந்தப் பெருமானின் பெருமைகளைத் தம்முடைய பதிகத்திலேயும் ஆளுடையஅரசர் பதிவு செய்திருக்கிறார். ''கழுமல ஊரார்க்கு அம் பொன் ஆயிரம் கொடுப்பார் போலும்'' என்று திருவாவடுதுறைப் பதிகத்தில் குறிப்பிட்டிருக்கிறார். திருமறைக்காட்டில் தாம் கதவைத் திறக்கப் பாட, அதை அடைக்கப் பாடியவர் திருஞானசம்பந்தர் என்பதைத் திருவாய்மூர்ப் பதிகத்திலே குறிப்பிடுகிற போது ''திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ் உறைப்பப் பாடி அடைப்பித்தார்'' என்று திருநாவுக்கரசப் பெருமான் அருளியிருப்பதையும் பார்க்கிறோம்.

### திருநீலகண்ட யாழ்ப்பாணர்

திருஞானசம்பந்தருக்கு மூன்று வயது நிரம்பிய கால கட்டத்தில் அவருடைய பெருமைகளையெல்லாம் கேள்விப்பட்டு,

நாயன்மார்களில் ஒருவரான திருநீலகண்ட யாழ்ப்பாணர் தம் துணைவியார் மதங்க சூளாமணியாரோடு சேர்ந்து சீர்காழிக்கு வந்து பெருமானைத் தரிசித்தார். திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவருடைய மனைவியாரும் யாழ் மீட்டிப் பாடுகிற பேராற்றல் வாய்ந்தவர்கள். இருவரையும் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றார் திருஞானசம்பந்தர். திருநீலகண்ட யாழ்ப்பாணரையும் அவருடைய துணைவியாரையும் பார்த்து "உங்கள் இறைவனுக்கு யாழ் வாசியுங்கள்" என்று அவர் வேண்டிக் கொள்ளப் பாணர் யாழ் வாசித்தார். அனைவரும் மகிழ்ந்தார்கள். திருஞானசம்பந்தர் அருளிய பதிகங்களையெல்லாம் கேட்டுப் பெரும் மகிழ்ச்சி எய்திய திருநீலகண்ட யாழ்ப்பாணர் சம்பந்தருடன் தாமும் தம் துணைவியும் பயணங்களில் உடன் வந்து பதிகங்களை யாழிலிட்டு வாசிக்கிற பெரும் பேற்றினைத் தரவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். ஞானசம்பந்தப் பெருமான் இசைந்தார். தொடர்ந்து யாழ்ப்பாணர் திருஞானசம்பந்தரோடு சேர்ந்து பயணங்களை மேற்கொண்டார்.

அந்த நாட்களில் தீண்டத் தகாத வகுப்பு என்று கருதப்பட்ட ஒரு பிரிவைச் சேர்ந்த யாழ்ப்பாணரையும் அவருடைய துணைவியார் மதங்க சூளாமணியாரையும் பெரிதும் போற்றி மதித்துத் தம்மோடிருக்கச் செய்துகொண்டவர், அந்தண வகுப்பில் பிறந்தவராகிய திருஞானசம்பந்தர். இது சமயப் புரட்சியின் மிக முதிர்ந்த நிலை.

பெரியபுராணம் முழுவதிலும் ஐந்து முறைதான் ஐயர் என்ற சொல்லைச் சேக்கிழார் பயன்படுத்துகிறார் என்றும் அந்த ஐந்து முறைகளிலும் மூன்று முறை திருஞானசம்பந்தர் திருநீலகண்ட யாழ்ப்பாணரை அழைப்பதற்கு 'ஐயர்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார் என்றும் அறிஞர் அ.ச. ஞானசம்பந்தன் எழுதுகிறார். எனவே, இறையடியார்கள் என்று வருகிறபோது அவர்களிடத்தில் எந்த விதப் பேதமும் காணலாகாது என்பதனைத் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்தவர் திருஞானசம்பந்தர்.

ஆண்களாகச் சேர்ந்து பயணம் செய்த திருஞானசம்பந்தரின் அருள் யாத்திரைகளில் இடம் பெற்ற பெண்ணடியாராக மதங்க சூளாமணியார் திகழ்ந்தார் என்பதும் சம்பந்தப் பெருமான் நிகழ்த்திய சமய, சமூகப் புரட்சிகளில் குறிப்பிடத்தக்கது.

திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கும் திருஞானசம்பந்தருக்கும் இடையிலான நெருக்கம் மிக உயர்ந்தது. தில்லைப்பதியில்

தரிசனத்திற்காகச் செல்கிற பிள்ளையாருடைய கண்களுக்குத் தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரவர்களும், சிவகணத்தவர்களாகவே தெரிகிறார்கள். அந்தக் காட்சியை யாழ்ப்பாணரை அழைத்துக் காட்டியருளுகிறார் பிள்ளையார். அது மட்டுமல்ல, திருத்தருமபுரத்திற்குச் செல்கிறபோது அது திருநீலகண்ட யாழ்ப்பாணருடைய தாயினுடைய தலம் என்பதால், அவர்கள் உறவினர் அனைவரும் சூழ்ந்துகொண்டு யாழிசையைப் பின் புலமாகக் கொண்ட தேவார நல்லிசை கேட்டு மகிழ்கிறார்கள். அவர்களில் சிலர் சம்பந்தருடைய பதிகங்களுடைய செல்வாக்குக்குத் திருநீலகண்ட யாழ்ப்பாணருடைய இசை காரணம் என்பது போல் பேசியதும் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மனம் நடுங்கினார். எனவே, 'யாழினுடைய அளவுக்கு உட்படாத முறையிலே ஒரு பதிகம் வாசியுங்கள். யாழுக்குள் அந்த இசை அடங்காத அந்தத் தன்மையினை வெளிப்படுத்தித் தங்கள் மேன்மையை நான் உலகுக்கு உணர்த்த வேண்டும்' என்று யாழ்ப்பாணர் வேண்டினார். உடனே 'மாதர் மடப்பிடி' என்கிற திருப்பதிகத்தைப் பிள்ளையார் அருளினார். அந்தப் பதிகத்தில் நடை, உடை, மலை, மகள் என்கிற வரி யாழுக்குள் அடங்கவில்லை. இப்படி ஒரு சம்பவம் நிகழ்ந்தவுடனே தம்முடைய யாழை முறித்துப் போட முன் வந்தார் யாழ்ப்பாணர். அதனைச் சம்பந்தர் தடுத்தார். இந்தப் பண்ணிற்கு யாழ்முரிப் பண் என்கிற பெயர் வழங்கி வரலானது.

திருநீலநக்கருடைய திருமனையிலே திருஞானசம்பந்தப் பெருமான் தங்கியிருந்த போது திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கும் அவர்தம் துணைவியாருக்கும் தங்குவதற்கு வேள்விச் சாலையை ஒதுக்கித் தந்தார். அந்தணர்கள் வேள்வி நடத்துகிற இடத்தில் வேறு சாதியைச் சார்ந்த அடியார்களைப் பேதம் பார்க்காமல் தங்க வைத்த பாங்கு ஏழாம் நூற்றாண்டில் மிக அமைதியாக நடந்த ஒரு பெரும் புரட்சி.

திருநீலகண்ட யாழ்ப்பாணரும், மதங்க சூளாமணியாரும் நிறைவு நிலை வரை உடனிருந்து சம்பந்தப் பெருமானோடு சேர்ந்து சிவஜோதியில் புகுந்த அருள் வரலாற்றை இந்நூலின் நிறைவுப்பகுதிகளிலும் காணவுள்ளோம்.

## திருநீலநக்கர்

சோழநாட்டில் உள்ள திருச்சாத்த மங்கையில் வைதிக அந்தணர் மரபில் தோன்றியவர் திருநீலநக்கர். அவர் திருஞான சம்பந்தர்

தம்முடைய ஊருக்கு எழுந்தருளியபோது வரவேற்று உபசரித்த பெருமைக்குரியவர். இவரைக் குறித்துத் திருச்சாத்தமங்கைத் தலப்பதிகத்தின் திருக்கடைக்காப்பில் ஞானசம்பந்தர் குறிப்பிடுகிறார். சம்பந்தப் பிள்ளையாரின் திருமணத்தை நிகழ்த்தி வைத்து, சிவஜோதியிலே கலந்தவர்களில் திருநீலநக்க நாயனார் ஒருவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## முருக நாயனார்

சோழநாட்டில் திருப்புகலூரில் இறைவனுக்கு மலர் தொடுத்து வழங்குகிற மறைக் குலத்தவர் முருக நாயனார். ஐந்தாவது யாத்திரையின்போது திருஞானசம்பந்தர் திருப்புகலூரில் இவருடைய திருமடத்தில்தான் தங்கியிருந்தார். இவரும் சம்பந்தப் பெருமானுடைய பதிகத்திலே இடம் பெறுகிற பேற்றினைப் பெற்றவர். திருப்புகலூர்த் திருப்பதிகத்தில் சம்பந்தர் 'மூசு வண்டறை கொன்றை முருகன் முப்போதும் செய்முடிமேல் வாசமா மலருடையார்' என்று இறைவனுக்கு முருகநாயனார் மலர் தொடுத்துத் தருகிற பாங்கினைப் பதிவு செய்திருக்கிறார். திருஞானசம்பந்தரோடு சேர்ந்து ஜோதியில் கலந்தவர்களில் திருமுருகநாயனாரும் ஒருவர்.

## சிறுத்தொண்டர்

பிள்ளைக்கறி அரிந்து கொடுத்து, சைவர்கள் மனத்தில் நீங்காத இடம் பெற்றவர் சிறுத்தொண்டர். ஐந்தாம் யாத்திரையின்போது திருஞானசம்பந்தரை வரவேற்றதோடு திருமருகல் தலத்தில் தங்கியிருந்த ஞானசம்பந்தரை மீண்டும் ஒருமுறை அழைத்துக் கொண்டு போய்த் தம்முடைய ஊரிலே தங்க வைத்துக் கொண்டவர். திருஞான சம்பந்தர் திருச்செங்காட்டங்குடிக்கு எழுந்தருளியபோது சிறுத்தொண்ட நாயனாருடைய மகன் சீராள தேவனுக்கு மூன்று வயது என்று ஆய்வாளர்கள் குறிக்கிறார்கள். தமிழகத்திலே கணபதி வழிபாடு செல்வாக்குப் பெறுவதற்கு முக்கியக் காரணமாக விளங்கியது வாதாபியில் போரிட்டுப் பரஞ்சோதி என்கிற பெயரிலே தளபதியாயிருந்த சிறுத்தொண்டர் கொண்டுவந்து நிறுவிய விநாயகரின் திருவுருவம். அதனால் கணபதீச்சுரம் என்று அழைக்கப்பட்டது திருச்செங்காட்டங்குடித் திருக்கோயில்.

சம்பந்தர் வருகை தந்து இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகுதான் சிவபெருமான் பைராகியாக வந்து சிறுத்தொண்டரைச் சோதித்த அருள்வரலாறு நடந்ததாகச் சொல்லப்படுகிறது. அமுதப் படையல்

என்கிற பெயரில் இந்தச் சம்பவம் சித்திரை மாதம் தோறும் கொண்டாடப்பட்டு வருகிறது.

### குங்கிலியக் கலய நாயனார்

சிவபெருமானுடைய விரட்டானங்களில் குறிப்பிடத்தக்கதாகத் திகழ்கிற திருக்கடவூரில் வாழ்ந்தவர் கலய நாயனார். இவர் குங்கிலியப் புகை ஆற்றுகிற பணியை மேற்கொண்டமையால் குங்கிலியக் கலயர் எனப் பாராட்டப் பெற்றவர். தாடகாசுரத்தில் சிவலிங்கம் சாய்ந்திருந்தபோது தம் கழுத்திலே ஒரு சிறு நூல் சுற்றி அன்பினால் அதை நிமிர்த்திய பெருமைக்குரியவர். திருநாவுக்கரசரும், சம்பந்தப் பெருமானும் யாத்திரை செய்தபோது திருக்கடவூரில் குங்குலியக் கலய நாயனார் இல்லத்தில் தங்கியிருந்தார்கள் எனச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். மதுரையிலிருந்து திரும்பிய பிறகு மீண்டும் திருக்கடவூருக்குத் திருஞான சம்பந்தர் எழுந்தருளினார் என்பதனாலே இரண்டாவது முறையும் குங்கிலியர் மனையில் எழுந்தருளியிருக்க வேண்டும்.

இவர்களைத் தவிரத் திருஞானசம்பந்தரோடு தொடர்புடைய மற்ற மூன்று அடியார்களாகிய மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், நின்றசீர் நெடுமாறன் ஆகியோர் குறித்து 'ஆலவாய் ஆவதும் இதுவே' என்கிற கட்டுரையில் நாம் விரிவாகக் காணவுள்ளோம்.

தம்மோடு சமகாலத்தில் வாழ்ந்தவர்களை மட்டுமன்றிக் காலத்தால் முற்பட்ட நாயன்மார்களின் மேன்மைகளையும் சம்பந்தர் தேவாரத்தில் குறித்துள்ளார். சேய்ஞலூர்த் திருப்பதிக்குச் சென்றபோது அது சண்டேசுவர நாயனார் பிறந்த பதி என்றறிந்து, சிவிகையிலிருந்து இறங்கி நடந்தோடு சண்டேசுவரருடைய சிறப்பு அமையுமாறு பதிகம் பாடினார். ஆறாம் யாத்திரையில் திருக்காளத்தி அடைந்த போதும் சிவிகையிலிருந்து இறங்கிக் கண்ணப்ப நாயனாருடைய பெருமைகளைத் தம் பதிகத்தில் பாடினார். காரைக்கால் அம்மையாரின் திருவாலங்காட்டை நெருங்கியபோது அம்மையார் தலையால் நடந்த தலம் ஆதலால் கால் கொண்டு நடக்க அஞ்சி அருகிலிருக்கிற இன்னொரு சிறிய ஊரில் சென்று தங்கினார்.

இவர்களில் சமகால அடியவராகிய அப்பூதியடிகளைச் சம்பந்தர் நேரில் சந்தித்ததாகத் திருஞானசம்பந்தர் வரலாற்றிலோ அப்பூதியடிகள் வரலாற்றிலோ குறிப்புகள் இல்லை. திருநாவுக்கரசரையே தம் வழிபடு கடவுளாக வகுத்துக்கொண் -டிருந்தபோதுகூடத் திருநாவுக்கரசரைச் சென்று தரிசிக்க வேண்டும்

என்று அப்பூதியடிகள் கருதவில்லை. திருநாவுக்கரசர் தாமாகவே சென்றுதான் அப்பூதியடிகளைப்பற்றிக் கேள்விப்பட்டு நேரில் சந்திக்கிறார். அப்போதும் அவர் திருநாவுக்கரசரைப் பார்த்த மாத்திரத்தில் அடையாளம் கண்டுகொள்ளவில்லை. எனவே, அளப்பரிய பக்தி நெறியிலிருந்த அப்பூதியடிகள் நேர் கொண்டு காண வேண்டிய அவசியமில்லாத அளவுக்கு அடியார்களுடைய பெருமைகளில் ஈடுபட்டவர். அதனாலேயே நேரில் காணாமலேயே சம்பந்தப் பிள்ளையாருடைய சீர்மைகளை அவர் உணர்ந்திருப்பார் என்று நாம் கொள்ள இடமிருக்கிறது. இன்றும் ஆன்மீகத்தில் ஆழங்கால் பட்ட பலருடைய இயல்பு இப்படியிருப்பதைப் பார்க்கிறோம். தங்கள் வழிபடு கடவுளையோ குருவையோ நேரில் சென்று காண வேண்டும் என்கிற அவசியம்கூட இல்லாமல், அவருடைய பெரும் கருணைக்கும் பேரருளுக்கும் பாத்திரமாகிறவர் களும் உண்டு. அத்தகைய மிக முதிர்ந்த அன்புநிலையில் அப்பூதியடிகள் திகழ்ந்தார் என்பதை அவர் வரலாறு கொண்டே நாம் உணரமுடிகிறது. எனவே, அப்பூதியடிகள் திருஞானசம்பந்தரைச் சந்திக்கவில்லை யென்றாலும் அவருடைய மேன்மைகளை ஒருவாறு அறிந்திருப்பார் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.



# 5. ஆலவாய் ஆவதும் இதுவே

சைவமும் தமிழும் செழித்து வளர்ந்த பாண்டிய நாட்டில் சமணம் செல்வாக்குப் பெற்றது. சமண சமயத்தை அங்கே வலிமையாக ஊன்றிய பணியில் பாண்டிய மன்னனாகிய கூன் பாண்டியனுக்கும் பெரும் பங்கிருந்தது. பாண்டியன் சமணன் ஆனதனாலேயே குடிமக்கள் பலரும் சமண சமயத்தைத் தழுவினார்கள். சோழ வளநாட்டிலே சோழனுடைய மகளாகப் பிறந்து பாண்டிய அரசரைக் கைப்பிடித்த பாண்டிமா தேவியாகிய மங்கையர்க்கரசியாரும், பாண்டிய மன்னரின் அமைச்சராகிய குலச்சிறையாரும்



*குலச்சிறையார்*

தீவிரமாகச் சைவத்திலே ஊன்றி நின்ற பெருமைக்குரியவர்கள். அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கித் திருஞானசம்பந்தர் பல்வேறு தலங்களின் வழியாக மதுரை வந்து சேர்ந்தனர். அவர் வருகிற

காலத்திலேயே மதுரையைச் சார்ந்த சமணர்களுக்குப் பல தீய கனவுகள் தோன்றின. ஒவ்வொருவரும் தம் கனவுகளை விரித்துப் பேசி 'இதோ தீங்கு வரப் போகிற'தென்று பேசிக் கொண்டிருந்தார்கள். மதுரையை ஞான சம்பந்தப் பிள்ளையார் நெருங்கியதை அறிந்து மங்கையர்க்கரசியாரின் உத்தரவின் பேரில் அமைச்சர் குலச்சிறையார், பெருமானை எதிர்கொண்டார். முத்துச் சிவிகையிலே ஞானசம்பந்தப் பிள்ளைார் எழுந்தருளியுள்ள பாங்கினைக் கண்டு பெருகிய பரவசத்தால் செயலற்று விழுந்து கிடந்தார் குலச்சிறையார், 'அப்போதுதான் சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும் இனியெதிர் காலத்தின் சிறப்பும் ஒன்றாக இங்கு எழுந்தருளப் பெற்றோம். இனி எப்போதைக்கும் எங்களுக்குத் திருவருள் உடையவர்களானோம்' என்று குலச்சிறையார் மகிழ்ந்து பேசுகிறார். மதுரையை நெருங்க நெருங்க 'ஆலவாய் அப்பன் அமர்ந்திருக்குமிடம் எது' என்று ஞானசம்பந்தர் கேட்க, 'கோபுரம் தெரிகிறது' என்று சுற்றியுள்ளவர்கள் சொன்னார்கள். உடனே பிள்ளையார் விழுந்து வணங்கினார். ஆலவாய்ப் பதியைச் சிறப்பித்து அதிலே பாண்டிமாதேவியின் பெருமையும் குலச்சிறை யின் பெருமையும் அமையும்படியாகப் பதிகம் பாடினார்.

" மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகன்நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே "

என்று மங்கையர்க்கரசியார் தொழுது வணங்கக் கூடிய திருவால வாயென்று பதிகம் பாடுகிறார். அடுத்த பாடலில் குலச்சிறை யாரைக் குறிப்பிடுகிறார். தாம் முதல்முதலாக குலச்சிறையாரைக் கண்டபோது அவர் பக்திப் பரவசத்தினாலே தரையில் விழுந்து கிடந்து அடியவர்களை வணங்குகிற தன்மை பிள்ளையாரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது போலும். அதனால் குலச்சிறை யாரைக் குறிக்கிற அந்தப் பாடலில்,

" வெற்றென அடியார் அடிமிசை வீழும்
விருப்பினன் - வெள்ளை நீறணியும்
கொற்றவன் தனக்கு மந்திரியாய குலச்சிறை"

என்று பாடினார். மதுரைக்குள் நுழைகிற போதே பிள்ளையார் இந்தப் பதிகங்களைப் பாடினார் என்பது தெய்வச் சேக்கிழாரின் திருவாக்கு. குலச்சிறையாரை மந்திரி என்று குறிக்கும் வேளையில் 'வெள்ளை நீறணியும் கொற்றவன் தனக்கு மந்திரியாகிய குலச்சிறை' என்கிற சொற்றொடர் கவனிக்கத்தக்கது. பிள்ளையார் மதுரைக்குள் நுழைகிறபோதே இந்தப் பதிகம் பாடுகிறார் என்று நாம் கொள்வோமேயானால் அப்போது அங்கு இருக்கிற பாண்டியன் கூன்பாண்டியனாகத்தான் இருக்கிறான். சமண சமயத்தைச் சார்ந்தவனாயிருக்கிறான். வெள்ளை நீறணியும் கொற்றவனாக அப்போது இல்லை. எனவே, எதிர் காலத்தில் நிகழப் போவதை மங்கையர்க் கரசியாரும், குலச்சிறை யாரும் ஆறுதல் பெறும் வகையில் முன்கூட்டியே சுட்டிப் பாடினார் என்று பொருள் கொள்ள வேண்டி யவர்களாக இருக்கிறோம். திருநீறு தரித்த சிவனடி யார்கள் பெரும் திரளாக ஞானசம்பந்தர் தலைமையில் மதுரைக்குள் நுழைந்தமை கண்டு சமணர்கள் பெரிதும் மனம் கலங்கினார்கள். தங்கள் சமயத்தை அரசன் தழுவும் விதமாகச் செல்வாக்குப் பெற்றிருந்தமையால் அரசனைச் சென்று கண்டு 'சீர்காழியிலிருந்து ஒரு சிறுவன் வந்திருக்கிறான். சூலபாணியின் அருள் பெற்றவனாம். மந்திரம் சொல்லி நெருப் பிட்டால் அவன் அஞ்சி ஓடிவிடுவான்' என்று கூறினார்கள். அரசரும் இசைந்தார். அவர்கள் மந்திரம் பாடி ஞானசம்பந்தர் தங்கியிருந்த திருமடத்திலே நெருப்பு வைக்க முயன்றார்கள். இயலவில்லை. தங்கள் மந்திர சக்தியைக் குறையுடையது என்று அரசன் கண்டு கொள்வான் என்பதனால் தாமாகவே சென்று அந்த மடத்திற்கு நெருப்பு வைத்தார்கள்.


*மங்கையர்க்கரசியார்*

உடனே அடியவர்கள் ஒன்று சேர்ந்து அந்த நெருப்பைத் தணித்தார்கள். இத்தகவலைக் கேள்வியுற்ற ஞானசம்பந்தப் பெருமான் அடியவர்கள் தங்கி யிருக்கும் திருமடத்திற்கு நெருப்பு வைப்பது அடாத செயல் என்று கருதி, அரசனுடைய அரசாட்சி வழுவிய காரணத்தால் இது நிகழ்ந்தது என்ற காரணத்தினால் தேவாரப் பதிகம் பாடினார்.

" செய்ய னேதிரு ஆலவாய் மேவிய
ஐயனே அஞ்ச லென்றருள் செய்யெனப்
பொய்யராம் அமணர் கொளு வுஞ்சுடர்
பையவே சென்று பாண்டியற் காகவே "

என்று தொடங்கிப் பதிகம் பாடினார். சமணர்கள் செய்த பிழை காரணமாய் அரசன் அரசாட்சி வழுவினான். அவனை விரைவாகச் சென்று நெருப்புப் பற்றினால் எதிர்காலத்தில் சிவனடியாராகப் போகும் கூன்பாண்டியன் வாழ்வுக்கு அது முற்றாக அமையும் என்பதனாலேயும், மங்கையர்க்கரசியின் மங்கலநாணுக்கு ஊறு வரும் என்றும் கருதி, பையவே சென்று பாண்டியனுக்கு ஆகுக என்று ஞானசம்பந்தர் பாடினார். இரண்டாம் நூற்றாண்டில் இதே மதுரையம்பதியில்தான் நெருப்புக் கடவுளைக் கண்ணகியார் தீத்திறத்தார் பக்கமே சேர்க என்று ஏவினார். தம் அருள் திறத்தாலே நெருப்பினைப் பையவே சென்று பாண்டியற்காகவே என்று திருஞானசம்பந்தப் பெருமான் பணிக்கிறார். உடனே பாண்டிய மன்னனைக் கொடுஞ்சுர நோய் பற்றிக் கொண்டது.

திருஞானசம்பந்தர் திருமடத்திற்கு நெருப்பு வைக்கப்பட்ட செய்தி கேள்விப்பட்டு மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் தங்கள் உயிரை விடச் சித்தமானார்கள். ஆனால், அந்த நெருப்பு அணைக்கப்பட்டது என்றும் யாருக்கும் எந்தத் தீங்கும் நேர வில்லை என்பதை அறிந்தும் அமைதியடைந்தார்கள். பாண்டிய மன்னனைக் கொடுஞ்சுர நோய் பற்றிக்கொண்டதையறிந்து மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அரசரைக் காணச் சென்றனர். மருத்துவமுறைகள் முயன்று பார்க்கப்பட்டாலும் அதனால் நோய் மிகுந்ததே தவிரக் குறையவில்லை. இதற் கிடையிலே சமணர்கள் வந்தனர். தங்கள் கையில் உள்ள மயிற் பீலியினாலே மன்னரின் உடலில் தடவினர். அந்தப் பீலி எரிந்து போகும் அளவுக்கு வெப்பம் இருந்தது. தங்கள் கமண்டல நீரை எடுத்து மன்னனுக்குத் தெளித்தனர். நோய் எரிச்சலும் கூடியது.

'இங்கே நிற்க வேண்டாம்' எனச் சமணர்களைப் பாண்டியன் வெளியே அனுப்பினான்.

திருஞானசம்பந்தரின் திருமடத்திற்கு நெருப்பு வைத்ததால் இது நேர்ந்ததென்று பாண்டிமாதேவியார் அரசரிடம் சொல்ல - அமைச்சரும் அரசியாரும் மன்னரை வணங்கித் 'திருஞான சம்பந்தர் இங்கு எழுந்தருளினால் நோய் தீரும்' என்று கூறினர்.



*திருஞானசம்பந்தர் பாண்டியன் சுரம் தீர்த்தல்*

திருஞானசம்பந்தர் என்ற பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே கூன் பாண்டியன் சிறிது அயர்ச்சி நீங்கினான் என்று சேக்கிழார் சொல்கிறார். ஒரு ஞானியை உரிய முறையில் அறிமுகம் செய்கிற போது அந்தப் பெயரே சில மாற்றங்களை விளைவிக்கும். ஞானசம்பந்தப் பெருமானை இதற்குமுன் சமணர்கள் வாயிலாக அறிந்துகொண்டவன் பாண்டியன். சமணர்கள் எதிர்மறையில் அறிமுகம் செய்திருப்பார்கள். ஆனால், அவருடைய மேன்மை களைக் குலச்சிறையாரும், மங்கையர்க்கரசியாரும் கூறிய பாங்கும், உள்ளம் உருகி அவர்கள் விவரித்த முறையும் பாண்டியனுக்குச் சிறிது நலம் அளித்தது. ஞானிகளுடைய பெயர்களுக்கிருக்கிற வலிமை அத்தகையது. உடனே அரசன் 'நீங்கள் திருஞான

சம்பந்தரை அழைத்து வாருங்கள். யார் என் நோய் தீர்க்கிறார்களோ அவர்கள் பக்கம் நிற்பேன்' என்று சொன்னான்.

அரசன் மனத்தில் ஏற்பட்டுவருகிற மாற்றத்தையறியாத சமணர்கள் அரசனை அணுகி இருவரும் நோய் தீர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும். அவர் தீர்த்தாலும் நாங்கள் தீர்த்ததாகக் கூறுங்கள் என்றனர். உடனே அரசர் ''நான் வஞ்சகம் சொல்ல மாட்டேன்'' என்று சமணர்களைக் கடிந்து கொண்டார்.

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் வேண்டிக் கொண்டதன் பேரிலே பாண்டிய மன்னனின் நோயைத் தீர்க்கிற பெருங்கருணையோடு திருஞானசம்பந்தர் முத்துச்சிவிகையிலே எழுந்தருளினார். தம் தலைமாட்டில் போடப்பட்டிருந்த தங்கப் பீடத்திலே அவரை அமர்த்தினார் அரசர். ஞானசம்பந்தப் பெருமானின் ஊர் எது என்று பாண்டியன் கேட்க, அவர் 'பிரமனூர் வேணுபுரம்' என்னும் பதிகம் பாடி 'கழுமலம் நாம் பரவும் ஊரே' என்று அறிமுக முத்திரையாக அருளினார்.

சமணர்கள் பதற்றமடைந்து வாதம் செய்ய முற்பட்டார்கள். அவர்கள் ஆவேசம் கொண்டு பிள்ளையாரை நெருங்கியதைக் கண்டு மங்கையர்க்கரசியார் திடுக்கிட்டார். ஞானசம்பந்தப் பெருமான் மங்கையர்க்கரசியாருடைய கண்களிலே மருட்சி தோன்றியதைப் பார்த்து 'மானினேர் விழி மாதராய் வழுதிக்கு மாபெரும் தேவிகேள்' என்று பாடி 'இந்த ஈனர்களுக்கு எளியேன் அல்லன் திருஆலவாய் அரன் நிற்கவே' யென அருளினார். தாய்மையின் பேருணர்வினோடு சம்பந்தரை ஒரு கோணத்தில் மங்கையர்க்கரசியார் அணுகுகின்றார். தங்கள் கலி தீர்க்க வந்த கடவுளாகவும் கருதினார். ஒரு மழலையாகவும் கருதினார். அதனால்தான் பதிகம் பாடுகிறபோது திருஞான சம்பந்தர் நான்கு வரிப் பாடலில் ஒன்றரை வரிகள் மங்கையர்க் கரசியாருக்கு அளித்து, அம்மையை வெறுமனே அங்கயற்கண்ணி என்றுமட்டுமே குறிப்பிட்டதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். 'மங்கையர்க்கரசி வளவர் கோன் பாவை வரிவளைக் கைம்மட மானி பங்கயச் செல்வி பாண்டிமாதேவி பணி செய்து நாள்தொறும் பரவ', என்று ஒன்றரை வரிகள் மங்கையர்க் கரசியாரின் சிறப்பினையும், அதே வரியில் மீதமுள்ள அரை வரியில் பணி செய்யும் பாங்கினையும் பாடுகிறார்.

திருஞானசம்பந்தர் சீர்காழிக் குளக் கரையில் அழுதார் என்ற செய்தி கேள்விப்பட்ட மாத்திரத்திலேயே மங்கையர்க்

கரசியாருக்குத் தாய்மையின் பேருணர்வில் திருமுலை சுரந்ததாம். இதைக் கற்பனைக் களஞ்சியமாகிய சிவப்பிரகாச சுவாமிகள் நால்வர் நான்மணி மாலையில்

" இலைபடர்ந்த பொய்கையிடத் தழுதல் கண்டு
முலைசுரந்த அன்னையோ - முன்னின் - நிலைவிளம்பக்
கொங்கை சுரந்தஅருட் கோமகளோ சம்பந்தா
இங்குயர்ந்தாள் யார்சொல் எனக்கு "

என்கிறார். எனவே, அம்மையாருக்கு இருக்கிற தவிப்பினை உணர்ந்து 'மானினேர் விழி மாதராய்' என்று ஞானசம்பந்தர் பாடியருளினார்.

சமணர்கள் இடப்பக்கத்தைக் குணப்படுத்துவதாகச் சொல்லித் தங்கள் கடவுளாகிய அருகனின் நாமத்தை முழக்கி மயிற்பீலியினாலே அரசருடைய இடப்பாகத்தைத் தடவினார்கள். முன்னைவிடவும் வெப்பம் கூடியதும் அரசர் நோய் ஆற்ற முடியாதவராய்த் திருஞானசம்பந்தப் பெருமானைப் பார்த்தார். அப்போதுதான் பெருஞ்சிறப்புப் பெற்றுத் திகழ்கிற திருநீற்றுப் பதிகத்தை ஞானசம்பந்தப் பெருமான் அருளினார்.

" மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே "

என்று திருநீறெடுத்து வலப்பக்கத்தில் தடவினார். வலப்பக்கத்தில் சுரம் நீங்கிக் குளிர்ந்தது. ஆனால், வலப்பக்கத்தில் இருந்த் நோய் இடப்பக்கத்தில் புகுந்து பெருகியது. அரசரின் இடப்பக்கத்தி லிருந்து வெப்ப அலை பெருகக் கண்டு சமணர்கள் விலகி ஒதுங்கினார்கள். தம் உடலிலேயே ஒரு பக்கம் பேரின்பம், மறு பக்கம் நரக வேதனை கண்டு அரசர் நொந்தார். இடப்பக்கத்திற்கு அருள் செய்யுமாறு அரசர் வேண்ட, ஞானசம்பந்தர் திருநீற்றினை இடப்பக்கத்திலும் தடவினார். உடனடியாக அது குளிர்ந்தது. அரசர் குணமடைந்தார். குலச்சிறையாரும், மங்கையர்க்கரசியாரும் பெருமானின் திருவடிகளில் விழுந்து வணங்கி, இனித் தென்னகத்தே சைவம் தழைக்குமென்று பேருவகை எய்தினர்.

சம்பந்தப் பெருமானுடைய பெருமை புலப்படுவது கண்டு பொறாத சமணர்கள் தர்க்கவாதம் வேண்டாம், அனல்வாதம், புனல்வாதம் மேற்கொள்ள வேண்டுமென்றனர். 'நோய் தீர்க்கும்

முயற்சியிலே சம்பந்தர் வென்றார். நீங்கள் தோற்றீர்கள். இனி என்ன வாதம்' என்று அரசர் கேட்டார். 'இரண்டு தரப்பினரும் அவரவர் சமய உண்மைகளை ஓர் ஏட்டில் எழுதி நெருப்பில் இடலாம். எது வேகாமல் இருக்கிறதோ அந்தச் சமயம்தான் உண்மை என்று கொள்ளலாம்' என்றனர். ஞானசம்பந்தரும் அதற்கு இசைந்தார். தம்முடைய தேவார ஏடுகளில் ஒன்றைத் திருக்கயிறு சாத்திப் பார்க்கிற முறையில் தேர்ந்தெடுத்தார். திருநள்ளாற்றிலே பாடிய 'போகமார்த்த பூண்முலையாள்' என்ற பதிகம் கிடைத்தது. அதற்கென்று 'தளரிளவளரொளி' என்னும் திருப்பதிகம் அருளி அந்த ஏட்டினை நெருப்பில் இட்டார். அது அழியாமல் விளங்கியது. சமணர்களும் தங்கள் சமய உண்மை களை எழுதி நெருப்பில் இட்டார்கள். அது சாம்பலானது. குறிப்பிட்ட நேரம் தாண்டியதும் திருஞானசம்பந்தர் தம் ஏட்டினை நெருப்பிலிருந்து எடுத்தார். அது முன்னைவிட மேலாகப் பொலிந்தது. அதை அனைவருக்கும் காட்டினார். சமணர்களுடைய ஏடு கருகிப் போனது. எனவே, அனல் வாதத்திலும் ஆளுடைய பிள்ளையார் வென்றருளினார். பிறகு புனல் வாதம் செய்யலாம் என்று முடிவெடுத்தனர். அப்போது அமைச்சரா யிருந்த குலச்சிறையார் தலையிட்டு 'வாதம் செய்வது பிழை யில்லை. வாதத்தில் வென்றவர், தோற்றவர் என்று வருமே; எனவே, அதற்கு என்ன முடிவு' என்று கேட்டார். கோபத்தின் உச்சத்திலிருந்த சமணர்கள் "நாங்கள் தோற்றால் இந்த மன்னன் எங்களைக் கழுவில் ஏற்றட்டும்" என்று சபதம் செய்தனர். அனைவரையும் வைகைக் கரைக்குச் செல்லுமாறு அரசர் பணித்துத் தாமும் சென்றார். சமணர்கள் அஸ்தி நாஸ்தி என்று எழுதிய ஏட்டை வைகையில் விட்டனர்.. அது கடல் நோக்கி ஓடியது. திருஞான சம்பந்தர்

" வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக "

எனத் தொடங்குகிற அருமையான பாடலை எழுதிப் புனலிலே விட்டார். அது வைகையைக் கிழித்துக் கொண்டு எதிர்த் திசையில் வேகமாகச் சென்றது. 'வேந்தனும் ஓங்குக' என்று பெருமான் அருளிய காரணத்தினால் அதுவரை கூன் பாண்டியனாயிருந்த அரசர் கூன் நீங்கி நிமிர்ந்தார். நின்ற சீர் நெடுமாறன் என்கிற அருட்பெயர் அரசருக்கு அன்று முதல் வழங்கலாயிற்று. ஏடு விரைவாக வைகையைக் கிழித்துக் கொண்டு சென்றது. அப்படி

விரைகிற ஏட்டை நிறுத்துகிற திருவுள்ளத்தோடு 'வன்னியும் மத்தமும்' என்கிற திருப்பதிகத்தைப் பெருமான் பாட, திருவேடகம் என்று இன்று அழைக்கப்படுகிற பகுதியிலே நீர் தேங்கி நின்றது. குலச்சிறையார் அங்கிருந்த ஏட்டினை எடுத்துக் கொண்டு வந்து அனைவரிடமும் காட்டினார். அரசர் அமைச்சரை நோக்கி 'மும் முறை தோற்றார்கள். ஆதலால், இந்தச் சமணர்கள் கழுவேற வேண்டியதுதான்' என்றார். திருஞான சம்பந்தர் பாண்டியனுக்குத் திருநீறு கொடுத்தருள, திருநீறு வாங்கிப் பூசிக் கொண்டு சைவ சமயத்திற்குத் திரும்பினான் மன்னன். பாண்டியநாடு முழுவதும் சைவ சமயத்தைச் சார்ந்தது.

இந்த வரலாற்றை மேலோட்டமாகப் புரிந்துகொள்கிற பலர் சம்பந்தப் பெருமான் சமணர்களைக் கழுவில் ஏற்றக் காரணமா யிருந்தார் என்று சொல்லிவருகிறார்கள். தாங்களே மேற்கொண்ட உறுதிமொழியின்படி சமணர்கள் கழுவேறினர். அன்றியும் அவர்கள் செயலால் வருத்தமுற்ற அரசர் குலச்சிறையாரிடம் சமணர்களைக் கழுவில் ஏற்றவும் பணித்தார். எனவே, அது அரச கட்டளை யானது. இதனைத் திருஞானசம்பந்தப் பெருமான் தடுத்திருக்கலா மெனச் சிலர் கருதக்கூடும். ஆனால், அரசனைச் சமணர்கள் என்னும் சமயவாதிகள் தங்கள் விருப்பம்போல் ஆட்டிவைத்தனர் என்கிற தீராப்பழியைத் துடைப்பதற்குத்தான் சம்பந்தப் பெருமான் மதுரையில் எழுந்தருளினார். எது உண்மையான சமயம் என்பதை அரசரே உணரும்படிச் செய்தார். அதனை உணர்ந்துகொண்ட அரசன் எடுக்கிற நட.வடிக்கைகளில் சம்பந்தப் பெருமான் தலையிடுவாரேயானால் அது அரசாட்சிக்குள் தலையிட்டுச் சில முடிவுகளை மாற்றுகிற தவறான முன்னுதாரணமாக அமைந்துவிடக் கூடும் என்று பெருமான் கருதியிருக்க வேண்டும். எனவே, தாங்களாகவே மேற்கொண்ட பிரதிக்ஞைப்படி சமணர்கள் கழுவேறினர். இதில் வெவ்வேறு கருத்துகள் நிலவி வருகின்றன. எண்ணாயிரம் என்பது எண்ணிக்கையைக் குறிப்பதல்ல. ஓர் ஊரின் பெயர் என்று சொல்பவர்களும் உண்டு. எண்ணாயிரம் என்கிற பதியைச் சார்ந்த சில சமணர்கள் கழுவேறினர் என்பதாகச் சொல்வதும் உண்டு. யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராக விளங்கிய கலாநிதி நா. சுப்பிரமணியன் அவர்கள் கழு ஏற்றுதல் என்று பின்னால் நிகழ்ந்த சம்பவம் திருஞானசம்பந்தரின்

வாழ்க்கையோடு தொடர்புபடுத்தி எழுதப்பட்டு விட்டதென்பதாக ஒரு கருத்தையும் குறிப்பிடுகிறார். இதுவும் ஆய்வுலகம் ஆராய்ந்து காணத்தக்கது. மதுரையம் பதியிலே ஞானசம்பந்தர் மேற்கொண்ட பயணம் இறையருள் துணைகொண்டு ஒரு பெரிய புரட்சியை நிகழ்த்தியது. சமணர்கள் கழுவேறியதற்கு, சம்பந்தர் தேவாரங்களிலோ மற்ற இருவருடைய தேவாரங்களிலோ சான்றுகள் இல்லை. நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியில் இது தொடர்பான குறிப்புகளைத் தருகிறார். சேக்கிழார் பெரிய புராணத்தில் கழுவேற்றம் குறித்த செய்திகளைக் கொண்டுவந்தமைக்கு நம்பியாண்டார் நம்பிகள் தந்த குறிப்புகளே ஆதாரம் என்கிறார் கலாநிதி சுப்பிரமணியன். எனவே, சமணர்கள் கழுவேற்றம் என்பது கற்பனை யாயிருப்பினும் உண்மையா யிருப்பினும் அதனை முன்மொழிந்தவரோ வழிமொழிந்தவரோ திருஞானசம்பந்தர் அல்லர் என்பதை நாம் மனம் கொள்ள வேண்டும். அதே போலச் சமணர்களோடு வாதிடலாமா என்று முடிவு எடுக்கச் சிவபெருமானின் உள்ளம் என்னவென்று கண்டறிவதற்காகப் பதிகம் பாடிப் பெருமானின் திருவுளக் குறிப்பைச் சம்பந்தர் தெரிந்துகொள்கிறார். 'சமணத் தென்னர் தம் கற்பழிக்கத் திருவுள்ளம்' என்ற சொற்றொடரை வைத்துக் கொண்டு சிலர் தகாத பொருளைக் கற்பித்து வருகின்றனர்.

சம்பந்தரோடு வாது செய்வது என்ற உறுதிமொழியினைச் சமணர்கள் முதலில் மேற்கொள்கின்றனர். சம்பந்தரை வாதிலே வெல்லுவோம் என்பது அவர்களுடைய உறுதிமொழி. 'கற்பெனப் படுவது சொல்திறம்பாமை' என்கிற சூத்திரத்தை மனத்தில் கொள்வோமேயானால், அவர்கள் சொன்ன சொல்லினை மாற்றித் தோற்கடிக்கச் செய்வது இறைவனுடைய திருவுள்ளம் என்ற பொருள்படத்தான் கற்பழிக்கத் திரு உள்ளமெனப் பெருமான் பாடுகிறாரே தவிர உலகியல் நெறியில் கொள்ளப்படுகிற கற்பழித்தல் என்கிற பொருளில் பாடவில்லை. கற்பெனப்படுவது சொல்திறம்பாமை என்ற அடிப்படையை மனத்தில் கொண்டு தேவாரத்தை அதற்குரிய பெருமையில் அணுகவேண்டும். மதுரையில் நிகழ்ந்தமையை அறிந்துகொள்வதற்காகச் சிவபாத இருதயர் மதுரை வருகிறார். வருகிறவர் ஆலவாய் அரனை வழிபட்டுக்கொண்டு பிறகு திருஞானசம்பந்தரின் திருமடத் திற்கு வருகிறார். தந்தையாரைக் கண்டவுடன் சீர்காழி நினைவு தோன்றத் தோணியப்பனைக் குறித்து,

" மண்ணினல்ல வண்ணம்
 வாழலாம் வைகலும்
எண்ணினல்ல கதிக்கு
 யாதுமோர் குறைவிலை
கண்ணினல்ல ஃதுறும்
 கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும்
 பெருந்தகை இருந்ததே "

என்று பதிகம் பாடி மகிழ்ந்தார் சம்பந்தர். வேறு தலங்களில் சென்று பதிகம் பாடப் பெருமான் புறப்பட, அவர் பிரிவாற்றாமல் மதுரையைச் சார்ந்தவர்கள் போகவிடாமல் தடுத்தனர். எனவே, அவர்களை உடன் அழைத்துக்கொண்டு பாண்டிய நாட்டில் இருக்கிற பல்வேறு தலங்களுக்கும் எழுந்தருளிப் பதிகங்கள் பாடினார். இராமேஸ்வரத்திற்கு எழுந்தருளி அங்கிருந்துகொண்டே ஈழ நாட்டுப் பதிகளாகிய திரிகோண மலை, திருக்கேதீச்சரம் ஆகியவற்றைத் திசை நோக்கி வணங்கிப் பதிகங்கள் பாடினார். குலச்சிறை நாயனார் பிறந்த மணமேற்குடி என்கிற பகுதியிலேயும் அவர் சென்று தங்கினார். பிறகு அவர் சோழ நாட்டிற்கு எழுந்தருளத் திருவுள்ளம் வைத்தார். அவரைப் பிரிய மனமில்லாது தவித்துநின்ற நின்ற சீர்நெடுமாறன், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோரை அழைத்துச் சைவம் நீடுவளரப் பாடுபடுமாறு அருளிப் பிரியாவிடை பெற்றுக்கொண்டு சோழ நாடு திரும்பினார் சம்பந்தப் பெருமான் என்பது வரலாறு.

சம்பந்தருடைய மதுரைப் பயணம் ஆரம்ப நிலையிலேயே அடியவர்களுக்கு நாளும் கோளும் நலிவினைச் செய்யாது என்ற துணிவினைத் தந்தது; பகைவர்கள் மத்தியிலேயும் திருவருள் திறம் துணை 'நிற்கும் என்பதையுணர்த்தியது. திருநீற்றின் மந்திர மகிமையையும் தமிழ்ப் பதிகங்களுடைய தெய்வீக அருளாற்றலையும் உணர்த்துவதாக அந்தப் பயணம் அமைந்தது. மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும்மட்டு மன்றிச் சைவசமயம் திரும்பி, கூன் நீங்கி நிமிர்ந்த நின்ற சீர் நெடுமாறனும் நாயன்மார்கள் வரிசையில் இடம்பெறும் அளவு ஞானசம்பந்தப் பெருமானின் வருகை மாபெரும் மாற்றத்தை மதுரையில் விளைவித்தது. 'ஆலவாய் ஆவதும் இதுவே' என்று உள்ளே நுழைகிறபோது ஞானசம்பந்தப் பெருமான் அருளினார். அந்த ஆலவாய் எப்படிப் பொலிய வேண்டும் என்று அவர் திருவுள்ளம் வைத்தாரோ அத்தகைய மாற்றங்களை ஏற்படுத்திச் செயற்கரிய செய்தார் என்பதைப் புராணத்தின் இப்பகுதி நமக்கு உணர்த்துகிறது.



# 6. வந்து முந்துமினே

வாழ்வென்னும் பெருநதியைக் கடப்பதற்குத் துணைபுரியும் ஓடக்காரர்களைப் போன்றவர்கள்தான் ஞானிகள். பெருக்கெடுக்கும் வெள்ளத்தின்மீது ஓடத்தில் மிதந்து செல்வது போலவே, வினை களின் அலைவீசும் வாழ்க்கையில் இறைவனின் திருவருள் என்னும் ஓடத்தில் தாமும் பயணம் செய்து பிறரையும் பத்திரமாகக் கொண்டு கரை சேர்க்கும் அற்புதத்தை ஞானிகள் நிகழ்த்துகிறார்கள். தோணிபுரத்தின் ஈசன் திருவருளால் ஞானத்தின் திருவுருவாய்ப் பொலிந்த சம்பந்தப் பிள்ளையார், தம் அருள் நோக்கினாலும், பதிகங்களினாலும் பிறவிப் பிணி தீர்க்க வல்லவராய் விளங்கினார். ஓடக்காரன் கரை ஏறும்போது தன்னோடு படகில் வந்தவர்கள் அத்தனை பேரும் கரை ஏறிவிட்டார்களா எனப் பார்த்துக் கொண்டு பிறகு கரையில் ஏறுவான். அதுபோல் தம்மை வந்தடைந்தவர் களுக்கெல்லாம் வீடு பேறெனும் அருள் நிலத்தை வழங்கிய பிறகு ஞானசம்பந்தப் பெருமான் முக்திநிலை எய்தினார் என்கிற வியப்பூட்டும் வரலாற்றை இப்பகுதியில் பார்க்க உள்ளோம்.

மதுரையிலிருந்து சோழ வளநாடு திரும்பிய சம்பந்தப் பிள்ளையார் பல்வேறு தலங்களிலேயும் வழிபாடு நிகழ்த்திக் கொண்டு முள்ளிவாயில் கரை என்கிற பகுதிக்கு வருகிறார். அங்கே ஆறு பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கிறது. ஓடத்தை இயக்கக் கூடியவர்கள் கரையிலே ஓடத்தை நிறுத்திக் கொண்டுபோய் விட்டிருந்தார்கள். மறுகரையிலிருக்கிற திருக்கொள்ளம் பூதூர் என்று சொல்லக்கூடிய திருப்பதியினைச் சென்று தொழ வேண்டும் என்னும் பேராவல் பிள்ளையார் திருவுள்ளத்தில் தோன்றியது. எனவே, கரையில் கட்டப்பட்டிருந்த ஓடத்தை அவிழ்த்தார். அடியார்களை ஏற்றுவித்தார். தாமும் அதன் மேலேறி நிற்க, துடுப்பில்லாமலேயே ஓடம் ஓடி அக்கரை சேர்ந்தது. அடியவர்களும் பிள்ளையாரும் இறங்கி, பிள்ளையாரோடு சேர்ந்து வழிபாடு

நிகழ்த்தினர். பிறகு திருநள்ளாறு சேர்ந்து திருநள்ளாறு அப்பனைத் தரிசித்து அங்கே சில நாட்கள் பிள்ளையார் தங்கியிருந்தார். பிறகு அங்கிருந்து திருத்தெளிச்சேரி வழியாகப் போதி மங்கை செல்லப் புகுந்தார்.

சிவநாமம் முழங்க, 'பரசமய கோளரி' வருவதை அறிவிக் கின்ற வெற்றிச் சின்னங்கள் முழங்க அடியவர்கள் பிள்ளையாருடன் போதி மங்கைக்குள்ளே புகுந்தனர். அப்போது பௌத்த சமயம் அந்த ஊரில் செல்வாக்குப் பெற்றிருந்தது. வெற்றிச் சின்னங்கள் எக்காள மிடுவதைக் கேட்டு, புத்த நந்தி தலைமையில் சில பௌத்தர்கள் வழிமறித்தனர். 'ஏன் வெற்றிச் சின்னங்களை முழங்குகிறீர்கள். எங்களை வாதில் வெற்றி கொண்டு விட்டீர்களா?' என்று அவர்கள் கேட்டனர். ஞானசம்பந்தரிடம் அடியவர்கள் வந்து இந்தச் சம்பவத்தைத் தெரிவித்தனர். 'சரி வாதத்தில் பார்த்துக் கொள்ளலாம்' என்றார் சம்பந்தர். இந்தச் செய்தியை வைத்துப் பார்க்கும்போது, அந்த ஊர்வலத்தில் பிள்ளையார் கடந்து போனபிறகு பௌத்தர்கள் வந்து முரண்பாடுகள் விளைவித்தனர் என்பது புரிகிறது. ஞானசம்பந்தப் பெருமானுக்கு அம்மான் முறையானவர் என்று கருதப்படுகிறவரும் அவர்தம் தேவாரப் பதிகங்களை எழுதி வருபவருமாகிய 'சம்பந்த சரணாலயர்' என்கிற அடியவர் 'புத்தர் சமண கழுக்கையர்' என்கிற தேவாரத்தை ஓதினார். அந்தப் பதிகத்திலே "அத்திரமாவன அஞ்செழுத்துமே" என்று வருகிற பகுதி உண்டு. அதை ஓதியதுமே புத்த நந்தியின் தலைமீது இடி விழுந்தது. பௌத்தர்கள் நிலை கலங்கி ஓடிப் போனார்கள். இந்த நிகழ்ச்சியும் பிள்ளையாரிடத்தில் தெரிவிக்கப்பட்டது. உடனே சம்பந்தர் இது விதி காரணமாக நிகழ்ந்தது, சிவநாமத்தைச் சொல்லுங்கள் என்று பணித்தார். பௌத்தர்கள் சாரிபுத்தன் தலைமையில் மறுபடியும் வந்து 'மந்திர வாதம் வேண்டாம், தர்க்கவாதம் செய்யலாம்' என்று அழைத்தனர். இதைக் கேட்டுச் சம்பந்தப் பிள்ளையாரின் முன்னிலையில் அன்பர்கள் பௌத்தர் களோடு வாதம் மேற்கொண்டனர். சாரி புத்தன் தோல்வியடைந்து ஞானசம்பந்தப் பெருமானை வணங்கித் திருநீறு பெற்றான்.

" ஈச னெதிர் நின்றாலும் ஈசனருள் பெற்றுய்ந்த
நேச ரெதிர் நிற்பதரிதாமே! "

என்று தமிழில் பழம் பாடல் உண்டு. இறைவனின் பெருங் கருணையை உள்வாங்கி வைத்திருக்கிற இறை அடியவர்கள் வாக்கு எளிதில் செயல்பட்டுப் பகைமைக்குத் தீங்கு விளைவிக்கும்

என்பதை இந்தச் சம்பவம் உணர்த்துகிறது. மந்திரங்களுக்கு உரித்தான அத்தனை வலிமையும் சம்பந்தப்பெருமானின் திருப்பதிகத்திற்கு உண்டு என்பதை மீண்டும் உணர்த்துகிற நிகழ்வாகவும் அது அமைந்தது.

பிறகு திருஞானசம்பந்தர் திருக்கடவூரை அடைந்து, பின்னர்த் திருப்பூந்துருத்தி சென்று நாவுக்கரசரைச் சந்தித்தார். திருநாவுக்கரசர் பாண்டிய நாடு நோக்கிப் புறப்பட ஞானசம்பந்தப் பிள்ளையார் திருவையாறு, திருப்பழனம் போன்ற தலங்களில் வழிபாடு செய்து கொண்டு மீண்டும் சீர்காழி வந்து சேர்ந்தார். பிறகு தொண்டை நாட்டில் சிவ வழிபாடு செய்யத் திருவுள்ளம் கொண்டு தந்தையாரைச் சீர்காழியிலேயிருக்கப் பணித்துவிட்டு மீண்டும் புறப்பட்டார். தில்லை வழியாகத் திருவதிகை, திருக்கோவிலூர், திருவண்ணாமலை போன்ற தலங்களையெல்லாம் வழிபட்டுக் கொண்டு திருவோத்தூர் அடைந்தார். சமணர்கள் மிகுதியாக அங்கு வாழ்ந்து வந்தனர். அங்கே ஒரு சிவனடியார் நிலத்தில் பக்தர் வளர்ந்திருந்த பனைகள் எல்லாம் ஆண்பனைகளாயிருந்தன. அங்கிருந்த சமணர்கள் எல்லாம் 'நீர் சிவனை வழிபடுகிறீர்; உம்முடைய இறைவன் அருளால் இந்த ஆண்பனைகளைக் காய்க்கச் செய்ய முடியுமா' என்று அவரைச் சீண்டுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். ஆதலால் வருத்தமுற்றிருந்த அந்தச் சிவனடியார் ஞானசம்பந்தப் பிள்ளையாரிடம் முறையிட்டார். சம்பந்தர் திருவருளை இறைஞ்சிப் பதிகம் பாடினார். அந்தப் பதிகத்தின் திருக்கடைக்காப்பில்,

" குரும்பை யாண்பனையின் குலையோத்தூர்
அரும்பு கொன்றை அடிகளைப்
பெரும்புகலியுள் ஞானசம் பந்தன்சொல்
விரும்பு வார்வினை வீடே "

என்று அருளினார். உடனே ஆண் பனைகள் எல்லாம் பெண் பனைகளாகிக் குலைகள் தோன்றின. காய்கள் காய்த்தன. இச்சம்பவம் அறிந்த பல சமணர்கள் அந்த ஊரைவிட்டு நீங்கினர். ஞானசம்பந்தர் பேரருளுக்குப் பாத்திரமான காரணத்தால் அந்தப் பனை மரங்களும் நிறைவிலே முக்தியடைந்தன என்பது வரலாறு.

கல்கி 'காற்றினிலே வரும் கீதம்' என்றொரு பாடல் எழுதினார். அந்தப் பாடலில் பட்டமரங்கள் துளிர்த்திடும் கீதம் என்று ஒரு வரி வரும். உடனே ஒரு விமர்சகர் கேள்வி எழுப்பினார். கண்ணனின் குழல் இசை கேட்டு, பட்டமரங்கள் துளிர்க்குமென்றால் அந்தப்

புல்லாங்குழல் ஏன் துளிர்க்கவில்லை என்று கேட்டார். அதற்கு விடை சொன்னவர்கள் 'கண்ணனுடைய இதழ்பட்டும், விரல்பட்டும் பட்ட மூங்கிலாகிய புல்லாங்குழல் முக்தியடைந்து விட்டது. அது மீண்டும் துளிர்க்க வேண்டிய தேவையில்லை' என்றனர்.

சம்பந்தப் பெருமான் ஆண் பனைகள் காய்க்க வேண்டு மென்பதற்காக அவை காய்த்துக் கனியுமாறு அருள் செய்தார். அவருடைய திருவருள் பெற்றமையால் அந்தப் பனைமரங்கள் முக்தியும் பெற்றன என்பதை இதற்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே சேக்கிழார் குறிப்பிடுகிறார். காரைக்கால் அம்மையார் தோன்றி வளர்ந்த திருவாலங்காட்டுப்பதியை அவர் மிதிக்க அஞ்சி நடந்தமையும், திருக்காளத்தி மலையில் கண்ணப்பரின் பெருமையை நினைத்துப் பாடியதோடு கண்ணப்பரின் தரிசனம் பெற்றதும் இந்த யாத்திரையின்போதுதான். கண்ணப்பர் சிவபெருமானின் வலப்பகுதியில் மாறிடாமல் கலந்து நிற்கிற பேரருள் பெற்றவர். அந்த மகானின் தன்மைகளும் அதிர்வுகளும் திருக்காளத்தி மலையிலே நிலைபெற்று நின்றன. மிக நுட்பமான ஆன்மிகத் தன்மையில் விளங்குகிற சம்பந்தர், அங்கு எழுந்தருளிய போது அந்த அதிர்வுகளை அவரால் அங்கு உணரமுடிந்தது. எனவே, கண்ணப்ப நாயனாரை நேரில் கண்ட நிறைவோடு பலமுறை பூமியில் விழுந்து வணங்கினார் சம்பந்தர். அங்கிருந்துகொண்டே வட கைலாயம், திருக்கேதாரம், திருக்கோகரணம், திருப்பருப்பதம், இந்திரநீலம் போன்ற தலங்களையும் திசை நோக்கித் தொழுது பாடினார். பிறகு திருக்காளத்தியிலிருந்து திருவேற்காடு, திருவலி தாயத்தின் வழியாகத் திருவொற்றியூர் அடைந்தார். அப்போது திருமயிலாப்பூரிலிருந்து சிவநேசர் என்ற வணிகர் சம்பந்தரைத் திருவொற்றியூரில் தரிசிக்க வந்தார். சிவநேசருக்கு நீண்ட காலமாகக் குழந்தையில்லாமல் இருந்தது. இறைவனைக் குறித்துத் தவம் செய்தமையால் பெண் குழந்தை பிறந்தது. அதற்குப் பூம்பாவை என்று பெயரிட்டார். அப்போது சிவநேசரிடம் பாண்டிய நாட்டிலே சம்பந்தர் நிகழ்த்திய அற்புதங்களையெல்லாம் சிலர் கூறினர். 'என் மகளையும் என்னுடைய செல்வங்களையும் பிள்ளையாருக்குத் தருவேன்' என்று மனவுறுதி பூண்டு மகிழ்ச்சியுடன் இருந்தார். ஒருநாள் நந்தவனத்திற்குள் சென்ற பூம்பாவையை அரவு தீண்டியது. எத்தனையோ மருந்துகள் கொடுத்தும் பூம்பாவையார் மறைந்தார். பூம்பாவையின் மேனியை எரியூட்டிய சிவநேசர் 'பூம்பாவை திருஞானசம்பந்தருக்குரியவள், ஆதலால், இவளின் எலும்பு களையும், சாம்பலையும் சேமித்துவைப்போம்'' என்று அந்தச்

சாம்பலை ஒரு குடத்தில் இட்டு, அதனை அலங்கரித்துக் கன்னிமாடத்தில் வைத்திருந்தார்.

திருஞானசம்பந்தரைத் திருமயிலாப்பூருக்கு எழுந்தருளச் செய்ய விரும்பினார் சிவநேசர். வழிதோறும் நடைப்பந்தல் அமைத்துச் சம்பந்தரின் வருகைக்காகக் காத்திருந்தார். பிள்ளையாரும் அடியவர்களும் வருகிற செய்தி கேள்வியுற்று எதிர் கொண்டு வணங்கி, திருமயிலாப்பூர்க் கபாலீஸ்வரர் திருக்கோயிலுக்கு அழைத்து வந்தார்கள். பிறகு சம்பந்தப்பிள்ளையார் பூம்பாவை பற்றிக் கேள்வியுற்று எலும்புக் குடத்தைக் கொண்டு வருமாறு பணித்தார். என்ன நடக்கிறது என்று பார்க்க ஊரார்களும், சமணர்களும் வந்து சூழ்ந்து நின்றனர். 'மட்டிட்ட புன்னையங் கானல்' என்ற பதிகத்தைப் பிள்ளையார் பாடினார். சிவபெருமானுக்குரிய பல்விதமான வழிபாடுகளையும் முக்கியத் திருநாள்களையும் குறிப்பிட்டு, இவையெல்லாம் காணாமல் போதியோ பூம்பாவாய் என்று பதிகம் அமைத்தார்.

" மண்ணினிற் பிறந்தார் பெரும்பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்
கண்ணினால் அவர்தம் திருவிழாப் பொலிவு கண்டு ஆர்தல்
உண்மையாம் எனில் உலகர் முன் வருக "

எனப் பெருமான் அழைத்தார். உடனே குடம் உடைந்து பன்னிரண்டு வயது நிரம்பிய பேரழகுப் பெட்டகமாய், பூம்பாவையார் தோன்ற, பிள்ளையார் திருக்கடைகாப்புச் சார்த்தினார். சிவநேசர் பிள்ளையாரைப் பணிந்தார். ''இவள் தங்களுக்குரியவள். திருமணம் செய்தருள வேண்டும்'' என்று சிவநேசர் வேண்டிய போது, பேரருளாளராகிய சம்பந்தர் சிவநேசரை நோக்கி ''நீங்கள் பெற்ற பெண் அரவு தீண்டி மாண்டு விட்டாள். இப்போது இறையருள் துணை கொண்டு நாம் அவளைத் தோற்றுவித்தோம். எனவே, நீங்கள் கருதுவது முறையாகாது'' என்றார். பூம்பாவை இப்பொழுது தமக்கு மகள் முறை என்பதைச் சொல்லாமல் சொன்னார் சம்பந்தர். வருத்தமுற்ற சிவநேசரையும் அவரைச் சார்ந்தவர்களையும் ஆறுதல் கூறி ஆற்றுப்படுத்திவிட்டு, பெருமான் திருக்கோயிலுக்குள்ளே சென்றார். வேறு ஒருவரைத் தம் மகளுக்குத் திருமணம் செய்ய விரும்பாத சிவநேசர் கன்னி மாடத்திலே பூம்பாவையாரை இருக்கச்செய்ய அவரும் தவம் புரிந்து இறைவனடி சேர்ந்தார்.

பல்வேறு தலங்களையெல்லாம் வழிபட்டுக் கொண்டு மீண்டும் சீர்காழிக்கு எழுந்தருளியுள்ளார் திருஞானசம்பந்தர். முருக

நாயனாரும், திருநீலநக்கநாயனாரும் உள்ளிட்ட அடியார்கள் தங்கள் உறவினர்களுடன் சீர்காழிக்கு வந்தனர். பிள்ளையாருக்குத் திருமணம் செய்விக்கச் சிவபாத இருதயர் விரும்பினார். அனைவரும் கூடி வற்புறுத்தப் பிள்ளையார் இணங்கினார். திருநல்லூரில் வாழ்கிற நம்பாண்டார் நம்பி மகளை மணம் செய்து தருவது என்று முடிவு எடுத்தார்கள். திருமண ஓலை அனைவருக்கும் அனுப்பப்பட்டது. தோணியப்பரை வணங்கி உற்றார் உறவினர்களோடு திருநல்லூரை நோக்கிப் பிள்ளையார் புறப்பட்டார். பெருமணம் என்று அழைக்கப்படுகிற அந்த ஆலயத்திலே புகுந்தார். அனைவரும் பெருமானுக்கு அலங்காரம் செய்ய ஆசைப்பட்டார்கள். பாதத்திலிருந்து கேசம் வரை முத்தினாலே அலங்கரித்தார்கள். பெரியபுராணத்தில் இந்தப் பகுதிக்கு உரை எழுதும்போது சிவக்கவிமணி சி.கே.எஸ். அவர்கள் அனைவருக்கும் முக்தி தருகிற பேரருளாளர் அதனாலேயே முத்துக்கொண்டு அலங்கரித்தனர் என்று நயம்படக் குறிப்பிடுகிறார். திருநீலநக்கர், திருமுருக நாயனார் போன்றவர்கள் திருமணச் சடங்குகளிலே ஈடுபட்டனர். அப்போது அருஞ்சிறப்பு மிக்க நல்லூர்ப்பதிகத்தைச் சம்பந்தர் அருளினார்.

" கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமணம் மேய நம்பானே "

என்று தொடங்கிப் பதிகம் பாடினார். திருமணக் கோலத்தில் தம்மை அடுத்து வந்து அமர்ந்த மணமகளையும் கண்ணுற்றார். வேள்வி நெருப்பினையும் கண்ணுற்றார். சம்பந்தரின் திருவருள் அனுபவத்தில் இக வாழ்வு விடுத்துப் பிறவா நிலையாகிய முக்திக் குரிய காலம் இது என்று கண்டுகொள்ள முடிந்தது. நல்லூர்ப் பெருமானுடைய ஆலயம் முழுவதும் ஜோதி மயமாகத் தோன்றியது. அந்த ஜோதியில் அனைவரும் நுழைவதற்குரிய வாயிலும் இறைவன் அருளால் தோன்றியது. உடனே சம்பந்தப் பிள்ளையார்

" காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே "

என்ற ஐந்தெழுத்துத் திருப்பதிகத்தை அருளினார். அதுவே திருமணக் கோலம் காண வந்தவர்களுக்கெல்லாம் முக்தி தரும்

மந்திரமானது. ''அனைவரும் இந்த ஜோதியில் நுழையுங்கள்'' என்று பெருமான் அருளினார். திருநீலநக்கர், திருமுருக நாயனார், சிவபாத இருதயர், நம்பியாண்டார்நம்பிகள், திருநீலகண்ட யாழ்ப்பாணர், மதங்க சூளாமணியார் ஆகிய அனைவரும் குடும்பத்தோடு அந்த ஜோதியில் நுழைந்தனர். பெருமானுக்குச் சிவிகை தாங்கியவர்கள், அறுவகைச் சமயத்தவர்கள், அடியவர்கள் அனைவரும் முனிவர்களும் சிவ ஜோதியில் நுழைந்தனர். சம்பந்தப் பெருமான் மணமகளின் திருக்கரம் பற்றிச் சிவஜோதியை வலம் வந்து அதனுள்ளே இரண்டறக் கலந்தார், ஜோதி மறைந்தது. திருக்கோவில் முன்பு போல் பொலிந்ததாகப் பெருமானுடைய வரலாற்றின் நிறைவு நிலையினைச் சேக்கிழார் எழுதிக் காட்டுகிறார்.

பிறவிகள் எடுத்தும் பல தவம் முயன்றும் பெறவேண்டிய முக்தி என்னும் அருட் பேற்றினை அனைவருக்கும் அள்ளி வழங்குகிற ஞான வள்ளலாகத் திருஞானசம்பந்தர் பொலிந்து நின்ற பெருமைக்குரிய சம்பவம் இது. 'மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே' என்றது போல அனைவரையும் அழைத்து, 'வந்து புகுந்துகொள்ளுங்கள்' என்று அருள் பாலித்தார். பிறவிப் பிணி தீர்க்கும் குருமூர்த்தியாகச் சம்பந்தர் அனைவருக்கும் முக்தி நிலை கூட்டினார்.



## 7. புனித வாய் மலர்ந்தழுத காரணங்கள்

உலகியலில் ஒரு குழந்தை அழுகிறதென்றால் அதன் காரணத்தைக் கண்டறிவதென்பது பெற்றோருக்குக்கூட அத்தனை எளிதல்ல. பசியா, நோயா, அச்சமா, தூக்கமா என்று சரியான காரணத்தை உணர்வதற்குள் குழந்தையின் அழுகை ஓய்ந்து விடும். சீர்காழிக் குளக்கரையில் ஞானசம்பந்தப் பெருமான் அழுத திருக்கோலத்தில் நின்றதனையே அறிமுகப் பாடலில் பதிவு செய்கிறார் சேக்கிழார். சம்பவங்களால் நிகழ்வனவே சரித்திரங்கள்.

சீர்காழிக் குளக்கரையில் அழுதது பிள்ளையாரின் வாழ்வின் திருப்புமுனைச் சம்பவம். மதுரையில் சைவநெறியை மீட்டது உச்சச் சம்பவம். நல்லூரில் முக்தி தரு வள்ளலாய் ஒளிர்ந்தது நிறைவுச் சம்பவம்.

புராணத்தில் எடுத்த எடுப்பிலேயே பிள்ளையார் புனிதவாய் மலர்ந்தழுத சம்பவத்தைப் பாடப்புகும் சேக்கிழார், அப்படி அவர் அழுதமைக்கான காரணங்களை முதலில் பட்டியலிடுகிறார்.

" வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத ".....

என்கிறார்.

ஆளுடைய பிள்ளையின் அரும்பணிகளை இந்த மூன்று தலைப்புகளில் எளிதாக அடக்கிவிடலாம்.

(அ) வேத நெறி தழைக்கச் செய்தமை

(ஆ) மிகு சைவத்துறை விளங்கச் செய்தமை

(இ) பூத பரம்பரை பொலியச் செய்தமை

இந்தக் காரியங்கள் நடைபெற வேண்டுமென்கிற காரணத்தை முன்வைத்தே பிள்ளையார் புனிதவாய் மலர்ந்தழுதார் என்று கொள்ளலாம்.

## வேதநெறி தழைக்கச் செய்தமை

இந்திரனைத் தலைமை நிலையில் வைப்பவை வைதிகர் இயற்றிய வேள்விகள். அப்படியாயின், சிவபெருமானைத் தலைமைத் தெய்வமாக உணர்ந்தும் உணர்த்தியும் வந்த சம்பந்தப் பெருமான் வேத நெறி தழைக்கச் செய்தவர் என்பது முரண்பாடு போலத் தோன்றும். இது குறித்து விரிவான விளக்கத்தை அறிஞர் அ.ச. ஞானசம்பந்தன் வழங்குகிறார்.

'ரிக் வேதத்தைப் பின்பற்றிய பிராமணங்களில் கூறப்பட்டபடி வேள்வி செய்தாலும், அவ்வேள்வியின் தலைவனாக இந்திரன் முதலிய சிறு தெய்வங்களைக் கொள்ளாமல் சிவபெருமானையே முதல்வனாகக் கொண்டு வேள்விகள் செய்யும் ஒரு சிறு பிரிவினர் வேதங்கள் தோன்றிய பஞ்சாப், ஹரியானா, மாநிலப் பகுதிகளில் வேதம் தோன்றிய காலத்திலேயே இருந்துவந்தனர். இப்பிரிவினருக்குக் கௌண்டின்ய கோத்திரத்தார் என்று பெயர்.

''சிவபிரானை முதற்பொருளாக ஏற்றுக்கொள்ளாத வைதிகர் கட்கும் இந்தக் கௌண்டின்யக் கூட்டத்தாருக்கும் பகைமை மூண்டு இவர்கள் விரட்டப்பட்டு விட்டனர். நாளாவட்டத்தில் இந்தக் கௌண்டின்ய பரம்பரை வடநாட்டில் மறைந்தாலும் தமிழகத்தில் சங்க காலத்திலேயே வேரூன்றி விட்டது. பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் என்ற (புறம் 166) ஒருவன் சிவபரம் பொருளை முன்னிலைப்படுத்தி இருபத்தொரு யாகங்களைச் செய்தான் என்று புறநானூறு பேசுவதாலும் திருஞானசம்பந்தர் 'கௌணியன் சம்பந்தன்' என்று தம்மைக் கூறிக் கொள்வதாலும் ரிக் வேதியர்களிடையே இப்படிச் சிவபெருமானை முன்னிறுத்தி வேள்வி செய்யும் இனம் ஒன்று இருந்ததை அறிகிறோம். ஞான சம்பந்தர் குறிப்பிடும் வேள்விகளெல்லாம் இத்தகை யவைகளே. இவர்களைப் பொறுத்தமட்டில் ரிக்வேதிகளாக இருந்தாலும் வேதத்தைவிட ஐந்தெழுத்தே தலையானது என்ற கொள்கை உடையவர்கள். இதனையே ஞானசம்பந்தர் 'வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது நாதன் நாமம் நமச்சிவாயவே'(3-307-1) என்று பாடிச் செல்கிறார். எனவே, தேவாரத்தில் வேதநாயகன் என்று வருவதும் வேதியர் நாயகன் என்று வருவதும் வேதம் என்ற சொல் பயன்படுத்தப்படுவதும் கௌணியர்கள் போற்றும் வேதம் என்ற அடிப்படையிலேயே ஆகும்.''

இத்தகைய ரிக் வேதிகள் ஆற்றிய வேள்வியானது, ஆரியர்கள் செய்துவந்த வாஜபேயம் போன்ற யோக முறைகளிலிருந்து

வேறுபட்டதோடு முத்தீ வடிவினைக் கருதிச் செய்யப்படுவது. இது குறித்து அறிஞர் க. வெள்ளை வாரணனார் சைவ சித்தாந்த சாத்திர வரலாறு என்கிற நூலில் மிகத் தெளிவாக எழுதுகிறார்: 'இந்திய நாட்டில் முதன்முதற் குடியேறிய பழைய ஆரியர்கள் ஆடு, முதலிய விலங்கினங்களைக் கொன்று ஊனுங்கள்ளும் படைத்துச் செய்த வேள்விகட்கும், புத்த சமண மதங்கள் தோன்றிக் கொலை வேள்வி களைக் கண்டித்த நிலையில் இடைக்காலத்தில் வாழ்ந்த நான்மறை முனிவர்கள் எல்லாம் வல்ல இறைவனைத் தீயுருவினனாக அமைத்து நெய்யினைச் சொரிந்து நெல்லும் மலரும் தூவி வழிபட்ட முத்தீ வேள்விகட்கும் இடையேயுள்ள வேறுபாடு பெரிதாகும். முன்னர்க் குறிக்கப்பட்ட பண்டை ஆரியர்களின் வேத வேள்வி கௌதமபுத்தர், மகாவீரர் முதலிய அருளாசிரியர்களால் வெறுத்தொதுக்கப்பட்ட கொலை வேள்வியாகும். பின்னர்க் குறித்த நான்மறை முனிவர் இயற்றிய முத்தீ வேள்வி தீவண்ணனாகிய சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு இயற்றப்பெறும் தூய வேள்வியாகும். ஆரியக் குழுவினர் செய்த வேள்வி சிவனோடு உடன்படாத நிலையில் சிதைவுற்ற வைதிக வேள்வி என்பதும், சங்க காலத்தில் தமிழ்நாட்டிற் கவுணியன் விண்ணந்தாயன் செய்த வேள்வி சிவபெருமானைப் போற்றும் சைவ வேள்வி என்பதும் இங்கு நோக்கத்தக்கன.'

அதனால்தான் திருஞானசம்பந்தப் பெருமானிடம் அவர்தம் தந்தை சிவபாத இருதயர், வேள்வி செய்யப் பொன் வேண்டும் போது திருவாவடுதுறையில் உறையும் சிவபெருமானே உலவாக்கிழி வழங்குகிறார்.

அந்த உலவாக்கிழியைத் தந்தையாரிடம் தரும் போது பிள்ளையார் அந்த வேள்வியின் தன்மை குறித்து மிகத் தெளிவாகக் கூறுகிறார்.

'வேத முறைப்படி, சிவபெருமானை முதற்கடவுளாக வைத்து உலகம் நலம் பெறும் விதமாகச் செய்யப்படும் நலமான வேள்வி' என்பதோடு, சீர்காழியில் உள்ள அனைத்து வேதியர்களும் செய்யும் வேள்வி என்றும் குறிக்கிறார்.

சிவபெருமானால் தரப்பட்ட செல்வம் கொண்டு சிவ பெருமானை முன்வைத்து, உலக நலனுக்காகச் செய்யப்படும் வேள்வி என்பதைத் தெளிவாகச் சுட்டுகிறார் சம்பந்தர்.

" ஆதிமாமறை விதியினால், ஆறு சூழ் வேணி
நாதனாரை முன்ஆகவே புரியும் நல வேள்வி
தீது நீங்க நீர் செய்யவும், திருக்கழுமலத்து
வேத வேதியர் அனைவரும் செய்யவும் "

என்று பொற்கிழியைக் கொடுத்தருள்கிறார் சம்பந்தர்.

சீர்காழியில் வசிக்கும் அந்தணர்கள் எத்தகையவர்கள் என்பதைச் சொல்லும்போது,

" நல்லோர், தீமேவும் தொழிலார், நால்வேதஞ்
சொல்லார், கேண்மையார்"

என்கிறார். சீர்காழி அந்தணர்களை, எண்ணலங்காரமாக இரண்டு இடங்களில் குறிக்கிறார் திருஞானசம்பந்தர்

" எண்ணிடை ஒன்றினர், இரண்டினர் உருவம்,
எரியிடை மூன்றினர், நான்மறை யாளர்,
மண்ணிடை ஐந்தினர், ஆறினர் அங்கம்,
வகுத்தனர், ஏழிசை எட்டிருங் கலைஞர்
பண்ணிடை ஒன்பதும் உணர்ந்தவர், பத்தர் "

என்கிறார்.

தம் அனைத்துப் பதிகங்களையும் பாராயணம் செய்த பலனைக் கொடுக்க வல்ல ஒரே பதிகமாகவே அருளிய திருஎழு கூற்றிருக்கையில்,

" ..............................ஒருங்கிய மனத்தோடு
இருபிறப் போர்ந்து, முப்பொழுது குறைமுடித்து,
நான்மறை ஓதி, ஐவகை வேள்வி
அமைத்து, ஆறங்கம் முதல்எழுத் தோதி
வரன்முறை பயின்று எழுவான்தனை வளர்க்கும் பிரமபுரம் "

என்றும் குறிப்பிடுகிறார்.

இப்படிப் பலவகையானும் திருஞானசம்பந்தர் வலியுறுத்தும் வேதம் சிவவேதம் என்பதும், திருஞானசம்பந்தர் வர்ணிக்கும் வேதியர்கள் சிவவேதியர்கள் என்பதும் மிக நன்றாக வெளிப்படும் இடம், திருவாலவாய் நாலடி மேல் வைப்புப் பதிகம்.

இப்பதிகம் தோறும், வேத வேள்வியை நிந்தனை செய்யும் அமணர்களை வாதில் வெல்ல இறைவன் திருவுள்ளக் குறிப்பறிந்து நாலடிகளாகவும், பாடுகிறார் பிள்ளையார்.

" வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி அமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
பாதி மாதுடன் ஆய பரமனே "

" வைதிகத்தின் வழியொழுகாத அக்
கைத லம்உடைக் காரமண் தேரரை
எய்தி வாது செயத்திரு வுள்ளமே
மைதிகழ்தரு மாமணி கண்டனே "

" மறைவ ழக்க மிலாத மாபாவிகள்
பறிதலைக் கையர் பாய்உடுப் பார்களை
முறிய வாது செயத்திரு வுள்ளமே
முறிந்த வாண்மதிக் கண்ணி முதல்வனே "

" அழலது ஓம்பும் அருமறையோர் திறம்
விழலது என்னும் அருகர் திறத்திறம்
கழல வாது செயத்திரு வுள்ளமே
தழலி லங்கு திருவுருச் சைவனே "

என்றெல்லாம் நாலடிகளாகப் பாடுகிறார்.

ஒவ்வொரு பாடலிலும் நாலடி மேல் வைப்பாக

" ஞாலம் நின்புக ழேமிக வேண்டும் - தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே "

என்று குறிப்பிட்டுக்கொண்டேவருகிறார்.

சமணர்கள் நிந்தனை செய்யும் வேதவேள்வியை நிலை நிறுத்துவதால், தென் ஆலவாயில் உறையும் சிவபெருமானின் புகழ் ஞால முழுவதும் பெருகும் என்று சம்பந்தர் குறிப்பிடுவது உற்றுணரத் தக்கது.

தென்னாடுடைய சிவனின் புகழை எந்நாட்டவர்க்கும் மனத்தில் பதியும் விதமாய்ச் சிவவேள்வி நிகழ்த்திய அந்தணர்கள், திருஞான சம்பந்தருடன் இருந்தனரென்பது, திருஞானசம்பந்தர் தேவாரத்தின் வழி புலப்படுகிறது. அத்தகைய அந்தணரே அப்பூதியடிகள் என்பது திருநாவுக்கரசர் தேவாரத்தால் தெளிவாகிறது.

இவ்வாறு வர்ணிக்கப்படும் அந்தணர்கள்தான் ஆதி சைவர்களா என்பதை அறிஞர் உலகம் ஆராய்ந்து வருகிறது. அதற்கான சான்றுகளின் களஞ்சியமாய்த் திகழ்கிறது திருஞானசம்பந்தர் தேவாரம்.

அதேபோலத் தில்லைத் திருத்தலத்தில் தில்லை மூவாயிரவரைக் குறிக்கும் விதமாக

" கற்றாங்கு எரிஓம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லை "

என்று சம்பந்தப் பெருமான் பாடுகிறார்.

இனி, திருநாவுக்கரசர் சமணர்களை வென்ற செய்தி கேட்டு, அவரையே குருவாகக் கொண்டு வழிபட்டவர் அப்பூதியடிகள். தீவிர சிவ பக்தராகிய அப்பூதியடிகள் வேள்வி புரிகிறவர் என்பதைத் திருநாவுக்கரசர் பதிகத்தில் பாடியருள்கிறார்.

" அஞ்சிப்போய் கலி மெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூச் சேவடியாய் "

என்பது திருநாவுக்கரசர் திருவாக்கு.

சைவத்தின் தனித்தன்மையை நிலைநாட்டும் பொருட்டு அவதரித்த ஆளுடைய பிள்ளையும் ஆளுடைய அரசும் அங்கீகரித்ததோடு, பாராட்டையும் சொன்ன வேள்விகள் சிவ வேள்விகள் ஆதலின், சைவத்திற்கு அரண் செய்யும் வேதநெறி தழைத்தோங்கச் செய்தவர் திருஞானசம்பந்தர் என்பது தெளிவாகிறது.

## மிகு சைவத்துறை விளங்கச் செய்தமை

'வேத நெறி தழைத்தோங்க' என்று சொன்னவுடன் அடுத்த அடியிலேயே 'மிகு சைவத்துறை விளங்க' என்கிறார் சேக்கிழார். சைவத்தின் வெற்றி தமிழ்ப் பண்பாட்டின் வெற்றி என்பது வெளிப்படையாக உணர்த்தப்படும் இடம் திருஞான சம்பந்தர் புராணம். அதனால்தான் 'அசைவில் செந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல' என்பது ஆளுடைய பிள்ளையாரின் அவதாரக் காரணங்களுள் ஒன்றாகக் குறிக்கப் பெறுகிறது.

'நமசிவாய' எனும் ஐந்தெழுத்து 'வேதம் நான்கினும் மெய்ப் பொருளாவது' என்கிறார் பிள்ளையார். பெருமானுடைய நான்காவது தலயாத்திரை நிறைவு பெற்ற நிலையில் வைதிக மரபுப்படி அவருக்கு உபநயனச் சடங்கு நடைபெறுகிறது. சந்தியாவந்தனத்திற்குரிய மந்திரங்கள் அவருக்கு அப்போது கூறப்பட்டிருக்க வேண்டும். உடனே பிள்ளையார் பதிகம் பாடும் பொழுது, இரண்டாவது பாடலிலேயே அந்தணர்க்குரிய சந்திப் பொழுது மந்திரம் நமசிவாய எனும் ஐந்தெழுத்துத்தான் என்கிறார்.

" மந்திர நான்மறை ஆகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை ஆள்வன
செந்தழல் ஓதிய செம்மை வேதியர்க்கு
அந்தியின் மந்திரம் அஞ்செ ழுத்துமே "

என்பது பாடல்.

சிவபெருமான் சம்பந்தருக்குத் தாளமீந்ததே இசையால் தமிழ் வளர்க்கவென்று சுந்தரர் பாடியதையும் ஏற்கெனவே கண்ணுற்றோம். 'தண்டமிழ் விரகன்', 'தமிழாகரன்', 'தமிழ் விரகினன்' என்பன போன்ற பெயர்கள் இதனாலேயே சம்பந்தருக்கு வழங்கலாயின.

தமிழ்ப்பாடல்களின் தெய்விகத்தன்மையை உணர்த்தும் விதமாகச் சம்பந்தர் பாடிய திருமுறைகள் குறித்தும், அவற்றால் விளைந்த அதிசயங்கள் குறித்தும் முன்னரே சிந்தித்தோம்.

சமணர்களை வாதில் வென்று தென்தமிழ்நாட்டில் சைவத்தை நிலைநிறுத்திய சீர்மை சம்பந்தரின் அரும்பெரும் செயலாகும். எனவே, சைவத்திற்கும் தமிழுக்கும் சம்பந்தர் ஆற்றிய அரும் பணிகளைச் சேர்த்தே சிந்தித்தல் நலம்.

பன்னிரு திருமுறைகளில் முதல் மூன்று திருமுறைகளை அருளியவர் திருஞானசம்பந்தர். 377 தலத் திருப்பதிகங்களாகவும் 7 பொதுத் திருப்பதிகங்களாகவும் அமைந்த இத்தொகுப்பில் 4158 திருப்பாடல்கள் அமைந்துள்ளன. சில பதிகங்கள் 11 பாடல்களைக் கொண்டவை. சீர்காழி குறித்து இவர் பாடிய சில பதிகங்கள் பன்னிரண்டு பாடல்களைக் கொண்டுள்ளன.

22 வகைப் பண்களில் சம்பந்தப்பெருமான் பாடியுள்ளார். இவற்றில் இரவில் பாட வேண்டிய இராப் பண்கள், பகலில் பாட வேண்டிய பகற் பண்கள் என்ற பாகுபாடும் உண்டு. இவற்றில் சம்பந்தப் பெருமான் அருளிய திருவெழு கூற்றிருக்கை, இரதபந்த அமைப்பில் எழுதக் கூடிய சித்திர கவியாகவும் திகழ்கிறது.

ஒவ்வொரு நாளும் பிள்ளையார் இயற்றும் பதிகங்களைப் பாராயணம் செய்த பிறகுதான் உணவுண்ணுவது என்கிற வழக்கத்தைச் சிவபாத இருதயர் கொண்டிருந்தார். பதிகங்களின் எண்ணிக்கை பெருகப்பெருக இந்நியமம் தந்தையாருக்குச் சிரமமென்று கருதி ஆளுடையபிள்ளையார் அருளிய பதிகம் திருஎழுகூற்றிருக்கை. சம்பந்தப் பிள்ளையாரின் அத்தனை பதிகங்களையும் படித்த பயனையும் நிறைவையும் இதைப்

பாராயணம் செய்யும் போது பெறலாம் என்பது பிள்ளையார் திருவாக்கு என்பது சைவ மரபு.

ஞானசம்பந்தப் பிள்ளையாரின் பதிகங்களில் இயற்கை வர்ணனை மிகுதியும் காணப்படுவது, அவரது இளமைப் பருவத்தின் இயல்பான வெளிப்பாடாகக் குறிப்பிடப்படுவதுண்டு. மக்களைக் கவரும் உத்தியாக இயற்கை வர்ணனையைப் பதிகங்களில் பெரிதும் பயன்படுத்தினார் என்று கருதுவாரும் உளர்.

பொதுவாக இத்தகைய பதிகங்களில் எட்டாவது பாடலில் இராவணனைப் பற்றிய குறிப்பையும், ஒன்பதாவது பாடலில் அயனும் மாலும் அடிமுடி தேடியும் அறியப் படவொண்ணா அரனின் பெருமையையும் பத்தாவது பாடலில் சமணர் புத்தர் பற்றிய குறிப்புகளையும் பதிவு செய்வார் ஞானசம்பந்தர். பதினோராவது பாடலில் பதிகத்தின் பயனைச் சொல்லித் தம் பெயரையும் அமைத்துத் திருக்கடைக்காப்புச் சார்த்துவது இவர்தம் பதிகமுறை.

பதிகப் பெருவழி கண்ட பாலறாவாயரின் இந்தச் செவ்விய பகுப்பு முறையில் பாடல்கள் சந்தச் சிறப்புடன் ஒலிக் கோலங்களுடனும் அமைந்திருப்பதைக் காணலாம். 'சந்தமெல்லாம் அடி சாத்த வல்ல மறைஞானசம்பந்தன்' என்பன போன்ற குறிப்புகள் இதுபற்றியே தோன்றின.

தாம் வாழும் காலத்தில் மட்டுமன்றிக் கால காலங்களுக்கும் பத்திமை நெறி நிலைபெறுமாறு அருட்தன்மைமிக்க பதிகங்களைப் பாடிச் சைவம் தழைக்கப் பெரும் பங்காற்றியவர் சம்பந்தர்.

திருக்கடைக்காப்புச் சார்த்தும்போது தம்மைக் குறித்துப் பெருமான் சொல்லும் குறிப்புகள், தம் அடியார் கூட்டத்திற்கு வழிகாட்டும் விதமாய் உறுதியான கொள்கைகளைக் கூறுவன. அது மட்டுமன்றி ஆன்ம உய்வுக்கு வழிகாட்டும் ஆச்சர்யமூர்த்தியின் இயல்புகளை வெளிக்காட்ட வல்லவையும்கூட. இதுகுறித்து அடுத்த கிளைத்தலைப்பில் விரிவாகக் காணலாம்.

## பூதபரம்பரை பொலியச் செய்தமை

இரு வினைகளால் கட்டுண்டு மீண்டும் பிறக்கும் கட்டாயத்திற்கு ஆளாகும் உயிர்கள் குருநாதரின் வழிகாட்டுதலால் வினை நீங்கி விளக்கம் பெறுகின்றன. அத்தகைய குருமூர்த்தியாகத் திகழ்ந்தவர் திருஞானசம்பந்தர். அவரது வரலாற்றில் நிகழ்ந்த அருட் செயல்கள் இதனை உறுதிப்படுத்துகின்றன. பனை மரங்களுக்கு முக்தியளித்தது

முதல் நல்லூர்ப் பெருமணத்தில் திருமணத்திற்கு வந்தவர்களுக் கெல்லாம் முக்தி தரு மூர்த்தியாய் விளங்குவதுவரை அதற்கான சான்றுகள் உள்ளன.

அவற்றினும் முக்கியமானவை பிள்ளையார்தம பதிகங்கள். அவற்றைப் பாராயணம் செய்வதே முக்தியை வழங்கும் என்பதைத் திருக்கடைக்காப்புப் பாடல்கள் பெரும்பாலான வற்றில் பிள்ளையார் வலியுறுத்துகிறார்.

" யாழின்னிசை வல்லார் சொலக்கேட்டார் அவரெல்லாம்
ஊழின்மலி வினையோட உயர்வான் அடைவாரே " *(1-118)*

" சொல்லார் தமிழ்மாலை செவிக்கினி தாக
வல்லார்க்கு எளிதாம்படி பிறவாவகை வீடே " *(1-337)*

" பன்னுபாடல் பத்தும்வல்லார் மெய்த்தவத்தோர் விரும்பும்
மன்னுசோதி யீசனோடே மன்னி யிருப்பாரே " *(1-547)*

" மன்னு காழியுள் ஞானசம்பந்தன் சொல்
பன்ன வேவினை பாறுமே " *(1-600)*

என்பன போன்றவை இதற்கான சான்றுகள். முக்திக்கு வழி தேடும் உயிர்களாகிய பூதபரம்பரை, தம் வினைக்கட்டுகள் நீங்கிப் பொலிவடைவதே 'பூதபரம்பரை பொலிதல்' என்று குறிக்கப் படுகிறது.

பரசமய கோளரி, முத்தமிழ் இசை வல்ல வித்தகன், சைவ சமய சிகாமணி என்றெல்லாம் பல்வேறு தளங்களில் பெரிதும் அறியப்பட்ட திருஞானசம்பந்தர், ஒரு குருவின் தலையாய கடமையாகிய வீடுபேற்றுக்கு வழிகாட்டுதல் என்பதையும் செவ்வனே நிறைவேற்றினார்.

பல்வேறு திருப்பதிகங்களில் 'ஆணை நமதே' என்று முத்திரை பதிக்கும் ஆன்மிகத் திறம் நினைந்து போற்றத் தகுந்தது.

மனிதனைப் பற்றுகிற வினைகள் மட்டுமன்றி, கோள்களின் செல்வாக்கு, நாள்களுக்குரிய அதிர்வுகள் போன்றவற்றாலும் பாதிப்பு நேராவண்ணம் கவசமாய்க் காக்கும் அருளாற்றல் அவர்தம் பதிகங்களுக்கு உண்டு.

" தானுறு கோளும் நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் உரைசெய்
ஆனசொல்மாலை ஓதும் அடியார்கள், வானில்
அரசாள்வர் ஆணை நமதே "

என்கிற திருக்கடைக்காப்பு

பலரும் சம்பந்தர் காலத்தில் மட்டுமன்றி அவருக்குப் பின்னரும் அவரையே குருவாகக் கொண்டனர்.

திருஞானசம்பந்தரின் திருவடிகளே வீடு பேறாகக் கருதத் தக்கவை என்று சிவப்பிரகாசர் பாடுகிறார்.

" பூவால் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையின்இயற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு - நாவால்
மறித்தெம் செவிஅமுதாய் வார்த்தபிரான் தண்டை
வெறித்தண் கமலமே வீடு "

என்பது சிவப்பிரகாசர் வாக்கு.

ஆகவே, சைவம் சார்ந்த வேத நெறியும் சைவத்துறையும் செழித்து வளரச் செய்ததோடு, இசைத்தமிழில் மிகப் புதிய பங்களிப்புகளைத் தமிழுக்குத் தந்து, வீடு பேற்றுக்கு வழிகாட்டும் குருமாமணியாகவும் ஒளிர்கிறார் திருஞானசம்பந்தர்.



## 8. பதிகங்கள் பதில் சொல்லும்

சராசரி மனிதர்களின் கற்பனைக்குச் சாத்தியமில்லாத அதிசயங்கள், அருளாளர்களின் வாழ்வில் அரங்கேறுவதுண்டு. அதைக் கற்பனை என்று கருதுபவர்கள் உண்டு. தங்களுக்கு நிகழாதது, எவருக்கும் நிகழ வாய்ப்பில்லை என்ற குறுகிய முடிவுக்குச் சிலர் வருவதே இதற்குக் காரணம்.

அதிசயங்களை அடித்தளமாக்கி ஆன்மிகக் கட்டமைப்பை உருவாக்க வேண்டிய அவசியம் சைவத்திற்கு இல்லை யென்றாலும், அடியார்களின் அருளாற்றலை உலகம் உணரும் நோக்கிலேயே அத்தகைய சம்பவங்களைப் பெரியபுராணம் விரித்துப் பேசுகிறது.

அடியார்களின் வரலாறுகளுடன் அடிப்படையிலேயே முரண்பட்டு நாத்திகவாதம் பேசுவோரிடம், சமய உலகினர் விவாதிப்பது பயன் தராது. அருளாளர்களின் தன்மையை உணர்ந்து, ஒப்புக்கொண்டு, சில சம்பவங்கள்மீது திறனாய்வு அடிப்படையில் கேள்விகள் எழுப்புவோருக்குத் திருமுறைகள் விளக்கம் தருகின்றன.

தேவாரப் பதிகங்களின் சொல்லடுக்குகளைப் பகுத்துணர முற்படும் பலர், அதன் வழியே புராணங்களால் விரித்துரைக்கப்படும் செயல்கள் உண்மையிலேயே நடந்தவையா என்று உய்த்துணர முற்படுவார்கள்.

உதாரணமாக, திருநாவுக்கரசரைச் சமணர்கள் கல்லில் கட்டிக் கடலில் வீசியபோது அவர் 'சொற்றுணை வேதியன்' என்று பதிகம் பாடி கல் தெப்பமாக மிதந்ததென்பது பெரிய புராணம்.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே "

என்பது தேவாரம். இந்தப் பாடலை மனத்திற் கொண்ட சில அறிஞர்கள், 'கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்' என்கிற தொடரைச் சுட்டிக்காட்டி, ஒரு வேளை கல்லில் கட்டிக் கடலில் பாய்ச்சினாலும் நல்ல துணையாவது நமச்சிவாயம் என்றுதான் திருநாவுக்கரசர் பாடினார். இதை வைத்துக் கொண்டு அவரைக் கல்லில் கட்டிக் கடலில் பூட்டியதாக ஒரு கதையை உருவாக்கி விட்டார்கள் என்று சொல்வதுண்டு.

ஆனால், தம்மைச் சமணர்கள் கல்லினில் கட்டிக் கடலிடை விடுத்ததையும் நமசிவாய மந்திரத்தை ஓதி உயிர் பிழைத்ததையும் திருநாவுக்கரசர் தெளிவாகவே குறிப்பிடுகிறார்.

" கல்லி னால்எனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்க விடுக்கையில்
நெல்லு நீள்வயல் நீலக்குடி அரன்
நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேனன்றே, "

என்பது அப்பாடல்.

தம் வாழ்வில் நடைபெற்ற அரிய சம்பவங்களை விளக்கமுறப் பாடுவதன்மூலம் பல அகச்சான்றுகளை அருளாளர்கள் ஏற்படுத்துவது வழக்கம்.

திருஞானசம்பந்தரின் தேவாரப்பதிகங்களிலும் இத்தகைய அகச்சான்றுகள் உள்ளன. அதிலும் திருஞானசம்பந்தர் வாழ்வில் நடந்த அத்தனை அதிசயங்களுக்கும் மூல வேராகத் திகழ்வது, சீர்காழிக் குளக்கரையில் அம்மையப்பர் காட்சிதந்து, ஞானப்பால் புகட்டிய சம்பவம்தான். இந்த அதிசயம் ஒரு குழந்தையின் வாழ்வில் நிகழுமேயானால் பிற சம்பவங்கள் குறித்துக் கேள்வி எழவே வாய்ப்பில்லை.

தோணிபுரத்தீசனும் அம்மையும் தமக்கு ஞானப்பால் புகட்டியமை குறித்து, "தோடுடைய செவியன்" பதிகத்தில் வெளிப்படையான குறிப்புகளில்லை. முன்னொரு நாளில் பணிந்த நினைவுகள் பீறிட்டெழுந்த பரவசத்தில் பாடிய பதிகம் அது. எனினும், மதுரையில் ஆளுடைய பிள்ளையார் வீற்றிருக்கும் போது, தந்தையார் காணவந்தார். உடனே சீர்காழி குறித்த நினைவுகளும் வந்தன. அப்போது அவர் பாடிய பதிகம், 'மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்' என்ற புகழ் பெற்ற பதிகம்.

இப்பதிகத்தின் இரண்டாம் பாடலில், நடந்த செய்தியறியாத தந்தை கையில் பொற்கிண்ணமும் பாலறா வாயுமாய்த் தம்மைக் கண்டு சினமுற்ற செய்தியும் சம்பந்தரால் பாடப்படுகிறது.

" போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல்லாதெனத்
தாதையார் முனிவுறத் தான்எனை ஆண்டவர் "

என்கிற பாடலைக் கண்டால், இதுவே அந்த அருள் விளையாடல் நிகழ்ந்தமைக்கான அகச்சான்றாக விளங்குகிறது.

இனி, திருமருகலில் வணிகன் ஒருவனின் உயிர் மீட்ட சம்பவமும், கொல்லி மழவன் மகளைப் பீடித்த முயலகன் நோயைத் தீர்த்த சம்பவமும் திருஞானசம்பந்தரின் அருள்திறத்துக்கான அரிய சான்றுகள்.

திறனாய்வுப் பார்வையில் இந்த தேவாரப் பதிகங்களை அணுகும் சில அறிஞர்கள், சிவபெருமானை நினைத்து, தலைவி வருந்துவதாய் நாயகி பாவத்தில் பிள்ளையார் பாடினாரென்றும், அந்தப் பதிகங்களின் பாவத்தை வைத்து, சில அதிசயங்கள் நடந்ததாகப் புராணம் கட்டமைக்கப்பட்டதென்றும் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

இந்தக் கருத்து ஏற்கத்தக்கதன்று என்பது திருஞானசம்பந்தரின் கவிதையுள்ளத்தை ஆராயும்போது நமக்குப் புலப்படும்.

நாயக - நாயகி பாவத்தில் இறைவனைப் பாடிப் பரவும் முறையினை ஞானசம்பந்தப் பெருமான் கைக்கொண்டதுண்டு. அகத்துறை இலக்கியத்திற்கான கூறுகளோடு திகழும் இந்தப் பாடல்களின் போக்கினை நாம் முதலில் பார்ப்போம்.

திருத்தோணிபுரத்துப் பறவைகளையெல்லாம் சிவபெருமானிடத்தே தூதுவிடும் தலைவியின் நிலையில் நின்று பிள்ளையார் பாடுகிறார்.

'கிளியே என் அருகில் வா, தேன் பால் எல்லாம் தருவேன், ஒரேயொருமுறை தோணிபுரத்தீசன் திருப்பெயரை எனக்குச் சொல்லிக்காட்டு என்று கெஞ்சுகிறாள்' சம்பந்த நாயகி

" சிறையாரும் மடக்கிளியே இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவேன் மொய்பவளத் தொடுதரளம்
துறையாரும் கடல்தோணி புரத்தீசன், துளங்குமிளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே "

ஈசன்பால் பெருகும் காதலை உணர்த்தும் உயர்ந்த பாடல் இது. திருத்தோணிபுரப் பதிகத்தின் பத்துப் பாடல்களிலும், காதல் வயப்பட்ட பெண்ணொருத்தி தன் காதலைத் தானே விரித்துரைக்கும் தன்மை காணப்படுகிறது.

அதேபோல் திருச்செங்காட்டங்குடித் திருப்பதிகத்தில் காதல் வயப்பட்ட பெண்ணொருத்தி பறவைகளைத் தூதுவிடும் பாங்கில் பதிகம் பாடுகிறார் பிள்ளையார். சான்றுக்கு ஒன்று:

" பொன்னம்பூங் கழிக்கானல் புணர்துணையோடு உடன் வாழும்
அன்னங்காள், அன்றில்காள் அகன்றும்போய் வருவீர்காள்
கன்னவில்தோள் சிறுத்தொண்டன், கணபதீச்சுரம் மேய
இன்னமுதன் இணையடிக்கீழ் எனதல்லல் உரையீரே "

இந்தப் பாடலின் இலக்கிய நயம் மிகுந்த அருமைப்பாடு உடையது. ''இணைபிரியாத அன்றில்பறவைகள் சிறிது பிரிந்து உடனே சேர்ந்து கொள்கின்றன. சில விநாடிகள் நேரும் பிரிவையே நீங்கள் தாங்கவில்லையே, என் பிரிவுத்துயரை ஆற்றத் தூது போக மாட்டீர்களா'' என்று சம்பந்த நாயகி மன்றாடுகிறாள்.

'அன்னங்காள் அன்றில்காள் அகன்றும் போய் வருவீர்காள்' என்ற வரியில் உணர்ச்சி வெள்ளம் கரைபுரண்டோடக் காண்கிறோம்.

'இன்னமுதன் இணையடிக்கீழ் எனதல்லல் உரையீரே' எடுத்த திருவடியாகவும் கூற்றுதைத்த திருவடியாகவுமே பெரும்பாலும் காணப்படும் ஈசனின் கழலடிகள் இப்போது அருகருகே இணையடியாகக் காணப்படுகின்றன, இன்னமுதனின் இணை யடிபோல் சேர்ந்தில்லாமல் தான் மட்டும் தலைவனைப் பிரிந்திருக்க நேர்கிறதே என்கிற கழிவிரக்கம், சம்பந்தப்பிள்ளையாரின் கவித்துவத்திற்கு மிக உயர்ந்த எடுத்துக்காட்டு.

பத்துப்பாடல்கள் கொண்ட இப்பதிகம், காதல் வயப்பட்ட பெண்ணொருத்தி தன் பிரிவாற்றாமையைத் தானே விரித்துரைக்கும் விதமாக அமைந்துள்ளது.

திருத்தோணிபுரம் குறித்த மற்றொரு பதிகத்திலும், நாயகி பாவம் அமைந்துள்ளது. என் பெண்மையைக் கொண்டார், என் சாயல் கொண்டார், என்னுள்ளம் கொண்ட ஒருவர் என்றெல்லாம் தலைவி பாடுவதாய் அமைந்துள்ளது இப்பதிகம்.

" கரும்பமர் வில்லியைக் காய்ந்து, காதல் காரிகை மாட்டு அருளி
அரும்பமர் கொங்கை யோர்பால் மகிழ்ந்த அற்புதம் செப்பரிதால்,
பெரும்பகலே வந்துஎன் பெண்மை கொண்டு பேர்த்தவர் சேர்ந்தஇடம்
கரும்பர் சோலைகள் சூழ்ந்த செம்மைத் தோணி புரம்தானே "

என்பது இப்பதிகத்தின் முதற்பாடல்.

மேற்கூறிய பதிகங்களிலெல்லாம், காதல் வயப்பட்ட பெண் தானே தன் பிரிவாற்றாமையைப் பேசுவதாகச் சம்பந்தர் அமைத்

துள்ளார். ஆனால், விடந்தீர்ந்த பதிகத்திலும், முயலக நோய் தீர்த்த பதிகத்திலும் ஒரு பெண்ணின் துயரத்தைக் சுட்டி, அதைத் தீர்க்குமாறு நேர்படப் பொருள் விளங்கும் விதமாகப் பதிகங்கள் அமைகின்றன.

இவற்றை நற்றாயிரங்கல் என்பது போன்ற வகைகளுக்குட் படுத்தி வலிந்து பொருள் கொள்வது பொருந்தாது. இறையனு பவத்தை நேர்பட உணர்ந்த அருளாளர், நாயகி பாவத்தில் தம்மை வைத்துப் பாடும் இடங்கள் உள்ளமையாலேயே பெண்களின் துயரைச் சுட்டி 'இதனைத் தீர்த்தருளும்' என்று வேண்டும் இடங்களை இலக்கிய வகையாக மட்டுமே பார்ப்பது முறையன்று.

தம்மையே நாயகியாய் வைத்துச் சம்பந்தர் பாடியுள்ளமை யால், அதுவே அவரது நாயகி பாவ அணுகுமுறை என்பதும் தெளிவாகிறது.

" சடையாய் எனுமால், சரண்நீ எனுமால்
விடையாய் எனுமால், வெருவா விழுமால்
மடைவார் குவளை மலரும் மருகல்
உடையாய், தகுமோ இவள்உள் மெலிவே "

என்று தொடங்கும் பதிகத்தில், 'எந்தாய் தகுமோ இவள் ஏசறவே' என்பன போன்ற தொடர்கள், ஒரு பெண்ணுக்காகப் பிள்ளையார் விண்ணப்பிக்கும் உளப்பாங்கைத் தெளிவாக எடுத்துக் காட்டு கின்றன.

அதே போல, திருப்பாச்சிலாசிராமத் திருப்பதிகம், முயலகன் நோயைத் தீர்த்தருளிய பதிகம். இதில்,

" துணிவளர் தங்கள் துளங்கி விளங்கச் சுடர்ச்சடை சுற்றி முடித்துப்
பணிவளர் கொள்கையர் பாரிடம் சூழலாரிடமும் பலி தேர்வர்
அணிவளர் கோலமெலாம் செய்து பாச்சிலாச் சிராமத் துறைகின்ற
மணிவளர் கண்டரோ மங்கையை வாட மயல் செய்வதோஇவர்மாண்பே "

என்பது முதல்பாடல். கொல்லி மழவன் மகள் மயங்கியிருந்தாள் என்பதால் மயல்செய்வதோ என்பது மயக்கத்தையே குறிக்கும். அன்றியும், அடுத்துவரும் பாடல்களில், ஏழையை வாட இடர் செய்வதோ,

" சேயிழை வாடச் சிதை செய்வதோ "

என்பன போன்ற வரிகள், நோயுற்ற பெண்ணையே குறிக்கும் விதமாய் அமைந்துள்ளன.

எனவே, பிற கவிஞர்களின் அணுகுமுறையை அருளாளர்களின் பாடல்களில் ஏற்றிப் பொருள் கொள்வதைக் காட்டிலும், அவர்கள் வரலாற்றோடு தொடர்புடைய இடங்களைக் கருத்தில் கொண்டு சிந்திப்பதே சிறந்தது.

சூழலையும் வரலாற்றையும் மனத்தில் கொள்ளாமல், சொல்லுக்குரிய பொருள் பற்றிமட்டும் சிந்திக்கும்போது, பிழைபட உணரும் வாய்ப்புண்டாகும் என்பதற்கு, பலபேர் மத்தியிலும் தவறாக வழங்கி வரும் இன்னொரு கருத்தையும் ஆராயலாம்.

மதுரையில், அரசனின் வெப்பு நோய் தீர்க்க வருமாறு அழைப்பு விடுக்கப்பட்டவுடன் ஞானசம்பந்தர் சென்றாரில்லை. இறைவனின் திருவுளக் குறிப்பை அறிவேன் என்று ஆலயம் செல்கிறார்.

அங்கே, அனல் வாதம் புனல் வாதம் போன்றவற்றை மேற்கொண்டு சமண சமயத்தை முறியடிக்க வேண்டும் என்கிற இறைவனின் திருவுளக் குறிப்பு அவருக்குப் புலப்படுகிறது.

" ............. அமண்கையரை
ஒட்டி வாது செய்யத் திருவுள்ளமே
..............சமண்
சித்திரை யழிக்கத் திருவுள்ளமே "

என்றெல்லாம் தமக்குக் கிடைக்கப்பெற்ற திருவுளக் குறிப்புகளைப் பட்டியலிடுகையில்

" ....................சாக்கியப் பேய்அமண்
தெண்ணரைக் கற்பழிக்கத் திருவுள்ளமே "

என்று பாடுகிறார். இந்தப் பாடலை மட்டும் வெறுமனே நோக்காமல், வாதம் செய்யப் புகுங்காலை நிலவிய சூழலையும் மனத்தில் கொண்டால் இந்த உண்மை தெற்றென விளங்கும்.

திருநாவுக்கரசர், இளமையில் மருள்நீக்கியார் என்ற திருப்பெயரொடு வாழ்ந்தவர். பிறகு சமண மதத்தில் சேர்ந்தார். சமண சமய நூல்களைக் கற்றுத் துறைபோகிய அவரது நுண்மாண் நுழைபுலம் காரணமாய், பலரையும் ''வாதத்தில் வென்று சமண சமயத்தின் தலைவராகத் திகழ்ந்தார். அவருக்குத் தங்களின் மேலாம் தருமசேனர் எனும் பெயர்கொடுத்தார்'' என்கிறார் சேக்கிழார்.

தருமசேனர் என்பது, தனியொருவர் பெயரன்று, அவரவர் தகுதிக்கேற்பச் சமணசமயத்தில் தரப்படும் பட்டம். இது தவிர,

பல்வேறு தகுதிகளையும் அடைபவர்களுக்கு அதற்கேற்பப் பட்டங்கள் தரப்பட்டு வந்திருக்க வேண்டும்.

இக்கருத்து, திருஞான சம்பந்தர் தேவாரத்தின் மூலம் உறுதியாகிறது. சமணர்கள் சம்பந்தப் பெருமானுக்குத் தீங்கு விளைவிப்பார்களோ என்கிற அச்சம் மங்கையர்க்கரசியாருக்கு ஏற்படும்போது, ஆலவாயரன் அருளிருக்க, இவர்களால் எனக்குத் தீங்கு செய்ய இயலாது என்று பொருள்பட, 'மானின் நேர்விழி மாதராய் வழுதிக்கு மாபெரும் தேவிகேள்' என்று பாடத் தொடங்குகிறார் ஞானசம்பந்தர்,

இப்பதிகத்தில்,

" சந்து சேனனும் இந்து சேனனும் தரும சேனனும் கருமைசேர்
கந்து சேனனும் கனக சேனனும் முதல தாகிய பெயர்கொளா "

என்றும்,

" கனக நந்தியும், புட்ப நந்தியும், பவண நந்தியும், குமணமா
கனக நந்தியும், குனக நந்தியும், திவண நந்தியும், மொழிகொளா
அனக நந்தியர் "

என்றும் பாடுகிறார். மதுரையிலிருந்த சமணப்பள்ளி பெருமளவில் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதும், அங்குச் சமண நூல்களில் வல்ல பலரும் திரண்டு திருஞானசம்பந்தருடன் வாதம் புரியக் காத்திருந்தனர் என்பதும் இதன் மூலம் புலப்படுகிறது.

இவையன்றியும், சமணர்களுடன் வாதிட்டு வென்ற ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் பதிகத்தில் சான்றுகள் அமைத்துப் பாடுகிறார் சம்பந்தப்பிள்ளையார்.

உதாரணமாக அவர் விட்ட ஏடு எதிர்சென்றதை

" அற்றன்றி அந்தண் மதுரைத் தொகையாக்கி னானும்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர்வின் ஊரவும் பண்பு நோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மின்றே " (3382)

என்று பாடுகிறார். இவ்வாறே ஓடம் விட்டது, மறைக்காட்டில் கதவடைக்கப் பாடியது என்று பல சம்பவங்களுக்கும் அகச் சான்றுகள் உள.

இனி, இன்றைய காலகட்டத்தில் திருவண்ணாமலையிலும் இன்ன பிற மலைத் தலங்களிலும் கிரிவலம் வருதல் என்பது பெருமளவு பிரபலமாகியுள்ளது. காலங்காலமாகவே இந்தப்

பழக்கம் இருந்துவருகிற தெனினும், சமீப காலமாய்ப் புகழ் பெற்றுத் திகழ்கிறது.

நவீன யுகத்தில் ஏற்பட்ட புதிய பழக்கமென்று யாரும் இதனைக் கருதிவிடாமலிருக்கவும் சம்பந்தப் பெருமானே சாட்சி சொல்கிறார்.

சிவபெருமான் வீற்றிருக்கும் மலையை வலம் வரும் வழக்கத்தைப் பின்பற்றாமல் பெயர்க்க முற்பட்டமையால் இராவணன் இடருற்றான் என்று பொருள்படும்படி

" வள்ளல் இருந்த மலையதனை வலஞ்செய்தல் வாய்மையென
உள்ளம் கொள்ளாது, கொதித்தெழுந்து அன்றெடுத்தோன் உரன்நெரிய "

என்று பாடுகிறார்.

எனவே, மலைவலம் செய்து வழிபடுதல் மிகவும் தொன்மை யான மரபு என்பதையும் சம்பந்தர் தேவாரம் தெளிவுபடுத்துகிறது.

கோள்களால் ஏற்படும் நலிவு நீங்கும் விதமாக இன்று பல தலங்களுக்கும் சென்று இறைவனை வழிபடுமாறு சோதிடர்கள் சொல்கின்றனர். இவற்றில் கோள்களால் எவ்விதத் துன்பமும் நேராமல் அருளும் திருக்கோளிலி எனும் தலத்தில் வழிபட்டால் தலைமுறை தலைமுறைக்கும் கோள்களால் வரும் தீமைகள் நிகழா என்கிறார் சம்பந்தர். இந்நிலையை, சிவநாமத்தைக் கேட்பதன் மூலமே எய்த இயலும் என்றும் சொல்கிறார்.

" நாளாய போகாமே நஞ்சணியும் கண்டனுக்கே
ஆளாய அன்புசெய்வோம் மடநெஞ்சே அரன்நாமம்
கேளாய்நம் கிளைகிளைக்கும் கேடுபடாத் திறம்அருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலிஎம் பெருமானே "

மந்திரங்களுக்கெல்லாம் மகாமந்திரமாக 'நமசிவாய' எனும் ஐந்தெழுத்துத் திகழ்கிறது என்பதும் இதனால் புலனாகிறது.

இந்தப் பதிகத்தில் சிவநாமத்தைச் சிந்தித்தும், சிவ வழிபாடு இயற்றியும், விதியை வெல்லலாம் என்பதைச் சம்பந்தப் பெருமான் வலியுறுத்துகிறார். அதற்கு, மார்க்கண்டேயர் வரலாற்றையும் சான்றாகச் சொல்கிறார். மார்க்கண்டேயர் இருக்கு வேதம் ஓதி வழிபட்டவர் என்பதுவரையிலும் இதில் குறிப்பிடுகிறார்.

" நன்றுநகு நாண்மலரால் நல்லிருக்கு மந்திரம்கொண்டு
ஒன்றி வழிபாடுசெயல் உற்றவன்தன் ஓங்குயிர்மேல்
கன்றிவரும் காலன்உயிர் கண்டவனுக்கு அன்றளித்தான்
கொன்றைமலர் பொன்திகழும் கோளிலிஎம் பெருமானே "

என்கிற பாடல், இறைவழிபாட்டின் மூலம் மரணத்தை வெல்லலாம் என்கிற கருத்தை வலியுறுத்துகிறது.

திருஞானசம்பந்தர் தேவாரத்தில் மிகவும் புகழ்பெற்ற கோளறு திருப்பதிகம் தெய்விக அருளாற்றலில் நிகரற்று விளங்குவதோடு தமிழ்ப் பனுவல்களின் மந்திரசக்தியை உணர்த்தும் விதமாகவும் அமைந்துள்ளது.

பல்வேறு தோஷங்கள் நீங்கும் விதமாகக் கோள்களின் தலங்களாய் அமைந்திருப்பவை பெரும்பாலும் சிவாலயங்களாகவே உள்ளன.

சனிக் கோளுக்குகந்த தலமாகிய திருநள்ளாறு, மிகச் சிறந்த சிவத்தலமாகும். இத்தலத்தே உறைகின்ற கண்ணுதற் கடவுளை நளன் பூசித்து நிலம்பெற்ற வரலாற்றை ஞானசம்பந்தப் பெருமான் பாடுகிறார்.

" விளங்கிழை மடந்தை மலைமங்கையொரு பாகத்து
உளங்கொள இருத்திய ஒருத்தன் இடமென்பர்
வளங்கெழுவு தீபமொடு தூபமலர் தூவி
நளன்கெழுவி நாளும் வழிபாடுசெய் நள்ளாறே " *(1821)*

என்பது அப்பாடல்.

அதேபோல, இராகு தலமாகிய திருநாகேச்சுவரம் பாடல் பெற்ற சிவத்தலம். இங்கே வீற்றிருக்கும் இறைவனை வழிபட்டால், கோள் - நாள் ஆகியவை தீய குறிப்புகளைக் காட்டிலும் நன்மையே செய்யும் என்கிறார் பிள்ளையார்.

" நாளும் நாதன் அமர்கின்ற நாகேச்சரம் நண்ணுவர்
கோளும் நாளும் தீயவேனும் நன்னுரம் குறிக்கொண்டினே "

என்கிறார். ஒவ்வொரு கோளுக்கும் தனித்தனிப் பரிகாரங்களைத் தேடிப்போகும் வழக்கம் இன்று மிகுந்திருக்கிறது. கோள்கள், வல்வினை ஆகியவற்றை வெல்லும் உபாயமாகச் சிவநாமத்தை உபதேசிக்கும் திருஞானசம்பந்தரின் தேவாரம் மனம் கொள்ளத் தக்கது.



## 9. அன்பில் விளைந்த அபூர்வப் பதிகம்

தம்முடைய பதிகக் கட்டமைப்பிற்கென்று தனித்தன்மை வாய்ந்த முறையினை ஆளுடைய பிள்ளையார் கையாண்டிருந்தார். எட்டாவது பாடலில் இராவணனை அடக்கியமை, ஒன்பதாவது பாடலில் அயனும் மாலும் அடிமுடி தேடியமை, பத்தாவது பாடலில் சமணர்களைச் சாடுதல், பதினோராவது பாடலாகிய திருக்கடைக் காப்பில் பதிகப்பயன் கூறுதல் இதுவும் அவரது அணுகுமுறை.

இதனைப் பல இடங்களில் தளர்த்திக்கொண்டுமிருக்கிறார். குறிப்பாகச் சீர்காழி குறித்துச் சிந்திக்கும் இடங்களில் பதிகத்தின் எண்கள் மற்றும் கருத்தமைவுகளை மாற்றிக்கொண்டிருக்கிறார்.

இவை அனைத்திலிருந்தும் மூற்றாக முழுதாக மாறுபட்டு விளங்குவது திருச்செங்காட்டங்குடித் திருப்பதிகம், பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகம் நாயகி பாவத்தில் பாடப்பட்டு உள்ளது. பத்துப் பாடல்களிலும், சிறுத்தொண்டரின் பெயரமையப் பாடியுள்ளார் பிள்ளையார்.

" செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன்
    கன்னவில்தோள் சிறுத்தொண்டன்
சிட்டன்சீர்ச் சிறுத்தொண்டன்
    தேனிமிர்தார் சிறுத்தொண்டன்
சீருவாஞ் சிறுத்தொண்டன்
    கணபதீச் சுரம்மேய சிறுத்தொண்டன்
செருவடிதோள் சிறுத்தொண்டன்
    சிறப்புலவன் சிறுத்தொண்டன் "

" வெந்த நீறணிமார்பன் சிறுத்தொண்டன் " என்றெல்லாம் பாராட்டிச் சொல்லும் சம்பந்தர், எட்டாவது பாடலில், சிறுத் தொண்டரின் புதல்வராகிய சீராளத்தேவரின் பெயரும் அமையுமாறு

" சீராளன், சிறுத்தொண்டன், செங்காட்டங்குடிமேய
பேராளன் பெருமான் "

என்று பாடுகிறார். பொதுவாக, தாமாகவே பதிகங்கள் பாடுவது தான் பிள்ளையாரின் இயல்பு. ஆனால், இந்தப் பதிகத்தின் பத்தாவது பாடலில், சிறுத்தொண்டன் வேண்டிக் கொண்டதன் பேரில் தாம் இந்தப் பதிகத்தைப் பாடுவதாகக் குறிப்பிடுகிறார் பிள்ளையார்.

" செந்தண்பூம் புனல்பரந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்டன் அவன்வேண்ட
அந்தண்பூங் கலிக்காழி அடிகளையே அடிபரவும்
சந்தங்கொள் சம்பந்தன் தமிழுரைப்போர் தக்காரே "

என்று குறிப்பிடுகிறார்.

சிறுத்தொண்டருடன் நிகழ்ந்த முதல் சந்திப்பின்போது இப் பதிகம் பாடினார் பிள்ளையார். அங்கிருந்து திருமருகல் சென்று சில நாட்கள் தங்கியிருந்தார் சம்பந்தப் பிள்ளையார். வணிகனின் விடம் தீர்த்த அதிசயம் நிகழ்ந்தேறிய பிறகு, சிறுத்தொண்டர் தம்முடைய பதிக்கு மீண்டும் எழுந்தருள வேண்டினார். மறுபடியும் சிறுத்தொண்ட நாயனாரின் விருந்தினராகத் தங்கியிருந்தார் சம்பந்தப் பிள்ளையார். அவர் புறப்படும்போது பல பதிகளுக்கும் சிறுத் தொண்ட நாயனார் உடன் வந்துள்ளார்.

இதற்குப் பிறகுதான் சிறுத்தொண்டர் இல்லத்திற்குச் சிவபெருமான் முனிவர் வேடத்தில் எழுந்தருளிப் பிள்ளைக்கறி கேட்ட அருள்விளையாட்டு நிகழ்ந்தது.

வேறெந்த அடியார்களுக்கும் தராத முக்கியத்துவத்தைச் சிறுத்தொண்டருக்குத் தமது பதிகத்தில் பிள்ளையார் வழங்கி யமையும், சீராளர் பெயரமையப் பாடல் பாடியதையும் காணும் போது, பின்னர் நிகழப் போவதையறிந்து முன்னதாகவே சிறுத் தொண்டரைப் பிள்ளையார் சிறப்பித்திருக்கிறார் என்று கருதத் தோன்றுகிறது.



## 10. வாழையடி வாழையென...

'பிள்ளை பாதி புராணம் பாதி' என்கிற வழக்குமொழி வந்தமைக்கான இரண்டு காரணங்கள் உண்டு. எண்ணிக்கை அளவில் பார்த்தால், பெரிய புராணத்தில் 4286 பாடல்களில் 1255 பாடல்கள் திருஞானசம்பந்தர் புராணத்தை விரித்துரைக்கின்றன. அத்துடன் நில்லாது திருநாவுக்கரசு நாயனார், திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருநீலநக்கர், திருமுருகர், குங்கிலியக் கலயர், குலச்சிறையார், மங்கையர்க்கரசியார், நின்ற சீர் நெடுமாறர், சிறுத்தொண்டர் ஆகியோர் அருள் வரலாறுகளிலும், சீர்காழிப் பிள்ளையார் குறித்த குறிப்புகள் வருகின்றன. எனவே, பிள்ளை பாதி, புராணம் பாதி என்று பேசப்படுகிறது. திருநாவுக்கரசர் தேவாரத்திலும் பிள்ளையார் பற்றிய குறிப்புகள் உள்ளன.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருத்தொண்டத் தொகையில்மட்டு மல்லாது பதிகத்திலும் பிள்ளையாரின் பெருமை அமையப் பாடியுள்ளார்.

நம்பியாண்டார் நம்பிகள், ஆளுடைய பிள்ளையார் திருச் சண்பை விருத்தம், ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை உள்ளிட்ட பல்வேறு பிரபந்தங்களை ஞானசம்பந்தர் குறித்தே இயற்றியுள்ளார்.

சைவ சித்தாந்தத்தின் தலை நூலாகிய சிவஞான போதத்தை இயற்றியவர் மெய்கண்டார். அவருடைய தந்தை அச்சுத களப்பாளர். அவர் பல்லாண்டுகள் மகப்பேறின்றி மனம் வருந்தி, தம் குல குருவாகிய அருணந்தி சிவாச்சாரியாரிடம் முறையிட்டார். அவர் திருமுறையைப் பூசித்துக் கயிறு சார்த்திப் பார்த்தார். அப்போது திருஞானசம்பந்தருடைய தேவாரப்பாடல் உத்தரவானது.

" பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடு உள நினைவு
ஆயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாஒன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே "

என்ற அத்திருப்பாட்டில் திருவெண்காட்டில் முக்குள நீரில் நீராடினால் பிள்ளைவரம் உள்ளிட்ட அனைத்து நலன்களும் கைகூடும் என்கிற அருட்குறிப்புத் தென்பட்டது.

அப்போது ஓராண்டுக் காலம் அச்சுதகளப்பாளர் துணைவியாரோடு திருவெண்காட்டிலே வாழ்ந்தார். சிவனார் கனவில் தோன்றி ''இப்பிறவியில் உனக்கு மகப்பேறு கிடையாது'' என்றார். ''ஞானசம்பந்தப் பெருமான் திருப்பாடலை நம்பித் தவமிருக்கிறோம்'' என்றார் களப்பாளர். அது கேட்டுச் சிவபெருமான் அக மகிழ்ந்து ''ஞான சம்பந்தனைப் போன்ற மகவினைப் பெறுவீர்'' என்று அருளியதாகவும், அதன் பிறகு மெய்கண்டார் பிறந்தார் என்றும் அவரது வரலாறு சொல்கிறது.

திருமுருகப் பெருமானைச் சந்தமிகு செந்தமிழால் வழிபட்ட அருணகிரிநாதர், ''பெம்மான் முருகன் பிறவான் இறவான்'' என்று பாடியவர் ஆயினும், அவர் ஞானசம்பந்தப் பெருமான் முருகனுடைய அம்சம் என்று கருத்தமையப் பல பாடல்களைப் பாடியுள்ளார். சான்றாக, பிள்ளையார் எலும்பைப் பெண்ணாக்கிய சரித்திரத்தைத் திருமயிலாப்பூர்த் திருப்புகழில் முருகனின் செயலாகவே அமைத்துப்பாடுகிறார் அருணகிரிநாதர்.

" அளகை வணிகர் குலத்தில் வனிதைஉயிர் மீளழைப்ப
அருள்பரவு பாடல்சொற்ற குமரேசா "

என்று பாடுகிறார்.

இதுவன்றியும் 75 புராண நூல்களிலும், பல சைவ சமய சாத்திர நூல்களிலும் திருஞானசம்பந்தர் பற்றிய கருத்துக்கள் காணப் படுவதாக அறிஞர்கள் எழுதியுள்ளனர்.

இனி, திருஞானசம்பந்தரைத் தம் குருவாகவே வரித்துக் கொண்டு உளமுருகிப் பாடியவர் திருவருட்பிரகாச வள்ளலார். அருணகிரியார் போலவே தணிகைமலை முருகனை இவரும் ஞானசம்பந்த மூர்த்தியாக வரித்துப் பாடியுள்ளார்.

" சைவ நாயக சம்பந்தன் ஆகிய தமிழருட் குன்றேஎன்
தெய்வமே நினைஅன்றி ஓர் துணையிலேன் "

என்று தணிகை முருகனைப் பாடினார்.

இதுதவிரத் திருவொற்றியூர்ப் பதிகம், சிவநேச வெண்பா, திருவருள் முறையீடு, திருவருள் விலாசம், அன்புமாலை, ஆனந்தமாலை போன்ற பதிகங்களிலும் திருஞானசம்பந்தர் பற்றிய குறிப்புகள் அமைத்து வள்ளலார் பாடுகிறார்.

இது தவிர, 'ஆளுடைய பிள்ளையார் அருள்மாலை' என்ற பதிகம் பாடியுள்ளார். இதில் ஞானசம்பந்தப் பெருமானைச் சிவகுருவே, சத்குருவே, சற்குருமணியே, சுத்த சற்குருவே என்று பலவாறாகப் போற்றுகிறார்.

சிவப்பிரகாச சுவாமிகள் நால்வர் நான்மணி மாலையில் சம்பந்தப் பெருமான் சிறப்பினை விரித்துப் பாடுகிறார்.

இது தவிரத் திருஞானசம்பந்தப் பெருமான் பெயரால் பல அறப்பணிகளை அரசர்கள் செய்துவந்தமைக்கான கல்வெட்டுக் குறிப்புகளும் கல்வெட்டறிஞர்களால் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

திருவிடைவாய் ஆலயத்தில் 10ஆம் நூற்றாண்டெழுத்தில் சம்பந்தர் தேவாரம் கல்வெட்டாகச் செதுக்கப்பட்டிருக்கிறது.

இராஜராஜன் காலம்தொட்டுப் பல கல்வெட்டுக்களில் குறிப்புகள் காணப்படுகின்றன. அவற்றில் சம்பந்தப் பிள்ளை யாருக்கு ஆளுடைய தேவர், ஆளுடைய நாயனார், திருஞானம் பெற்ற நம்பி என்று பல பெயர்கள் வழங்கப்பட்டன.

திருஞானசம்பந்தர் பெயரிலான திருமடங்கள் மதுரையைப் போலவே காமராவல்லி, திருச்சத்திமுற்றம், திருவானைக்கா, குறுக்கை வீரட்டானம், திருபுத்தூர், திருவொற்றியூர், தென்கரை, சீர்காழி ஆகிய இடங்களிலும் இருந்துள்ளன.

சம்பந்தர் பதிகங்களை ஓதுவதற்கும் பல மான்யங்கள் தரப்பட்டுள்ளன.

ஆதிசங்கரர் திருஞானசம்பந்தரைத் 'திராவிடசிசு' என்று குறிப்பதை அனைவரும் அறிவர்.

திருப்பூந்துருத்தியில் திருநாவுக்கரசர் தம் சிவிகையைத் தாங்கி வருவதறிந்து சிவிகையிலிருந்து பிள்ளையார் இறங்கிய இடம் 'சம்பந்தர் மேடு' என்று இன்றளவும் பேசப்பட்டு வருகிறது.

மதுரை செல்கிற வழியில் திண்டுக்கல் அருகே ஓரிடத்தில் பிள்ளையார் தங்கியிருந்த இடத்திற்குப் பிள்ளையார் பாளையம் என்ற பெயர் சூட்டப்பட்டு இன்றளவும் விளங்கி வருகிறது.

சைவமும் தமிழும் உள்ள அளவும் திருஞானசம்பந்தர் என்னும் பேரருளாரின் பெயரும் - பணிகளும் - பதிகங்களும் நிலைபெற்று நின்றிருக்கும்.



# திருநாவுக்கரசர்

## பொருளடக்கம்

# திருநாவுக்கரசர்

## 1. திருநாவுக்கரசர் வரலாறு

'' இடையறாப் பேரன்பும் மழைவாரும்
இருவிழியும் உழவா ரத்திண்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம். ''

- காஞ்சிப் புராணம்

''திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக் கரையன்'' என நம்பியாரூரர் எனும் சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாராட்டப் பெற்றவர் நாவுக்கரசர் எனும் அப்பர் பெருமான், சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளைத் திருவாய் மலர்ந்து அருளியவர். இவர் தமிழகத்தே திருமுனைப்பாடி நாட்டுத் திருவாமூரில் சைவ வேளாள குலத்தில் குறுக்கையர் குடியில் தோன்றினவர். புகழனார்க்கும் மாதினி யார்க்கும் மகவாகப் பிறந்தவர். திலகவதியாரைத் தமக்கையாகப் பெற்றவர். மருள்நீக்கியார் என்ற பிள்ளைத் திருநாமம் கொண்டவர். ''சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மா'' *(4-112- 9)* னாகிய இறைவனையே சிறப்பீனும் செம்பொரு ளாகக் கொண்டு ஒழுகியவர். தெளிந்த சிந்தையர். திருநாவுக் கரசரென ஆண்டவனால் அழைக்கப்பெற்றவர். அப்பர் என ஞான சம்பந்தரால் உறவு கொண்டாடப் பெற்றவர்.

## அறியத் துணை நிற்பன

இவர்தம் வரலாற்றை அறியத் துணையாய் அமைவன அப்பர் அருளிய தேவாரப் பாடல்கள், நம்பியாரூரர் அருளிய திருத் தொண்டத் தொகை, நம்பியாண்டார் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி மற்றும் திருநாவுக்கரசு தேவர் திரு ஏகாதச மாலை, சேக்கிழார் பாடி யருளிய திருத்தொண்டர் புராணம் ஆகியனவாம்.

## குடும்பச் சூழல்

நாவுக்கரசரின் தமக்கையார் திலகவதியார்க்குத் திருமணம் முடிக்கப் பெற்றோர் எண்ணினர். உருவும் திருவும் உயர்பேர் ஒழுக்கமும் ஒருங்கே பெற்ற திலகவதியாரை உருவும் ஒழுக்கமும் மிக்க கலிப்பகையார் என்னும் வேளாண்குலத் தோன்றல் மணந்து கொள்ள முன்வந்தார். அவ்வாறு முன் வந்த கலிப்பகையார் சோழ மன்னனின் படைத்தலைவர். திருமணம் உறுதிசெய்த நிலையில் கலிப்பகையார் வடநாட்டின்மீது போர்மேற் செல்வதாயிற்று. அவர் வடநாடு சென்றபோது நாவுக்கரசரின் தந்தையார் புகழனார் நோய்வாய்ப்பட்டு இறந்தார். துயரம் தாளாத அவர்தம் துணைவியார் நாவுக்கரசரின் அன்னை மாதினியாரும் மாண்டார். அன்னையையும் அத்தனையும் இழந்து நின்றனர் திலகவதியாரும் நாவுக்கரசரும். இந்நிலையில், போர்க்குச் சென்ற கலிப்பகையார் போரில் வீரமரணம் உற்றார் என்ற செய்தி திலகவதியார்க்கு எட்டிற்று.

''என் தாயும் தந்தையும் என்னை அவர்க்கே (கலிப்பகை யார்க்கே) கொடுப்பதாக இசைந்தார்கள். அந்த முறையில் நான் அவர்க்கே உரியவள் ஆயினேன். எனவே, இவ்வுடம்பைத் துறந்து என் உயிரை அவர் உயிரோடு இசைவிப்பன்'' என்று கூறித் திலகவதியார் உயிரைவிடத் துணிந்தார். இது கண்ட நாவுக் கரசர் பதைபதைத்து ''அன்னையையும் அத்தனையும் இழந்த பின்னரும் தமக்கையாகிய உம்மை வணங்கப் பெறுதலினால் உயிர் தரித்தேன். ஒன்றும் அறியாத என்னை இந்நிலையில் கைவிட்டுச் செல்வீராயின் யானும் உமக்கு முன்னம் உயிர் துறப்பன்'' எனக் கூறி வருந்தினார்.

தம்பியராகிய மருள்நீக்கியார் ஆதரிப்பார் இன்றி வருந்தும் இடர்நிலை உணர்ந்து, தம்பியின் பொருட்டுத் தம் எண்ணத்தை மாற்றிக்கொண்டு இவ்வுலகில் உயிர்தாங்கி இருப்பதாக உறுதி கொண்டார். ஆனால், அணிகலன்கள் அனைத்தையும் விலக்கி,

அருளையே அணிகலனாகக் கொண்டு மனையின்கண் தங்கித் தவப் பெரும் சீலராய்த் திகழ்ந்து தம்பியைப் பேணி வளர்ப்பாராயினர்.

"தம்பியர் உளராக வேண்டும்" என்ற பெருங்கருணை யினால் அவர்க்குத் தாயென அமைந்து வளர்க்க முன்வந்தது இறைவனது பெருங்கருணையே என்பதனை நாவுக்கரசர், தாம் பாடிய திருமுறையில் திருவாரூர்த் திருக் குறுந்தொகையில் பதிய வைத்துள்ளார்.

" எம்மையாரிலை யானும் உளேனலேன்
எம்மை யாரும் இதுசெய் வல்லரே
அம்மை யாரெனக் கென்று அரற்றி னேற்கு
அம்மை யாரைத் தந்தார் ஆரூர் ஐயரே. " (5-7-6)

மருள்நீக்கியார் தமக்கையார் நெறிகாட்டலில் வளர்ந்து பரிவுமனம் கொண்டு, பெற்றோர் விட்டுச்சென்ற பெரும் பொருளை நல்லறங்களில் செலவிட்டு வந்தார். உலகத்துள்ளார் யாவர்க்கும் இல்லை யென்னாது ஈந்து உவக்கும் அருளாளராகத் திகழ்ந்து வந்தார்.

## அறிவு செய்த குறைவு

அக்காலத்தில் சமணமுனிவர்கள் தங்களின் தருக்க சாத்திர வன்மையாலும், அரசியல் பின்புலத்தாலும், சீவகாருண்யம் எனும் அருள்நெறி ஒழுக்கத்தாலும், நீதிநெறிமுறைகளை மனங்கொளப் போற்றியுரைக்கும் திறத்தாலும் மக்களைக் கவர்ந்துவந்தனர். அறிவு ஆராய்ச்சியில் ஈடுபட்ட அவர்களிடம் நாவுக்கரசரும் மனம் பறிகொடுத்தார். எல்லாச் சமயங்களிலும் சிறப்புடைய பொதுச் சமயம் அது என எண்ணிச் சமண சமயம் சார்ந்தார். பாடலிபுரத்தில் இருந்த சமண் பாழியைச் சேர்ந்தார். அச் சமயத்தைச் சார்ந்து அச் சமயம் சார்ந்த நூல்கள் பலவற்றை நுணுகிக் கற்றார். இவர்தம் ஆற்றலையும் அறிவுக் கூர்மையையுங் கண்ட சமணர்கள் இவர்க்குத் தருமசேனர் என்ற பட்டம் தந்து பெருமைப் படுத்தினர்; பாராட்டினர்.

## தமக்கையின் பரிவு

தம்பியார் உளராக வேண்டும் எனும் தயா உணர்வால் உயிர் துறத்தலைக் கைவிட்ட திலகவதியார்க்குத் தம்பி சமண சமயம் சார்ந்தார் என்றது வருத்தம் உண்டாக்கியது. எனவே,

சுற்றத்தவர்களைத் துறந்து திருவாமூரை விட்டுத் திருவதிகை போந்து திருக்கோயில் சேர்ந்தார். அங்கே கோயிலை அலகிடுதல், மெழுகுதல், பூத்தொடுத்தல் முதலிய திருப்பணிகளில் விருப்பொடு ஒருப்பட்டார். ஆண்டவன் திருமுன்பு ''என்னை ஆண்டருள்வீராகில் அடியேன் பின் பிறந்தவனைப் புறச்சமயப் படுகுழியில் இருந்து எடுத்தாள வேண்டும்'' என நாளும் வேண்டி நின்றார். இறைவரும் அம்மையார் கனவில் தோன்றி ''முன்னமே முனியாகி என்னை அடையத் தவம் முயன்றான். அன்னவனை இனிச் சூலை நோய் தந்து ஆட்கொள்வோம்'' (திரு. தொ. புராணம். திருநாவுக்கரசு புராணம் - 48) என்று அருளினார்.

இறையருளால் தருமசேனராம் மருள்நீக்கியாரைப் பற்றிய சூலைநோய் சமணர்களின் மந்திரங்களாலும் குண்டிகை நீராலும் மருந்துகளாலும் நீங்கவில்லை. மாறாக மேலும் மேலும் அதிகரிப்பதாயிற்று. சமணர்கள், ''இது நம்மால் போக்குதற்கு அரிய நோய்'' எனச் சொல்லி அகன்று சென்றனர்.

மருள்நீக்கியார்க்கு அப்போதுதான் தம் தமக்கையார் திலகவதியாரின் நினைவுண்டாயிற்று. ஆள்வழி அவர்க்குச் சொல்லி அனுப்பினார். அது கேட்ட அன்னையினும் தயவுடைய திலகவதியார், ''நன்று அறியா அமண்பாழி நண்ணுகிலேன்'' என்று மறுமொழி கூறி விடுத்தார். வந்த ஆள், தருமசேனரிடம் நடந்ததனைக் கூறவே, ''யானே சென்று, திலகவதியார் திருவடிகளை வணங்கி உய்வேன்'' என்று இரவோடு இரவாக, ஒருவர் துணைகொண்டு, பாடலிபுரத்தினின்றும் புறப்பட்டுத் திருவதிகை சேர்ந்து திலகவதியார்தம் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்.

## முதல் தேவாரம்

திலகவதியாரும் தம்பியாரை நோக்கி, ''நும்மைப் பற்றிய இச்சூலைநோய் இறைவனது திருவருளே என அறிக'' எனக் கூறித் திருவருளின் வண்மையாகிய திருநீற்றினைத் திருவைந்தெழுத்தை ஓதிக் கொடுத்தார். மருள்நீக்கியார் அதனை அணிந்து அன்னையினும் தயவுடைய தமக்கையைப் பின் தொடர்ந்து திருக்கோயில் சென்றார். திருக்கோயிலை வலம் வந்து, துன்ப உணர்வில் தன்னை மறந்து, துன்பம் துடைக்கும் பரமனிடம் தம் இடர்ப்பாடுகளைக் கவிதையாகக் கொட்டும் உணர்வு உள்ளத்து எழவே,

"கூற்றாயின வாறு விலக்க கிலீர்
கொடுமை பல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக்கே இரவும் பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றினகம் படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேன் அடியேன் அதிகைக்கெடில
வீரட்டானத்துறை அம்மானே." (4-1-1)

எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடிப் போற்றினார். சூலைநோய் நீங்கிற்று. தேவாரத்தின் முதல் பாட்டு இதுவாகும்.

### மருள்நீக்கியார் நாவுக்கரசரானார்

மருள்நீக்கியார் ஒன்றிய உணர்வில் ஊறிய இன்தமிழ்ப் பாவினைச் சுவைத்த பரம்பொருள், "செந்தமிழ்ச் சொல்மலர் நீ பாடிய தன்மையினால் நன்பெயர் 'நாவுக்கரசு' என உலகு



*திலகவதியாரை வணங்கிச் சைவத்திற்கு திரும்பல்*

ஏழினும் எழில் நிலைபெற்று நின்று நிலவுவதாக" எனத் திருவருள் மொழியாய் யாவரும் கேட்க வானின்கண் தோற்றுவித்தது. (தி.தொ.பு. திருநாவு. புரா.)

திருநாவுக்கரசர் அது முதல் அருட்பெருங் கூத்தனாம் ஆடலம் பெருமானின் அடித்தொண்டரானார். இறையருளால் பாடும் திறமையைப் பெற்ற தன்மையை

" ..............நாயேன் முன்னைப்
பந்தமறுத்து ஆளாக்கிப் பணிகொண்டு ஆங்கே
பன்னிய நூல் தமிழ்மாலை பாடுவித்து என்
சிந்தை மயக்கறுத்த திருவினானை " (6-84-4)

எனப் பாடி மகிழ்ந்துள்ளார். சூலைநோய் தீர்த்துத் தம்மை ஆட்கொண்ட அருளிப்பாட்டினை

" சூலை தீர்த்து அடியேனை ஆட்கொண்டாரே " (6-96-3)
" உடலுறு நோய்தீர்த்து என்னை ஆட்கொண்டாரே " (6-96-6)
" இடர்உறு நோய்தீர்த்து என்னை ஆட்கொண்டாரே " (6-96-11)

என்றெல்லாம் பாடிப் பரவியுள்ளார்.

## சமணர்தம் வஞ்சனை

திருநாவுக்கரசர் சிவநெறியில் சேர்ந்து வாழும் திறத்தினைப் பாடலிபுரத்தில் உள்ள சமண முனிவர்கள் கேள்வியுற்று மனம் பொறுக்காமல் பொறாமையெனும் பொல்லா உணர்ச்சிக்கு ஆளாயினர். ''இவன் பொய்யே காட்டி அந்நோய் நம்மால் தீர்க்கப் பெறவில்லை யென்று நம்ப வைத்து, தமக்கையாரிடம் சென்று சைவனாகி, நம் சமயத்தை இகழ்ந்துரைத்து வருகிறான்'' என்ற செய்தியைப் பரப்பிச் சமணசமயத்தைச் சார்ந்த பல்லவ வேந்தனாகிய மகேந்திரனிடத்தும் சென்று முறையிட்டனர். அரசனும் ஆராயாமல் ''இம் முனிவர்களால் சுட்டப்பட்ட தீயோனைப் பிடித்து என்பாற் கொண்டு வாருங்கள்'' என்றார்.

சிவபரம்பொருளையே தமக்குத் தலைவனாகக் கொண்டு வழிபட்டு வரும் திருநாவுக்கரசர் தம்மை அழைக்க வந்த அரசனின் ஏவலாளர்களைப் பார்த்து, அஞ்சாமல்

" நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை அல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கர நற்சங்கவெண் குழையோர் காதில்
கோ மாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடி இணையே குறுகினோமே. "
(6-98-1)

எனக் கூறி உடன் செல்ல மறுத்தார். வந்த ஆட்களிடம் கூறிய செய்திகள் ''மறுமாற்றத் திருத்தாண்டகம்'' என்ற பதிகப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் சில:

'' துகில் உடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லும்
சொல்கேட்கக் கடவோமோ துரிசற் றோமே '' *(6-98-3)*

'' காவலரே ஏவி விடுத்தா ரேனும்
கடவ மலோம் கடுமையொடு களவற்றோமே '' *(6-98-6)*

அவர்தம் மனநேர்மையும் அஞ்சாமையும் இவற்றால் வெளிப்படுகின்றன.



*உழவாரப் பணி சமணர் கொடுமைகள் 'அப்பர் எங்குற்றார்'*

வந்தவர்கள் நாவுக்கரசரை வணங்கி வேண்டிக்கொண்டனர். அவர்கட்கு ஊறு நேரக்கூடாது என்ற உள்ளன்பால் அவர்களுடன் சென்றார். சென்றவரைக் கண்ட மன்னன், விசாரணை ஏதுமின்றி, சமண முனிவர்களைப் பார்த்து 'இவற்குரிய தண்டனை யாது' எனக் கேட்கவே, அவர்களும் ''இவனைச் சுண்ணாம்பு சுடும் நீற்றறையில் இடுதலே ஏற்புடைத் தண்டனை'' என்றனர். அன்பையும் நீதியையும் போதிக்கும் சமண சமய முனிவர்கள் அவ்வாறு கூறவே, அம்மதத்தைச் சார்ந்த மன்னனும் ''அவ்வாறே செய்க'' என ஆணையிட்டான். ஏழுநாள் கழித்து நீற்றறையை மகிழ்ச்சி ஆரவாரத்தோடு திறந்து பார்த்தனர். அவர் யாதொரு பாதிப்பும் இன்றி இனிதே அறைக்குள் அமர்ந்திருந்தார். அது கண்ட சமண முனிவர்களோ, தங்கள்பால் கற்ற மந்திர தந்திரங் களால் மருள்நீக்கியார் ஊறு ஒன்றும் இன்றி நின்றார் என்றனர். நாவுக்கரசரோ ஆண்டவன் அடியிணையில் மனம் ஒன்றி நின்று அதன் அனுபவத்தில் ஆனந்தத்தில் ஆழ்ந்து நின்றார் என்பது,

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே." (5-90-1)

என்று தொடங்கும் பதிகப்பாடல்களின் பொருள்களால் உணர முடிகின்றது.

தோல்வியை ஒப்புக்கொள்ளாத நடலை வாழ்வுடை அம் முனிவர்கள் "நாவுக்கரசர்க்கு நஞ்சூட்டலே தகும்" என்று அரசனிடம் கூற, அவனும் அவ்வாறே செய்ய ஆணையிட்டான். நஞ்சூட்டப் பெற்ற உணவும் அவர்க்கு அமுதாயிற்று என்பதனை "நஞ்சு அமுது ஆக்குவித்தார் நனிபள்ளி அடிகளாரே" (4-70-5) என்பதனை நாவுக்கரசரே குறிப்பிட்டார். நஞ்சூட்டப்பெற்ற உணவும் அவர்க்கு நல்லுணவானதனைக் கண்ட சமண முனிவர்கள், "நம்மிடம் கற்ற வித்தையை இவன் நம்மிடமே காட்டுகின்றான். இவனைச் சும்மாவிட்டால் நம் சமயத்திற்கே ஆபத்து. யானைக் காலால், இடறச் செய்து இவனை இல்லாமல் செய்வதே நல்லது" என்றனர். மன்னனும் அதற்கு ஒருப்பட்டுப் பட்டத்து யானையைக் கட்டவிழ்த்து விடச் செய்தான். தன்மேல் யானை வரக் கண்டும் அஞ்சாது, அதனை வெறுக்காது அன்பொடு எல்லாம் வல்ல பரம்பொருளைத் தியானித்து,

"சுண்ணவெண் சந்தனச் சாந்தும் சுடர்த்திங்கள் சூளாமணியும்
வண்ண உரிவை உடையும் வளரும் பவள நிறமும்
அண்ணல் அரண்முரண் ஏறும் அகலம் அளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை."
(4-2-1)

எனத் தொடங்கும் பதிகம் பாடினார். கொல்லவென ஏவப்பட்ட யானை திருநாவுக்கரசரை வலம் செய்து வணங்கி, அவ்விடம் விட்டு அகன்றது. இந் நிகழ்ச்சியை "ஈசன் தமர்களைக் கொலை செய் யானைதான் கொன்றிடுகிற்குமோ" (5-91-5) என்று தம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

மூன்று முறையும் தோற்று மானம் இழந்த சமண முனிவர்கள் மன்னனை அடைந்து "தருமசேனன் நம் சமயத்தில் இருந்து கற்றுக்கொண்ட வலிமையாலே, நாம் ஏவிய யானையைக் கொண்டே நம் வலிமையைச் சிதைத்து, மன்னனாகிய நினது புகழுக்கும் இழிவினை உண்டாக்கினான்" எனக் கூறினர். இத்தகை

யானைக் கல்லொடு பிணித்துக் கடலில் இடுவதே தக்கது'' என்றனர். பொறியிலா மன்னனும் அவ்வாறே செய்ய ஆணையிட்டான்.

கல்லில் பூட்டப்பெற்றுக் கடலில் இடப்பெற்ற நாவுக்கரசரோ எல்லாம் இறைவன் செயல் என நினைந்து, தன்னை மறந்து அவன் திருத்தாளில் மனம் ஒன்றித் திருவைந்தெழுத்தைத் துதிப்பாராக,



*கரையேறவிட்ட குப்பம் (திருப்பாதிரிப்புலியூர்)*

'' சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணை பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே. '' . *(4-11-1)*

எனத் தொடங்கும் நமச்சிவாயப் பதிகத்தைப் பாடிப் பரவினார். அமிழ்த்தும் கல்லே மிதவையாகி, திருப்பாதிரிப்புலியூர்க்கு அருகேவுள்ள ''கரையேற விட்ட குப்பம்'' என்ற சிற்றூர்க்கருகே கரையேறி நின்றார்.

### எப்படி வென்றார்

இவையெல்லாம் நமக்கு இயற்கை இகந்த நிகழ்ச்சிகளாக, கற்பனைகளாகப் படலாம். ஆனால், இவையெல்லாம் என்றும்

எல்லார்க்கும் நிகழக் கூடியனவே என்று உணரலாம். இராமன் இலக்குவனிடம்

" மன் உயிர்தாம் பல்லாயிரம் கோடி பரந்துள வால்
இல்லாதன இல்லை இளங்குமரா " (கம்பரா. 3289)

எனக் கூறியபடி நம்மால் நம்ப முடியாத நிகழ்ச்சிகள் பல நடக்கத் தான் செய்கின்றன. அவ்வாறு நிகழ்த்தவல்ல இயல்பைப் பெற்று வாழ இயலும் என்பதனை நாவுக்க்ரசர் வாழ்ந்துகாட்டி யுள்ளார். அவர் காட்டியுள்ள வழிபற்றி எண்ணிப் பார்ப்பது நல்லது.

முதலில் முழு ஒப்படைப்பு உணர்வோடு ஒன்றினைப் பற்றிக் கொண்டு அதனின்று பிரிவு அறியாப் பெருங்காதலோடு அதனொடு ஒன்றி நிற்க வேண்டும். இதனை, ''ஒன்றி இருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனம் இல்லை'' (4-81-2) என்று கூறி விளங்க வைக்கின்றார். மனத்தின் ஓட்டத்தை நிறுத்தி ஒன்றின் மீது மனத்தினைப் பொருத்தி அந்த ஒன்றிற்கே உயிரை அர்ப்பணித்துத் தியானம் செய்தல் வேண்டும் என்கின்றார். அவ்வாறு ஒன்றிநின்றால் ஒன்றி நிற்கப்படும் பொருளாகவே ஆகிவிடுவான்; உபத்திரவம் ஒன்றும் வாராது என்பதனை அனுபவமாக உணர்ந்தவர். எனவேதான்

" உயிராவணம் இருந்து உற்று நோக்கி
உள்ளக் கிழியின் உரு எழுதி
உயிராவணம் செய்திட்டு உன்கைத் தந்தால்
உணரப் படுவாரோடு ஒட்டி வாழ்தி " (6-25-1)

எனப் பாடி வழிகாட்டுகின்றார்.

இரண்டாவதாக எதனிடத்தும் எவரிடத்தும் பகைமை பாராட்டாத, தீங்கு செய்யாத வாழ்வு வ்ாழ்தல் வேண்டும். தன் கண் முன்பே தனக்குத் தவறிழைத்த மன்னனையோ சமண முனிவர்களையோ அவர் வையவில்லை. சுருங்கச் சொன்னால், அவர்கள் பற்றிய சிந்தனையே அவரிடம் இல்லை. எனவேதான்,

" நில்லா வாழ்வு நிலைபெறும் என்று எண்ணிப்
பொல்லா அறுசெயல் புரியாதீர் " (5-69-7)

எனப் பாடியுள்ளார். இதனை மேலும் தெளிவுபடுத்துவது போன்று சிவஞான போதம், திருக்களிற்றுப்படியார் போன்ற நூல்கள் கூறும் செய்திகளை எண்ணிப் பார்க்கலாம்.

கண்ணொளி, விளக்கொளி, கதிரவன் ஒளி ஆகிய மூன்றும் வருகிறபோது கண்ணொளியும் விளக்கொளியும் கதிரவன் ஒளியும் ஒன்றாகிப் போகும். அதுபோன்று உயிர் திருவருள்

மயமாக நிற்கும் போது அவ்வுயிர்க்கு இடமாகிய உடம்பு, நுகர்பொருள், நுகர்வு எல்லாமும் திருவருள் மயமாகவே விளங்கும். இதனைச் சிவஞான போதம் இரண்டாம் சூத்திரத்தின் 2-ஆம் அதிகாரத்துக்கு விளக்கவுரை எழுதியுள்ள மாதவச் சிவஞான முனிவர் "ஆன்மா பசு எனும் பெயர் நீங்கி முத்தனாய் அருளொடு கூடி நின்றவழி அவ்வான்மாவின் வியாப்பியமான மாயை எனும் பெயர் நீங்கி அருளேயாய் நிற்கும்" என்று குறிப்பிட்டுள்ளார். அருளாளனாகிய இறைவனை, ஆன்மா தன்மீது வந்தேறி நிற்கும் அழுக்குகளை மறந்து ஒன்றுபடும் போது அருள்மயமாக விளங்கும்.

"அருளே நம் இயல், அருளே நம்முரு, அருளே நம் வடிவாம் என்ற சிவமே" (அகவல் 999-1000) என்ற அனுபவத்தில் வள்ளற் பெருமான், "மரணம் இலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்" (அருட்பா. 5576) எனத் துணிந்து கூறுகின்றார்.

திருக்களிற்றுப்படியார், இவ் அருள்நிலை எய்துதற்கான வழியை

" துரியம் கடந்த சுடர்த்தோகையுடன் என்றும்
பிரியாது நிற்கின்ற பெம்மான் - துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யும் தன்மைகளும்
ஆக்கியிடும் அன்பர்க்கு அருள் " (திருக்களிற்று 69)

எனச் செப்பியுள்ளது. இவ்வாறு அருளான தன்மையால்தான் நாவுக்கரசர் நீற்றறை, நஞ்சூட்டப்பட்ட உணவு, மதயானை, கற்றூண் ஆகியுவற்றால் நாவுக்கரசர்க்கு இடையூறு ஏதும் ஏற்படவில்லை; மாறாக, உதவும் நிலைகளாக விளங்கின. இதனைத் திருக்கடவூர் உய்ய வந்த தேவர்

" கொல்கரியின் நீற்றறையின் நஞ்சின் கொலைதவிர்த்தல்
கல்லே மிதப்பாய்க் கடல்நீத்தல் - நல்ல
மருவார் மறைக்காட்டில் வாசல் திறப்பித்தல்
திருவாமூ ராளி செயல். " (திருக்களிற். 71)

என விளக்கிக் கூறியுள்ளார்.

### அறிஞர் கூறுவன

இதுபற்றி இருபெரும் அறிஞர்கள் கூறியுள்ள கருத்தையும் ஈண்டுச் சிந்தித்துப் பார்ப்பது நல்லது. பேராசிரியர் கா.சு. பிள்ளை

என அறியப்பட்டவரும் எம்.எல். பிள்ளை எனப் போற்றப் பட்டவரும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியரு மாக விளங்கிய அறிஞர் கா. சுப்பிரமணிய பிள்ளை எழுதியுள்ள ''அப்பர் சுவாமிகள் சரித்திரம்'' என்ற நூலில் கீழ்க்கண்ட செய்திகளைத் தந்துள்ளார்.

1. ஈசன் அடியார்க்கு ஏதும் இடையூறு விளையாது.

2. இறைவன் திருவடிக்கண் தற்செயலற்றுத் தானற்று ஏகமாய் நின்றமையால் தனது முன்செய் வினைக்கு ஈடாய் வரும் விளைவினளவு சிவபோகமாக விளைந்தன.

3. அதீத நிலையுற்றுச் சிவ போகத் தேன் பருகுதலிலேயே ஆழ்ந்த சிந்தனையுடையோர் தமது பரு உடம்பிற்கு ஏற்படும் இடையூறுகளைச் சிறிதும் உணரார்.

4. ஒரே உடம்பு மனநிலை காரணமாகவும் திருவருள் இயக்கத்தாலும் மாறிப் பல இயல்புகளை எய்துதல் இயலாத தொன்று.

மறைமலை அடிகளார்தம் திருமகனார் மறை. திருநாவுக்கரசு அவர்கள் தமது 'பெரியபுராண ஆய்வுரை' என்ற நூலில் கீழ்க் கண்ட காரணங்களைச் சுட்டியுள்ளார்.

1. சிவபிரான்பால் இருந்த அன்பினால் நம்பிக்கை அளித்த உறுதியால் நீற்றறை யாதோர் ஊறும் செய்திலது.

2. அரசனுக்கு உள்ள ஆற்றல், ஆணை முதலியன அவன் பேரன்பைப் பெற்ற அமைச்சர்க்கும் உண்டு. அதுபோன்று நஞ்சுண்ட சிவனின் அன்பிற்குரியரான அரசர்க்கும் நஞ்சும் தீங்கு செய்யாது நின்றது.

3. விலங்கினங்கள் தம் பார்வையிலேயே பிற உயிர்களின் உள்ளங்களையும் அவற்றில் எழும் எண்ணங்களையும் அறிந்து இயங்கும் இயல்பின. அன்பே உருவான அப்பரடிகளின் உளத்தை உணர்ந்து ஊறு செய்யாது யானை விலகிற்று.

4. நாவுக்கரசரோ ஆண்டவன் நாமமே தமக்கு உறுதுணை யாய் நின்று கல்லே மிதவை ஆயிற்று என்பதனால் மேலும் காரணம் தேட வேண்டுவதன்று.

நாவுக்கரசர் அறிவு மறந்து அருந்தவர்பால் இசைவு நினைந்து தம்மை மறந்து தம் நாமம் கெட்டுத் தலைவனின் தாளிணைகளில் நினைவை நிலைகுத்தி நின்றார். ஆதலால் புறச்சலனங்கள் அவரைத் தாக்கவில்லை.

### தலங்களைத் தரிசித்தல்

கரையேறிய நாவுக்கரசர் அன்பர்களோடு சென்று திருப்பாதிரிப் புலியூர்த் திருக்கோயில் சென்று, ஈசனை ''ஈன்றாளுமாய் எமக்கு எந்தையுமாய்'' (4-94-1) என்று தொடங்கும் பதிகம் பாடிப் பரவினார். பின்னர் அங்கிருந்து புறப்பட்டுத் திருமாணிகுழி, திருத் தினை நிகர் ஆகிய தலங்களை வணங்கித் திருவதிகை சேர்ந்தார். ''வெறிவிரவு கூவிள நல் தொங்கலானை'' (6-3-1) எனத் தொடங்கும் பதிகம் பாடிப் பரவினார். இப்பதிகத்தில் உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்றாக வாழ்ந்த சமண முனிவர்தம் சொற்களை உயர்வென எண்ணித் தாம் பாழ்பட்டுப் போன செய்தியைப் பல இடங்களில் குறிப்பிடுகின்றார். அவர்களின் புற இயல்புகளைக் கூறியும் தாம் 'உணர்வு ஒன்று இன்றி' இருந்ததையும் (6-3-7) ''கண்டார்க்குப் பொல்லாத காட்சியினனாகத்'' திகழ்ந்ததையும் (6-3-8) பண்டு சிவனை இகழ்ந்த தம் அறியாமையையும் குறிப்பிட்டு வருந்திப் பாடினார்.

இதற்கிடையே சமணரது சொற்கேட்டு, நடுநிலை தவறி விசாரணை இன்றித் திருநாவுக்கரசரைப் பலவாறு துன்புறுத்திய பல்லவ மன்னன், தன் தவறு உணர்ந்தான். நாவுக்கரசர்தம் நல்லுளத்தையும் பெருமையையும் உணர்ந்த பல்லவ மன்னன் மனம் திருந்திச் சமணர் உணர்த்திய நெறி சிக்கவைக்கும் பொறி யென்று உணர்ந்தான். பாடலிபுரத்தில் இருந்த அவர்களின் பள்ளி களையும் பாழிகளையும் இடித்துத் தகர்த்தான். அக் கற்களைக் கொண்டு திருவதிகையிலே சிவனார்க்குக் ''குணபரவீச்சரம்'' என்னும் திருக்கோயிலை அமைத்து வழிபட்டான். ஈண்டு ஓர் உண்மையினை எண்ணிப் பார்ப்பது நல்லது. நாவுக்கரசர் தீமையை எதிர்க்கவில்லை. மாறாக இறைவன்பால் மனம் ஒன்றி நின்றார். இவர் தீமையினின்று காக்கப்பட்டார்; தீமை செய்த மன்னனும் திருந்தினான். களங்கம் இல்லா உளத்தொடு வருவன வற்றை ஏற்று இறைவன் இணையடியில் தலைப்பட்டு நின்றால் ஏற்படும் பயன் இதுவென உணர இந்நிகழ்ச்சிகள் சான்றுகளாகும்.

திருவதிகையில் இருந்த நாவுக்கரசர் அங்கிருந்து புறப்பட்டுத் திருவெண்ணெய்நல்லூர், திருவாமாத்தூர், திருக்கோவலூர் முதலிய தலங்களை வழிபட்டு, தூங்கானை மாடம் என்ற திருக்கோயிலைப் பெற்ற திருப்பெண்ணாகடத்தை அடைந்தார். சமண சமயம் சார்ந்து இரட்டை வாழ்வு வாழ்ந்த சமண முனிவர்க்கும் அவர் சார்ந்துள்ள சமயத்திற்கும் தொண்டாற்றிய காரணத்தால் தம்

உடம்பு தொடக்குற்றது என்று எண்ணி அதனைத் தூய்மை செய்யும் வகையில் சூலமும் இடபமுமாகிய இலச்சினையைத் தம்மீது பொறித்து அருளுமாறு வேண்டினார். இது ''பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம்'' (4-109-1) எனத் தொடங்கும் தூங்கானை மாடத் திருவிருத்தப் பதிகத்தில் உள்ள மூன்று பாடல்களாலும் வெளிப்படும் செய்தி. பூதம் ஒன்று தோன்றிப் பிறர் அறியா வகையில் நாவுக்கரசரின் தோள்களில் இலச்சினையைப் பொறிக்கும் அத்தூய பணியைச் செய்து நாவுக்கரசரைப் புனிதமாக்கியது (தி.தொ.பு. திருநாவு - 152).

தூங்கானை மாடத்துச் சுடர்க்கொழுந்தாம் இறைவனைப் பாடிப் பரவி அங்கிருந்து புறப்பட்டுத் திருநெல்வாயில் அரத்துறை திருமுது குன்றம் முதலிய தலங்களைப் பணிந்துஆடலம் பெருமான் ஆடல் செய்தருளும் திருத்தில்லை சேர்ந்தார். அம்பலக் கூத்தனின் திருமுன்பு சென்று நின்றபோது அவர்தம் முகக்குறிப்பு ''என்றுவந்தாய்'' (4-81-2) எனக் கேட்பது போன்று இருந்ததாம். அதற்கு நாவுக்கரசர் விடை கூறுவது போன்று

" பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகி
எத்தினால் பத்தி செய்வேன் என்னை நீ இகழ வேண்டா
முத்தனே முதல்வா தில்லை அம்பலத் தாடு கின்ற
அத்தா வுன்னாடல் காண்பான் அடியனேன் வந்த வாறே. "
(4-23-1)

என்று பாடி மகிழ்ந்துள்ளார். கோயில் என்றாலே சைவர்கட்குச் சிதம்பரம் நடராசர் திரு அம்பலம்தான் நினைவுக்கு வரும். தில்லை யென்ற மரங்கள் நிறைந்தவூர் தில்லை எனப்பெற்றது. கோயில் சிதம்பரம் எனப்பட்டது. தில்லை மரமும் இப்போது இல்லை. ஊர்ப்பெயரும் சிதம்பரம் என்றே அழைக்கப்படுகிறது. அத்தகு தில்லையில் அப்பர் பெருமானுக்கு இப்படி ஓர் அனுபவம்.

## சீகாழிப் பயணம்

பின்னர் அங்கிருந்து கிழக்கே இரண்டு கல் தொலைவில் உள்ள திருவேட்களம் (இப்போது அண்ணாமலைநகர்) சென்று பசுபத நாதனைப் பாடிப் பரவி மீண்டும் தில்லை சேர்ந்து பல பதிகங்களைப் பாடிக்கொண்டு சில நாள் இருந்தார். இருந்தவர்க்கு ஆளுடைய பிள்ளையாராம் ஞானசம்பந்தரைக் கண்டு வணங்க வேண்டும் என்ற பெருவிருப்பு எழவே சீகாழி நோக்கிப் புறப் பட்டார். இடையில் திருநாரையூர் ஈசனைப் பாடிப் பரவிய பின்னர் சீகாழிப் பதியை அடைந்தார். நாவுக்கரசர் தம்மைக் காண

வருவதனை அறிந்த ஆளுடைய பிள்ளையார், அடியார்களுடன் அரசரை எதிர்கொண்டழைத்தனர். சம்பந்தரைக் கண்டவுடன் நாவுக்கரசர் அவரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கவே சம்பந்தர் தம் மலர்க்கையால் அவரை எடுத்து இறைஞ்சி ''அப்பரே'' என அன்பினால் அழைத்தனர். அரசரோ ''அடியேன்'' என்றார். ஞானசம்பந்தர் நாவுக்கரசரைத் தந்தையாகவே எண்ணினார்.

### தூய்மை செய்தருள்க

திருத்தோணிபுரம் எனும் சீகாழி ஈசனைப் பாடிப் பரவியும் ஞானப்பால் உண்ட சம்பந்தரோடு கூடிப் பேசியும் மகிழ்ந்து இருந்த நாவுக்கரசர் சோழநாட்டுத் தலங்களைத் தரிசிக்கவேண்டும் என்ற தம் விருப்பத்தை ஞானசம்பந்தப் பிள்ளையாரிடம் வெளிப் படுத்தினார். இருவரும் திருக்கோலக்கா சென்று இறைவனை இறைஞ்சிய பின்னர், ஞானசம்பந்தரிடம் விடைபெற்றுக் கருப்பறியலூர், புன்கூர், நீடூர், குறுக்கை, நின்றியூர், நனிபள்ளி ஆகிய தலங்களைக் கண்டு பணிந்து, பரவிப் பாடினார். பின்னர்ச் செம்பொன்பள்ளி, மயிலாடுதுறை, திருத்துருத்தி, வேள்விக்குடி, எதிர்கொள்பாடி, கோடி கா, ஆவடுதுறை, இடைமருது, நாகேச்சுரம், பழையாறை ஆகிய தலங்களை வணங்கிப் பதிகங்கள் பாடி மகிழ்ந்து, திருச்சத்தி முற்றத்தைச் சென்று சேர்ந்தார். ஆங்கு ஆண்டவனை நோக்கித் தன்தலை மீது திருவடியைச் சூட்டித் தூய்மை செய்து அருளுமாறு வேண்டினார்.

'' கோவாய் முடுகி அடுதிறல் கூற்றம் குமைப்பதன்முன்
பூவாரடிச் சுவடு என்மேல் பொறித்துவை போகவிடில்
மூவாமுழுப் பழிமூடும் கண்டாய் முழங்கும் தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையும் சிவக்கொழுந்தே. '' (4-96-1)

என்று வேண்டவே, 'நல்லூருக்கு வா' என்று வான் வழி வந்த அருள் மொழி கேட்டார். திருச்சத்தி முற்ற சிவக் கொழுந்தீசரை வணங்கி நல்லூர் நோக்கிப் புறப்பட்டார். நாவுக்கரசர் வேண்டுதலின் படி இறைவர் அவர்தம் சென்னிமிசை திருப்பாத மலர் சூட்டி யருளினார். இச்செய்தியை நாவுக்கரசர் ''நினைந்துருகும் அடியாரை நையவைத்தார்'' எனத் தொடங்கும் திருத்தாண்டகப் பாடல்களுள் (6-14-1-10) பதிவு செய்து மகிழ்ந்துள்ளார்.

### அப்பூதி அடிகள் அனுபவம்

நல்லூர்ப் பெருமானின் நல்ல திருவடியைச் சென்னியில் சூடிய மகிழ்ச்சியில் நல்லூரில் சில நாட்கள் தங்கி அருகுள்ள

கருகாவூர் ஆவூர், பாலைத்துறை ஆகிய தலங்கட்குச் சென்று ஆண்டவனைப் பதிகங்களால் பாடிப் பரவி வந்தார். பின்னர் நல்லூரில் இருந்து புறப்பட்டார். வழியில் திருப்பழனப் பெருமானை வணங்கிய பின்னர்த் திங்களூர் சேர்ந்தார். அங்குள்ள தண்ணீர்ப் பந்தல், அறச்சாலைகள், கிணறு, குளம், இளமரச்சோலை முதலிய எல்லாவற்றையும் திருநாவுக்கரசர் பெயரால் அவ்வூர் அந்தணராம்




*அப்பூதியடிகள்*

*1. அப்பர் - அப்பூதி சந்திப்பு, 2. அப்பர் ஆசி, 3. பாம்பு தீண்டல்*
*4,5. மகன் மறைவு / மறைப்பு, 6. மகன் உயிர் பெற்றெழுதல்*

அப்பூதியடிகள் என்பார் அமைத்துள்ளார் என்பதறிந்து அவரிடம் சென்றார். ''வழியில் நீவிர் வைத்துதவி வரும் தண்ணீர்ப் பந்தலைக் கண்டோம். பிற அறச் செயல்கள் பற்றியும் கேள்விப் பட்டு நும்மைக் காண வந்தோம். தண்ணீர்ப்பந்தலில் நும்பெயர் எழுதாது வேறு ஒரு பெயரை எழுதியதன் காரணம் யாது?'' என்று நாவுக்கரசர் கூறிய கூற்றினைக் கேட்ட அப்பூதியடிகள் வெகுண்டு ''பல்லவ மன்னன் செய்த வஞ்சனைகளையெல்லாம் சிவனடித் தொண்டின் வலிமையினாலே வென்றருளிய நாவுக்கரசர்

திருப்பெயரா வேறு ஒரு பெயர். மங்களமாம் சிவவேடத்துடன் நின்று இவ்வார்த்தை பேசினீர். நீர் எங்குறைவீர்? நீர் யார்? கூறும்'' என்றார். ''இறைவன் சூலைநோயினைத் தந்து ஆட்கொள்ள அடைந்து உய்ந்து தெளிந்த உணர்விலாச் சிறியேன்'' என மொழிந்தார். கேட்ட அப்பூதியடிகள் தம் மனைவி மக்களுடன் நாவுக்கரசர் திருப்பாதங்களில் வீழ்ந்து வணங்கித் தம் இல்லத்தில் திருவமுது செய்தருள வேண்டும் என வேண்டினர். அரசரும் இசைந்தார். அப்பூதியடிகள் தம் மூத்த புதல்வன் மூத்த திருநாவுக்கரசை வாழைக் குருத்து அரிந்துவர அனுப்பினார். அவரோ பாம்பு தீண்டப் பெற்றும் வாழைக் குருத்தைக் கொணர்ந்து கொடுத்து உயிர் துறந்தார். கண்ட பெற்றோர் அரசர் அமுது செய்ய இடையூறாகக் கூடாது என்பதனால் மூத்த திருநாவுக்கரசின் உடலைப் பாயில் சுருட்டி மூலையில் மறைத்து வைத்து விட்டு யாதொன்றும் நடவாதது போன்று அரசரை அமுதுசெய்ய வேண்டி அழைத்தனர்.

இல்லம் போந்து இலைமுன் அமர்ந்த நாவுக்கரசர் மூத்த திருநாவுக்கரசைக் காணாது ''நுமது மூத்த புதல்வனை அழையும்'' என்றார். நாவுக்கரசர் பெயரையே நற்பெயராக எண்ணி மந்திரம் போன்று ஓதிவரும் அப்பூதியடிகள். ''இப்போது அவன் இங்கே உதவான்'' என்றார். இதனைக் கேட்ட நாவுக்கரசர் ''ஏதோ இடையூறு நேர்ந்திருக்க வேண்டும். நிகழ்ந்ததை உள்ளவாறு உரைப்பீராக'' எனப் பணித்தார். நிகழ்ந்ததனை அப்பூதியடிகள் கூறவே, மூத்த திருநாவுக்கரசின் உடம்பைத் திருக்கோயிலின் முன் கொணரச் செய்து ஒன்று முதல் பத்து ஈறாக வைத்து எண்ணும் நிலையில் பத்துப் பாடல்களைக் கொண்ட திருப்பதிகத்தைப் பாடியருளினார். (4-18:8) இறையருளால் மூத்த திருநாவுக்காசு உறங்கியவர் விழித்து எழுவது போன்று எழுந்தார். பின்னர் எல்லாரும் ஒன்றாய் அமர்ந்து திருவமுது செய்து மகிழ்ந்தனர்.

அப்பூதி அடிகளாரின் ஒழுக்கச் சிறப்பினையும் சிவத் திருத்தொண்டினையும் சிறப்பிக்கும் வகையில் ''சொல் மாலை பயில்கின்ற குயிலினங்காள்'' எனத் தொடங்கும் திருப்பழனப் பதிகத்தில் ''அழலோம்பும் அப்பூதி குஞ்சிப் பூவாய் நின்ற சேவடியாய் கோடியையே'' (4-12-10) எனக் கூறியுள்ளார். திருப்பழனத்து ஈசனைப் பணிந்து பரவிப் போற்றிய நாவுக்கரசர் அங்கிருந்து திருநல்லூர், திருவலஞ்சுழி, குடந்தை, நாலூர், சேரை, பெருவேளூர், விளமர்... முதலிய தலங்களைத் தரிசித்துத் திருவாரூர் சேர்ந்தார். ஆரூர்ப் பெருமானைப் பல பதிகங்கள் பாடிப்

பணிந்து திருத்தொண்டு செய்து மகிழ்ந்தார். திருவாரூர்த் திருப்பதிகத்தில் நீரால் திருவிளக்கெரித்த நமிநந்தியடிகளைப் போற்றி யுரைத்தார் (4-102-2). அவரைத் தொண்டர்கள் கூட்டத்தின் அச்சாணி போன்றவர் என உரைத்துப் போற்றி யுள்ளார். இப்படிப் பிறர்தம் சிறப்பியல்புகளை மறவாது பெருமைபடப் பேசும் சிறப்பு இயல்பு நாவுக்கரசர்தம் உயர்ந்த உள்ளத்தைக் காட்டும் சான்றுகளாகும். திருவாரூரில் பாடிய ''மெய்யெலாம் வெண்ணீறு'' எனத் தொடங்கும் பதிகத்துள் (4-5-1) சமணர்தம் கூட்டுறவு பற்றிக் கூறும்போது தம்மை அறிவிலி என்று கூறிக் கொள்கின்றாரே தவிரச் சமணர்களைத் தாழ உரைக்கவில்லை. இது இவர்தம் உயரிய பண்பைக் காட்டும் உயரிய நிலையாகும்.

திருவாரூர் விட்டுத் திருப்புகலூர் சேர்ந்தார். இவர்க்கு முன்பாகவே திருஞானசம்பந்தர் அவ்வூர் போந்து முருக நாயனார் மடத்தில் தங்கி யிருந்தார். எனவே, சந்தித்த இவ்விருவரும் ஒருவரையொருவர் வணங்கி மகிழ்ந்தனர். ஞானசம்பந்தரின் வேண்டுகோளின்படி அப்பர் பெருமான் திருவாரூர் ஆதிரை விழாச் சிறப்பினைத் திருவாரூர்த் திருவாதிரைத் திருப்பதிகம் பாடி (4-21-1-10) விளக்கி உரைத்தார். அது கேட்ட ஆளுடைய பிள்ளையார் ''அரசரே யாமும் ஆரூர் சென்று வணங்கி வருவோம் வந்து உம்மொடு உடன் அமர்வோம்'' எனக் கூறிச் சென்றார். ஆளுடைய அரசரோ பிள்ளையார் வரும்வரை புகலூரில் தங்கி , அருகில் உள்ள செங்காட்டங்குடி, நள்ளாறு, சாத்த மங்கை, திருமருகல் முதலிய தலங்கட்குச் சென்று இறைவனைப் பதிகம் பாடிப் பணிந்து வந்தார். திருவாரூர் சென்ற ஞானசம்பந்தர் திருப்புகலூர் மீண்டும் வந்து அப்பர் பெருமானோடு சேர்ந்தார்.

## திருவீழி மிழலையில் படிக்காசு பெறுதல்

இருவரும் திருப்புகலூர் விட்டு, உடன் இருந்த திருநீல நக்கர், சிறுத்தொண்டர், முருக நாயனார் ஆகியவர்களிடம் விடை பெற்று, திரு அம்பர் எனும் திருப்பதி போந்தனர். அவ்வூர் ஈசனைப் பாடிப் பரவித் திருக்கடவூர் சென்று ஈசனைப் பாடிக் குங்கிலியக் கலயர் என்ற நாயனாரால் உபசரிக்கப்பெற்று அவருடைய மடத்திலேயே திருவமுது செய்தனர். திருக்கடவூர் மயானம், ஆக்கூர், தான்தோன்றிமாடம் முதலிய தலங்களைப் பணிந்து திருவீழி மிழலையை அடைந்து அடியவர்களால் வரவேற்கப்பெற்று ஈசனைப் போற்றிப் பதிகங்கள் பாடி இருவரும் தனித்தனி மடத்தில்

தம்மொடு வந்தாருடன் தங்கினர். அப்போது பெரும் பஞ்சம். மக்கள் பசித் துன்பத்தால் பெரிதும் வருந்தினர். அம்பலக் கூத்தன் இருவர்தம் கனவில் தோன்றி ''கால வேறுபாடுகளால் கருத்தழியா, திருத்தமிகு திருவுள்ளம் கொண்டீர்! உங்களைச் சார்ந்து வாழும் தொண்டர்களுக்கு உணவளிக்கும் பொருட்டுப் படிக்காசு நல்குவோம்'' என்று கூறி மறைந்தார். அவ்வாறே விண்ணிழி விமானத்தின் கிழக்குப் பீடத்திலும் மேற்குப் பீடத்திலும் படிக்காசு இருப்பக் கண்டு மகிழ்ந்தெடுத்து அடியவர்களின் பசிபோக்கி மகிழ்ந்தனர்.

திருஞானசம்பந்தர் பெற்ற படிக்காசுக்கு வட்டம் கொடுக்க வேண்டி இருந்தது. நாவுக்கரசர் படிக்காசுக்கு வட்டம் இன்றி முழு மதிப்பும் தரப்பெற்றது. இதனால் ஞானசம்பந்தர் மடத்தில் அன்னம் பாலிக்கும் அரும்பணி சிறிது காலம் தாழ்த்தி நடை பெற்றது. அறிந்த ஞானசம்பந்தர் ''வாசி தீரவே காசு நல்குவீர்'' (1-92-1) எனப் பாடி இறைஞ்சி வாசி இல்லாக் காசு பெற்றார் என்பதும் பின்னர் நாடுமலிய நல்ல மழை பொழிந்தது என்பதும் வரலாறு.

## மறைக்காட்டு நிகழ்ச்சி

இருவரும் திருவீழி மிழலை ஈசனைத் தொழுது புறப்பட்டு, திருவாஞ்சியம் முதலிய தலங்களை வணங்கித் திருமறைக்காட்டை அடைந்து திருக்கோயிலை வலம் வந்து நின்றனர். வேதங்கள் இறைவனை வழிபட்டு அவைகளால் அடைக்கப்பட்ட கதவு திறக்கப்பட வேண்டும் என்று எண்ணிய ஞான சம்பந்தர் ''அப்பரே நேர்முகமாகவுள்ள திருவாயிலின் வழியே சென்று மறைக்காட்டிறைவனை வழிபட வேண்டும். ஆதலால் இத்திருக்கதவு திறக்கும்படி நீவிர் திருப்பதிகம் பாடியருளும்''என வேண்டினார். பிள்ளையாரின் வேண்டுகோளை ஏற்று நாவுக்கரசர்,

'' பண்ணினேர் மொழியாள் உமைபங்கரோ
மண்ணினார் வலஞ்செய் மறைக்காடரோ
கண்ணினால் உமைக்காணக் கதவினைத்
திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே. ''

எனத் தொடங்கும் திருப்பதிகம் (5-10) பாடினார். பத்துப் பாடல்கள் பாடியும் கதவு திறக்கப் பெறாமை கண்டு மனம் வருந்திய நாவுக்கரசர்

"அரக்கனை விரலால் அடர்த்திட்ட நீவிர்
இரக்கம் ஒன்றிலீர் எம்பெருமா னீரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க இக்கதவம் திறப்பிம் மினே." (5-10-11)

என வருந்திப் பாடிய பாவைக் கேட்ட பரமன் கதவு திறப்பிக்கச் செய்தார். அப்பரடிகள் நாள்தோறும் திறக்கவும் மூடவும் படும்படியாக, கதவு மூடும்படிப் பாடுமாறு ஞானசம்பந்தரிடம் வேண்டினார். "சதுரம் மறைதான் துதி செய்து வணங்கும்" (2-37) எனத் தொடங்கும் பதிகம் பாடினார் ஞானசம்பந்தர். முதற்பாட்டல் பாடியவுடனே கதவு மூடிக்கொண்டது. என்றாலும், அவர் பதினொரு பாடல்களையும் பாடி முடித்தார்.

## அப்பர் பெருமானின் ஐயம்

திருமறைக்காட்டில் திருமடத்தில் அப்பரும் பிள்ளையாரும் அவர்களொடு வந்த அடியார்களும் இராப்பொழுதினைக் கழிக்கத் தங்கினர். தாம் பத்துப் பாடல்கள் பாடும்வரை திறக்காத கதவு, பிள்ளையார் ஒரு பாட்டுப் பாடினதும் மூடிக்கொண்டதே, ஏதேனும் தவறு செய்துவிட்டோமோ என்ற வருத்த மனத்தொடு துயின்றார். இறைவன் அவர் கனவில் தோன்றி, "அன்ப! யாம் திருவாய்மூரில் இருப்போம் தொடர்ந்து வருவாயாக" என்று கூறி அவர்முன்னே போக நாவுக்கரசர் திருவாய்மூர் செல்வாரானார். "அங்கே வாவென்று போனார் அது என்கொலோ" (5-50-1) என்று பாடி, அவர்பின் சென்றார். இடைவழியில் பொன்மயமான திருக்கோயிலைக் காட்டி அதனுள்ளே புகுந்து மறைந்தார். நாவுக்கரசர் இதனை எண்ணி வருந்தினார். நாவுக்கரசர் திருவாய்மூர் நோக்கிப் போவதனை அறிந்த ஞானசம்பந்தரும் திருவாய்மூர் நோக்கிப் புறப்பட்டு அவரை அணுகிய நிலையில்

"திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தார் உந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடையார் இவர் பித்தரோ." (5-50-8)

*(உந்நின்றார் : இதோ நின்றார்)*

என்ற திருப்பாடலைப் பாடிப் போற்றினார். ஞான்சம்பந்தர்க்குக் காட்சி தந்த இறைவனைக் கண்டு மகிழ்ந்த அவர், தாம் கண்ட காட்சியைத் திருநாவுக்கரசர்க்கும் காட்டி மகிழ்ந்தார். அப்பரடி களும் அக்காட்சியைக் கண்டு, "பாட அடியார் பரவக் கண்டேன்

வாய்மூர் அடிகளை நான் கண்ட வாறே'' (6-77-1) என்று பாடி மகிழ்ந்தார். அத்திருப்பதிகப் பாடல்களின் இறுதியில் ''வாய்மூர் அடிகளை நான்கண்ட வாறே'' என்று கூறித் தம் மகிழ்வை வெளிப்படுத்தியுள்ளார்.

இச்செய்திகளை நாவுக்கரசர் பாடியுள்ள

'' மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி உன்னி உறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி
என்னை வாவென்று போனார் அதுஎன்கொலோ. '' (5-50-2)

என்ற பாடலாலும்,

'' தஞ்சே கண்டேன் தரிக்கிலாது ஆரென்றேன்
அஞ்சேல் உன்னை அழைக்க வந்தேன் என்றார். '' (5-50-3)

என்ற பாடலாலும்

'' கழியக் கண்டிலேன் கண்ணெதிரே கண்டேன்
ஒழியப் போந்திலேன் ஒக்கவே யோட்டந்தேன்
வழியிற் கண்டிலேன் வாய்மூர் அடிகள்தம்
சுழியிற் பட்டுச் சுழல்கின்ற தென்கொலோ. '' (5-50-4)

என்ற பாடலாலும் உறுதி செய்துகொள்ளலாம்.

அப்பரும் ஞானசம்பந்தரும் திருவாய்மூர் இறைவரை வணங்கி விடைபெற்றுத் திருமறைக்காட்டில் எழுந்தருளியிருந்தார்கள். அப்போது மதுரையில் இருந்த பாண்டிமாதேவியார் மங்கையர்க் கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் அனுப்பிய தூதர்கள் ஞானசம்பந்தரை மதுரைக்கு அழைத்தார்கள். பாண்டிய நாட்டில் சமணர்கள் செய்யும் இடையூறுகளைத் தடுத்து நிறுத்த உதவுவதற் காக அழைத்துவரச் சொன்னதாகச் சொல்லினர். ஞானசம்பந்தரும் அழைப்பினை ஏற்றுப் புறப்பட்டார். ''சமணர்கள் மாயம் வல்ல வர்கள். நாளும் கோளும் சரியில்லை. இந்நிலையில் மதுரைக்கு எழுந்தருள்வது பொருந்தாது'' என்று நாவுக்கரசர் கூறினார். சம்பந்தரோ ''குலச்சிறையாரையும் மங்கையர்க்கரசியாரையும் காணும் விருப்புடையேன். நாளும் கோளும் ஒன்றும் செய்யா. சென்று சமணர்தம் வன்மையைச் சிதைத்து ஒழிப்பேன்'' என்று கூறினார். ''நீவிர் அங்குப் போதற்கு என் மனம் ஒருப்படவில்லை. யானே மதுரைக்குச் சென்று சமணர்களது தீமையினைச் சிதைத்து வருகின்றேன்'' என்றுரைத்து அவர்க்கு முன் புறப்பட்டார். ஆளுடைய பிள்ளையார் அமைதி கூறி, அப்பரடிகளிடம் விடைபெற்றுப் பாண்டி நாட்டிற்குப் புறப்பட்டருளினார்.

நாவுக்கரசர் திருமறைக்காட்டை விட்டுப் புறப்பட்டு நாகைக் காரோணம், திருவீழிமிழலை, திருவாவடுதுறை முதலிய பல தலங் களை வணங்கிப் பழையாறை என்னும் தலத்தை அடைந்தார். அவ்வூரில் இருந்த சிவபிரான் கோயில் விமானம் சமணர்களால் மறைக்கப்பட்டு அதன்மேல் பொய்யான விமானம் ஒன்று கட்டி சமணர்க்கு உரியதாக்கிக் கொண்டனர். இச்செய்தியை அவ்வூர்க் காரர்கள் நாவுக்கரசரிடம் சொல்லவே ''இறைவா! இம்மறைப் பினை அகற்றி அவர்களின் வன்மையைக் குலைத்திடுவீராக. உம் திருமேனி கண்டு வணங்கி அன்றிப் போகேன்'' என உண்ணாநோன்பு மேற்கொண்டு அவ்விடத்தே அமர்ந்தார். காந்தியடிகள் பின்பற்றிய சத்தியாக்கிரக நெறிக்கு முன்னோடியாக விளங்கியவரானார்.

## பழையாறை

சிவபெருமான், பழையாறை நகரத்தின் வேந்தனது கனவிலே தோன்றி ''நாம் சமணர்களால் வடதளியில் மறைக்கப் பெற்றிருக் கின்றோம், நம் நாவுக்கரசர், நம் வண்ணம் கண்டு வணங்கும் படியாக மறைப்பை நீக்கி, அவ்வாறு செய்தார்தம் வலியைக் குலைத்திடுக'' என்றுரைத்து மறைந்தருளினார். அரசன் உண்மையை உணர்ந்து, பொய்யாக மேலாகக் கட்டப்பெற்ற விமானத்தை நீக்கி வஞ்சனையாளர்களை ஓட்டிப் புதிய விமானம் சமைத்து நாவுக்கரசரின் வேட்கை நிறைவேறச் செய்தான். கண்டு மகிழ்ந்த நாவுக்கரசர் இச்செய்திகளை உள்ளடக்கிய

> '' தலையெலாம் பறிக்கும் சமண் கையருள்
> நிலையினால் மறைத்தால் மறைக்க ஒண்ணுமோ
> அலையின் ஆர் பொழில் ஆறை வடதளி
> நிலையினான் அடியே நினைந்து உய்ம்மினே. '' (5-58-1)

என்ற திருப்பழையாறை வடதளி திருக்குறுந்தொகைப் பதிகம் பாடி மகிழ்ந்துள்ளார்.

பழையாறையில் இருந்து புறப்பட்ட அப்பர் அடிகள் திருவிளைக்கா, திரு எறும்பியூர், திருச்சிராப்பள்ளி, திருப்பராய்த் துறை ஆகிய தலங்களைத் தரிசித்து இறைவன்மீது பதிகம் பாடிப் பணிந்து போற்றித் திருப்பைஞ்ஞீலி நோக்கிப் போகையில் பசியாலும் தாகத்தாலும் வருத்த முற்றார். சிவபெருமான் வழியில் குளத்தையும் சோலையையும் உண்டாக்கி ஓர் அந்தணன் உருவில் பொதிசோறு கொணர்ந்து அரசர்க்கு அளித்து உண்ணச் செய்து குளத்தில் நீர் அருந்தித் சோலையில் ஓய்வு எடுக்கச் செய்தார்.

பின்னர்த் திருநாவுக்கரசரோடு உடன் சென்றார். திருப் பைஞ்ஞீலியை நெருங்கியவுடன் மறைந்தருளினார். அப்போது தான் வந்தவர் பரம்பொருளே என்று உணர்ந்து நாவுக்கரசர் மகிழ்ந்தார். திருப்பைஞ்ஞீலி சென்று இறைவனைப் பதிகம் பாடிப் பணிந்து கைத்திருத் தொண்டு செய்தார்.

சில நாட்கள் கழிந்த பிறகு அங்கிருந்து புறப்பட்டுத் திருவண்ணாமலையை அடைந்து பதிகம் பாடி வணங்கியும் திருத்தொண்டு புரிந்தும் மகிழ்ந்து திருவோத்தூர் நோக்கிப் புறப்பட்டார். திருவோத்தூர் ஈசனையும் காஞ்சிக் கடவுளையும் புகழ்ந்து பாடிப் பரவி மகிழ்ந்தார். திருக்கச்சி மயானம் திருமேற்றளி முதலிய திருக்கோயில்களை வணங்கிப் பதிகங்கள் பாடியும் கைத் திருத்தொண்டு செய்தும் இன்புற்றார். அங்கிருந்து புறப்பட்டுத் திருமாற்பேறு திருக்கழுக்குன்று, திருவான்மியூர், மயிலாப்பூர், திருவொற்றியூர், திருப்பாசூர், திருவாலங்காடு, திருக்காரிகரை என்னும் தலங்களை இறைஞ்சிப் போற்றிப் பாடியும் திருத் தொண்டு செய்தும் மகிழ்ந்த நாவுக்கரசர் அன்பர்கள் பலரொடு திருக்காளத்தி சென்றார். குடுமித்தேவரைக் கும்பிட்டு 'என் கண்ணுள்ளான்' என்று போற்றும் காளத்திப் பதிகம் பாடி மகிழ்ந்தார்.



திருக்கயிலாயம் : வடக்கு முகம

## கயிலைச் செலவு

திருக்காளத்தி நாதனை வணங்கி கைலைக் கோலம் காண விழைந்து கயிலை நோக்கி நடந்தார். இடையில் திருப்பருப்பதம் சேர்ந்து இறைவனைப் பாடிப் பணிந்து காசியம்பதி சென்று இறைவனை வணங்கிப் பாடி, தம்மொடு வந்த அன்பர்களை அங்கேயே தங்கும்படிப் பணித்துத் தாம்மட்டும் கயிலை நோக்கி விரைந்தார். கால்கள் தேய்ந்தன. கைகளும் தேய்ந்தன.

முயற்சியைக் கைவிடாது மார்பினால் ஊர்ந்து சென்றார். எலும்புகள் முரிந்தன. தொய்வடையாது புரண்டு புரண்டு சென்றார். ஒரு நிலையில் மேலும் அசைக்க வியலாது போயிற்று. அப்போது அவ்விடத்தேயே செயலற்றுக் கிடந்தார்.

ஆண்டவன் முனிவர் வேடத்தில் இவர்முன் தோன்றி இவர் விருப்பறிந்து இவரிடம் ''மனிதர்களால் அடைதற்கு அரியது. நீர் ஏன் இப்படிக் கொடுமைப்படுகிறீர்?. இங்கிருந்து மீண்டு போதலே உமக்கு நன்று'', என்றார். நாவுக்கரசரோ மனவுறுதி தளராமல், ''மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்'' என்று துணிந்து நின்றார். வந்த முனிவர் வானத்தில் மறைந்து வான்வழி எழும் திரு அருள் மொழியால் ''ஓங்கு நாவினுக்கு அரசனே எழுந்திரு. நீ இப் பொய்கையில் மூழ்கி நாம் கயிலையில் இருந்த காட்சியைத் திருவையாற்றில் கண்டு மகிழ்வாயாக'' எனப் பணித்தார். இறைவன் திருவாக்கை ஏற்று நாவுக்கரசர் அருகிருந்த பொய்கையில் திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டே மூழ்கினார். திருவையாற்றின் தடாகத்தில் தோன்றிக் கரையேறினார். பார்க்கின்ற எல்லாமும் அவர்க்கு ஆணும் பெண்ணுமாய் சிவசத்தி உருவங்களாய்த் தோற்றம் அளித்தன. கயிலைக் காட்சியையும் கண்டு மகிழ்ந்தார். அவ்வனுபவத்தை ''வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி'' எனத் தொடங்கும் போற்றித் திருத்தாண்டகமாகப் (6-55) பாடிப் பரவினார்; ''மாதர் பிறைக் கண்ணியானை'' எனத் தொடங்கும் திருவையாற்றுப் பதிகமாகப் (4-3) பாடியருளினார்.

## திருவையாற்றிலிருந்து

திருவையாற்றிலிருந்து புறப்பட்டுத் திருநெய்த்தானம், திருமழபாடி முதலிய தலங்களை வணங்கித் திருப்பூந்துருத்தியைச் சேர்ந்தார். பூந்துருத்திப் பொய்யிலி யெம்பெருமானைப் பல பதிகங்களால் பாடி மகிழ்ந்தார். அங்கேயே ஒரு திருமடமும் அமைத்துத் தங்கினார். அப்போது அப்பர் அடிகள் திருப்பூந் துருத்தியில் இருப்பதனைக் கேள்வியுற்ற சம்பந்தர் அடியார்க ளொடு அவரைக் காணத் திருப்பூந்துருத்தி செல்கின்றார். அவர் பூந்துருத்தி எல்லையில் புகாவண்ணம் முன்பே அப்பர் சென்று ஆளுடைய பிள்ளை இவர்ந்து வரும் பல்லக்கைத் தாங்கி வந்தார். பூந்துருத்தி மேவிய சம்பந்தர் அப்பரைக் காணாராய் ''அப்பர் எங்குற்றார்'' எனக் கேட்க, அவரோ ''உம் அடிதாங்கி வரும் பெருவாழ்வு பெற்று இங்குற்றேன்'' என்றார். ஞானசம்பந்தர் சிவிகையில் இருந்து கீழே குதித்து அப்பரை வணங்கினார். அவரை அப்பரும் வணங்கினார். இருவரும் அளவளாவிச் சிலநாள் இருந்து

அப்பர் பாண்டி நாட்டுத் தலங்களைக் காணச் சென்றார்; ஆளுடைய பிள்ளையார் தொண்டைநாட்டுத் தலங்களை வணங்கச் சென்றார்.

திருப்பூந்துருத்தியினின்றும் புறப்பட்டு நாவுக்கரசர் திருப்புத்தூர் ஈசனை வணங்கிப் பாடி மதுரையம்பதி ஆலவாய்த் திருக் கோயிலை அடைந்து வணங்கித் தொழுது பாடி மகிழ்ந்தார். தாண்டக வேந்தராம் நாவுக்கரசர் வந்துள்ள செய்தியை அறிந்த மங்கையர்க்கரசியாரும் நின்றசீர் நெடுமாறனும் அமைச்சர் குலச்சிறையாரும் ஓடிவந்து தாளிணைகளில் வீழ்ந்து வணங்கி மகிழ்ந்து உபசரித்தார்கள். மதுரையில் சிலநாள் தங்கிப் பதிகங்கள் பாடியும் உழவாரத் திருத்தொண்டு செய்தும் மகிழ்ந்து திருப் பூவணம் புறப்பட்டார். பூவணநாதரை வணங்கி ''வடிவேலும் திரிசூலம் தோன்றும் தோன்றும்'' எனத் தொடங்கும் (6-18) திருத்தாண்டகத் திருப்பதிகம் பாடி மகிழ்ந்தார். பின்னர்த் திருவிராமேச்சுரம், திருநெல்வேலி, திருக்கானப்பேர் முதலான பாண்டித் தலங்களைப் பாடிப் பரவி, சோழநாட்டில் உள்ள திருப்புகலூர் சேர்ந்தார்.

திருப்புகலூரில் தங்கிப் பல பதிகங்கள் பாடித் திருத்தொண்டு செய்து வந்தார். இவர் அங்கு உழவாரத் திருத்தொண்டு செய்யுங் காலை அவ் உழவாரம் நுழையும் இடங்களிலெல்லாம் பொன்னும் நவமணிகளும் விளங்கித் தோன்றின. நாவுக்கரசர்க்கோ அவற்றிற்கும் பருக்கைக் கற்களுக்கும் வேறுபாடு தெரியவில்லை. இரண்டையும் ஒன்றாகவே எண்ணி அவற்றைப் புறந்தள்ளிப் பணி செய்தார். அவற்றை உழவாரத்தால் ஏந்தித் தாமரைத் தடாகத்தில் வீசி எறிந்தார். நாவுக்கரசர் முன்பு அழகிய பெண்கள் பாடியும் இன்பச்சுவை புகுத்தும் ஆடல்களைச் செய்தும் நின்றனர். அவர்களின் செயல்கள் உணர்ச்சியைத் தூண்டு வனவாய் இருந்தன. ஆயினும் அப்பரடிகள் மனம் குலையாமல் உறுதியுடன் நின்று

" பொய்ம்மாயப் பெருங்கடலில் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை அரித்துத் தின்பீர்க்கு
இல்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை அடங்கச் செய்யும்
எம்மானதன் அடித்தொடர்வான் உழிதர்கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே. "(6-27-1)

எனவரும் திருத்தாண்டகத் திருப்பதிகம் பாடி நின்றார். நாவுக்கரசர் உறுதிப்பாட்டின் முன்னர் அரம்பையர் ஆட்டம் எடுபடாமற் போகவே மண்டியிட்டு வணங்கி மன்னிக்குமாறு வேண்டிப் போயினர்.

## புகலூர் நிகழ்ச்சி

திருப்புகலூர்ச் சிவனார்க்குத் திருத்தொண்டு செய்துவரும் அந்நாட்களில் அப்பர் பெருமான் தாம் இறைவன் திருவடியாம் நடுநிலை எய்தும் செவ்வி வந்துறுவதனை உணர்ந்தார். "அடியவனாகிய எளியேனை இனித் தன் திருவடியின் கண் இருத்தி அருள்புரிவார்" என்ற முன்னுணர்வு பெற்றுப் பல பதிகங்களைப் பாடி மகிழ்ந்தார். இச்செய்தியை

" தன்னைச் சரண் என்று தானடைந்தேன் தன்னடியடையப்
புன்னை பொழில் புகலூர் அண்ணல் செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத்து என்வினை சுட்டறுத்து ஏழ்நரகத்து
என்னைக் கிடக்கல் ஒட்டான் சிவலோகத் திருத்திடுமே. "

(4-105-1)

எனத் தொடங்கும் திருவிருத்த திருப்பதிகத்தில் பதிவு செய்துள்ளார்.

இம் முன்னுணர்வோடு புகலூர் மேவிய புண்ணியனார் மாதொரு பாகனை நெஞ்சம் கசிந்துருக வேண்டுகின்றார்.

" எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணின் அல்லால்
கண்ணிலேன் மற்றுஓர்களைகண் இல்லேன்
கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போது உணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்
பூம் புகலூர் மேவிய புண்ணியனே. " (6-99-1)

என வரும் திருப்புகலூர்த் திருத்தாண்டகத்தைப் பாடிய நிலையில் நண்ணரிய சிவானந்த ஞானவடிவே யாகி அண்ணலார் சேவடிக்கீழ் எய்தி, அரசர் இன்புற்றார். இவ்வாறு இறைவன் திருவடியில் இரண்டறக் கலந்த நல்ல நாள் சித்திரைத் திங்களில் சதயத் திருநாள் என்பது பெரியபுராணம் தரும் செய்தியாகும். நாவுக்கரசர் நற்றாள் போற்றி !



## 2. நாவுக்கரசர் அவதார காலப் பின்னணி

உலகில் பலதுறை தழைக்கவும் அருந்தவத்தோர் நெறிகள் வாழவும் தோன்றியவரும் சிவம் பெருக்கும் திருத்தொண்டரும் நாவுக்கரசர் எனப் பெயரிடப் பெற்றவரும், அப்பர் என ஞான சம்பந்தரால் உறவு பாராட்டப் பெற்றவரும், ஓடும் செம் பொன்னும் ஒக்கவே நோக்கும் உளத்தவருமான மருள்நீக்கியார் என்ற பிள்ளைத் திருநாமம் பெற்ற திருநாவுக்கரசு நாயனார், இப் பூவுலகில் அவதரித்த காலத்தில் இத்தமிழகச் சூழ்நிலை எவ்வாறு இருந்தது; அது எத்தகைய் தாக்கத்தை இவரிடம் ஏற்படுத்தியது என்று காண்பது நாவுக்கரசர்தம் வளர்ச்சியைப் புரிந்துகொள்ள உதவியாக அமையும்.

### தமிழக நிலை

இவர் அவதார காலத்தில் தமிழகம் மிகத் தாழ்ந்த நிலையில் இருந்தது. தமிழர்தம் பண்பாட்டைக் குலைக்கும் அந்நியர்கள் தமிழர்களோடு தமிழர்களாய்க் கலந்து, நாட்டில் குழப்பங்களை உண்டுபண்ணிக்கொண்டிருந்த காலம். தமிழகம் பல பிரிவு களாய்ப் பிரிவுபட்டிருந்த காலம். இவற்றைச் சற்று விரிவாகக் காணலாம்.

பேராசிரியர் மு. அருணாசலம் எழுதிய ''பாண்டிய நாட்டில் களப்பிரர்'' என்ற நூலில் ''எருமை நாடு எனப்படும் மைசூர்ப் பகுதியிலிருந்து புறப்பட்ட களப்பிரர்கள் பாண்டியர்களை வென்று அடிமைப்படுத்தி அங்கேயே தங்கி பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்துவந்தனர். இக் கூட்டத்தாருள் மற்றொரு சாரார் சோழநாட்டைப் பிடித்துக் காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டனர். பிறிது ஒரு சாரார் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டில் கால் ஊன்றினர்'' என எழுதியுள்ளார்.

பெரிய புராணத்திற்குப் பேருரை எழுதியுள்ள சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார், மூர்த்தி நாயனார் புராணத்தில் ''கருநாடக மன்னன் அறவழி நின்று போர் செய்யாது, வெறும் மண்ணாசையாலே தூண்டப்பெற்று, வலிந்து நிலம் கொள்வானாய் நீதியற்ற நெறிகளில் சண்டை செய்து வழிப்பறி செய்யும் கள்வர்கள் போல் நிலத்தைக் கையகப்படுத்தினான்'', என்ற குறிப்பைக் கொடுத்துள்ளார்.

பன்னிரு திருமுறை வரலாறு எழுதியுள்ள பேராசிரியர் க. வெள்ளை வாரணனார், ''கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் களப்பிரர் என்ற மரபினர் பாண்டி நாட்டில் புகுந்து அந்நாட்டின் அரசியலைக் கைப்பற்றினர். தமிழரோடு சற்றும் தொடர்பில்லாத அயலவர்களான பல்லவர்கள் தமிழ்நாட்டின் வடபகுதியாகிய தொண்டை நாட்டைக் கைப்பற்றிக் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரியத் தொடங்கினர்'' எனக் குறிப்பிட்டுள்ளார்.

பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தனார் தாம் எழுதிய 'பெரிய புராணம் ஓர் ஆய்வு' என்ற நூலில் ''பரம்பரையாக அரசராக இல்லாத களப்பிரர்களைக் கொள்ளைக் கூட்டத்தார் என நினைய வேண்டி உள்ளது. இவர்கள் பிராகிருதம், வளர்ச்சி நிலை அடையாத கன்னட மொழி ஆகியவற்றைப் பேசியவர்கள். சோழநாட்டில் புகுந்த களப்பிரர்கள் பௌத்தக் கொள்கையை உடையவர்கள். அவர்கள் அரசியல் செல்வாக்குத் தேடியதற்கான சான்றுகள் இல்லை'' எனக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ் நாட்டில் கலவரம், களேபரம் என்பன போன்ற சொற்கள் குழப்பத்தைக் குறிக்கப் பயன்படுத்தும் சொற்கள். இச்சொற்கள் களப்பிரர்கள் குழப்பக்காரர்கள் என்பதனை உய்த்துணர வைக்கும் சொற்களாக உள்ளன. ஓர் இடத்தில் என்ன நடந்தது என்று கூற முடியாத குழப்ப நிலை ஏற்படின், அங்கே பெரிய ''களேபரம்'' என்கின்றோம்.

இவ்வாறு குழப்பம் விளைவித்த கூட்டத்தவர்கள் யார் எனக் கூற முடியவில்லை. பொதுவாக கி.பி. 4,5,6 நூற்றாண்டுகளைக் களப்பிரர்களின் குழப்ப காலம் எனவும் வரலாற்றின் இருண்ட காலம் எனவும் கூறிச் சென்றுள்ளனர் வரலாற்றாசிரியர்கள்.

இவைகளைக் கணக்கில் எடுத்துப் பார்த்தால் தமிழ்நாட்டுப் பண்பாடு, தமிழ்மொழி ஆகியவனவற்றின்மீது பொறாமை

உணர்ச்சி கொண்ட கூட்டத்தவர்கள், திடீரென நாட்டின் உள் நுழைந்து குழப்பத்தை உண்டுபண்ணியுள்ளனர் என உய்த்துணர முடிகின்றது. ஆனால் 'இவர்கள் யார்' எதற்காகக் குழப்பம் விளைவித்தனர், இவர்கட்குத் தமிழகத்தே உதவியவர்கள் யார் , என்றெல்லாம் அறிய முடியா அளவிற்கு மிகவும் சாதுரியமாகச் செயலாற்றி உள்ளனர்.

### எப்படி நுழைந்தனர்

திருஞானசம்பந்தர் தேவாரம் ஒன்று இவர்கள் எப்படி உள் நுழைந்துள்ளனர் என்பதனை உய்த்துணர வைக்கும் அளவிற்கு உள்ளது. அது

" செந்தமிழர், தெய்வமறைநாவர், செழுநற்கலை தெரிந்தவரோடு
அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்ய அமர்கின்ற அரனூர்
கொந்தலர் பொழில்பழன வேலி குளிர்தண் புனல் வளம்பெருகவே
வெம்திறல் விளங்கிவளர் வேதியர் விரும்பும்பதி வீழி நகரே. "
(3.80.4)

என்ற பாடலாகும். இப்பாடலைப் பார்த்தால் அரனார் திருக் கோயிலில் செந்தமிழ் மொழி பேசுவோர், தெய்வத்தன்மை பொருந்திய வேத நாவினர், சிறந்த நற்பயன் தருவதாகிய கலைகளில் தெளிந்தவர்கள், அந்தமில் நற்குணத்தவர்களாக விளங்கிய ஞானியர்கள் ஆகிய அனைவரும் அர்ச்சனைகள் செய்துவந்த செய்தியும் வேதம் ஓதுகின்றவர்கள் விரும்பித் தங்கிய நிலையும் வெளிப்படுகின்றது. இவர்கள் வருவதற்கு முன்பு தமிழ் ஒன்றே திருக்கோயில் வழிபாட்டில் இடம் பெற்றிருக்க வேண்டும். இப்பாட்டின்வழி நான்மறைகள் அதாவது வேதங்களும் தமிழோடு உள் நுழைந்தன என்பதும் நான்மறை நாவர், வேதியர் என இரண்டு சொற்கள் வருவதனால் தமிழர்களில் ஒரு பிரிவினரை வேதம் ஓதுகின்றவர்களாக உருவாக்கி , இவர்களோடு இணைத்துவிட்டனர் என்பதும் தெளிவாகின்றன. காலப்போக்கில் ஏனையவர்கள் வெளியேற்றப்பட்டு நான்மறை நாவர்களும் வேதியர்களுமே கோவிலைப் பிடித்துக்கொண்டனர். மேலும், தேவாரம் அர்ச்சனைக்கு உகந்த பாடல்கள் என்றாலும் பத்தாம் நூற்றாண்டுவரை அது மறைக்கப்பட்டிருந்த செய்தியும் இதனைத் தெளிவுபடுத்தும். எனவே , தமிழ்மொழியை அகற்றித் தங்கள் வேதமொழியொன்றே இடம்பெறச் செய்துள்ளதும்

எண்ணிப் பார்க்கத் தக்கது. அர்ச்சனை வேதங்களில் விதிக்கப்படாத ஒன்று. ''வேதம் உடன்படாத விக்ரக வழிபாடு, அபிடேகம், அர்ச்சனை என்பனவற்றைப் பிள்ளையார் புகுத்தினார்'' என்பது அ.ச.ஞா. கூறுவது (பெ.பு.ஓர் ஆய்வு). இந்நாட்டு மக்கள் மனத்தைக் கவர்ந்த ஒன்றினை ஏற்றுத் தங்களதாக்கிக்கொள்ளும் வன்மையில் களப்பிரர்களும் பல்லவர்களும் வெற்றிபெற்றுள்ளனர் என்பது தெரிகின்றது.

''பல்லவர்கள் காலத்திலும் இடைக்காலச் சோழர் காலத்திலும் இந்நாட்டைச் சேர்ந்த சிவ வேதியர்களை விட்டுவிட்டு வடக்கே யிருந்து வந்த வைதிகர்களைக் கோயில் பூசைக்கு நியமித்தனர் என்று தெரிகிறது'' என்பது அ.ச.ஞா. அவர்கள் தம் நூலில் (பெ.பு.ஓர் ஆய்வு) கூறுவதாகும்.

இப்படித் தமிழர்களின் மொழி, பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றிலிருந்து வேறுபட்ட மக்கள் தமிழகத்தே பலவேறு குழுக்களாகப் பிரிந்து ஏறக்குறைய எல்லாப் பகுதிகளிலும் ஒரே காலத்தில் புகுந்து குழப்பம் செய்ய முடிந்தது என்றால், அதற்குக் காரணம் அன்றைய தமிழகம் மூவேந்தர்களோடு பல குறுநில மன்னர்களைக் கொண்டிருந்தது என்பதனைச் சங்கப் பாடல் களைக் கொண்டு அறியலாம். கி.பி. 2-ஆம் நூற்றாண்டிற்குப்பின் பாண்டியர் ஆட்சி வீழ்ச்சி நிலையை அடைந்தது என்பது வரலாறு. அந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு, தமிழ் நாட்டில், தமிழர்கள் அறிந்துகொள்ள இயலாதவாறு தமிழர்க்கு எதிரான ஒரு பின்புலத்தை அமைத்தவர்கள் இந்நாட்டில் இருந்திருத்தல் வேண்டும். கடைச்சங்க காலத்திலேயே அவர்களின் ஆட்கள் மக்களோடு மக்களாகப் பழகி, மக்கள் மனத்தில் இடம்பிடித்திருத்தல் வேண்டும்.

இப்படித் தமிழர்களின் மொழி, பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றிலிருந்து வேறுபட்ட மக்கள் தமிழகத்தே புகுந்து ஏறக்குறைய எல்லாப் பகுதிகளிலும் ஒரே காலத்தில் குழப்பம் செய்ய வேண்டும் என்றால் அதற்குரிய பின்புலத்தை இம் மண்ணில் இம் மண்ணின் மைந்தர்கள் அறியாமலேயே முன்பே அமைத்திருத்தல் வேண்டும். கடைச்சங்க காலத்திலேயே அவர் களின் ஆட்கள் மக்களோடு மக்களாகப் பழகி, மக்கள் மனத்தில் இடம் பிடித்திருத்தல் வேண்டும். காட்டாக, சங்கம் மருவிய காலத்தில் தோன்றியவை இருபெருங் காப்பியங்களான சிலம்பும் மேகலையும். அவற்றின் ஆசிரியர்கள் சமணம் மற்றும் பௌத்த

மதத்தைச் சார்ந்தவர்கள். இருவருமே மக்கள் உள்ளத்தில் நல்லதோர் இடம் பெற்றவர்கள். இவர்களுடைய நோக்கம் மதத்தைப் பரப்புதல், மக்களிடம் இருந்த நம்பிக்கையைத் தகர்த்தல் என்பனவாகும். இவற்றை மற்றவர்கள் அறியா வண்ணம் சாதுரியமாகச் செய்துள்ளதனை அந்நூல்களின் வாயிலாக உணரலாம்.

சங்கப் புலவர்களிலும் சங்ககால மக்களின் சமுதாய வாழ்விலும் இத்தகு உளம் கொண்டோர் கலந்து தம்மைக் காட்டிக் கொள்ளாமல் தமிழரோடு தமிழராக வாழ்ந்திருத்தல் வேண்டும். அத்தகையவர்களே களப்பிரர்கள் உள் நுழையக் கூடிய சூழ்நிலையை இந்நாட்டில் உருவாக்கி யிருக்க வேண்டும். இதனைச் சான்று காட்டி நிறுவ முடியாத அளவிற்கு மிகவும் சாதுரியமாக நடந்துகொண்டுள்ளனர். இந்நாட்டு மண்ணின் மைந்தர்களை, அவர்கள் அறியாமலேயே மாற்றார் மனத்தைப் பேசும் வாயினர்களாக உருவாக்கி இருத்தல் வேண்டும். ஒருவர் அறியாமலே அவரை முழுக்க முழுக்கத் தம் கருத்துக்களைப் பேச வைக்க முடியும் என்பதனை இக்கால வல்லரசுகள் செய்து வருவதனை ஆழ நினைந்தால் அன்றைய நிலை புலப்படும். முழுக்க முழுக்க அவர்களை நம்பச் செய்திருத்தல் வேண்டும். அத்தகு சூழ்நிலையில் யாரும் எதிர்பாராத போது களப்பிரர்கள் என்ற கொள்ளைக் கூட்டத்தார் தமிழகத்தில் உள் நுழைந்து குழப்பம் விளைவித்திருத்தல் வேண்டும். அப்போது முன்பே இங்குக் களம் அமைத்தவர்களும் அவர்கட்கு உறுதுணையாக நின்றவர்களும் அவர்களை நம்பியவர்களும் இந்தக் குழப்பக் காரர்களை அடித்துத் துரத்துதற்கு மாறாக, உதவிபுரிந்து அவர்களை ஊக்கப்படுத்தி யிருத்தல் வேண்டும். இவையெல்லாம் என் யூகங்களே.

களப்பிரர்களின் தலையாய நோக்கம் ஆட்சியைக் கைப் பற்றுவது அன்று; குழப்பத்தை உண்டுபண்ணுவதே என்பது அறிஞர்கள் தரும் செய்தி. எதற்குக் குழப்பம் விளைத்தனர். மொழியில், பண்பாட்டில், நம்பிக்கையில் குழப்பம் ஏற்படுத்துவது - தமிழர்தம் பண்பாட்டின் பதிவேடுகளான மொழி, இலக்கியம், வரலாறு, கலை ஆகியனவற்றை இருந்த சுவடும் தெரியாமல் அழிப்பது என்பனவே அவர்களின் குழப்பத்தின் நோக்கமாக இருந்திருக்க வேண்டும்.

இவர்கள் மூன்று நூற்றாண்டுகள் இந்த நாட்டில் திட்டம் இட்டு ஏற்படுத்திய குழப்பம் காரணமாகச் சங்ககாலப் பாடல்களாகச்

சிலவே கிடைத்துள்ளன; வரலாற்றுச் சான்றுகள் இல்லாமல் செய்யப் பெற்றுள்ளன. தமிழிசை மற்றும் நாடக நூல்கள் பெயரளவில் மட்டும் தெரிகின்றன. தமிழர் பண்பாடு கடவுள் வழிபாடு இவையென அறிந்து கூற முடியாத சூழ்நிலைகள் உருவாக்கப்பட்டுள்ளன. இவையெல்லாம் அவர்கள் காலத்தில் நிகழ்ந்தன எனக் கூற முடியாதவாறு செயலாற்றியுள்ளனர்.

தமிழர்கள் சிந்தனைத்திறன் அறிவியல் நோக்கு உயரிய நிலையில் இருந்தன என்பதற்குத் தமிழ்ச் சொற்களே சான்றாக அமைகின்றன. உலகம் அசையாதது என எண்ணப்பட்ட காலத்தில் உலவும் தன்மையை உடைமையால் உலகம் என அழைத்தனர். உலகம் தொங்குவது என்பதனை உணர்ந்து அதனை ஞாலம் என வழங்கினர். ஐந்து பூதங்களிலும் செறிவு மிக்கது; கடினத் தன்மையது மண் என்பதனால் பார் என்று அழைத்து மகிழ்ந்தனர். அணுக்கள் படிந்து படிந்து செறிவாக நின்று நிலமான நிலையை உணர்ந்து அதற்குப் படி என்றும் பெயரிட்டனர். கடவுள், மாயோன், சேயோன், இறை என்ற சொற்பொருட்களை அறிந்தால் இறைத் தத்துவத்தில் அவர்கள் எந்த நிலையில் இருந்திருப்பர் என்று அறியலாம். 'ஞானம்' என்றால் 'ஞான்' பற்றிய அதாவது நான் யார் என்பது பற்றிய அறிவு என்பது பொருள். ஞான் என்றால் நான் என்பது பொருள். இந்த ஞான் என்ற சொல்லே அருகிவருவதாக எண்ணுமாறு செய்து ஞானம் வடமொழிச்சொல் என்று நம்ப வைத்துள்ளனர்.

## இன்றைய தமிழகம்

அறுபது எழுபது ஆண்டுகட்கு முன்பு வரை தமிழகத்தில் ஓலைச்சுவடிகளை நெருப்பில் இடுதல், ஆற்றில் விடுதல் என்ற ஒரு பழக்கம் இருந்தது. அதாவது பழைய சுவடிகளோ, சுவடிகள் இருந்தும் பயன்படுத்தாமல் இருந்தாலோ அவற்றை வீட்டில் வைத்திருக்கக் கூடாது, வைத்திருப்பது பாவம், எனவே அவற்றை ஆற்றின் வெள்ளப் பெருக்கிலோ நெருப்பில் இட்டோ அவற்றை இல்லாமல் செய்ய வேண்டும். (நானே என் பத்தாம் வயதில் அப்படிச் செய்திருக்கிறேன்). இப்படி ஒரு நம்பிக்கையை வளர்த்து பழஞ்சுவடிகளை ஆடிப்பெருக்கன்று ஆற்றில் இட்டும், சொக்கப்பானை கொளுத்தும்போது நெருப்பில் இட்டும் தமிழர்கள் மனநிறைவு பெற்றனர். இத்தகைய மூட நம்பிக்கையைத் தமிழர்கள் மத்தியில் உருவாக்கியவர்கள் யாராக இருக்க முடியும்?

குழப்பம் விளைவித்த களப்பிரர் மக்களை அச்சுறுத்தியும் அவர்களுக்கு உறுதுணையாய் நின்று மக்களைக் கவர்ந்து நின்ற வஞ்சநெஞ்சம் படைத்தும் வாழ்ந்த அறிஞர்கள் இப்படிப்பட்ட நம்பிக்கையை ஊட்டி இச்செயலை வெற்றிகரமாகச் செய்துள்ளனர் என எண்ண இடம் உள்ளது. தமிழர்தம் பண்பாட்டுக் கருவூலங்களை அழிப்பதுதானே அவர்களின் நோக்கம்.

களப்பிரர், பல்லவர்கள் என்ற பெயரில் கி.பி.நான்காம் நூற்றாண்டில் தொண்டை நாட்டில் ஆட்சிப்பீடம் ஏறியவர்கள். அதற்குப் பல நூற்றாண்டுகட்கு முன்பிருந்தே தமிழ் மக்களோடு இருந்துகொண்டே மொழி, பண்பாடு போன்றவற்றை நேரிடை யாக எதிர்க்காமல் உடன் செல்வது போன்று சென்றுகொண்டே தங்களுடையனவற்றை மறைமுகமாகப் பரப்பிவந்தனர். வடமொழிக் கல்லூரிகளை நிறுவி நடத்தினர். அந்தக் கல்லூரிகளில் பலர் சேரா வண்ணம் பார்த்துக்கொண்டனர். சான்றாக, பவணந்தி முனிவர் கற்பிக்கத் தகுந்தவர் யார் என்றும் கற்பிக்கத் தகாதவர் யார் எனவும் பாகுபடுத்தி இந்த உணர்வை வெளிப் படுத்தியுள்ளார்.

" தன் மகன் ஆசான் மகனே மன்மகன்
பொருள்நனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற்கு உரைப்பது நூலே. " நன்னூல்: 37

" களி, மடி, மானி, காமி, கள்வன்
பிணியன், ஏழை, பிணக்கன், சினத்தன்
துயில்வோன், மந்தன், தொன்னூற்கு அஞ்சித்
தடுமா றுளத்தன், தறுகணன், பாவி
படிறன் இன்னோர்க்குப் பகரார் நூலே. " நன்னூல்: 39

இப்படிப் பல காரணங்களைக் கற்பித்துப் படிக்க வருகின்றவர் களைப் படிக்கச் செய்யாமல் பாழ்படுத்திய உத்தி மிகவும் வெற்றிகரமாகக் கையாளப்பட்டது தெளிவாகிறது.

கல்விக் கூடங்களை நடத்தியவர்கள் இந்நாட்டின் பண்பாட்டைக் குலைக்க வேண்டும் குழப்ப வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்கள்; தாங்கள் விரும்பிய மாற்றத்தை மக்கள் மனத்தில் மறைமுகமாக ஏற்படுத்த எண்ணி முயன்றவர்கள். இவை யெல்லாம் வெளிப்படத் தெரியாமல் ஏதோ நலம் செய்வது போன்ற சூழலை உருவாக்கி, கல்வி, மருத்துவம் நீதி போதனை முதலான கவர்ச்சிச் செயல்களில் ஈடுபட்டுத் தங்கள் காரியத்தை முடித்துள்ளனர். இவையனைத்தையும் அவர்கள் செய்கிறார்கள்

என்று பிறர் அறியா வண்ணம் தன்னடக்கத்தோடு செய்துள்ளனர். இது பற்றியே பேராசிரியர் சரவண ஆறுமுக முதலியார் அவர்கள் தாம் எழுதியுள்ள "திருநாவுக்கரசர் காட்டிய வாழ்வியல் அடிப்படை" என்ற கட்டுரையில் "கடைச் சங்க காலத்தில் சைவ வைணவங்களோடு பிணக்கின்றி இணக்கமாக வாழ்ந்த சமண பௌத்த சமயங்கள் பின்னாளில் திசை மாறிச் சைவ வைணவ சமயங்களின் மேற்சென்று அடக்கி ஒடுக்கத் தலைப்பட்டன" எனக் கூறி வருந்தியுள்ளார். இப்படி அச்சுறுத்தல் ஒருபுறம், அன்பு காட்டுதல் போல வஞ்சனைச் செயல்கள் ஒருபுறம் நடந்தன.

நடப்பது கொண்டு நடந்தது எப்படி என்று முடிவு செய்வது ஒரு முறை. அதன்படிப் பார்த்தால் கி.பி.1940, 1950, 60களில் தமிழ்நாட்டில் தமிழ்மொழி உணர்வு ஓங்கியிருந்தது. பள்ளிக் கூடங்களில் 1937-இல் வட்டாரமொழி பயிற்சிமொழி ஆக்கப் பட்டபின் இந்த நிலை படிப்படியே வளர்ந்து வந்தது. ஆங்கில அறிவில் சிறந்து விளங்கியவர்களும் தமிழில் எழுதுதல் தமிழில் அறிக்கைகள் அனுப்புதல் திருமணம் போன்ற விழாக்களில் தமிழே சிறப்பிடம் பெறுமாறு நிகழ்ச்சிகளைச் செய்தல் ஆகியனவற்றைப் பெருமையாகக் கருதிச் செய்து வந்தனர். ஆனால், ஆங்கிலம் தெரியாதவர்கள்கூடத் தம் திருமண அழைப்பிதழை ஆங்கிலத்தில் அச்சிடுவது பெருமைக்கு உரியது என்று எண்ணிச் செய்யும் அவலநிலை இன்று வளர்ந்துள்ளது. தமிழ் பயிற்று மொழி என்பது விரைவாக மறைந்துவருகிறது. இந்த மாற்றத்தைக் கொண்டு வந்தவர்கள் யார் என்பதனையும் எப்படிக் கொண்டு வந்தனர் என்பதனையும் ஆய்ந்து பார்த்தால் அன்று யார் எப்படி யெல்லாம் செய்திருப்பர் என்பது தெளிவாகும். தாங்கள்தான் காரணர் என்பது புறத்தே தெரியாமல் தமிழர்களைக் கொண்டே தமிழர்க்கும் தமிழுக்கும் குந்தகம் ஏற்படுத்தும் கலையில் கை தேர்ந்த மக்கள் யார் யார் என இன்றைய நிலையை எண்ணிப் பார்த்தால் கி.பி.3 முதல் 6-ஆம் நூற்றாண்டு வரை எப்படி யெல்லாம் செய்திருப்பர் என்பதனை உய்த்து உணரலாம்.

## என்ன ஆனார்கள்?

களப்பிரர்கள் கி.பி. ஆறாம் நூற்றாண்டிற்குப் பின் என்ன ஆனார்கள் என்பது இன்றும் புரியாப் புதிராகவே உள்ளது. அவர்கள் தமிழர்களோடு தமிழர்களாகக் கலந்துவிட்டனர் என்றாலும் அவர்கள் குழப்பம் விளைத்த போதும் ஆட்சியில் அமர்ந்த போதும் பின்னரும் தமிழ்நாட்டு அறிஞர்கட்கோ,

தமிழ்மொழிக்கோ, தமிழ்ப் பண்பாட்டிற்கோ மதிப்புத் தரவில்லை. அவர்கள் வடமொழிக்கு ஏற்றம் தந்ததோடு வடநாட்டிலிருந்து கூட்டம் கூட்டமாக வேத வல்லுநர்களை அழைத்துவந்து குடியமர்த்தி மரியாதைக்கு உரியவர்களாக ஆக்கி உயர்த்தி யுள்ளனர்: இதனைப் பல்லவர்களின் வரலாற்றை எழுதிய ஆசிரியர்களும் பிற்காலச் சோழர் வரலாற்று ஆசிரியர்களும் நன்கு விளக்கியுள்ளனர். அ.ச.ஞா. அவர்களின் கீழ்க்கண்ட கூற்றுக்கள் இதற்குச் சான்றாய் அமையும். ''பல்லவர்கள் வடமொழியை எந்த அளவுக்கு ஆதரித்தனரோ அதைவிட அதிகமாக வேதவிற் பன்னர்களைப் போற்றிச் சிறப்புக்கள் செய்தனர். வேத விற்பன்னர்கள் என்று கூறியவுடன் தமிழ்நாட்டு வேதியர்கள் என எண்ணி விட வேண்டா. பல்லவர்கள் வடக்கே இருந்து வந்தவர்க ளாதலின் இவர்களின் பின்னர் இவர்களைத் தொடர்ந்து வந்த வட நாட்டு வேத விற்பன்னர்களே இவர்கள் அன்புக்கும் வரிசைக்கும் உரியராயினர் என்று தெரிகிறது'' (பெரியபுராணம் ஓர் ஆய்வு - பக்கம் 130).

''சோளிங்க புரத்தில் வைணவப் பிராமணர் பயிலும் கடிகை ஒன்றிருந்ததாக டாக்டர் மீனாட்சி கூறுகிறார். இக்கடிகையில் பணிபுரிபவர்களே யல்லாமல் தனிப்பட்டவர்கள் வடமொழி கற்பித்தால் அவர்கட்குப் பிரமதேயம் என்ற இறையிலி நிலங்கள் வழங்கப் பெற்றன'' (மேற்படி நூல் பக்கம் 131).

''இதுவரை கூறியவற்றால் பல்லவர் காலத்தில் எவ்வாறு வேதம் முதலியன போற்றப்பட்டன என்பதையும் கடிகைகள் மூலம் வளர்க்கப் பெற்றன என்பதையும் வடநாட்டில் இருந்து வேதியர்களைக் கூட்டம் கூட்டமாகத் தருவித்து இங்குக் குடியேற்றினர் என்பதையும், மடங்களில்கூட வந்த வேதியர் களையே வைத்தனர் என்பதையும் அறிய முடிகிறது''. (மேற்படி நூல் - பக்கம் 132).

நல்ல பண்ணும் இசையும் கேட்கக் கூடாது என்பது சமணத்தின் முக்கிய நோக்கம். ''தொன்மையை இழிவுபடுத்து கின்றவர்கள் சமணர்களும் பௌத்தர்களும்'' எனத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் ஏழில் இருபது என்ற தமது கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

இப்படிப்பட்ட சூழ்நிலை நாட்டில் நிலவிய காலத்தில்தான் திருநாவுக்கரசர் பெருமான் இந்த நாட்டில் தோன்றினார். அவர் மகேந்திரவர்மன் என்ற பல்லவ மன்னனால் துன்புறுத்தப்

பட்டவர். மகேந்திரவர்மன் ஆட்சிக் காலம் கி.பி. 600 - 630 என்பது வரலாற்று ஆசிரியர்கள் முடிவு. நாவுக்கரசர் பாடலி புத்திரம் சென்று சமணராகிச் சமண நூல்களில் வல்லவராகித் தருமசேனர் என்ற பட்டம் பெற்றவர். பின்னர் மீண்டும் சைவராக மாறியவர். மாறிய காலத்து ஞானசம்பந்தர்தம் அருளிச்செயலைக் கேள்விப்பட்டு அவரைக் காணச் சீர்காழிப்பதி செல்கிறார். அப்போது அவர் வயது முதிர்ந்தவராக இருந்தார் என்பது,

" சிந்தை இடையறா அன்பும் திருமேனி தனிலசைவும்
கந்தை மிகையாம் கருத்தும் கைஉழவாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவில் பொலிதிரு நீறும்
அந்தமிலாத் திருவேடத்து அரசும் வந்து எதிர் அணைய "

என்ற சேக்கிழார் மொழியால் தெரிகிறது.

### நாவுக்கரசர் காலம்

இவற்றையெல்லாம் ஒப்பவைத்து நோக்கினால் மகேந்திரவர்மன் நாவுக்கரசர்க்குத் தொல்லை கொடுத்தபோது அவர்க்கு ஐம்பது வயதாவது ஆகியிருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது. இது பற்றியே பேராசிரியர் க. வெள்ளை வாரணனார் திருநாவுக்கரசர் கி.பி.575-க்குச் சற்று முன்போ பின்போ அவதாரம் செய் திருக்கலாம் என்று தம் திருமுறை வரலாற்று நூலில் குறிப்பிட்டு உள்ளார்கள். வித்துவான் மா. சிவகுருநாத பிள்ளை எழுதியுள்ள "நாயன்மார்கள் வரலாற்றில் பலவகைச் செய்திகள்" என்ற நூலில் "மன்மத வருஷம் சித்திரை மாதத்தின் தொடக்கத்திற்கு ஒருசில நாட்களுக்கு முற்பட்ட செய வருடம் பங்குனி மாதத்தில் உரோகிணி விண்மீன் நிலவிய ஒரு நன்னாளில் (கி.பி. 575 மார்ச்சு - ஏப்ரல்) திருமுனைப்பாடி நாட்டுத் திருஆமூரில் புகழனார் மாதினியார் தம்பதியர்க்கு மகனாக மருள் நீக்கியார் (நாவரசு) திரு அவதாரம் செய்தார்" (பக்கம் 171) என்று எழுதியுள்ளார்.

எனவே, நாவுக்கரசர் இருண்ட காலத்தில் ஏற்பட்ட குழப்பங் களையும் தமிழகத்தே நிலவிய இருளையும் நீக்கி ஒளியை விளங்கச் செய்ய அவதாரம் செய்தார். மனத்தொடு வாய்மை மொழிந்து, மெய்யுற்ற திருப்பணி செய்து நாட்டின் மருளை ஓட்ட அவதாரம் செய்தார். தமிழ்மொழி மீண்டும் சிறப்புப் பெற - இசைத்தமிழ் ஏற்றம் பெற - இறையருளின் துணை கொண்டு செயல்பட அவதாரம் செய்தனர் என எண்ணி மகிழலாம்.



# 3. நாவுக்கரசர் தேவாரம்

தேசம் உய்ய வந்தவரும் இன்தமிழ்க்கு மன்னனாய் விளங்கியவரும் ''பண்ணிய செந்தமிழ் மாலை பாடுவித்து என் சிந்தை மயக்கறுத்த திருவருளினை'' என்று இறைவனைப் பாடிப் பரவியவருமான திருநாவுக்கரசர் அருளிய தேவாரத் திருப் பதிகங்கள் பன்னிரு திருமுறைகளில் நான்கு, ஐந்து, ஆறாம் திரு முறைகளாக வகுக்கப் பெற்றுள்ளன. நான்காம் திருமுறையில் 113 பதிகங்களும் ஐந்தாம் திருமுறையில் 100 பதிகங்களும் ஆறாம் திருமுறையில் 99 திருப்பதிகங்களும் இடம் பெற்றுள்ளன. (அடங்கல் முறை அ.ச.ஞா. பதிப்பு - கங்கை புத்தக நிலையம், சென்னை. வெளியீடு சூலை 1998) இம் மூன்று திருமுறைகளிலுமாகச் சேர்ந்து 3066 பாடல்கள் உள்ளன. இறைவனின் பேர் அருள், அவர் ஆன்மாவுக்கு அருள் வழங்கும் திறன், அதற்கு உரியவராகப் பின்பற்ற வேண்டிய நெறிகள், உலகப் பொருள்களின் எழில் நலங்கள் போன்ற பல்வகைச் செய்திகளை இப்பாடல்களில் நாவுக்கரசர் பதியவைத்துள்ளார்.

ஐந்தெழுத்தின் சிறப்பால் சில பதிகங்கள் பெயர் கொடுக்கப் பட்டுள்ளன. சில பதிகங்கள் பாடல்தோறும் பயின்று வரும் சொற்களால் பெயரிடப்பட்டுள்ளன. ஒவ்வொரு பதிகத்திலும் இடம் பெற்றுள்ள பொருள் அமைப்பால் சில பதிகங்கள் பெயர் பெற்றன. பதிகத்தில் வரும் முதற்சொல் அல்லது தொடராலும் ஈற்றுச் சொல் அல்லது தொடராலும் பெயரிடப் பெற்றுள்ளன. தொகுத்துச் சொல்லப் பெறுவனவற்றாலும் பொதுவகையாலும் சில பதிகங்கள் பெயர் பெற்றன. பொதுவாக எவ்வூரில் பாடப் பெற்றதோ அவ்வூர்ப் பெயரே பதிகப் பெயர்களாக அமைந்துள்ளன.

திருநாவுக்கரசர்தம் பாடற் பதிகங்கள் பெரும்பாலும் பத்துப் பாடல்களைக் கொண்டவை. பத்தாம் பாடல், தான் அறியாமை யால் செய்த பெரும்பிழையைப் பொருத்தருளும்படி இராவணன்

இசைபாடி வேண்டிய வேண்டுதலாக உள்ளது. இதனைக் குறிப்பிடுவதன் மூலம் ஆண்டவன் புகழ்பாடித் தம் குறையுணர்ந்து அரற்றி அழத் தெரிந்தால் ஆண்டவன் அருளுக்கு உற்றார் ஆவார்கள் என்ற உண்மையை உணர்த்துகின்றார், திருநாவுக்கரசர். பதிகங்கள் தோறும் இச்செய்தியைத் தாங்கிவரும் பத்தாம் பாட்டே நாவுக்கரசர் பதிகங்கட்குத் திருக்கடைக் காப்புச் செய்யுளாக விளங்குகின்றது என்பது ஆய்வாளர்கள் தரும் செய்தியாகும்.

## எவ்வளவு பதிகங்கள்

திருநாவுக்கரசர் பாடல்கள் அனைத்தும் பண்ணோடு அமைந்த தெய்வத்தைப் புகழ்ந்து பாடும் பாடல்களாகும். இவ்வாறு புகழ்ந்து பாடும் மரபு இந்நாட்டில் தொல்காப்பியர் காலத்திற்கும் முன்பிருந்தே வழக்கத்தில் இருந்துள்ளது என்பது, "ஏனையொன்றே தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே" (தொல் - பொருள்:8 செய்:133) என்ற தொல்காப்பியர்தம் செய்யுளியல் நூற்பாவால் உணரலாம். இதனைத் தேவபாணி என்று அழைத்தனர். தேவர்ப் பராஅய முன்னிலை தேவபாணி என்றாற் போலத் தெய்வத்தைப் பரவும் இசைப் பாடல்கள் தேவாரம் என்று அழைக்கப்பட்டன போலும் (தே = தெய்வம்; வாரம் = இசைப்பாடல்) இவ்வாறு நாவுக்கரசர் பாடியனவாக 49,000 பதிகங்கள் இருந்தன என்று ஒரு நம்பிக்கை உண்டு. அதற்கு ஆதாரமாக

" திருநாவுக்கரைய ரெனும் செம்மை யாளர்
தீயமணர் சிறைநீங்க அதிகை மேவும்
குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலை
கொடுங்கூற்றாயின வென்ன எடுத்துக் கோதில்
ஒருமானைத் தரிக்கும் ஒருவரையும் காணும்
ஒருநாற்பத் தொன்பதினாயிர மதாகப்
பெருநாமப் புகலூரில் பதிகம் கூறிப்
பிஞ்ஞகனார் அடியிணைகள் பெற் றுளாரே. "

திருமுறை கண்ட புராணம்:15

என்ற பாட்டினைக் காட்டுவர். ஆனால், சுந்தரர் பாடிய தேவாரத்தில்

" அணிகொள் ஆடை அம்பூண்அணி மாலை
அமுது செய்து அமுதம்பெறு சண்டி
இணைகொள் ஏழ்ஏழ் நூறு இரும் பனுவல்
ஈன்றவர் திருநாவுக் கரையர் " (7-65-2)

என்று கூறி நாவுக்கரசர் பாடியன 4900 பதிகங்கள் என்கின்றார். இவை இரண்டினையும் இணைத்துச் சிந்தித்தால் ஓர் உண்மை புலப்படும். அது நாவுக்கரசர் பாடியன 4900 பதிகங்கள் எனவும், பாடல்கள் 49000 எனவும் எண்ண இடம் உள்ளது. இதற்கு வலிவூட்டும் வகையில் சேக்கிழார் பாடிய பெரிய புராணத்தில் வரும் ஏயர் கோன் புராணத்தின் 150-ஆம் பாடலைச் சான்றாகக் காட்டலாம்.

"நின்றியூர் மேயாரை நேயத்தால் புக்கிறைஞ்சி
ஒன்றிய அன்பு உள்ளுருகப் போற்றுவார் உடைய அரசு
என்று உலகம் இடர்நீங்கப் பாடிய ஏழேழ் நூறும்
அன்று சிறப்பித்து அம்சொற்பதிகம் அருள் செய்தார்"

என்பது சேக்கிழார் திருவாக்கு.

ஆயினும் இன்று 312 பதிகங்களும் அவற்றில் அடங்கியுள்ள 3066 பாடல்களும்தான் நமக்குக் கிடைத்துள்ளன. எஞ்சியன அழிந்தனவோ அழிக்கப்பட்டனவோ, அறியக் கூடவில்லை.

## பாட்டின் இயல்பு

"இழுமென் மொழியால் விழுமியது மொழிதல்" எனத் தொல்காப்பியரும், "மாந்தர் மனக்கோட்டம் தீர்க்கும் நூல் மாண்பு" எனப் பவணந்தியாரும் கூறியுள்ளதற்கொப்ப மேலான இனிய சொற்களால் உயர்ந்த கருத்துக்களை உலகத்திற்கு அளிப்பன நாவுக்கரசர் பாடல்கள். அவை, உணர்வால், அனுபவத்தால் உலகினை ஆழ்ந்து ஆய்ந்து காணும் பண்பால், கற்பார் உள்ளத்தே கருத்தைப் பதிய வைக்க வல்ல மொழியும் இசையும் கலந்த கலப்பால் சிறந்து விளங்குகின்றன. அவருடைய பாடல்களில் கற்பனை வடிவம், ஒலிநயம் ஆகியன சிறந்து விளங்குகின்றன. மக்களை நல்வழிப்படுத்தும் நற்கருத்துக்களைத் தாங்கி உள்ளன; தொண்டின் திறத்தை விளங்கச் செய்வன.

நாவுக்கரசர் சமண சமயம் சார்ந்து தாம் உற்ற கீழ்மையை உணர்ந்து பாடிய பாடல்கள்; ஆண்டவனின் அருள் நிலையை அனுபவித்துப் பாடிய பாடல்கள்; அவன் எங்குமாய் இருக்கும் நிலையைத் தெளிந்து பாடிய பாடல்கள்; அவனது அருளையும் அவன் அருளுக்கு ஆளாகும் நெறிகள் ஆகியவற்றையும் விளக்கும் பாடல்கள்; ஐந்தெழுத்தின் சிறப்பினை எடுத்தோதும் பாடல்கள்; ஊர்தோறும் கோயில் கொண்டு இறைவன் அருள்

செய்யும் திறத்தை வெளிப்படுத்தும் பாடல்கள்; தம்மை உணர்ந்து தம் குறைகளை எண்ணி அழுது அரற்றும் பாடல்கள்; ஐம்புலன் ஆட்சியில் ஆட்படுத்தாதே ஆண்டவனே என வேண்டும் பாடல்கள்; ஐம்புலனை வென்று ஆண்டவன் அடியொடு ஒன்றாக நின்று உய்வு பெற நெறிகாட்டும் பாடல்கள்; வாழ்க்கையின் உண்மைகளைக் கூறி வழிப்படுத்தும் பாடல்கள் எனப் பலவகையாக விளங்குவன அப்பர்பெருமான் பாடல்கள்.

## பண்ணடைவு

திருநாவுக்கரசர் பாடிய பாடல்களில் பண்ணடைவு செய்யப் பெற்றவற்றை நான்காம் திருமுறை எனவும் திருக்குறுந்தொகைப் பாடல்களை ஐந்தாம் திருமுறை எனவும் திருத்தாண்டகப் பாடல்களை ஆறாம் திருமுறை எனவும் திருமுறைப் பாகுபாடு செய்யப்பெற்றுள்ளன. நான்காம் திருமுறையில் முதல் 21 பதிகங்கட்குப் பண்ணடைவு செய்யப் பெற்றுள்ளது. 22 முதல் 79-ஆம் பதிகம் வரையுள்ள 58 பதிகங்களும் திருநேரிசை என்னும் யாப்பு உடையன. அறுசீர்களால் ஆன நான்கு அடிகள் கொண்டவை. அவை கூவிளம், புளிமா, தேமா, கூவிளம், புளிமா, தேமா என்ற சீர்களைக் கொண்டவை. கட்டளை அடிகளைக் கொண்டவை. சில பாடல்களில் முதற்சீரும் நான்காம் சீரும் கருவிளச் சீர்களாகவும் இரண்டாம் சீரும் ஐந்தாம் சீரும் தேமாச் சீர்களாகவும் உள்ளன. இதனை ஆராய்ந்து யாழ்நூல் ஆசிரியர் சுவாமி விபுலாநந்த அடிகள் குறிப்பிட்டுள்ளதாகப் பன்னிரு திருமுறை வரலாறு கூறும். ஒவ்வோர் அடியிலும் ஒற்று மற்றும் குற்றியலுகரம் நீக்கி எண்ணினால் இருபதுக்கும் மேற்படா எழுத்துக்கள் இடம் பெற்றிருக்கும். இத் திருநேரிசைப் பாக்களை உளம் ஒன்றிப் பாடின் இயல்பான இசையமைவதனை உணரலாம்.

நான்காம் திருமுறையில் உள்ள 80 முதல் 113 ஆம் பதிகங்கள் திருவிருத்தங்கள் ஆகும். இவ்விருத்தப்பா பற்றிப் பன்னிரு திருமுறை வரலாறு கூறுவதாவது: அப்பரடிகள் அருளிய திருப்பதிகங்களுள் திருவிருத்தம் என்பது கட்டளைக் கலித்துறை என்ற பெயரால் வழங்கப்பெறும் யாப்பு ஆகும். ஐஞ்சீரடி நான்காய் அடிதோறும் முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாமல் நிற்க, இறுதிச் சீராகிய ஐந்தாம் சீர் கூவிளங்காய் கருவிளங்காய் என்னும் சீர்களுள் ஒன்றாகப் பெற்றுவரும். முதற்சீர் நேரிசை

யானால் ஒற்றும் குற்றியலுகரமும் நீக்கி எண்ணினால் பதினாறு எழுத்தும் முதற்சீர் நிரையசையில் தொடங்கினால் ஒற்று நீக்கிப் பதினேழு உடையவையாய் வரும். இதனைத் தொல்காப்பியம் ''தரவு, கொச்சகம் எனப் பகரும்'' என்பதாகும்.

இவ்விருத்தப்பா யாப்பு நான்காம் திருமுறையில் இடம் பெற்றுள்ள இறுதிப் பதிகங்களான 34 பதிகங்களில் உள்ளது. இப்பாடல்கள் இம்மையிலும் மறுமையிலும் பயன் தரத்தக்க அரிய செய்திகளை உள்ளடக்கியவை; உள்ளம் உருக்குபவை. தன் குறையுணர்ந்து இறைவனை நோக்கி விண்ணப்பம் செய்யும் முறையில் அமைந்தவை. இவற்றிற்கும் பண்ணடைவு இல்லை. எனினும், பிற்காலத்தவர் இவற்றை விருத்தக்கொல்லி என்ற பண்ணின் பெயர் கொடுத்து மகிழ்ந்துள்ளனர்.

ஐந்தாம் திருமுறையில் இடம் பெற்றுள்ள நூறு பதிகங்களும் திருக்குறுந்தொகைப் பாடல்கள். நாற்சீரடி நான்காய் முதற்சீர் மாச்சீராகவும் நான்காம் சீர் விளச்சீராகவும் இரண்டு மூன்றாம் சீர்கள் பெரும்பாலும் விளச்சீர்களாகவும் சிறுபான்மை மாச்சீர்களாகவும் கொண்டு இத் திருக் குறுந்தொகைப் பாடல்கள் அமைந்துள்ளன. அளவடிக்குக் கூறப்பட்ட எழுத்துக்கள் பத்து முதல் பதினான்கு வரையாகும். ஆனால், இப்பாடல்களில் அடிதோறும் பதினொன்று அல்லது பன்னிரண்டு எழுத்துக்களே உள்ளன. மேல் எல்லையாகிய பதினான்குக்குக் குறைவான எழுத்துக்களைப் பெற்றுள்ளதனால் குறுந்தொகை எனப்பட்டன போலும். பிற்காலத்தவர் ''அளவடி நான்கின கலிவிருத்தம்மே'' என்ற யாப்பருங்கல நூற்பா கொண்டு இவற்றைக் கலிவிருத்தம் என்றனர். இதே யாப்பில் பாடப்பெற்றவை சிலப்பதிகார வேட்டுவரிப் பாடல்கள். வரிப்பாடல்கள் என்பன இசைப் பாடல்கள். எனவே, திருக்குறுந் தொகைப் பாடல்கள் இசையோடு பாடக்கூடிய பாடல்கள் என்ற முடிவுக்கு வரவேண்டியுள்ளது. ஆனாலும், ஐந்தாம் திருமுறைப் பாடல்கட்குப் பண்ணடைவு செய்யப் பெறவில்லை.

ஆறாம் திருமுறையில் இடம்பெற்றுள்ள தொண்ணூற்று ஒன்பது பதிகங்களும் திருத்தாண்டகப் பாடல்கள். ஒவ்வோர் அடியிலும் நான்காம் சீரும் எட்டாம் சீரும் தேமாவாக இருக்கும்; மூன்றாம் சீரும் ஏழாம் சீரும் பெரும்பான்மையும் தேமாவாகவும் சிறுபான்மை புளிமாவாகவும் வரும்; ஒன்று, இரண்டு, ஐந்து, ஆறாம் சீர்கள் பெரும்பாலும் காய்ச்சீர்களாகவும் சிறுபான்மை

மாச்சீர்களாகவும் இருக்கும். இந்த யாப்புடைய பாடல்களைத் தாண்டகம் என்றனர். தொல்காப்பியம் இதனைக் 'கொச்சக ஒரு போகு' எனக் குறிப்பிடும். தொல்காப்பியர் ஒவ்வோர் அடியிலும் இருபது எழுத்துவரை இருக்கலாம் என்கிறார். ஆனால், நாவுக்கரசர் தாண்டகப் பாடல்களில் அடிதோறும் இருபதுக்கு மேல் இருபத்தேழு எழுத்துக்கள் வரை இடம்பெற்றுள்ளன. இவ்வாறு அளவினைத் 'தாண்டி' வருவதனால் 'தாண்டகப் பாடல்கள்' என அழைக்கப்பட்டன போலும் என்பது பேராசிரியர் வெள்ளை வாரணர் போன்றோர் கருத்து ஆகும். இவ்வகைப் பாடல்களின் முன்னோடி நாவுக்கரசராவார். எனவேதான், அவரைத் தாண்டக வேந்தர் என்று போற்றிப் புகழ்ந்துள்ளனர்.

ஆறாந் திருமுறைப் பாடல்களாகிய திருத்தாண்டகப் பாடல்கள் இசையோடு பாட வல்ல இயல்பு உடையவை. போற்றித் திருத் தாண்டகப் பாடல்கள் (5,32,55,56,57 பதிகங்கள்) இசையோடு பாடி ஆண்டவனை மலரிட்டு அருச்சிக்கப் பொருத்தமான பாடல்கள். இப்படி இருந்தும் ஆறாம் திருமுறைக்கும் பண்ணடைவு செய்யப் பெறவில்லை என்பது எண்ணிப் பார்க்கத்தக்கது.



*திலகவதியார்*
*(திருவதிகை வீரட்டானம்)*

கவிதை பற்றிப் பேராசிரியர் முனைவர் ம.ரா.போ. குருசாமி அவர்கள் தமது 'இலக்கியச் சுவை' என்ற நூலில் கூறும் கருத்துக்கள்: "கவிதை இன்பமும் கடவுளை உணரும் அனுபவமும் ஒன்றுதான். அறிவின் முனைப்பு அடங்கி, அனுபவத்திற்குச் சமைந்த நிலையில் நாம் இருந்தால் இறைவன் மணவாளப் பிள்ளையாக வருவான். மூளையின் முனைப்பு ஒடுக்கி, முன்னிற்கும் இன்பத்தைக் கருவேற்கும் அனுபவ வேட்கை கொண்ட நிலையில் இலக்கியத்தைத் தொட்டால், தொட்ட இடங்களில் எல்லாம் இலக்கிய இன்பத்தைக் காணலாம்.

''கடவுளரையே கவிதை இன்பமாகக் கண்டு பாடியவர்களும் உண்டு. ''தொடுக்கும் கடவுள் பழம்பாடல் தொடையின் பயனே'' என்றும் ''நறைபழுத்த துறைத்தீம் தமிழின் ஒழுகுநறுஞ் சுவையே'' என்றும் அங்கயற்கண்ணி அம்மையைக் குமர குருபரர் பாடியுள்ளார். தமிழ்க் கவிதை இன்பமும் கடவுள் அனுபவமும் ஒன்றிய நிலையில் உள்ள தத்துவத்தை உணர்ந்ததால்தான் அப்படிப் பாடியுள்ளார்.

''கடவுள் போலவே கவிதை இன்பமும் எங்கும் நிறைந்தது. இறைஞானம் போலவே கவிதை இன்பமும் எப்போதும் எங்கும் கிடைப்பது. இவற்றை உணர, நுகர அனுபவிக்க நம் மனம்தான் பக்குவப் படவேண்டும்.''



திருநாவுக்கரசு சுவாமிகள் (திருவதிகை)

இக்கருத்துக்கள் அனைத்தும் நாவுக்கரசர் பாடியுள்ள தேவாரம் என்ற இலக்கியத்திற்கும் அது தரும் இறை அனுபவத்திற்கும் பொருந்திவருகின்றன. அவர்தம் பாடல்களில் இறை அனுபவ வெளிப் பாட்டோடு உணர்வின் அனுபவமும் ஒலி நயமும் நிறைந்து காணப்படுகின்றன. அவற்றுள் கற்பனையும் உவமையும் உருவகமும் நிரம்ப உள்ளன. அவர் பெற்ற உணர்ச்சி அனுபவத்தைத் தம் கவிதைகளைக் கற்பாரும் பெறும் வண்ணம் பொருள் நயமும் ஒலி நயமும் மிக்கனவாக அவை உள்ளன; இசையமைதி கொள்ளும் வகையில் அழகிய யாப்பினை உடையன; தொண்டின் சிறப்பை உணர்த்துவன; செந்நெறி செப்பும் திறத்தன; உளம் ஒன்றிக் கற்பார் மன மாசுகளை அகற்றும் மாண்பின; திருநின்ற செம்மையை வளர்க்கும் திறத்தன.



# 4. நாவுக்கரசரும் இறைநிலையும் திருவடியும்

இருப்பது இறை. அதாவது எல்லாவிடத்தும் நீக்கமற நிறைந்து நிற்பது இறை. இறை எனின் ''நுண்ணணு'' என்றும் பொருள். இதனை மணிவாசகப் பெருமான் ''நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே'' என்று பாடியுள்ளார். நம்மாழ்வார் ''ஆவிசேர் உயிரின் உள்ளால் யாதும் ஓர் பற்றில்லாத பாவனை, அதனைக் கூடில் அவனையும் கூடலாமே'' என்று குறிப்பிட்டு உள்ளார். வள்ளலார் ''சிறிதினும் சிறிதாம் அரிதினும் அரிதாம் அருட்பெருஞ்சோதி'' எனக் குறிப்பிட்டுள்ளார். ஆக்கம், அளவு, இறுதி இலாத அரும்பொருளாம் திருநிலையாம் இறைநிலை பற்றி நாவுக்கரசர் என்ன கூறியுள்ளார் எனக் காண்போம்.

## இறைநிலை அனுபவம்

இறைவன் எல்லாவற்றுள்ளும் எல்லாவிடத்தும் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான். அவன் எல்லாமாகவும் இருப்பவன். எல்லாவற்றிலும் இருப்பவன். இருந்தாலும், அவனை இத்தகை யவன் இவ்வண்ணத்தன் என்று சுட்டிக் கூற முடியாது. அந்த அளவுக்கு அவன் நுண்மையும் பருமையும் உடையவன். இவ்வாறு அதுவே எல்லாமாக இருப்பினும் எந்த ஒன்றும் அது வாக இல்லாத நிலை இறைநிலை. இறைநிலை சோதி சொரூபம். இறைநிலையை வெவ்வேறு பெயர்களால் அழைத்தாலும் வெவ்வேறு வழிகளின் வாயிலாக உணர முயன்றாலும் இருப் பதும் அடைவதும் ஒன்றே யாதலால், வெவ்வேறான முறை களையும் இறை நிலை ஏற்றுக்கொள்கிறது. இவையெலாம் நாவுக்கரசர் பெற்ற இறைநிலை அனுபவங்கள். அவற்றைக் காட்டக் கீழ்க்கண்ட அவர்தம் மொழிகள் சான்றுகளாய் அமைந்துள்ளன.

" என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு
என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே " (5-21-1)

" விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்
மறைய நின்றுளான் மாமணிச் சோதியான் " (5-90-10)

" அரியானை அந்தணர்தம் சிந்தையானை அருமறையின்
அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழ் ஒளியைத் தேவர்கள்தம் கோனை " (6-1-1)

" மனத்தகத்தான் தலைமேலான் வாக்கில் உள்ளான்
வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தம் சிரத்தில் மேலான்
ஏழண்டத்து அப்பாலான் இப்பாற் செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதில் உள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றில் உள்ளான் "
(6-8-5)

" மண்ணல்லை விண்ணல்லை வலயமல்லை
மலையல்லை கடலல்லை வாயுவல்லை
எண்ணல்லை எழுத்தல்லை எரியும் அல்லை
இரவல்லை பகல்அல்லை யாவும் அல்லை
பெண்ணல்லை ஆணல்லை பேடுமல்லை
பிறிதல்லை யானாயும் பெரியோய் நீயே " (6-45-9)

" இல்லானை எவ்விடத்தும் உள்ளான் தன்னை " (6-11-3)

" தன்னுருவை ஒருவர்க்கும் அறிய ஒண்ணா
மின்னும் உருவான மேனி வெண்ணீற்றானை " (5-79-4)

" உருவமும் உயிரும் ஆகி ஓதிய உலகுக்கெல்லாம்
பெருவினை பிறப்பு வீடாய் நின்ற எம் பெருமானை " (4-63-3)

" சோதியைத் துளக்கம் இல்லா விளக்கினை அளக்க லாகா ஆதியை "
(4-74-7)

எங்குமாய் எல்லாமாய் நிறைந்து விளங்கும் இறைநிலை ஒவ்வொருவர் உளத்தேயும் சோதியாய்த் துலங்குகின்றது எனக் கூறியுள்ளார். அதன்படி பார்க்கப்படும் எல்லாமும் எல்லாரும் பரம்பொருளின் இறைநிலையின் வாழ்விடங்கள்தாம். இந்தத் தெளிவினால்தான் அவரால்

" காதல் மடப்பிடியோடு களிறுவருவன கண்டேன்; "

" கோழி பெடையோடும் கூடி குளிர்ந்து வருவன கண்டேன்; "

" வரிக்குயில் பேடையொடாடி வைகி வருவன கண்டேன்; "

" பைங்கிளி பேடையோடாடிப் பறந்து வருவன கண்டேன்; "

என்று எல்லாவற்றையும் சத்தியும் சிவமுமாய், கருணையும் சிவமுமாய்க் கலந்த காட்சியாகக் காணமுடிந்தது. (4-3-1-11). மேலும் ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' (5-19-9) என்ற தெளிவோடு அவரால் வாழ முடிந்தது.

" ஆர் ஒருவர் உள்குவார் உள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும் " (6-18-11)

" யாது ஓர் தேவர் எனப்படுவார்க் கெல்லாம்
மாதேவன் அலால் தேவர் மற்றிலையே " (5-100-4)

" விரிவிலா அறிவினார்கள் வேறு ஒரு சமயம் செய்து
எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற்கு ஏற்றதாகும் "(4-60-9)

" எங்கும் ஈசன் எனாதவர்க்கு இல்லையே " (5-99-2)

" என்றும் ஈசன் என்பார்க்கு அன்றி இல்லையே " (5-99-8)

என்றெல்லாம் உணர்ந்து உணர்ந்து அவரால் பொதுமை காண முடிந்தது.

## தொழும் நெறி

உடலொடு உயிர் ஒன்றி நின்று இம்மை வாழ்வு வாழ்கின்ற போதும் - அவ்வாறு வாழ்ந்த காலத்துச் செய்த நல்வினைப் பயன்களுக்கேற்ற மறுமை வாழ்வு வாழ்கின்ற காலத்தும் - இம்மையும் மறுமையும் கடந்த என்றும் இன்பம் பெருகும் செம்மை வாழ்வு வாழும் காலத்தும் இவற்றையெல்லாம் அருளுகின்ற அருளே உருவாம் இறைநிலையை மறவாது நினைந்து தொழ வேண்டும் என்பது நாவுக்கரசர் காட்டும் தொழும் நெறியாகும். நன்றி மறவாத மனநிலையோடு உளம் உருகித் தொழவேண்டும் என்கிறார்.

" அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியிலீர் மனம்என் கொல் புகாததே " (5-90-6)

எல்லை கட்டிய உடம்பினுள் உலவும் ஆன்மா மனத்தின் செயற்பாட்டால் பல துன்பங்களை, பழிகளை, பாவங்களை

ஏற்கின்றது. அவற்றையெலாம் நினைந்து அழுது அரற்றித் தொழுங்கள் என்கின்றார்.

" புண்ணியமும் நன்னெறியும் ஆவதெல்லாம்
நெஞ்சமே இதுகண்டாய் பொருந்தக் கேள்நீ " (5-31-4)

" நினைதரு பாவங்கள் நாசங்கள் ஆக நினைந்து " (5-58-8)

" அன்போடு அழுவார்க்கு அமுதங்கள் காண்க
ஐயாறன் அடித்தலமே " (4-92-5)

" வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங் காலமே. " (5-90-7)

" தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று
அழுது காமுற்று அரற்று கின்றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே. " (5-21-8)

### ஒன்றித் தொழுக

இறைவனை மனம் ஒன்றி, அவனால் அருளப்பட்டுள்ள அனைத்து உறுப்புக்களையும் அவனைத் தொழுதற்குப் பயன் படுத்தவேண்டும். உளம் கசிந்து தொழ வேண்டும். அசைக்க முடியாத நம்பிக்கையோடு தொழ வேண்டும். தன் குறைகளை நீக்குமாறு வேண்டித் தொழ வேண்டும். தவறுக்கான தண்டனை வந்துறுமே என அஞ்சி அவனை வேண்டித் தொழ வேண்டும். அவ் விறைநிலைபால் அன்புற்றுத் தன்னை மறந்து தன் நாமம் கெட்டு அவன் அருளாம் திருத்தாளில் தலைப்பட்டு நின்று தொழ வேண்டும். உளம் கலந்து நின்று இறைவனைத் தொழ வேண்டும். இறைவனை வழிபட அன்பு, கொல்லாமை, பொறியடக்கம், வாய்மை, பொறை, அருள், அறிவு, தவம் என்று சொல்லக் கூடிய எட்டு வகையான மலர்கள் வேண்டும் என்பதனை "எட்டு நாள் மலர் கொண்டு அவன் சேவடி" (5-54-1) என்ற குறிப்பால் உணர்த்துகின்றார்.

" ஒன்றி இருந்து நினைமின்கள்" (4-81-2)

" தலையே நீ வணங்காய்" (4-9-1-12)

" உள்ளம் உள்கலந்து ஏத்த வல்லார்க் கலால்
கள்ளம் உள்ளவருக்கு அருள்வான் அலன் " (5-82-4)

" தொழுதுதூமலர் தூவித் துதித்து நின்று
அழுது காமுற்று அரற்று கின்றாரையும் " (5-21-8)

" அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம்பல வானார்க்கு
எல்லை இல்லதோர் அன்பு பூண்டேனுக்கே " (5-1-4)

" அஞ்சி யாகினும் அன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழி நினை " (5-23-9)

" நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்பன் பொன்னார் சடைப் புண்ணியன்" (5-90-9)

" துன்பம் இன்றித் துயர்இன்றி என்றும்நீர்
இன்பம் வேண்டி இராப்பகல் ஏத்துமின் " (5-31-3)

" தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே " (6-25-7)

இப்படிப் பலபடப் பாடி, உருவாய்த்தோன்றும் இறைவனை வழிபடும் வாயில்களை வாகீசர் வகுத்துள்ளார். அவ்வாறு செய்து பயன் காண்பதுதான் அப்பர் தேவாரம் படிப்பார் கடனாகும்.

## அகத் தவ வழிபாடு

புறத்தே உருவாய் வைத்து மனம் ஒன்றி வணங்க வணங்க, புறத்தே உருவாய் விளங்கும் அவனே அகத்தே விளங்கும் விளக்கத்தை உணரலாம் என்பதனையும் அந்நிலையில் அவனை வழிபடும் முறை இது என்பதனையும் நாவுக்கரசர் நமக்குக் காட்டுகின்றார். புறத்தே வைத்து வழிபடும் உருவத்தை அகத்தே வைத்து வழிபடும் வழியையும் காட்டுகின்றார். அவ்வுருவை அகத்தே வைத்துத் தியானிக்க வேண்டும் என்கின்றார். அப்போது தான் எங்கும் ஈசன், எதிலும் ஈசன், என்றும் ஈசன் என்ற தெளிவு ஏற்படும் என்கிறார். ''முதலாகி நடுவாகி முடிவும் ஆன'' (6-4-3) ''அந்தமும் ஆதியும் ஆகிநின்ற'' (4-95-2) ''ஆதியும் அறிவுமாக'' (4-48-2) விளங்குகின்ற இறைநிலையை அகத்தே வைத்து அகத்தவம் செய்து உணர வழிகாட்டுகின்றார். அகத்தவம் கற்றார் அவனைக் கனியெனச் சுவைப்பர் என்பதனைக் ''கற்றவர் விழுங்கும் கற்பகக்கனியை'' (6-32-1) எனக் கூறித் தெளிவு படுத்துகின்றார். அகத்தவத்தின் அனுபவம் இறைவன் எங்கும் நிறை சோதியாய்த் துலங்குகின்றான் என்ற அனுபவம் ஏற்படும் என்கின்றார். ''உள்குவார் உள்ளத்து உணர்வாய் நிறைந்து

விளங்கும் (4-75-2) நிறைநிலையை" உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக மடம்படு உணர்நெய் பூட்டி உயிர் எனும் திரிமயக்கி இடம்படு ஞானத் தீயால் எரி கொள இருந்து நோக்கி"க் (4-75-4) காண வேண்டும் என்கின்றார்.

" காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப் பூசனை "
(4-76-4)

செய்து தொழ வேண்டும் என்கின்றார்.

" உயிராவணம் இருந்து உற்று நோக்கி
உள்ளக் கிழியில் உருஎழுதி
உயிராவணம் செய்திட்டு உன்கைத் தந்தால்
உணரப்படுவா ரோடு ஒட்டி வாழ்தி " (6-25-1)

என்று வழிகாட்டுகின்றார்.

'உடம்பாகிய வீட்டில் மனமாகிய அகலில் உணர்வாகிய நெய்யை ஊற்றி உயிர், என்ற திரியைக் கொளுத்தி, சிவஞான ஒளியைக் காண வேண்டும்' என்கின்றார். உடம்பைக் கருவறை யாகக் கண்டு வேறுபாடுகள் இல்லாது கடிந்த ஒருமுகப்பட்ட மனத்தைத் தன்வயப்படுத்தி, வாய்மை போற்றி, மனத்தில் உளராய் விளங்கும் பரம்பொருளை வழிபடு தெய்வமாய் நினைத்து அன்பு உணர்வினை நெய், பால், முதலியனவாய் எண்ணி நீராட்டி அகப்பூசை செய்ய வேண்டும் என வழிகாட்டுகின்றார்.

உயிர்ப்பு இயங்கா வண்ணம் அகநோக்கு நோக்கித் தியானிக்கப் படும் உருவத்தை அகத்தே நிறுத்தி, மனம் வேறுபடாது அதிலேயே நிலைத்து அதனோடு ஒன்றுபட்டுத் தியானம் செய்ய வேண்டும். அது அனுபவம் ஆகும்போது பார்க்கப்படும் எல்லாமும், எல்லாரும் பரம்பொருளாகவே படும்; சிவசத்தித் தோற்றங்களாகத் தோன்றும். இதனைச் செய்து தம் அனுபவமாகப் பெற்றுத் திகழ்வதுதான் திருவையாற்றுப் பதிகப் பாடல்கள் (4-3-1-11)

## அருட்பெருஞ்சோதி

அகத்தவம் ஆற்ற ஆற்றப் புறத்தே தனித்த உருவாய் வழிபட்ட இறைநிலை எல்லாமாகவும் இருக்கும் அனுபவம் ஏற்படும். அவ்வனுபவ முதிர்வில் இறைநிலை வேறுபாடு ஏதுமற்ற சோதியாய், அருட்பெருஞ்சோதியாய்த் துலங்கும் என்பது அவரது

அனுபவம். இதனைப் பல இடங்களில் சுட்டிக் கூறியுள்ளார். அவற்றுள் சில:

" சொல்லக விளக்கது சோதியுள்ளது " (4-11-8)

" சோதியே சுடரே உன்றன் தூமலர்ப் பாதம் காண்பான் " (4-26-3)

" சோதியுட் சுடரும் ஆகித் தூநெறிக்கு ஒருவனாகி " (4-48-2)

" பேரொளி உருவினான் " (4-48-9)

" சோதியைத் துளக்கம் இல்லா விளக்கினை அளக்கல் ஆகா
ஆதியை நினைந்த நெஞ்சம் " (4-74-7)

" நீதியான் என்றும் நின்மலனே என்றும்
சோதியான் என்றும் " (5-33-4)

" தன்னுருவை ஒருவர்க்கு அறிவொணா
மின்னுருவனை " (5-79-4)

" சோதியே சுடரே என்று சொல்லுமே " (5-29-3)

" தேச விளக்கெலாம் ஆனாய் நீயே " (6-38-1)

" செழுஞ்சுடரே செஞ்சுடர் நற்சோதி மிக்க உருவே " (6-47-1)

என்றெல்லாம் தம் அனுபவத்தை வெளிப்படுத்தி இறை வழிபாட்டில் நம்மை நெறிப்படுத்துகின்றார். சோதியாய்த் துலங்கிடும் இறைநிலை திருநின்ற செம்மை நிலையைக் கூட்டுவிக்கும். எனவேதான், சுந்தரர் ''திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக் கரையன்'' எனப் பாடுகின்றார்.

## தயாமூல தன்மம்

19ஆம் நூற்றாண்டினரான வள்ளல் பெருமான் 'அருட் பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை' என்ற மகா மந்திரம் அருளியுள்ளார். இதனை அப்பர் பெருமான் 'தயாமூல தன்மம்' என்ற தொடரால் குறிப்பிடுகின்றார். இத்தொடரை அப்பர் அடிகள்தாம் முதன் முதலில் வழக்குக்குக் கொண்டு வந்துள்ளார். மனிதர்கள் வாழ்க்கை பெற்றதன் நோக்கமே தயாமூல தன்மமாகவே உள்ள இறைவனைத் தயவையே மூல தர்மமாகக் கொண்டு வாழ்ந்து அதுவாகவே ஆதல் வேண்டும் என்பதனை நாவுக்கரசர் நினைவுபடுத்துகின்றார்.

" தயாமூல தன்மம் என்னும் தத்துவத்தின் வழிநின்று
தாழ்ந்தோர்க்கு எல்லாம் நலம் கொடுக்கும் நம்பியை "(6-20-6)

" தயாமூல தன்மவழி எனக்கு நல்கி - மனம்
திருத்தும் மழபாடி வயிரத் தூணே " (6-40-6)

### திருவெனின் என்ன

திரு என்ற சொல் ஏறக்குறையப் பத்தொன்பது பொருள்களில் இலக்கியங்களில் பயன்படுத்தப் பட்டுள்ளது என ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அரசன் வாழ் பெருமனையாம் அரண்மனையைத் "திருவளர்கோயில் (பெரி.பு.திருநகர்-20) என்பது மரபு. திருவளர் என்ற தொடர்க்குச் செல்வம் வளர்கின்ற என்ற பொருள் கூறலாம். அது சிறப்பாக அமையாது. அரசன் வகிக்கும் நடுநிலைத் தன்மையை வளர்க்கின்றபோதுதான் திருவளர் கோயில் அரண்மனையாகின்றது. எல்லாரும் இன்புற்று வாழ இடமாக அது இருக்கும். எனவே, திருவளர் என்பதற்கு நடுநிலை வளர் எனப் பொருள்காணின் 'திரு' என்பதற்கு 'நடு' என்ற பொருள் அமையும். ஓரம் போகா உண்மை வளர் கோயிலே "திருவளர் கோயில் எனப்படும் அரண்மனை." இது பற்றியே "கோயில் இல்லா ஊரில் குடி இருக்க வேண்டா" என்ற நாட்டு மொழியும் விளங்குவதாயிற்று.

பெரிய புராணத்தில் திருநீலகண்டர் புராணத்தின் 35-ஆம் பாடலில் நீதியுரைக்கும் அந்தணர் அவையைக் குறிப்பிடும் போது, "திருவுடை அந்தணர் செப்புவார்" எனக் கூறுகின்றது. ஈண்டும் நடுநிலை உள்ளம் கொண்ட அந்தணர் என்ற பொருளே அமைகிறது. எனவே, திரு எனின் நடு என்ற பொருள் பொருந்தி வருதலை உணரலாம்.

சீவக சிந்தாமணியில் சீவகன் "திருத்துயில் பெற்ற மார்பன்" (சீவக சிந்தாமணி: 1504) என்று புகழப்படுகிறான். இதற்குப் பொதுவாகத் "திருமகள் தங்கும் மார்பினன்" என்ற பொருள் கூறப்பெற்றாலும் அரசன் நெஞ்சில் நீங்கா இடம்பெற வேண்டியது நடுநிலையே ஆதலின் நடுநிலை நீங்கா நல்லுளத் தோன் எனப் பொருள் கூறுவதே பொருத்தமாக இருக்கும். இதுபற்றியே நம்மாழ்வார் அவர்கள் 'திருவுடை மன்னனைக் காணில் திருமாலைக் கண்டேனே" என்று பாடியுள்ளார். திரு மந்திரம் "திருவடியே சிவம் ஆவது" எனவும் குறிப்பிடுகின்றது. நடுநிலை தவறின் சிவநிலை கெட்டுவிடும் என்பது 'சிவம்' என்ற சொல்லின் பொருளை உணரின் உணரலாம். திரு என்ற சொல் "இன்பம் வரினும் துன்பம் ஏற்படினும் இரண்டையும் ஒப்பக் கருதும் மனச் செம்மை" என்பது தொல்காப்பிய உரையாசிரியர் களுள் ஒருவரான பேராசிரியர் கருத்து. 'நடுநிலை' என்பதே திரு என்பதன் பொருள் என்பதனை ஈண்டும் உணரலாம். திருமுறை என்றால் கற்பார் உளத்தில் நடுநிலையை உருவாக்கும் தன்மையன என்று பொருள்படும்.

## திருத் தொண்டு

சேக்கிழார் பெருமான் நாவுக்கரசர் அவதரித்த செய்தியைச் சொல்லும்போது "திருத்தொண்டின் நெறி வாழ" (பெ.பு. திருநாவுக்.4) என்று குறிப்பிடுகின்றார். ஈண்டுத் 'திரு' என்பது 'நடு' எனவும் திருத்தொண்டு நடுநிலை உள்ளத் தாடு அதாவது சலனமற்ற உள்ளத்தோடு ஆற்றும் தொண்டு எனவும் பொருள் காணலாம். திருநிலை இல்லாத் தொண்டு எதிர்பார்ப்புத் தொண்டு. ஆனால், நாவுக்கரசர் தொண்டோ "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற நடுநிலைத் தொண்டு. எனவே, அவர் தொண்டு திருத்தொண்டு எனப்பட்டது.

## சிவமே திரு

மனம் சலனம் அற்று அசையா நிலை நிற்கும் நிலை ஏற்பட ஒன்றி இருந்து உருவ வழிபாடாற்றி உள்ளக்கிழியில் உருவெழுதி அகப் பூசை செய்து சோதியாய்த் துலங்கும் இறைநிலைத் தெளிவில் எங்கும் நிறைந்து நிற்பது இறைநிலையாம் நடு நிலையே என்பதனை உணரலாம். "சிவன் எனும் ஓசை யலது உலகில் திருநின்ற செம்மை உளதோ" (4-8-1). இதற்குச் "சிவமே பெறும் திருவானது நிலைபெறக் காரணமான செம்மை (வேறு) உளதோ" எனப் பொருள் கண்டுள்ளனர். "சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்" (4-112-9) என்ற தேவாரத்தில் சிவம் என்றால் செய்ய எனவும் செம்மையான எனவும் பொருள். சிவம் எனினும் செம்மை எனினும் ஒன்றே. "செம்புலப் பெயல்நீர் போல அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே" (குறுந்தொகை-40) என்பதில் செம்புலம் என்பதற்குச் செம்மையான நிலம்; சமமான நலம் என்று பொருள் கண்டுள்ளனர். எனவே "திருநின்ற செம்மை" என்பதற்கு நடுநிலையாக உற்ற சமமான நிலை என்ற பொருள் பொருந்தி வருதலைக் காணலாம்.

நாவுக்கரசர் "திருந்தா மனம் உடையார் திறத்து என்றும் பொருந்தார்" (4-16-3) "நீதியால் வாழ மாட்டேன் நித்தலும் தூயன் அல்லேன்" (4-26-3) என்றெல்லாம் கூறிச் சிவம், செம்மை, நடு, திரு என்பன ஒருபொருட் பன்மொழிகளாக விளங்குவதனைத் தெளியவைக்கின்றார். உருவ வழிபாடாயினும் உள்ள வழிபாடாம் அகத்தவ வழிபாடாயினும் இறுதியில் அவை திருநிலையாம் சிவநிலையை உணர்ந்து ஒன்றுபடுதல் வேண்டும் என்பதே நாவுக்கரசர் வழிபாட்டு நெறி. இறைநிலை என்பது திருவடிநிலையே ஆகும் என்பது நாவுக்கரசர் உணர்ந்து உணர்த்திய சிவ நெறியாம் திருநெறி.



# 5. நாவுக்கரசரும் இசைத்தமிழும்

திருநாவுக்கரசர் அவதார காலம் தமிழக வரலாற்றில் இருண்ட காலம் என்பது முன்பே கூறப்பெற்றது. அக்காலத்தே தமிழகப் பண்பாட்டின் கருவூலங்கள் சுவடு தெரியாதவாறு திட்டம் இட்டு அழிக்கப்பட்டன என எண்ணுதற்கான காரணங்கள் உள்ளன. இசைத்தமிழ் நூல்களும் நாடகத் தமிழ் நூல்களும் இல்லாமற் செய்யப்பெற்றன என்பது சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரைகொண்டு உணர முடிகின்றது. எனவேதான், மூவரும் இசைத்தமிழ்க்கு ஏற்றம் கொடுத்துள்ளனர். என்றாலும், அவர்கள் விரும்பியவாறு இசைத்தமிழ் ஏற்றம் பெறாமைக்குக் காரணம் தமிழர்கள் எடுப்பார் கைப்பிள்ளைகளாக வாழ்வதே யாம்.

## இசையால் பரவும் இயல்பினர்

திருநாவுக்கரசர் பெருமான் இசையோடு தமிழ்பாடும் திறத்தினர். அவர்தம் திறத்தினைத் தெளிவாக உணர்ந்தவர் பேராசிரியர் க. வெள்ளை வாரணர். அவர், "தாண்டக வேந்தராகிய திருநாவுக்கரசர் இயற்றமிழிலும் இசைத் தமிழிலும் வல்லவர். இசையுருவாகிய (நாதப்பிரம்மம்) இறைவனை நாள்தோறும் நன்னீரும் நறு மலரும் கொண்டு போற்றும் கடப்பாடு உடை யவராய் ஒழுகியவர்; நாள் வழிபாட்டில் இறைவனது பொருள்சேர் புகழை நினைந்து நெஞ்சம் நெக்குருகி இசைத்தமிழ்ப் பாடல்களால் பரவிப் போற்றும் நல்லியல்பினர்" என்று தாம் எழுதியுள்ள பன்னிரு திருமுறை வரலாற்று நூலில் குறிப்பிட்டுள்ளார்.

ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் பாடிய தேவாரப் பாடல்கள் இசையோடு இயைந்த தமிழ்ப் பாடல்கள் என்பதனைச் சுந்தர மூர்த்தி சுவாமிகள் "நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரசரும்

பாடிய நற்றமிழ் மாலை சொல்லிய சொல்லி ஏத்து உகப்பானை'' (7-67-5) எனவும்,

'' நன்று மகிழும் சம்பந்தர் நாவுக்கரசர் பாட்டுகந்தீர் ''
(பெ.பு.ஏ.கலிக்-44)

எனச் சேக்கிழாரும் இருவர்தம் இசையால் பரவும் இயல்பைப் பாராட்டியுள்ளார். ''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்'' (7-62-8) என்பது நாவுக்கரசர்க்கும் பொருந்தும்.

## ஓசையும் ஒலியும்

செவிப்புலனுக்கு இன்பம் தந்து உணர்வூட்டும் நாதத்தை ஓசை எனவும், அவ்வுணர்வோடு நற்பொருளை உணர்த்தும் வகையில் அமையும் செவிப்புலனாம் நாதத்தை ஒலி எனவும் இசைப்பாகுபாடு கண்டார் நாவுக்கரசர் என்பதனை அவர்தம் ''ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே'' என்ற திருவாக்கால் நன்கு உணரலாம்.

சமணர்கள் பொதுவாக நுண்கலைகட்கு எதிரானவர்கள். அவற்றுள்ளும் சிறப்பாக இசையைப் போற்றாதவர்கள் என்பது அச்சமய நெறிகளை ஆராய்வார்கள் உரைப்பது. ''இச்சமயங்கள் இந்நாட்டு மக்களாகிய தமிழர் பண்புக்கு ஒவ்வாத இளமைத் துறவை வலியுறுத்தின. மேலும் இசைத் தமிழையும் நாடகத் தமிழையும் வெறுத்தன. இசையும் நாடகமும் ஒரு நாட்டின் சமூகத்தில் உள்ள சீர்கேட்டைப் போக்கிப் பண்பாட்டை வளப் படுத்துவன என்ற உண்மைக்கு மாறாக இவை காமத்தை வளர்க்கும் என்றன. இத்தகைய இடர்ப்பாடான சூழ்நிலையில்தான் திருநாவுக் கரசரும் திருஞானசம்பந்தரும் அவதரித்தனர்'' என்று வித்துவான் தனக்கோடி அவர்களின் (திருத்தொண்டின் உறைப்பு - அப்பரடிகள்) தெரிவிக்கும் கருத்து நினையத் தக்கது. நாவுக்கரசர் சமண சமயத்து இருந்தவர். முன்பே இசையின் பெருமையை உணர்ந் தவர். சமயம் சார்ந்த பின்னர் இசைச் சுவையை இழந்தவர். இசைக்காக ஏக்கம் கொண்டவர். எனவேதான், ''நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன். நினையாது ஒருபோதும் இருந்து அறியேன்'' (4-1-2) என்று கூறியுள்ளார். எனவே, மீண்டும் சைவ சமயம் சார்ந்தபோது இசையின் சிறப்பு உணர்ந்து அதற்கு அவர் அழுத்தம் கொடுத்திருப்பார் என எண்ணுவதில் தவறு இல்லை.

இதுபற்றியே பல்கலைச் செல்வர் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் தாம் எழுதியுள்ள தமிழ் இலக்கிய வரலாற்றில்,

''திருநாவுக்கரசர் பாடல்கள் இசைநயம் பொருந்தியவை; உணர்ச்சிகள் நிறைந்த ஆற்றல் மிக்க சந்த நயம் மிக்க கட்டளைக் கலித்துறைப் பாக்களை இவர் பாடுகிறார். அந்நாளில் அவை விருத்தங்கள் எனப்பட்டன. திருநேரிசை என்று அழைக்கப்பட்ட நீண்ட இழுமென் ஓசை நயம் அமைந்த பாடல்களையும் அவர் பாடியுள்ளார். பழைய பாடல்வரிகளை இரட்டிப்பாக்கி அடுத்து வரும் பிந்திய காலத்தில் பெரிதும் பயிலப்படும் சந்த நயத்திற்கு வழியமைத்துக் கொடுக்கிறார்'' என எழுதியுள்ளார். இவரின் கருத்துப்படி நாவுக்கரசர் தேவாரப்பாடல்கள் எல்லாமும் இசைப் பாடல்கள் என உணரலாம். அத்தகைய பெருமகனார் பாடல் களில் இசைத்தமிழ் பற்றியும் இசைக்கருவிகள் பற்றியும் பெருகிய அளவில் குறிப்புகள் உள்ளன. அவை அனைத்தையும் தொகுத்தளித்தல் நல்ல முயற்சி என்றாலும் அவற்றுள் சில மட்டும் இங்கே காணலாம்.

## இசை பற்றிய செய்திகள்

" கொல்லியாம் பண்உகந்தார் குறுக்கை வீரட்ட னாரே " (4-49-6)

" சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடு இசைபாடல் மறந்தறியேன் " (4-1-6)

" தொண்டெலாம் இசைபாடத் தூமுறுவல்
அருள்செய்யும் ஆரூரரை " (4-5-4)

" சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ்சொல் மாலை
அடிசேர்த்து " (4-15-11)

" வரிமுரி பாடி என்றும் வல்லவாறு அடைந்து நெஞ்சே " (4-25-6)

" கொக்கரை தாளம் வீணை பாணிசெய் குழகர் போலும் " (4-66-9)

" பண்ணினார் பாடல் ஆகிப் பழத்தினில் இரதமாகி " (4-70-4)

" தாளங்கள் கொண்டும் குழல்கொண்டும் யாழ்கொண்டும் தாம்
அங்ஙனே " (4-10-4-7)

" பண்ணகத்தான் பத்தர் சித்தத்துளான் " (4-112-6)

" தாழைத் தண்பொழில் சூழ்ந்த பைஞ்ஞீலியார்
யாழின் பாட்டை உகந்த அடிகளே " *(5-41-5)*

" பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை " *(5-47-8)*

" ஆட்டி னான்முன் அமணரோடு என்றதனைப்
பாட்டின் ஆன்றன பொன்னடிக்கு இன்னிசை வீட்டினான் "
*(5-63-6)*

" மாசில் வீணையும் மாலை மதியமும்
................எந்தை இணையடி நீழலே " *(5-90-1)*

" கிளரும் பேரிசைக் கின்னரம் பாட்டறாக்
களரும் கார்க்கடம்பூர்க் கரக கோயிலே " *(5-19-1)*

" குழலோடு கொக்கரை கைத் தாளம் மொந்தை
குறட்பூதம் முன்பாடத் தான் ஆடும்மே " *(6-4-7)*

" பாடுவார் பாடல் உகப்பாய் போற்றி " *(6-5-6)*

" மனத்தகத்தான் தலைமேலான் வாக்கின் உள்ளான்
வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர் இனத்தகத்தான் "
*(6-8-5)*

" வண்ணங்கள் தாம்பாடி வந்து நின்று " *(6-9-1)*

" பருகா அமுதமுமாம் பாலின் நெய்யாம்
பழத்தின் இரதமாம் பாட்டின் பண்ணாம் " *(6-15-1)*

" எரிந்தார் அனல் உகப்பார் ஏழில் ஓசை " *(6-17-9)*

" முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய் " *(6-23-9)*

" அறை கலந்த குழல் மொந்தை வீணை யாழும் " *(6-40-2)*

" பண்ணவன்காண் பண்ணவற்றின் திறல் ஆனான்காண் "
*(6-52-1)*

" பத்திமையால் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித்தானை " *(6-54-3)*

" பாட்டான நல்ல தொடையாய் போற்றி " *(6-77-1)*

" பாட அடியார் பரவக் கண்டேன் " *(6-57-1)*

" பந்தம் அறுத்து ஆளாக்கிப் பணிகொண்டு ஆங்கே
பண்ணிய நூல் தமிழ்மாலை பாடுவித்து " *(6-84-4)*

## பண்ணடைவு இல்லை - ஏன்?

நாவுக்கரசர்தம் நற்றமிழ் இசைப்பாடல்களாம் தேவாரத்தில் இசைபற்றிய செய்திகள் பலவாகக் காணக் கிடப்பினும் அவர்தம் தேவாரம் முழுமைக்கும் பண்ணடைவு செய்யப் பெறவில்லை. நான்காம் திருமுறையில் முதல் 21 பதிகங்கட்கே பண்ணடைவு செய்யப் பெற்றுள்ளது. பின் வந்தவர்கள் நான்காம் திருமுறையில் இடம்பெற்றுள்ள திருநேரிசைப் பாடல்களுக்கு நேரிசைக் கொல்லி எனவும் திருவிருத்தப் பாடல்களுக்கு விருத்தக் கொல்லி எனவும் பண்ணடைவு செய்து மகிழ்ந்துள்ளனர். திருமுறைகளை வகுத்துப் பண்ணடைவு செய்த போது ஞானசம்பந்தர் மற்றும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியோர் பாடிய எல்லாப் பாடல்கட்கும் பண்ணடைவு செய்யப் பெற்றுள்ளது. ஆனால், நாவுக்கரசர்தம் திருக்குறுந்தொகைப் பாடல்கள் அடங்கிய ஐந்தாம் திரு முறைக்கோ தாண்டகப் பாடல்கள் அடங்கியுள்ள ஆறாம் திரு முறைக்கோ பண்ணடைவு செய்யப் பெறவில்லை.

"திருக்குறுந் தொகைகள் பாடித் திருவுழ வாரம் கொண்டு
பெருத்தெழும் காத லோடும் பெரும்திருத் தொண்டு செய்து
விருப்புறு மேனி கண்ணீர் வெண்ணீற்று வண்ட லாட"
(பெ.பு.திருநாவு.பு:171)

எனச் சேக்கிழார் கூறுவதிலிருந்து திருக்குறுந்தொகை யாப்பைக் கொண்டவை இசையோடு பாடக்கூடிய பாடல்கள் என்பது தெரிகிறது. உடற்பணியால் ஏற்படும் களைப்பு நீங்க இசையோடு பாடும்படியாக அமைந்தவை திருக்குறுந்தொகைப் பாடல்கள் என்பதும் தெரிகின்றது. திருக்குறுந்தொகைப் பாடல்கள் பெரும் பாலும் இறைவனை முன்னிறுத்திப் பாடப்படுபவை. அப்படி யானால் அவற்றில் எவ்வளவு கனிவு இருக்கும். இறைவனின் பொருள்சேர் புகழைப்பாடிப் பரவுவதற்கேற்ற இசையமைப்பு உடையன. ஆனாலும் பண்ணடைவு செய்யப் பெறவில்லை.

நாவுக்கரசர்தம் ஆறாம் திருமுறைப் பாடல்கள் உளம் உருக்கும் இயல்புடைய திருத்தாண்டகப் பாடல்கள்; தோத்திரப் பாடல்கள்; அர்ச்சனைக்கு உகந்த பாடல்கள். ஆனாலும் பண்ணடைவு செய்யப் பெறவில்லை.

தேவாரம் பாடிய காலம் கி.பி. 7-ஆம் நூற்றாண்டும் 8-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியுமாகும். ஆனால், இரண்டு நூற்றாண்டுகள் அவை மக்களிடம் பயிலா வண்ணம் செய்யப்பெற்று கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் மீண்டும் வெளிவந்தன. இறைவனோடு

''நீயும் நானுமாய் ஏகபோகமாய்ப்'' பொருள் உணர்ந்து பாடிக் கசியும் உளத்தை உருவாக்கும் தேவாரத்தைக் கோயிலில் ஓத நிவந்தம் அளிக்கப்பட வேண்டிய நிலை இருந்தமை கல்வெட்டுக் களால் அறியப்படும் செய்தி. இக்கால இடைவெளியில் கோயில் களிலும் வடமொழி மந்திரம் ஓதுதல் வன்மை பெற்றுவிட்டது. ''இருக்கொடு தோத்திரம்'' ஓதுதல் நிலைத்து, இன்னிசை வீணையும் யாழும், அர்ச்சனை பாட்டேயாகப் பாடிய நிலையும் இல்லாமல் போயின. மூவரின் முயற்சிகள் தோற்றனவோ என எண்ண இடம் ஏற்பட்டுள்ளது.



# 6. நாவுக்கரசர் பாடல்களில் உவமையும் உருவகமும்

பாடல்களுக்கு அழகு ஊட்டுவன அணிகள். அணிகள் இப்போது பலவாகக் கூறப்பெற்றாலும் தொல்காப்பியம் உவமை அணி ஒன்றையே குறிப்பிட்டுள்ளது. அணிகள்தாம் படிப்பார்க்கு உவகை அளிப்பன; உளத்தே உணர்வை யூட்டுவன; சிந்தனையை வளர்ப்பன; பாடலைச் சுவைக்கும் வழியாய் அமைவன. நாவுக்கரசர் உவமை அணியையும் உருவக அணியையும் தம் பாக்களில் போற்றியுள்ளார். அவை இதுவரை காணாதனவற்றைக் கண்டறியச் செய்வனவாய், கற்பனை நயங்களைத் தோற்றுவிப்பனவாய் அமைந்துள்ளன. நாவுக்கரசர் பாடியுள்ள தேவாரப் பாடல்களில் 274 இடங்களில் உவமைகள் இடம் பெற்றுள்ளன என 'மூவர் தேவாரம் இரண்டு பார்வைகள்' என்ற தம் நூலில் பேராசிரியர் சொ. சிங்காரவேலனார் குறிப்பிட்டுள்ளார்.

**ஆமை**

அப்படி வந்துள்ள உவமைகளுள் ஒன்று ஆமை. ''ஆமையொன்றை எரியும் அடுப்பின்மீது உலை ஏற்றி அதில் விடும் போது, வெதுவெதுப்பாகத் தொடக்கத்தில் இருப்பதனை எண்ணி, காய்ச்சக் காய்ச்சத் தான் சாகப்போவது தெரியாமல் மகிழ்வாக இருப்பது போல, கள்வர் ஐவரும் வந்து என்னை வளைத்து நின்று நடுக்கத்தைச் செய்கின்றனர்; நான் இளைத்து நின்று ஆடுகின்றேன்; தெளிவு இல்லாதவனாய் உள்ளேன்'' என்ற பொருள்பட

" வளைத்து நின்று ஐவர் கள்வர் வந்துஎனை நடுக்கம் செய்யத்
தளைத்து வைத்து உலையை ஏற்றித் தழல்எரி மடுத்த நீரில்
திளைத்து நின்று ஆடுகின்ற ஆமைபோல் தெளிவு இலாதேன்
இளைத்து நின்று ஆடுகின்றேன் என்செய்வான் தோன்றினேனே. "

(4-79-10)

என்று பாடியுள்ளார்.

வஞ்சப் புலன்கள் ஐந்தும் ஐந்து திருடர்களாய் ஆன்மாவை வளைத்து நின்று நடுங்கச் செய்கின்றன. அதனை அறியாது உயிர்களானவை ஐம்பொறிகளின் வசப்பட்டுப் பல இன்பங் களில் திளைத்து அவற்றால் ஏற்படும் விளைவு அறியாது இறுதியில் இன்னலை ஏற்கின்றன. இதனை உள்ளவாறு உணர வைக்க ஆமையை உவமையாகக் கொண்டுள்ளார். ஆமையை உண்பார் அதனைத் தண்ணென்ற நீர் நிலையில் இருந்து பிடித்து வருவர். பின்னர் அதனை உணவாக்க அடுப்பை மூட்டிப் பானை யில் இட்டுச் சூடேற்றுவர். சூட்டின் கதகதப்புத் தொடக்கத்தில் இன்பமாக இருக்கும். அதனால் ஆமை ஆகாவென மகிழும். ஆனால், நேரம் ஆக ஆக வெப்பம் அதிகமாக அதிகமாகத் தப்ப முயலும். ஆனால், பானை விடுமா! தப்ப முடியாதவாறு பானை உயர்ந்து நிற்கின்றது. ஆமை என் செய்யும். துன்பப்பட்டு இறுதியில் இறந்தே போகிறது. இது போன்றே அறியாமையில் சிக்கி உயிர்கள் தவிக்கின்றன; தப்ப முடியா அளவிற்குப் பேதைமையால் சூழப்பட்டு உள்ளன. தப்ப வேண்டுமானால் மாட்டிக் கொள்ளாமலும் மாட்டிக் கொண்டாலும் தப்ப வழியறிந்தும் வாழ்வதே அறிவுடைமை என்பதனை உணர வைக்கின்றார்.

கிணற்றில் வாழும் ஆமை, கடலில் வாழும் ஆமையைப் பார்த்து ''இக்கிணற்றின் அளவைவிடப் பெரிதோ உன்கடல்'' என்று கேட்பது போலப் ''பாவகாரிகட்குச் சிவத்தன்மையானது பார்ப்பதற்கு அரிதாகும்'' என்ற பொருள்பட

" கூவல் ஆமை குரைகடல் ஆமையைக்
கூவலோடு ஒக்குமோ கடல்என் றல்போல
பாவ காரிகள் பார்ப்பரிது என்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே. " *(5-100-5)*

என்று பாடுகின்றார்.

## இணையடி நீழல்

இறைவன் இணையடி நீழல் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகட்கும் விருந்தாய் அமைவது என்பதனை உவமை அணியில் கூறி இன்புறுகின்றார். அப்பாடல்

" மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே. " *(5-90-1)*

என்பதாகும்.

## சமணச் சார்பு

திருவாரூர்ப் பதிகத்தில் தாம் சமண சமயம் சார்ந்திருந்தது எப்படிப்பட்டது என்பதனைப் பல உவமைகள் வாயிலாக உணர்த்துகின்றார். ஒவ்வோர் உவமையும் நாவுக்கரசர் தம் மனத் தெளிவைத் தெளிவாகக் காட்டுவதாய் உள்ளது. அவரின் இயல்புகள் எண்ணி இன்புறத் தக்கன.

" கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனேனே " (4-5-1)

" முயல்விட்டுக் காக்கைப்பின் போன வாறே " (4-5-2)

" அறம் இருக்க மறம் விலைக்குக் கொண்டவாறே " (4-5-3)

" பனிநீரால் பாவை செய்யப் பாவித்தேனே " (4-5-4)

" இருட்டறையில் மலடு கறந்து எய்த்தவாறே " (4-5-6)

" விளக்கு இருக்க மின்மினித்தீக் காய்ந்தவாறே " (4-5-7)

" பாழூரில் பயிக்கம் புக்கு எய்த்த வாறே " (4-5-8)

" கரும்பு இருக்க இரும்பு கடித்து எய்த்தவாறே " (4-5-10)

(பயிக்கம் - பிச்சை)

## இன்னும் சில உவமைகள்

" மன்றத்துப் புன்னை போல மரம்படு துயரம் எய்தி " (4-26-8)

" அழிவுடைத்தாய வாழ்க்கை ஐவரால் அலைக்கப்பட்டுச்
சுழியிடைத் தோணி போன்றேன் " (4-36-6)

" சித்தத்துள் ஐவர் தீய செய்வினை பலவும் செய்ய
மத்துறு தயிரே போல மறுகும் என் உள்ளம்தானும் " (4-52-9)

" இருதலை மின்னுகின்ற கொள்ளிமேல் எறும்பென் உள்ளம் "
(4-75-6)

" மோத்தையைக் கண்ட காக்கை போல் " (4-75-7

(மோத்தை - பிணம்)

## உருவகம்

உவமை உவமேயம் என்ற வேறுபாடின்றி அவற்றிடையே காணப்படும் ஒற்றுமை காரணமாக ஒன்றை இன்னொன்றின்மீது ஏற்றிச் சொல்வது உருவகம். உவமைகளால் உணர்த்தவியலா

நுட்பங்களை உணர்த்த வல்ல செறிவான இயல்பு உடையவை உருவகங்கள். நாவுக்கரசர் உவமையில் செறிவான உருவகத்தால் அழகுபடக் கூறும் பாடல்கள் பலவாகும். அவ்வுருவகங்கள் இலக்கிய நயம் மிக்கன; பாடலில் ஆழ்ந்து நின்று நோக்க நோக்கப் பல அரிய செய்திகளை அள்ளித் தருவன.

" மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப்
பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவுஎனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்பா ராகில் சிவகதி விளையு மன்றே " (4-76-2)

இங்கே மெய்ம்மையை உழவாக, விருப்பத்தை விதையாக, பொய்யைக் களையாக, பொறுமையை நீராக, தகுதியை வேலி யாக உருவகம் செய்து பல உண்மைகளை உணர வைக்கின்றார்.

மனமாகிய நிலத்தை மெய்ம்மை என்ற உழவு செய்து பண்படுத்தி நல்லதன்கண் விருப்பம் என்ற விதையை விதைத்து, பொய்ம்மைகள் என்ற களைகள் தோன்றாவண்ணம் விழிப்பாய்க் களைந்து, பொறுமை என்ற தண்ணீரைப் பாய்ச்சி, தான் மனிதன் என்ற தம்மை நோக்கிக் கண்டு அந்த மனிதன் எனும் தகுதிக்குப் பங்கம் வாரா வண்ணம் அத்தகுதியையே வேலியாக அமைத்து, செம்மையுள் மனத்தை நிலைக்கச் செய்தால் சிவகதி என்ற நல்விளைவு உண்டாகும் என்பது இதன் பொழிப்புரை. இதனை ஆழ நினைந்து விளக்கப் புகுந்தால் பல பக்கம் நீளும்

"காயமே கோயி லாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே" (4-76-4)

ஓடிக்கொண்டேயிருக்கும் மனத்தை ஓரிடத்தே நிற்குமாறு உடம்பில் உள்ளே கோயில் கொண்டுள்ள உத்தமனாம் ஈசனுக்கு அடிமையாகுமாறு செய்து மனத்தின் உள்ளானாகிய அருவுருவ னாம் அவனிடம் வாய்மை யென்ற தூய்மையோடு சென்று அன்பையே நெய்யாகவும் பாலாகவும் எண்ணி அபிடேகம் செய்வதன்னையே இறைவன் இன்பொடு ஏற்கின்றான். இதுதான் இறைவனுக்கான சிறந்த பூசை. இந்த உருவகம் தரும் உள்ளுறைப் பொருள் விரிக்கிற் பெருகும். ஆழ்ந்து அனுபவிக்க வேண்டிய உருவகம்.

" உருகும் மனத்து அடியவர்கட்கு ஊறும் தேனை
உம்பர்மணி முடிக்கு அணியை உண்மை நின்ற
பெருகுநிலைக் குறியாளர் அறிவு தன்னைப்
பேணிய அந்தணர்க்கு மறைப்பொருளை, பின்னும்
முருகுவிரி நறுமலர்மேல் அயற்கும் மாற்கும்
முழுமுதலை மெய்த்தவத்தோர் துணையை, வாய்த்த
திருகுகுழல் உமைநங்கை பங்கன் தன்னைச்
செங்காட்டங் குடியதனில் கண்டேன் நானே " (6-84-3)

இறைவனை அடியவர்கட்கு ஊறும் தேனாய், உம்பர் முடிக்கு அணியாய், வளர்நிலையைக் குறியாகக் கொண்டார்தம் அறிவாய், அந்தணர்க்கு மறைப்பொருளாய், அயனுக்கும் மாலுக்கும் முழுமுதலாய், தவத்தோர்க்கு நல்ல துணையாய் விளங்குகின்றான் என நாவுக்கரசர் உருவகித்துக் காண்கின்றார். ஒவ்வொன்றும் ஆழமாக ஊன்றி உணர்ந்து அனுபவித்து இன்பம் காண வேண்டிய உருவகமாகும்.

இறைவன் அடியவர்கட்கு ஊறும் தேனாக உருவகிக்கப் பட்டுள்ளான். அடியவர்கள் எவ்வளக்கெவ்வளவு தம்மை மறந்து இறைவனிடம் ஈடுபட்டு நிற்கின்றார்களோ அவ்வளவுக் கவ்வளவு இன்பம் பெருகும் என்பதனை ஊறும் தேன் என்றார். தேன் உணவாகவும் மருந்தாகவும் பயன்படுவது. அடியவர்கட்கு இறைவனைப் பற்றிய எண்ணம் நல்வினையையூட்டுவதாகவும் தீவினையை ஓட்டுவதாகவும் உள்ளது. எனவே, தேன் என்றார். இப்படி இதனையே விரித்துப் பொருள் காணலாம். ஒவ்வோர் உருவகத்தையும் இவ்வாறு விரித்துப் பொருள் காணும்போது இவ்வுருவகப் பாடல் பேருவகையை நல்கும்.

இவ்வாறு உவகை நல்கும் பயன்படு உருவகப் பாடல்களை நாவுக்கரசர்தம் நற்றமிழில் பலவாகக் காணலாம்.



# 7. நாவுக்கரசரும் தொண்டு நெறியும்

ஆன்மா தனது பயணத்தில் நிலையுணர்ந்து அதுவாகவே தான் இருப்பதனைத் தெரிந்து மாறிலா இன்ப வெள்ளத்துள் திளைத்து நிற்கச் சான்றோர்களால் நான்கு நெறிகள் காட்டப்பட்டு உள்ளன. அவை அன்பு நெறி (பக்தி), அறிவு நெறி (ஞானம்), ஒன்றும் நெறி (யோகம்), தொண்டு நெறி (கர்மம்) என்பன வாகும்.

## நான்கு நெறிகள்

பக்தி என்பது நம்பிக்கையின் வெளிப்பாடு. அந்த நம்பிக்கை தன்னலம் அற்று அமையும்போது, யாரிடம் நம்பிக்கை வைக்கப் படுகிறதோ அவர்க்காக அவரைச் சார்ந்தவர்க்காகத் தொண்டு செய்யும் நிலை தானே உருவாகிறது.

ஞானம் என்பது எல்லாரையும் எல்லாவற்றையும் ஒன்று என்று காணும் உணர்வு நிலை. ஒன்றெனக் காணும் உணர்வு நிலையானது பிறர்க்கும் பிறவற்றுக்கும் தொண்டாற்றும் மன நிலை இயல்பாக அமைய வழிவகுக்கின்றது.

யோகம் என்பது ஒன்றாவது. ஒன்றாகும் நிலையில் நிற்க நிற்க அவ்வாறு நிற்பார் ஞான உணர்வு பெற்றுப் பிறவற்றுக்கும் பிறர்க்கும் தொண்டாற்றும் தூயநிலை ஏற்படும்.

தொண்டுநெறி என்பது யாதொன்றையும் எதிர்பாராமல் அன்பு உளத்தொடு பிறர் நலம் நாடி, ''என் கடன் பணிசெய்து கிடப்பதே'' (5-19-9) என்று தொண்டாற்றி மகிழ்வடையும் நிலையாகும்.

## நாவுக்கரசர் நெறி

நாவுக்கரசரிடம் பக்தியும் ஞானமும் யோகமும் சிறந்து விளங்கின என்பதற்கு அவர்தம் தேவாரப் பாடல்களே சான்று. எனினும், நாவுக்கரசர் எனும்போது அவர்தம் தொண்டு வாழ்வே தலைதூக்கி நிற்கிறது.

எனவேதான்,

" இடையறாப் பேரன்பும் மழைவாரும் இருவிழியும் உழவாரத்திண்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே பதித்த
நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன் ஞானப்பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப் பொலிவழகும் "

என அவர்தம் தொண்டு நெறியைப் பாடி மகிழ்கின்றார் சிவஞான முனிவர், தாம் பாடிய காஞ்சிப்புராணத்தில்.

## அன்பு வேண்டும்

தொண்டுள்ளம் ஏற்படுவதற்கு அடிப்படை அன்புணர்வு ஆகும். அன்பு உணர்வுதான் இரக்க வுணர்வை வளர்க்கும், தொண்டுணர்வைத் தூண்டும். இதுபற்றியே, நாவுக்கரசர், ''அன்பற்ற வாழ்க்கை வாழ்ந்து விழலுக்கு நீர் இறைத்தேன். துன்பம் ஏற்படவில்லை யென்றால் கயவர்கள் தீமையின் பயனை அறியமாட்டார்கள் என்னும் பழமொழிக்கு இலக்கு ஆனேன். என்செய்வேன். நான்படும் துன்பத்தால் ஞானம் ஒன்றும் அறிந்திலேன்'' என்று கூறி, அன்புடை வாழ்வே ஞான வாழ்க்கையை உருவாக்கும் என்கின்றார்.

" பற்றுஇலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக்கே நீர் இறைத்தேன்
உற்றுஅலால் கயவர் தேறார் எனும்கட்டுரையோடு ஒத்தேன்
எற்றுளேன் என்செய் கேன்நான் இடும்பையால் ஞானம் ஏதும்
கற்றிலேன் களைகண் காணேன் கடவூர் வீரட்ட னாரே. "(4-31-8)

## ஞானம் தொண்டினை வளர்க்கும்

'ஞான்' என்ற சொல்லிலே இருந்து பிறந்ததுதான் ஞானம் என்ற சொல். ஞான் என்றால் நான் என்பது பொருள். 'நான்' பற்றிய அறிவே ஞானம் ஆகும். 'நான்' பற்றிய தெளிவு ஏற்பட ஏற்பட எல்லாமும் நானாக இருப்பது அனுபவமாகும். பகுத்தறிவின் முடிவில் தோன்றும் தொகுப்பறிவே எல்லாமாக இருப்பது தெளிவாகும். நாவுக்கரசர் இந்தத் தெளிவில்

" அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ
அன்புடைய மாமனும் மாமியும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும்நீ

துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய்நீ
துணையாய் என்நெஞ்சம் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்தும்நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன்நீயே " (6-95-1)

என்பது போன்ற பல அனுபவப் பாடல்களைப் பாடுகின்றார். இந்த ஞானத் தெளிவால் அவர்,

" கேடும் ஆக்கமும் கெட்ட திருவின " ராய்
(பெரி. திருக்கூட்டச் சிறப்பு - 8)

" அரந்தை தீர்க்கும் அடியவ " ராய்
(பெரி. திருக்கூட்டச் சிறப்பு - 3)

" கைத்திருத் தொண்டுசெய் கடப்பாட்டின " ராய்
(பெரி. திருக்கூட்டச் சிறப்பு - 5)

" துறவு நெஞ்சின " ராய் (5-22-6)

விளங்கினார்.

" தொண்டர்கள் பாடி ஆடித் தொழுகழல் பாடினார் " (4-36-4)

" தொண்டலால் துணையும் இல்லை " (4-40-4)

" தொண்டர்கள் அகமலால் கோயில் இல்லை ஐயன்
ஐயாறனார்க்கே " (4-40-8)

" தொண்ட ராகித் தொழுது பணிமினே " (5-22-7)

என்று பாடி மகிழ்கின்றார்.

## யோகம் தொண்டினை வளர்க்கும்

யோகம் எனின் ஒன்றுபடுதல் என்பது கண்டோம். நாவுக்கரசர் ''காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக'' (4-76-4)க் கொண்டு இறைநிலையை ''ஒன்றி யிருந்து நினை''த்தவர். ''உயிராவணம் இருந்து உற்று நோக்கி உள்ளக்கிழியில் உரு எழுதி, உயிராவணம் இட்டு உன்கைத் தந்து உணரப் படுவாரோடு ஒட்டி வாழ்தி'' என்ற ஓர்மை உணர்வு பெற்று,

" ஒன்றவே உணர்திர் ஆகில் ஓங்காரத்து ஒருவனாகும்
வென்ற ஐம்புலன்கள் தம்மை விலக்குதற்கு உரியீர் " (4-25-9)

என்று பாடி, தான் ஒருவனே எல்லாமாக இருக்கும் நிலை உணர்ந்து ஐம்புலன்களையும் வென்று வாழ்ந்தவர். இதனால் 'செம்மையுள் நிற்கும் திறம்' (4-76-2) உற்று, 'என்கடன் பணி செய்து கிடப்பதே' (5-19-9) என்று தொண்டாற்றியவர்.

## தொண்டின் திருவுருவம்

நாவுக்கரசர் பத்தனாய் நின்று பாடிப் பரவிய நிலையிலும் 'ஞானத்தால் உனைநானும் தொழுவனே' (5-91-3) என்று ஞானநிலை நின்று இறைவனைத் தொழுது, "ஞானம் காட்டுவர் நன்னெறி காட்டுவர்" (5-26-3) என்பதன் அடிப்படையில், "தொண்டலால் துணையும் இல்லை" (4-40-4) என்று தெளிந்த நிலையிலும், யோகநிலை நின்று "ஓங்காரத்து உட்பொருளாகும் ஒருவனை உணர்ந்து ஐம்புலன்களையும் வென்று" (4-25-9) நின்ற நிலையிலும், அவர் பெற்ற தெளிவு "என்கடன் பணி செய்து கிடப்பதே" என்பது ஆகும். இது அவர் அனுபவம் ஆகும்.

எனவே, அவர் "துன்பக் கடல் இடைத் தோணித் தொழில் பூண்ட தொண்ட" (4-92-6)ராய் விளங்கினார். "மாசில் மனத் துயர் ஒழிய..... ஆசில் அறச்சாலைகள், தண்ணீர்ப் பந்தல்கள், பூந்தோட்டம் அமைத்தல், குளங்கள் வெட்டுதல், பசித்து வந்தார்க்கு அன்னம் பாலித்தல்" (பெ.பு. திருநாவு 4:) என்பன போன்ற தொண்டுகளை நாவுக்கரசராய் விளங்காமுன்பே மருள் நீக்கியாராய் விளங்கிய காலத்தேயே செய்து வந்தார். எனவேதான், சேக்கிழார் பெருமான் இவரைத் தொண்டின் திருவுருவமாகப் படம் பிடித்துக் காட்டுகின்றார். "சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்றார்" (பெ.பு. திருநாவு. 4-422). நாவுக்கரசர் பெருமான் தொண்டு வடிவை

" சிந்தை இடையறா அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தை மிகையாம் கருத்தும் கைஉழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறும்
அந்தமிலாத் திருவேடத்து அரசு " (பெ.பு. திருநாவு. 4-270)

என்று பாடி மகிழ்கின்றார் சேக்கிழார்.



# 8. நாவுக்கரசரின் அறங்கூறும் பண்பு

இலக்கியம் என்பன கற்பார்தம் உளத்தே உணர்வை உருவாக்கும் வண்ணம் செய்திகளைத் தாங்கி வரல் வேண்டும் என்பது இலக்கிய ஆய்வாளர்கள் பலரும் கூறும் கருத்து. அவ்வகையில் நாவுக்கரசர் தேவாரப் பாடல்கள் அவற்றின் பொருள் கற்பாரை உளத்தால் உயர்த்த வல்லன. மக்கட் சமுதாயம் உணர்வு பெறுதற்கு உதவியாகப் பல்வேறு அறங்களை நாவுக்கரசர் கூறியுள்ளார். அவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

## ஈத்துவக்கும் இயல்பு

செல்வம் ஈட்டுவதன் நோக்கமே பிறர்க்கு ஈந்து அவர்கள் பெறும் இன்பத்தைக் கண்டு தாம் இன்புறுதலே. 'ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாம் உடைமை வைத்து இழக்கும் வன்கணவர்' என்று திருக்குறளும், 'செல்வத்துப் பயனே ஈதல் துய்ப்பேம் எனினே தப்புந பலவே' எனப் புறமும் குறிப்பிடுகின்றன. பொருள் ஈட்டுதல் பிறர்க்குக் கொடுத்து இன்ப அன்பு அனுபவம் பெறுவதற்கே என்பது நாவுக்கரசர் அனுபவம். இதனை நேரிடை அறிவுரையாகவோ அறவுரையாகவோ சொல்லாமல் கூறுவது மிகவும் சிறந்த முறையாகும்.

" இரப்பவர்க்கு ஈயவைத்தார் ஈபவற்கு அருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார் "(4-38-10)

" கரவாடும் வன்நெஞ்சர்க்கு அரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை " (4-7-1)

என்பன எண்ணிப் பார்க்கத் தக்கன.

## அறம் ஒன்றையே நாடுக

அறம் என்பது அறு என்ற வேர்ச்சொல்லின் அடியாகப் பிறந்த பெயர்ச்சொல். அறுத்து வாழ்வதே அறம் எனப்பட்டது. அதாவது

ஈட்டுதலில், தொகுத்தலில், காத்தலில், காத்த வகுத்தலில், துய்த்தலில் அளவும் முறையும் அறிந்து அறுத்து மேற்கொள்வதே அறவாழ்வு ஆகும். அவ்வாறு செயற்படுவதே திறன் அறிந்த செயற்பாடு ஆகும். இத்தகு அறவாழ்வு வாழ்வார் உளத்தே பேராசை, சினம், வஞ்சம், மதம், பொருந்தாப் பால் கவர்ச்சி, கடும் பற்றுப் போன்ற பொருந்தா இயல்புகள் பொருந்தாது விலகும். இதனை நாவுக்கரசர்

" அறத்தையே புரிந்த மனத்தனாய் ஆர்வச் செற்றக்
குரோதம் நீக்கிஉன்
திறத்தனாய் ஒழிந்தேன் திருவாரூர் அம்மானே " (4-20-8)

" காலமும் கழிய லான கள்ளத்தை ஒழிய கில்லீர்
கோலமும் வேண்டா ஆர்வச் செற்றங்கள் குரோதம் நீக்கில்
சீலமும் நோன்பும் ஆவார் " (4-29-6)

" ஓதியே கழிக்கின் நீர்கள் உலகத்தீர் ஒருவன் தன்னை
நீதியால் நினைய மாட்டீர் நின்மலன் என்று சொல்வீர் "(4-41-9)

இவ்வாறு பல கூறி அறவாழ்வு, நடுநிலை வாழ்வு வாழ வேண்டும் என்று வற்புறுத்துகின்றார்.

### தன்குறை உணர்ந்து கனிந்து உருகுக

அறவாழ்வு வாழ முதலில் தன்குறை உணரும் தகைமை வேண்டும். அவற்றைத் திருத்தும் முயற்சி மேற்கொள்ளும் அதே நேரத்தில், எல்லாம் வல்ல இறைவன் அருளை வேண்டுதலும் வேண்டும். அப்போதுதான் அவனிடம் உள்ள குறைகள் விலகும்; நிறைகள் சேரும்; நிறைவாக நிலைக்கும் நிலைமைகள் உருவாகும். அவ்வாறு தன் குறைகளை நினைந்து அழுது புலம்பி அரற்றுகின்றபோது பல இடர்ப்பாடுகள் ஏற்படினும் ஏற்படும். அவையெல்லாம் தன்னைப் புடம்போட்ட தங்கமென மாற்றும் வாயில்கள் என்ற உணர்வோடு செயல்பட வேண்டும். உறுதியாக நின்று குறைகளை விலக்கி நிறைகளைக் கூட்ட வேண்டும். இப்படிப் பல அறநெறிப் படிகளை நாவுக்கரசர் குறிப்பிடுகின்றார்.

" கனிமனத்தொடு கண்களும் நீர்மல்கிப்
புனிதனைப் பூவனூரனைப் போற்றுவார்
மனிதரில் தலையாய மனிதரே" (5-ℴ5-6)

" பாத்திரம் சிவம்என்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளும் மால்பேறரோ" (5-60-3)

" நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்" (6-14-1)

ஒருவர் தம் தவறுகளை உணர்ந்து உணர்ந்து உளக் கனிவோடு இறைவனைப் போற்றி அவனிடம் தன்னை ஒப்படைத்தால் தூய்மையே வடிவாம் பரம்பொருள் துதிப்பவராகிய அவரையும் தூய்மையின் திருவுருவாக்குவன். இது நாவுக்கரசர் காட்டும் நன்னெறி.

### உண்மை உணர்க

வாழ்வில் ஏற்படும் இன்ப துன்பங்கட்குக் காரணம் கண்டால், தெளிவு ஏற்படும். கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்ற உணர்ச்சியை முதலில் அகற்ற வேண்டும். எனவே, ''நடையை மெய் என்று நாத்திகம் பேசாதே'' (5-31-6) என்று அறிவுறுத்துகின்றார். ''தீதும் நன்றும் பிறர்தர வாரா'' என்ற கணியன் பூங்குன்றன் அனுபவத்தைப் பெற்றவர் நாவுக்கரசர். எனவே, நமக்கு வருவன நம்மால் வருவன என்ற உண்மையை உணர வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார். ''பண்டு செய்த பழவினையின் பயன் கண்டும் கண்டும் களித்திகாண் நெஞ்சமே'' (5-47-1) ''கொடுவினையார் என்றும் குறுகா அடி'' (6-6-2) என்றெல்லாம் கூறி, நமக்கு வருவனவற்றின் உண்மையான காரணம் உணர வேண்டும் என்கிறார்.

உலகாயத வாழ்விலாயினும் ஆன்மிக வாழ்விலாயினும் உயர வேண்டுமானால், மனம் ஆளும் ஓரைந்து வன்குறும்பரைப்பற்றி நன்குணர்ந்து, மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியனவற்றை உள்ளொடுங்கச் செய்ய வேண்டும். இந்த உண்மையை உணர்ந்து உயர வேண்டும் என்பதனை நாவுக்கரசர், ''ஐவரை அகத்தே வைத்தீர் அவர்களே வலியர்'' (4-54-9) என்று கூறி மேற்கூறிய உண்மையை உணர வைக்கின்றார்.

### உறுதி மனம்

ஒன்றினை நம்பிப் பின்சென்றால், இடையில்வரும் இடையூறுகள் கண்டு அஞ்சாது, அஞ்சி வேறு ஒன்றைப் பற்ற எண்ணாது உறுதியாக நிற்க வேண்டும். அவ்வாறு சலனத்திற்கு இடம் கொடுத்தால் வாழ்வில் நிம்மதியும் இருக்காது; நிலையான பயனும் இருக்காது. இதுபற்றியே நம்மாழ்வார் அவர்கள் ''ஒருப்படுமின் நின்மனப் பட்ட ஒன்றே'' (திருவாய்மொழி) என்று பாடியுள்ளார். நாவுக்கரசர் கூறுகின்றார்,

''மலையே வந்து வீழினும் மனிதர்காள்
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவன் ஆகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே'' (5-91-5)

''மனிதர்களே! மலையே வந்து வீழினும் தன்நிலையில் இருந்து கலங்காதிர்! மாறாதிர். அவ்வாறு கலங்கி மாறுபடுவீராயின் ஐம்பொறிகளாகிய யானைகளே உங்களைக் கொன்றுவிடும்! என்பது இதன் பொருள். நிலை எது? அலை எது? என ஆய்ந்து அறிந்து உணர்ந்து நிலையொடு ஒருப்பட்டு நின்றால் ''இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை'' என்று வாழலாம். நிலையில் இருந்து கலங்கா நிலையில் ஐந்தவித்தல் என்பது இயல்பாகும். இதனால் எல்லாம் செயல் கூடும். இதுபற்றியே வள்ளுவர்

" நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது " (குறள் : *124*)

என்று குறிப்பிடுகின்றார். நாவுக்கரசர் நிலையில் நிலைத்து நின்ற காரணத்தால்தான் நீற்றறை தென்றலாயிற்று, நச்சூட்டப்பெற்ற உணவு உண்ண இனிய அமுதாயிற்று; கல் மிதவையாயிற்று. நிலை எதுவென உணர்ந்து உறைந்து உயர்தல் வேண்டும் என்பது நாவுக்கரசர் காட்டும் நன்னெறி.

### நிலையாமை

வாழ்க்கை நிலையாதது. எனவே, உடலும் உயிரும் ஒன்றாக இருக்கும்போதே, மனிதன் என்றும் நின்று வாழ்கின்ற வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்திக்கொள்ள வேண்டும் என்பது நாவுக்கரசர் கூறும் அறநெறி,

" இன்றுளார் நாளை இல்லை எனும்பொருள்
ஒன்றும் ஓராது உழிதரும் ஊமர்காள்
அன்று வானவர்க் காகவிடம் உண்ட
கண்டனார் காட்டுப் பள்ளிகண் டுய்ம்மினே " (5-84-9)

''ஊமர்களே! இன்றைக்கு இருப்பார் நாளைக்கு இல்லை எனும் பொருளை உணராமல் திரிகின்றவர்களே! அன்று தேவர் களின் பொருட்டு விடம் உண்ட திருக் கழுத்தை உடையனின் திருக்காட்டுப் பள்ளியைக் கண்டு உய்வு பெறுவீராக'' என்பது இதன் பொருள்.

அடியார்க்கு அல்லல் என்றவுடன் சிவன் யாதொன்றும் எண்ணாமல் நஞ்சினை உண்டு அவரைக் காப்பாற்றினார். நஞ்சினை உண்டவர் இன்றும் உள்ளார்; என்றும் இருப்பார். எனவே, நிலையாக வாழ நினைப்பவர்கள் தமக்கென முயலா நோன்தாள் பிறர்க்கு உரியவராய் முயலுகின்ற பற்றற்றுப்

பணிசெய்யும் பண்பினராக இருக்க வேண்டும் என்பதனை நாவுக்கரசர் சொல்லாமல் சொல்லி நெறிகாட்டுகிறார். ''பார்த்து நட'' என்பது நாட்டுப் பழமொழி. அதனையேதான் இங்குப் பரம்பொருள் காட்டும் காட்சியைக் கண்டு நடந்துகொள் என அறிவுறுத்துகின்றார். இதுபற்றியே ஔவையார் அதியனை வாழ்த்தும்போது ''நீல மணிமிடற்று ஒருவன் போல மன்னுக பெரும நீயே' என்று வாழ்த்துகின்றார். வாழும் தலைவனாக விளங்க வேண்டுமானால் பிறரை வாழவைக்கும் தலைவனாக வாழ வேண்டும் என்பதனை நாவுக்கரசர் அறிவுறுத்துகின்றார்.

## மனிதப் பிறவி மேலானது

" உயிரெலாம் ஒருநீ திருநடம் புரியும்
ஒருதிருப் பொதுவென உணர்ந்தேன் "

என வள்ளலார் கூறுகின்றார். எல்லா உயிரும் ஒன்றேதான். ஆனால், மனித உடலில் உலவும் உயிர்தான் உயர்ந்தது. அந்த உயர்வை உயிர்க்கு அளித்தது மனித உடல்தான். அதனால்தான் மனித உடம்புக்கு ''மேல்நீ'' என்ற பொருள்தரும் ''மேனி'' என்று பெயரிட்டு அழைக்கின்றனர். எனவேதான், 'உடம்பினை யான் இருந்து ஓம்புகின்றேனே'', ''உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே'' என்று திருமூலர் கூறியுள்ளார். நாவுக்கரசரும் ''மனிதப் பிறவி மாண்புறு பிறவி, அப்பிறவியை வீணான வழியில் பயன்படுத்திக் கெட்டுப்போகாமல் உயர்வை அடையப் பாடுபடு; வாய்த்த வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொள்'' என்கின்றார் நாவுக்கரசர். ''வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்'' (4-81-5) என்று அறிவுறுத்துகின்றார்.

இப்படிப் பல பாடல்களில் இம்மை வாழ்க்கைக்கும் மறுமை வாழ்க்கைக்கும் இம்மையும் மறுமையும் கடந்ததோர் செம்மை வாழ்க்கைக்கும் பலப்பல அறிவுறுத்தல் களை நாவுக்கரசர் நமக்கு நல்கியுள்ளார். உணர்ந்து உய்வு பெறுவோமாக.



# 9. திருநாவுக்கரசரும் அற்புதத் திருப்பதிகங்களும்

அருளாளர்கள் பாடியுள்ள பாடல்களை அவற்றின் பொருள் உணர்ந்து, மனம் ஒன்றி நின்று, பாடிப் பரவினால் பாடுவார் வாழ்வில் பல அற்புதங்கள் நிகழும் என்பது அனுபவப்பட்டார் கூறும் உண்மை. அருள்ளாளர்களின் உரைகள் இறைநிலையோடு ஒன்றிய உளத்தின் வெளிப்பாடுகள். அவை மனச்சலனமற்ற மைய நிலை நின்று வெளிப்படுத்தப்பட்டவை. அவற்றை நிறைமொழிகள் எனக் கூறுவர். அத்தகைய அருளாளர்களின் மொழிகளைத்தான் மந்திர மொழிகள் என்றனர். இதுபற்றித் தொல்காப்பியர்,

" நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப " (தொல்.செய். 171)

எனவும், வள்ளுவர்

" நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். " (குறள் : 28)

எனவும் கூறியுள்ளது ஈண்டு எண்ணிப் பார்க்கத்தக்கது. தொல்காப்பிய உரையாசிரியர்களுள் ஒருவரான பேராசிரியர் - என்பார் "நிறைமொழி மாந்தர் என்பது, சொன்னால் எவ்விடத்தும் குறைவுபடாமல் பொருண்மை பயக்கச் சொல்லும் ஆற்றல் உடையவராதல். ஆணையால் வெளிப்படுத்தப்பட்டுப் புறத்தார்க்குப் (பொருள்) புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடர் எல்லாம் மந்திரம் எனப்படும்" என்று விளக்கியுள்ளார். ஆனால், நாவுக்கரசர் போன்ற அருளாளர்களின் பாடல்களின் பொருள் வெளிப்படை. என்றாலும், அவற்றை ஓதுவார் பெறும் பயன் மிகப் பெரியது.

## அற்புதத் திருப்பதிகம்

மேலும், நிறை என்பதற்கு மறை பிறர் அறியாமை, சால்பு உடைமை, கற்புநெறி, நிறைவு எனப் பல பொருள்கள் உண்டு. அருளாளர்கள் ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோராய் நற்குண நற் செயல்களில் நிறைந்தவராய், உள்ள உறுதியாம் கற்பில் களங்கம் அற்றவராய், வேண்டுதல் வேண்டாமை உணர்வற்ற நிறைவுடை உளத்தவராய் விளங்குவர். அத்தகைய அருளாளர்களின் மொழிகள், நம்பிக்கையோடும் உறுதியோடும் ஓதுவார்க்கு அற்புதங்களை உண்டுபண்ணும் அருள்மொழிகளாகும். எனவேதான், பேராசிரியர் க. வெள்ளை வாரணனார் ''மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களில் இறைவனது திருவருட் பெருமையை உலகமக்கள் உணர்ந்து போற்றும்படி அருட் செயல்கள் பல நிகழும்வண்ணம் பாடப்பெற்ற திருப் பதிகங்கள் என ஆன்றோர் போற்றுகின்றனர்'', எனத் தம் பன்னிரு திருமுறை வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார்கள். அப்பர் பெருமான் பாடல்கள் அனைத்துமே அற்புதப் பாடல்கள்; மந்திர மொழிகள். என்றாலும், சிலவற்றைமட்டும் அற்புதத் திருப்பதிகங்கள் என ஆன்றோர் போற்றிப் பாடிப் பயன் காண்கின்றனர்.

## உடல்.நோய் தீர

உடலுக்கும் ஆன்மாவுக்கும் தொடர்பு இல்லை என்று ஞானியர் கூறினாலும் சாதாரண மக்கள் உடலையே பெரிதும் போற்றுகின்றனர். எனவே, அவ்வுடலுக்கு ஏதேனும் ஊறு என்றால், மனம் துன்புறுகின்றனர். அத்தகையவர்கள் துன்பங் களில் இருந்து விடுபடச் சில குறிப்பிட்ட பதிகங்களை நம்பிக்கை யோடும் மனம் ஒன்றியும் பாடி வருவாராயின் அவர்கள் உடல் நோய்த் துன்பத்தில் இருந்து விடுபடுகின்றனர். காட்டாக, என் நண்பர் ஒருவர் மூல நோயால் அவதியுற்றார். மருத்துவம் பார்த்துக் கொண்டார். அதனால் முழுப்பயன் அடையாநிலையில் வலி பொறுக்க இயலாமல் ''கூற்றாயின வாறு விலக்ககிலீர்'' எனத் தொடங்கும் பதிகத்தை மனம் உருகிப்பாடினார்; அழுது அரற்றித் தம்மை மறந்து பாடினார். வலிக்குக் காரணமான மலவாயில் இருந்த கட்டி உடைந்து சீழ் வெளியேறி நலம்பெற்று அடுத்த நாளே பணிக்குச் சென்றார். இல்லையேல் அவர்க்கு மீண்டும் ஓர் அறுவைச் சிகிச்சை செய்திருக்க வேண்டும். சில நாட்களாவது மருத்துவமனையில் படுத்திருக்க வேண்டும். அவரைப் பார்த்த மருத்துவர் மகிழ்ந்தார். இந்த நிகழ்ச்சியை நான் நன்கு அறிவேன்.

எனவே, உடல் நோய்த் துன்பம் உடையார் இப்பதிகத்தைப் பாடிப் பயன்பெறலாம்.

### மன நோய் தீர

ஒரு சிலர்க்கு இனம்புரியா அச்ச உணர்வு இருக்கும். நெஞ்சுப் படபடப்பு இருக்கும். பகைவர்களால் இடையூறு வரும் என்ற அச்ச உணர்வு இருக்கும். அவைபற்றியே எண்ணிக்கொண்டு இராது ''சுண்ணவெண் சந்தனச் சாந்தும்'' என்று தொடங்கும் பதிகம்பாடினால், அத்தகைய இடையூறுகள் அகலும், பகைமை விலகும்.

### வாழ்வு துன்பமானது

வாழ்வு என்பது துன்பத்தின் தொடர்கதை; இன்பம் என்பதோ அமைதி என்பதோ அடைய முடியா அரிய நிலைகள். இப்படிப் பல மன உறுத்தல்களில் சிக்கிச் சிலர் தவிக்கலாம். அவர்கள் ஒப்படைப்பு உணர்வோடு ''சொற்றுணை வேதியன்'' எனத் தொடங்கும் பதிகப் பாடல்களை மனம் ஒன்றிப் பாடிவரின் அவர்கள் துன்பம் தொலையும். மனத்தில் அமைதி ஓங்கும்; மனத்தில் நிறைவு நிலவும்.

### நச்சு அகல, நன்மை கூட

உடம்பில் நச்சுச் சேரின் அது உயிரைக் குடிக்கும். மனத்தில் நச்சுச் சேரின் அது அவரின் வாழ்வையே அழிக்கும், பிறர் வாழ்வுக்கும் இடையூறாய் இருக்கும். எனவே, உடலிலும் உளத்திலும் உள்ள நச்சினை அகற்ற வேண்டும் என்ற விருப்பம் உடையவர்கள் ''பொன்னார் திருவடிக்கு ஒன்று உண்டு விண்ணப்பம்'' மற்றும் ''ஒன்றுகொலாம்'' என்று தொடங்கும் பதிகங்களைப் பாடிப் பயன் காண்கின்றனர். தம் உள்ளமும், உரையும், உழைப்பும், தூய்மையும், மேன்மையும் உடையன வாய் விளங்கவேண்டும் என விழைவார் ''ஈன்றாளுமாய் எமக்கு எந்தையுமாய்'' எனத் தொடங்கும் பதிகப் பாடல்களை உளம் உருகப் பாடிப் பரவினால் அவர்களின் விழைவு நிறைவாகும்.

### மன உறுதி ஏற்பட

மனித மனம் சலனம் உடையது. சலனமிலா மனநிலையே செயற்கரிய செய்தற்குத் துணையாய் அமைவது. அத்தகைய மனநிலைபெற விழைவார், ''ஆளும் நாயகன் கயிலை கண்டன்றி

மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்'', எனத் தொடங்கும் பதிகத்தைப் பாராயணம் செய்தால் பயன் காணலாம் என்கின்றனர்.

## திருமணம்

நாவுக்கரசர் திருமணம் ஆகாதவர். ஞானசம்பந்தர்க்குத் திருமண நிகழ்ச்சியின்போது அவரும் அவரைச் சேர்ந்தாரும் இறைவனோடு சோதியில் கலந்தனர். சுந்தரர்க்கு ஆண்டவனே இரண்டு திருமணத்தை நடத்திவைக்கின்றான். நாவுக்கரசர்க்கோ திருமணம் என்ற எண்ணமே எழவில்லை. அதுபற்றி எண்ணு தற்கும் பெற்றோர் இல்லை. தமக்கையோ ஒரு துறவி. மேலும் நாவுக்கரசர் ஒரு தொண்டர். உண்மைத் தொண்டராயினார்க்கு எல்லா நேரத்தும் தொண்டே துணையாக விளங்கும்; வேறு ஒரு துணையை நாடும் நினைவும் அவர்க்கு வாராது. என்றாலும், நாவுக்கரசர் தேவாரம் திருமணம் செய்ய விழைவார்க்கு விழை வினை நிறைவு செய்யும். திருமணம் வேண்டுவார் ''ஒருடம்பு இருவராகி'' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாராயணம் செய்து வரின் விரைவில் திருமணம் கூடும் என்கின்றனர்.

## ஞானம் பெற

ஞானம் என்பது மோனத்தின் வரம்பு; ஒன்றெனக் காணும் உணர்வு; தன்னை அறிதல், தலைவனுடன் தானாதல் என்று எல்லாம் கூறுகின்றனர். மனிதப் பிறவியின் நோக்கமாகிய அந்த ஞானம் பெற வேண்டும் எனில், ''பனைக்கை மும்மத வேழம்'' எனத் தொடங்கும் பதிகப் பாடல்களை மனம் ஒன்றி, உருகி ஓதிவரின் ஞானம் பெறும் நசை இசைவாகும்; வேண்டுதல் நிறைவேறும்.

## அன்றாடத் தேவை நிறைவேற

உணவு, உடை, உறைவிடம் போன்ற அன்றாடத் தேவைகள் நிறைவேற வேண்டும் என விரும்புகின்றவர்கள் ''அன்னம் பாலிக்கும்'' எனத் தொடங்கும் திருப்பதிகத்தை நாளும் உளம் உருகிப்பாடிவரின் அன்றாடத் தேவைகள் நிறைவேறும் என்கின்றனர்.

## மேலும் அறிய

இதுபற்றி மேலும் அறிய விரும்புகின்றவர்கள் சிவக் கவிமணி திருவாளர் சி.கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் எழுதி

வெளியிட்டுள்ள திருத்தொண்டர் புராண விளக்கவுரையின் மூன்றாம் பகுதியின் முதற்பாகத்தில் ''புராணப் பாடல் திரட்டும் அற்புதத் தேவாரத் திரட்டும் '' என்னும் தலைப்பில் திரட்டிக் கொடுத்துள்ள பதிகங்களைக் கற்றுப் பயனடைவார்களாக. (பகுதி-3 பாகம் 2; பக்கம் - 28-43)

## எல்லாமும்

நாவுக்கரசராம் நிறைமொழி மாந்தர் மொழிந்தன எல்லாமும் அருட்செயல் ஆற்ற வல்லன. நாவுக்கரசர்தம் நற்றமிழ்ப் பாடல்களை, பாட்டின் பொருள் உணர்ந்து, பொருளோடு ஒன்றி, தான் எனும் உணர்ச்சி அற்று, அழுதும் அரற்றியும் பாடவல்லார் எல்லாப் பாடல்களும் அருள் தரும் அற்புதப் பாடல்களாகும் என்பதனை அனுபவமாகக் காண்பர்.



# 10. திருநாவுக்கரசரும் திருத்தலங்களும்

உலக மக்கள் பசியும் பிணியும் பகையும் நீங்கி வசியும் வளனும் சுரக்க வாழ்தற்கு உற்ற துணையாய் அமைவது திருக்கோயில் வழிபாட்டு முறையே என உறுதியாக நம்புபவர் நாவுக்கரசர். அன்பைப் பெருக்கி ஆருயிரைக் காத்து இன்பம் பெருக்கும் இடமாய் விளங்குவது திருக்கோயில், அருள் பெருக்கும் ஆனந்த நிலையம் திருக்கோயில் என்பன நாவுக்கரசர் அனுபவம். எனவேதான், திருக்கோவில் இல்லாத ஊர் நடுநிலை உணர்வு அற்ற ஊராகும்; அது ஊர் அன்று; அடவிக் காடு என்று துணிந்து பாடுகின்றார்.

" திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்
திருவெண்ணீறு அணியாத திருவில் ஊரும்
பருக்கோடிப் பத்திமையால் பாடா வூரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா வூரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா வூரும்
அருப்போடு மலர்பறித்துஇட்டு உண்ணா வூரும்
அவையெல்லாம் ஊர்அல்ல அடவி காடே " (6.95.5)

## இறை உருவம்

தமிழகத்தே பழங்காலம் தொட்டுக் கோயில்கள் இருந்தமை தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலம்பு, மேகலை போன்ற நூல்களில் வருகின்ற குறிப்புகளால் நன்கு தெளியலாகும். தொல்காப்பியர் காலத்திற்கு முன்பும் பின்பும் 'பொது இல்' எனப்படும் அம்பலத்திலே தெய்வம் உறையும் தறி நடப்பட்டு வழிபாடாற்றிய குறிப்புகள் உள்ளன. தொல்காப்பியர் காலத்திலேயே பல்வேறு தெய்வங்கள் வழிபடப்பட்ட செய்தியும் உள்ளது. தறி என்பது தொல்காப்பியத்தில் கந்தழி எனப்பட்டது.

கந்தழி என்பதற்கு விளக்கம் எழுதியுள்ள நச்சினார்க்கினியர் ''சார்பினால் தோன்றாது தான் அருவாய் எப்பொருட்கும் சார்பென நின்று எஞ்ஞான்றும் இன்பம் தகைத்தரோ, வாய் மொழியால், மெய்யால், மனத்தால் அறிவு சிறந்த தூய்மையதாம் மைதீர் சுடர்'' (தொல். புறத்: 27) என விளக்கியுள்ளார். அவரே திருமுருகாற்றுப்படை உரையில், ''கந்தழியாவது ஒருபற்றும் அற்று அருவாய்த் தானே நிற்கும் தத்துவங் கடந்த பொருள்'' எனக் கூறியுள்ளார். தத்துவம் கடந்த ஒன்றினை உணர்ந்து உணர்ந்து உரைத்தாலும் உணரவைப்பது எளிது அன்று என உணர்ந்தவர்கள் கற்றூணை நட்டு வழிபட்டு வந்தனர் போலும். பின்னர்க் கண், காது, மூக்கு வைத்து, செயற்கரிய செய்த பெரியவர்களின் இயல்பை ஏற்றிக் கடவுள் தன்மையாகக் காட்டிப் பல தெய்வ வணக்கங்கள் வந்தன என உய்த்து உணரலாம். தொல்காப்பியர் காலத்திலேயே மாயோன், சேயோன், இந்திரன், வருணன், கொற்றவை போன்ற தெய்வங்கள் வழிபடப்பட்டு வந்த செய்தி தெரிகிறது. சங்கப் பாடல்களிலும், மணிமேகலை சிலம்பு போன்ற காப்பியங்களிலும் தெய்வங்களின் பெயர்களும் அவை தரும் விளக்கங்களும் பலவாயின. தொடக்கத்தில் உருவங்களை ஏற்படுத்தியவர்கள் ஒன்றி இருந்து வழிபட வழிபடக் கந்தழி நிலையை அனுபவமாகப் பெறுவர் என்ற எண்ணத்தில் உருவங்களை ஏற்படுத்தினர். ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லாற்கு ஆயிரம் திருநாமங்களும் விளக்கங்களும் ஏற்பட்டன. அந்தச் சூழலில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றி மனப்பட்ட ஒன்றில் ஈடுபட்டு நிற்க நிற்க மனத் தூய்மையும் உணர்வும் ஏற்படும் என உணர்ந்து உணர்த்தினர்; கந்தழிநிலை உணர்வு அனுபவமாகும் என்று உணர்ந்து பாடினர்.

" மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெரும்புனல் உலகமும் " (தொல்.அகத்:5)

" கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே " (தொல்.புறத்:27)

" காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையும் "
(திருமுருகாற்: 223-226)

காட்டிலும் சோலையிலும் அழகுடை ஆற்றிடைக் குறை யிலும் ஆற்றங்கரை, குளக்கரைகளிலும் வேறுபல இடங்களிலும் முச்சந்தி, நாற்சந்தி, ஐஞ்சந்தி போன்ற இடங்களிலும் கடப்ப மரத்தின் அடியிலும் ஊர்க்கு நடுவே உள்ள மரத்தடியிலும், ஆதீண்டு குற்றியிலும் கடவுளை வைத்து வழிபட்டனர். கோயில்கள் கோட்டங்கள் என்ற பெயர்களில் வழங்கப்பட்டமை சிலம்பு மேகலை போன்ற நூல்களின் வாயில்களாக அறியலாம். கோயில்கள் சங்க காலத்தில் பொதுவிடமாக இருந்தன. பொது மன்றாக, புதியவர்கள் வரின் தங்குவதற்கு இடமாக விளங்கின.

" கொண்டி மகளிர் உள்துறை மூழ்கி
அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்கம் ஏறிப் பலர்தொழ
வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில் "
(பட்டினப்பாலை 246-249)

என வருவதால் பொது இல்லமாக, தூண் ஒன்று நடப்பட்ட இடமாக, மகளிர் பலர் தூய்மையோடு சென்று விளக்கு ஏற்றி மலர் பெய்து வழிபடும் இடமாக அமைந்தது அக்காலக் கோயில் என்பது புலப்படுகிறது. ஈண்டு ஒன்றினை ஆழ நினைந்தால் ஓர் உண்மை புலப்படும். பழங்காலத்தில் யாதொரு உருவமும் இன்றிக் கல்லை நட்டு வழிபட்டு வந்த வழிபாடே ''அருவுரு'' சிவத்திருமேனியாம் சிவலிங்கத் திருமேனி யாயிற்றோ என்று எண்ண முடிகின்றது.

கந்தழி பற்றிய விளக்கம், அருவுருவத் திருமேனி இவை யெல்லாம் மிகப் பழங்காலத்திலேயே இந்நாட்டில் இடம் பெற்று இருந்தன. பின்னர், கட்டடப்பட்டுள்ள பெருங்கோயில்களும் அக் காலத்தே யிருந்தது காணப்படுகின்றன. இதன் வளர்ச்சியைக் கோவையாகக் காட்ட வல்ல சான்றுகள் கிடைப்பருமை தமிழக வரலாற்றில் உள்ளது. இவ்வாறு சான்றுகள் இல்லாமல் போனதற்குத் தமிழர்தம் பெரும் போக்கான மனநிலையே காரணம் என்றுதான் எண்ணத் தோன்றுகின்றது. கந்தழியும் அருவுருவ நினைப்பும் எவ்வாறு வளர்ச்சி பெற்றிருந்த நிலையில் தோன்றியிருக்க வேண்டும் என எண்ணும்போது வியப்பாக உள்ளது. அவற்றைத் தெளிவாகவும் தொடர்ச்சி யாகவும் காட்ட முடியாமை வேதனையாகவும் உள்ளது.

### கோயில்கள் பல விதம்

நாயன்மார்கள் காலத்தில் பல்வேறு விதமான கோயில்கள் இருந்தன என்பது நாவுக்கரசர் பாட்டால் அறியப்படும் செய்தி. அவர்தம் காலத்துச் சிவலிங்கமே கந்தழி(தறி) எனப்பட்டது என்பதும் தெரிகிறது.

" பெருக்காறு சடைக்கணிந்து பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோடு எட்டும் மற்றும்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக்கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டு ஏத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவன்உறையும் கோயில் சூழ்ந்து
தாழ்ந்து இறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே "
(6-71-5)

திருநாவுக்கரசர்தம் இப்பாட்டிலிருந்து பெருங்கோயில், கரக்கோயில், ஞாழற்கோயில், கொகுடிக்கோயில், இளங்கோயில், மணிக்கோயில், ஆலக்கோயில், திருக்கோயில், சிவன் உறையும் கோயில் என்று பல்வேறு விதமான கோயில்கள் இருந்தன என்பது தெரிகின்றது. இவை அமைப்பால் பெயர் பெற்றன.

இந்தக் கோயில்கள் பலவற்றிற்கு நேரே சென்று அழுதும் அரற்றியும் ஆண்டவனின் புகழ் பாடித் தேவாரம் பாடிய மூவரும் துதித்துத் தொழுதுள்ளனர். இப்போது கிடைத்துள்ள தேவாரங் களைக் கொண்டு பார்த்தால் அவ்வாறு இவர்களால் பாடல் பெற்ற திருத்தலங்கள் 274 என்பது தெரிகின்றது. அவற்றுள் நாவுக்கரசர் பெருமானின் பாடல் பெற்ற திருத்தலங்கள் 126 ஆகும். அவ்வாறு நேரே சென்று பாடாமல் இப்பாடல்களினூடே வேறு சில திருத்தலங்களைப் புகழ்ந்து பாடியிருக்கின்றனர். முன்னவற்றைப் பாடல் பெற்ற திருத்தலங்கள் எனவும், பின்னவற்றை வைப்புத் தலங்கள் எனவும் அழைப்பது வழக்கு.

நாவுக்கரசரால் ஒரு பதிகம் மட்டும் பெற்ற தலங்கள் 76 ஆகும். பிற தலங்கள் இரண்டு முதல் இருபத்தொரு பதிகங்கள் வரை பெற்றுள்ளன. இவற்றுள்ளும் பத்துப் பதிகங்கட்கு மேல் பெற்றவை மூன்றே தலங்கள்தாம். திருவாரூரைப் பற்றி 21 பதிகங்களும் திருவதிகை வீரட்டானம் பற்றி 16 பதிகங்களும் திருவையாற்றைப் பற்றி 12 திருப்பதிகங்களும் நாவுக்கரசரால் பாடப் பெற்றுள்ளன.

## பழமொழிகள்

நாவுக்கரசர் வயது கரணமாகவும் பலரொடும் கூடி வாழ்ந்ததன் விளைவாகவும் மக்கள் வாய்மொழிகளை நன்கு அறிந்திருந்தார் என்பதற்கு அவர் திருவாரூர் பற்றிப் பாடியுள்ள பதிகங்களுள் ஒன்றான பழமொழிப் பதிகம் ஒன்றே போதிய சான்றாகும்.

" கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனேனே "

" முயல்விட்டுக் காக்கைப்பின் போனவாறே "

" அறம் இருக்க மறம் விலைக்குக் கொண்டவாறே "

" இருட்டறையில் மலடு கறந்து எய்த்தவாறே "

" விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்தவாறே "

" பாழூரில் பயிக்கம்புக்கு எய்த்த வாறே "

" கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தவாறே "

## அவரால் பாடப் பெற்ற திருத்தலங்கள்

திருவண்ணாமலை, திருவதிகை, அரிசில்கரைப் புத்தூர், அவனிவணல்லூர், அன்பிலாலந்துறை, அன்னியூர், ஆக்கூர், ஆப்பாடி, ஆமாத்தூர், திருவாரூர், ஆரூர் அரநெறி, ஆலங்காடு, ஆலம்பொழில், ஆலவாய், ஆவடுதுறை, ஆனைக்கா, இடைமருதூர், இராமேச்சுரம், இன்னம்பர், எறும்பியூர், ஐயாறு, ஒற்றியூர், ஓமாம்புலியூர், கச்சி ஏகம்பம், கச்சி மேற்றளி, கஞ்சனூர், கடவூர், கடம்பந்துறை, கடுவாய்க்கரைப்புத்தூர், கண்டியூர், கயிலாயம், கருகாவூர், கருவிலிக் கொட்டிட்டை, கழிப்பாலை, கழுக்குன்றம், கற்குடி, கன்றாப்பூர், காட்டுப்பள்ளி, காழி, காளத்தி, கானூர், கீழ்வேளூர், குடந்தை, குரக்குச்சா, குரங்காடு துறை, குறுக்கை, கொட்டையூர், கொண்டீச்சுரம், கோகரணம், கோடிகா, கோயில் சிதம்பரம், கோவலூர், கோழம்பம், கோளிலி, சத்திமுற்றம், சாய்க்காடு, சிராப்பள்ளி, செங்காட்டங்குடி, செம்பொன்பள்ளி, சேறை, சோற்றுத்துறை, தலையாலங்காடு, துருத்தி, தூங்கானை மாடம், நல்லூர், நள்ளாறு, நனிபள்ளி, நாகேச்சுரம், நாகைக் காரோணம், நாரையூர், நன்றியூர், நீலக்குடி, நெய்த்தானம், நெல்வாயில் அரத்துறை, பந்தணை நல்லூர், பயற்றூர், பராய்த்துறை, பருப்பதம், பழனம், பழையாறை,

பள்ளியின்முக்கூடல், பாசூர், பாண்டிக்கொடுமுடி, பாதிரிப் புலியூர், பாலைத்துறை, புகலூர், புத்தூர், புள்ளிருக்கு வேளூர், புறம்பயம், புன்கூர், பூந்துருத்தி, பூவணம், பூவனூர், பெரு வேளூர், பேரெயில், பைஞ்ஞீலி, மங்கலக்குடி, மணஞ்சேரி, மயிலாடுதுறை, மருகல், மழபாடி, மறைக்காடு, மாற்பேறு, மீய்ச்சூர், முண்டீச்சுரம், முதுகுன்றம், வலஞ்சுழி, வலம்புரம், வலிவலம், வன்னியூர், வாஞ்சியம், வாட்போக்கி, வாய்மூர், வான்மியூர், விசய மங்கை, வீழிமிழலை, வெண்காடு, வெண்ணியூர், வேட்களம், வேதிகுடி முதலான நூற்று இருபத்தாறு தலங்களாகும்.

## அவரால் மட்டும்

இவற்றுள் அப்பர் சுவாமிகளால்மட்டும் பாடப்பெற்ற பெருமைக்கு உரியன 1)ஆலம்பொழில் 2) கடம்பந்துறை 3) குறுக்கை 4) கொட்டையூர் 5) சத்திமுற்றம் 6) நீலக்குடி 7) பழையாறை வடதளி 8) பாலைத்துறை 9) பூந்துருத்தி 10) பூவனூர் 11) பேரெயில் 12) மீய்ச்சூர் இளங்கோயில் 13) முண்டீச்சுரம் 14) வன்னியூர் 15) வாட்போக்கி 16) தலையாலங்காடு 17) பயற்றூர் 18) பள்ளியின் முக்கூடல் 19) குரக்குக்கா 20) கஞ்சனூர் 21) ஆப்பாடி 22) திருஎறும்பியூர் 23) குடந்தைக் கீழ்க்கோட்டம் 24) கருவிலி 25) கொண்டீச்சுரம் 26) திருவாரூர் அரநெறி 27) கடுவாய்க்கரைப்புத்தூர் 28) கன்றாப்பூர் என்பனவாம்.



# 11. நாவுக்கரசரும் பிற நூற் கருத்துக்களும்

அருளாளர்களும் அறிஞர்களும் தாங்கள் இயற்றும் நூல்களில் தமக்கு முன்பு வாழ்ந்த அருளாளர்களும் ஞானியரும் இயற்றிய நூல்களின் கருத்துக்கள், சொற்றொடர்கள் ஆகியனவற்றைத் தங்கள் நூல்களில் கையாள்வது மரபு. இம்மரபு தமக்கு முன்பு இருந்தார்தம் பெருமையைப் பாராட்டுதற்கு மட்டும் அன்று; அவரின் கருத்து வாழையடி வாழையாக வாழ்ந்து சமுதாயத் திற்குப் பயன்பட்டு வருகின்றது என்பதனைத் தெளிவுபடுத்தவும் பயன்படுகிறது. மேலும் பயன்படுத்துவார்தம் பலநூல் பயிற்சியும் இதனால் வெளிப்படுகின்றது. இதுபற்றியே நன்னூல் ஆசிரியர் பவணந்தியார்

" முன்னோர் மொழிபொருளே அன்றி அவர்மொழியும்
பொன்னேபோல் போற்றுதும் " (நன்னூல்-9)

என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு நல்லன போற்றும் நல்லியல்பால்தான் ஔவையார் அவர்கள்

" தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர். "

என்று கூறியுள்ளார்.

இம் மரபை வழுவாது பின்பற்றியவர் திருநாவுக்கரசர் பெருமான். அவர்தம் திருப் பாடல்களில் சங்ககாலத்திருந்து அவர் காலம் வரை வாழ்ந்திருந்த பல நூல் கருத்துக்களையும் தொடர் களையும் பல இடங்களில் காண முடிகின்றது. அவ்வாறு வருவன அனைத்தையும் தொகுத்தால் அது ஒரு பெரிய நூலாகும். எனவே, சிலவற்றைச் சான்றுக்குக் காணலாம்.

குறள்

திருக்குறளின் முதற்குறள்,

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு" (குறள்:1)

என்பது. "மொழியில் காணப்படும் எழுத்துக்கள் எல்லாமும் தம்மை உடன்நின்று செலுத்தும் அகர ஒலியைத் தமக்கு முதலாக உடையன. அது போன்று உலகமும் தம்மை உடன்நின்று இயக்கும் ஆதிபகவனாகி இறைவனைத் தமக்கு முதலாக உடையது" என்பது இதன் பொருள். இப்பொருளை நாவுக்கரசர் பெருமான் உள்வாங்கிக் கொண்டு,

"ஆனத்து முன்எழுத்தாய் நின்றார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே" (6-28-5)

என்று பாடி மகிழ்கின்றார்.

"கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்" (குறள்:2)

என்ற குறட்கருத்தின் சாயலை

"அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியிலீர் மனம் என்கொல் புகல்வதே" (5-90-8)

என்ற தேவாரப் பாடலில் காண முடிகின்றது.

" எரியாய தாமரைமேல் இயங்கினாரும் " (6-16-7)

" நன்மலர்மேல் உறையாநின்ற அறநெறியை
ஆரூரில் அம்மான் தன்னை " (6-29-5)

" புண்டரிகப் புதுமலர் ஆதனத்தார் " (6-53-8)

என்பன போன்ற நாவுக்கரசரின் நன்மொழிகளில் வள்ளுவர்தம்

" மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார் " (குறள்:3)

என்ற குறளின் மணம் வீசுவதனைக் காணலாம்.

"வேண்டுதல் வேண்டாமை இலான்" (குறள்:4) என்ற சொற்றொடரை நாவுக்கரசர் "வேண்டாமை வேண்டுவதும் இல்லான் தன்னை" (6-46-9) எனப் பயன்படுத்தி மகிழ்கின்றார். வள்ளுவர் இறைவனை "அறவாழி அந்தண" (குறள்: 8) னாகப் பாடியுள்ளார். நாவுக்கரசர் "தருமமாகிய தத்துவன்" (5-31-2) என்று குறிப்பிட்டுள்ளார். வள்ளுவர் இறைவனை "எண்

குணத்தானாகக்'' (குறள்:9) காணுகின்றார். நாவுக்கரசரும், ''காதல் எண்குணவன்காண்'' (5-63-4) மறையவனை எண்குணத்தினானை (7-10-2) என்று இறைவனைப் போற்றியுள்ளார்.

''சுவையொளி ஊறுஓசை நாற்றம் என்றைந்தின்'' (குறள்: 27) என்ற தொடரை நாவுக்கரசர், ''உன் உருவில் சுவையொளி ஊறு ஓசை நாற்றத்து உறுப்பினது குறிப்பாகும்'' (6-27-4) எனப் பயன்படுத்தியுள்ளார். ''இனிய வுளவாக இன்னாத கூறல் கனியிருப்பக் காய்கவர்ந் தற்று'' (குறள்: 100) என்ற குறள் நாவுக்கரசரின் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சியை நினைந்து ''கனி யிருப்பக் காய்கவர்ந்த கள்வனேன்'' (4-5-1) என வருந்த உதவியுள்ளது.

தேவாரம் பாடிய மூவரும் குறட்பாக்களைப் போற்றியவர்கள் என்றாலும், நாவுக்கரசர் மற்றவர் இருவரிலும் சற்று அதிகமாகவே குறளைக் கையாண்டுள்ளார் என்பது ஈண்டு நினையத்தக்கது.

## புறநானூறு

பாரதம் பாடிய பெருந்தேவனார் புறநானூற்றுக்குப் பாடி யுள்ள கடவுள் வாழ்த்தில் வரும்

" பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்
பிறைநுதல் வண்ண மாகின்று " (புறம்:1)

என்ற வரிகளின் கருத்து ''மாதர் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் பாடி'' (4-3-1) என்ற நாவுக்கரசர் தேவாரத்தில் இருக்கக் காணலாம்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் புகழ்ந்து பாடிய பாடலில் ''ஊழித் தீயால் கடல் வற்றிப் போனாலும், கிழக்கே உதிக்கும் கதிரவன் தெற்கே உதித்தாலும் எனக்கென்ன குறை, அஞ்ச மாட்டேன், அவன் நிழலில் வாழ்கின்றேன்'' என்று கூறியுள்ளார்.

" எறிதிரைப் பெருங்கடல் இறுதிக்கட் செலினும்
தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினும்
என்,என்று அஞ்சலம் யாமே, வெல்வேல்
அருஞ்சமம் கடக்கும் ஆற்றல வன்
திருந்து கழல்நோன்தாள் தண்ணிழ லேமே. " (புறம்: 393)

இவ்வரிகளின் கருத்தை நாவுக்கரசர் ஏற்று ஆண்டவன் அடியிணையைப் புணையாகப் பற்றினவர்கள் அஞ்சாமல்

வாழ்வர், இடுக்கண் இன்றி வாழ்வர் என்று பாடியுள்ளார். இப்பொருளை நாவுக்கரசர் ஏற்று

"எம்பரிவு தீர்ந்தேம் இடுக்கண் இல்லோம்
எங்கெழில்என் ஞாயிறு எளியோம் அல்லோம்" (6-95-2)

"வானம் துளங்கில்என் மண்கம்பம் ஆகில்என் மால்வரையும்
தானம் துளங்கித் தலைதடு மாறில்என் தண்கடலும்
மீனம்படில்என் விரிசுடர் வீழில்என் வேலை நஞ்சுண்டு
ஊனம் ஒன்று இல்லா ஒருவனுக்கு ஆட்பட்ட உத்தமர்க்கே."
(4-113-8)

என்றெல்லாம் பாடியுள்ளார் என்பது ஒப்பு நோக்கத் தக்கது. இப்படிப் பல ஒப்புமையைப் புறநானூற்றிலும் நாவுக்கரசர் தேவாரத்திலும் காணலாம்.

## பட்டினப்பாலை

கடியலூர் உருத்திரங்கண்ணனார் தாம் பாடிய பட்டினப் பாலை என்ற பாட்டில் நிறைமதியையும் மீனையும் முறையே பொய்கைக்கும் கரைக்கும் உவமைகளாக வைத்துப் பாடியுள்ளார்.

"மதிசேர்ந்த மகவெண்மீன்
உருகெழு திறல் உயர்கோட்டத்து
முருகலர்பூ முரண் கிடக்கை
வரியணி சுடர்வான் பொய்கை"
(பட்டினப்பாலை: 35-38)

இக்கருத்தை யொட்டி நாவுக்கரசர் பெருமான் பிறைமதியை ஏரியின் கரைக்கு உவமையாக்கிப் பாடி மகிழ்ந்துள்ளார்.

"வாரி வளாய வருபுனல் கங்கை சடைமறிவாய்
ஏரி வரைவிக் கிடந்தது போலும் இளம்பிறையே" (4-113-9)

## குறுந்தொகை

மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதனார் என்ற புலவர் குறுந்தொகையில் பாடியுள்ள பாடலில் "அலைகளால் மோதப் பட்ட தாழையினுடைய வெண்ணிறப் பூ நாரையைப் போல நின்று மலர்தலைச் செய்வதற்கு இடமாகிய பெரிய துறைகளை யுடைய அகன்ற நீர்ப் பரப்பை யுடைய சேர்ப்பன்" என்ற பொருள்படப் பாடியுள்ளார்.

"தயங்குதிரை பொருத தாழை வெண்பூக்
குருகுஎன மலரும் பெருந்துறை
விரிநீர்ச் சேர்ப்பன்" (குறுந்: 226)

இக்கருத்தையொட்டி நாவுக்கரசர் பெருமான்

" நெய்தற் குருகு தன்பிள்ளை என்றுஎண்ணி நெருங்கிச் சென்று
கைதை மடல்புல்கு தென்கழிப்பாலை " *(4-106-1)*

எனப் பாடியுள்ளார்.

**ஐங்குறு நூறு**

" நீலமேனி வாலிழை பாகத்து
ஒருவனது இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே "
(ஐங்-கடவுள் வாழ்த்து)

இவ்வரிகளின் பொருளை நாவுக்கரசர் உள்வாங்கிக் கொண்டு

" தண்கடல்சூழ் வியன்நிலம் முற்றுக்கும் விண்ணுக்கும்
நாகர்வியன் நகர்க்கும்
இயபர மாவ இன்னம் பரான்தன் இணையடியே *(4-100-9)*

என்று பாடி மகிழ்ந்துள்ளார்.

**காரைக்கால் அம்மையார்**

சங்க காலத்தை ஒட்டித் தோன்றி, பக்தி இயக்கத்திற்குக் கால்கோள் இட்ட பெருமை காரைக்கால் அம்மையாருக்கு உண்டு. அவர்க்குப் பின்னர்த் தோன்றிய நாவுக்கரசர் பெருமான் அவரைப் போற்றித் தாம் பாடிய பதிகத்துள் பதிவு செய்து உள்ளதோடு அவர் பாடல்களின் பல தொடர்களையும் கருத்துக்களையும் தம் பதிகங்களுள் கையாண்டுள்ளார்.

" இடர்களையா ரேனும் எமக்கு இரங்கா ரேனும்
படரும் நெறி பணியா ரேனும் - சுடர் உருவில்
என்பறாக் கோலத்து எரியாடும் எம்மானார்க்கு
அன்பறாது என்நெஞ் சவர்க்கு " (அற்புதத்திரு:2)

என்ற அம்மையின் அருட்பாடலை அப்பர்பெருமான் அவர்கள்

" சொல்லோடு பொருள் அனைத்தும் ஆனான் தன்னைச்
சுடர் உருவில் என்பறாக் கோலத் தானை " *(6-92-10)*

எனப் பாடி மகிழ்கின்றார்.

" ஆர்ஒருவர் உள்குவார் உள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும் " *(6-18-11)*

என்பது அரசர்தம் அருட்சொற்கள். இப்பாடற்கு மூலமாக அம்மையார்தம் பாடல் உள்ளது.

" நூல்அறிவு பேசி நுழைவு இலாதார் திரிக
நீலமணி மிடற்றான் நீர்மையே மேல்உவந்தது
எக்கோலத்து எவ்வுருவோ எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத்து அவ்வுருவே யாம். " (அற்புத:33)

திருமூலர்

எல்லா நெறிகளையும் போற்றியுரைக்கும் பொதுமை நூல் திருமூலர்தம் திருமந்திரம். இந்நூல் கருத்துக்களும் தொடர்களும் நாவுக்கரசர் தேவாரத்தில் பயின்று வந்துள்ளன. அவற்றுள் சில:

" புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீர்உண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே " (திருமந் - 1828)

இம்மந்திரப் பொருளை அப்படியே ஏற்று அப்பர் சுவாமிகள்

" கற்றுக் கொள்வன வாயுள நாவுரை
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக்கோ நமனால் முனிவு உண்பதே " (5-91-6)

என்று பாடியுள்ளார்.

யார் பாட்டு இதுவென அறிய வொண்ணாது ஒன்று போலவே உள்ள பாடல்கள் உண்டு. இதனால் அரசர்க்கு மூலரிடம் இருந்த ஈடுபாடு புலப்படும்.

" தன்னில் தன்னை அறியும் தலைமகன்
தன்னில் தன்னை அறியத் தலைப்படும்
தன்னில் தன்னைச் சார்கிலன் ஆகிய
தன்னில் தன்னைச் சார்தற்கு அரியவே " (திருமந்: 2419)

" தன்னில் தன்னை அறியும் தலைமகன்
தன்னில் தன்னை அறியில் தலைப்படும்
தன்னில் தன்னை அறிவிலன் ஆயிடில்
தன்னில் தன்னையும் சார்தற்கு அரியனே. " (5-97-29)

வள்ளற் பெருமான் "வாழையடி வாழையென வந்த திருக் கூட்ட மரபு" (அருட்பா:3803) எனப் பாடி அருட் செய்திகள் வாழையடி வாழையாகத் தொடர்ந்து வருகின்றன என்பதனைச் சுட்டி உரைக்கின்றார். இத்தகு நல்ல அருட்செய்திகள் காலம் தோறும் அருளாளர்கள் வாயிலாக வெளிப்படுவதனை உணர்ந்து உன்னிப் பார்த்தால் அனைத்திற்கும் மூலம் விளங்கிய அறிவினனாம் முனைவனாம் இறைவனே என்று உணர முடிகிறது.



# 12. திருநாவுக்கரசர் காண விரும்பிய சமுதாயம்

ஞானியர்கள், எல்லாம் உணர்ந்தவர்கள். தம்மை மறந்து தம் நாமம் கெட்டுப் பரம்பொருளோடு தலைப்பட்டு நின்றவர்கள். என்றாலும், அவர் வாழ்ந்த காலத்துச் சமுதாயம் தங்களைப் போன்று உயர்ந்து நிற்கும் சமுதாயமாக வாழவும் வளரவும் வேண்டும் என்று விரும்பினார். இவ்விருப்பத்தை அவர்தம் பாடல்களின் வாயிலாக உணரலாம்.

காட்டாக, வள்ளலார் வேட்கையைக் காட்டலாம். திருமூலரின் விருப்பத்தைக் காட்டலாம். இப்படி எல்லா ஞானியரும் தமக் கென முயலா முயற்சியை - பிறர்க்கென வாழும் வாழ்வை உடையவர்கள் ஆதலின் சமுதாயம் எப்படி அமைய வேண்டும் என விரும்பியதில் வியப்பொன்றும் இல்லை.

" நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுற்ற மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படும் தானே. " (திருமந் - 85)

" பாதி இரவில் எழுந்தருளிப் பாவியேனை எழுப்பிஅருள்
சோதி அளித்துஎன் உள்ளகத்தே சூழ்ந்து கலந்து துலங்குகின்ற
நீதி நடம்செய் பேரின்ப நிதிநான் பெற்ற நெடும் பேற்றை
ஓதி முடியாது என்போல் இவ்வுலகம் பெறுதல் வேண்டுவனே. "

(அருட்பா - 3630)

நாவுக்கரசர் பெருமான் தாம் வாழ்ந்த காலத்துத் தமிழகத்தே இருந்த நிலைகளை எண்ணி வருந்தியவர். அவர் காலத்துத் தமிழக நிலை முன்னரே விளக்கப்பட்டது. அவற்றை எண்ணித் தமிழ்ச் சமுதாயம் எப்படி வாழ வேண்டுமோ அப்படி வாழ்ந்து,

சமுதாயத்திற்கு வழிகாட்டிச் சென்றுள்ளார். தமிழ்ச் சமுதாயம் மட்டுமன்று, உலகமெலாம் அப்படி வாழ வேண்டும் என ஆண்டவனை வேண்டியவர் தயா மூலதன்மத்தின் திருவுருவாய் நின்ற திருநாவுக்கரசர்.

## குறிக்கோள் வேண்டும்

சமுதாயம் நன்கு வாழ வேண்டுமானால் வாழ்வில் குறிக்கோள் கொண்டு வாழ வேண்டும். குறிக்கோள் இல்லாத வாழ்க்கை கொலை வாழ்வு என்கிறார் திருமங்கை ஆழ்வார். ''கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோள் ஒன்று இல்லாமை யினால்'' என்பது அவர்தம் திருவாக்கு. நாவுக்கரசர் தொண்டு நெறியை ஏற்றுக் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தவர்; உலகில் பல கலைகள் செழிப்பாக ஓங்க வேண்டும் என்ற குறிக்கோளை ஏற்று வாழ்ந்தவர். என்றாலும், தாம் பாலனாக இருந்தபோதும், பெண்களோடு கூடி வாழ்ந்த குமரப் பருவத்தும், கோலூன்றிக் குடுகுடு கிழவனாய் உலவிய போதும் குறிக்கோள் இல்லாமல் வாழ்க்கையைக் கெடுத்துக்கொண்டதாகச் சொல்கிறார். அவர் எல்லா நேரத்தும் ''நெஞ்சம் இறைவனுக்கே இடமாக'' வைத்தவர். ''குற்றம் ஏற்படா வாழ்வு'' வாழ்ந்தவர் என்றாலும்

" பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோள் இலாது கெட்டேன்
சேல்உலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே. "
(4-67-9)

என்று பாடுகின்றார் என்றால், குறிக்கோளை முன்னிறுத்தி வாழ்கின்ற சமுதாயத்தை அவர் காண விரும்பினார் என்பதுதானே பொருள்.

## இறை நம்பிக்கை

குறிக்கோள் நல்லதாயும் பயன் உடையதாயும் அமைய வேண்டுமானால் நல்லதாகவே, பயன் தருவதாகவே விளங்கும் பரம்பொருளை நாளும் மறவாமல் நினைக்க வேண்டும். இறையுணர்வு மனம் விட்டு நீங்காது நிலைத்திடல் வேண்டும். சமுதாய மக்கள் இறையுணர்வில் திளைக்க வேண்டும். அப்போதுதான் அவர்களின் குறிக்கோள்கள் நேரியனவாகவும் எல்லார்க்கும் பயன்படுவனவாகவும் துன்பம் நீக்கி இன்பம் தரத்தக்கன வாகவும் இருக்கும் என்பதில் நாவுக்கரசர்க்கு அசைக்கவியலா நம்பிக்கை உண்டு.

" நமச்சி வாயவே ஞானமும் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின்று ஏத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. " (4-90-2)

" நாளும் நம்முடை நாள்கள் அறிகிலோம்
ஆளும் நோய்களோர் ஐம்பதோடு ஆறெட்டும்
ஏழைமைப் பட்டு இருந்துநீர் நையாதே
கோளி லிஅரன் பாதமே கூறுமே. " (5-57-3)

" தொண்டர்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னை
சூழ்நரகில் வீழாமே காப்பான் தன்னை " (6-79-1)

என்றெல்லாம் பாடி, பிறர்க்கென முயலும் சமுதாயம் இறையுணர்வில் நிறைந்து தூநெறியாளன் துணையைச் சிக்கெனப் பற்ற வேண்டும். அத்தகு சமுதாயத்தை நாவுக்கரசர் காண விழைந்தார்.

அவர் காட்டிய வழியில் பட்டுச் செல்வதாகிய வழிபாடாற்றும் உணர்வுடைச் சமுதாயமாக விளங்க வேண்டும் என்பது அவர் வேட்கை. அவ்வழிபாடு ''யாருக்கு வந்த விருந்தோ'' என்ற வகையிலோ ஏமாற்றுவதற்கும் ஏமாறுவதற்கும் துணை போவதாகவோ இருத்தல் கூடாது. சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்தும் செய்யும் கிரியைகளின் உட்பொருள் தெரிந்தும் பாடியும் பணி செய்தும் பயன் கொள்ளும் சமுதாயமாக அமைய வேண்டும் என நாவுக்கரசர் விரும்பினார். சடங்காகவோ எதிர் பார்த்து ஏமாற்றுதலும் ஏமாறலும் இணைந்ததாகவோ வழிபாடு அமையக் கூடாது என்பது நாவுக்கரசர் விருப்பம்.

" பாவ மும்பழி பற்றற வேண்டுவீர்
ஆவில் அஞ்சுஉகந்து ஆடும் அவன்கழல்
மேவராய் மிகவும் மகிழ்ந்து உள்குமின்
காவலாளன் கலந்து அருள் செய்யுமே. " (5-99-1)

" வேதம் ஓதில்என் வேள்விகள் செய்யில்என்
நீதி நூல்பல நித்தம் பயிற்றில்என்
ஓதி அங்கோர் ஆறும் உணரில்என்
ஈசனை உள்குவார்க்கு அன்றி இல்லையே. " (5-99-4)

எங்கும் உள்ளான், என்றும் உள்ளான் என்ற தெளிவோடு தீமை செய்யின் அவன் தண்டிப்பான் என்ற விழிப்புணர்வோடு வழிபாடாற்ற வேண்டும். வஞ்சனை வழிபாட்டைக் கண்டு அவ்வாறு செய்வாரை நினைந்து இறைவன் நாணுவான். எனவே,

இறைவழிபாடு உள்ளார்ந்த வழிபாடாக ஆற்றும் சமுதாயம் காண விழைந்தார்.

### தீமையை அகற்றச் சாத்வீக நெறி

இறையுணர்வு மிக்க சமுதாயத்தினர் தீமைக்குத் துணை போக மாட்டார்கள். தீமையைப் போக்க முனைவார்கள். தீமையைப் போக்கத் தீமையைத் துணையாகக் கொள்ள மாட்டார்கள். தம்மை வருத்தியாயினும் தீமையைச் சமுதாயத்திலிருந்து துரத்த முனைவர். காந்தியடிகள் பகைவர்க்கும் அன்பு செய்யும் பண்போடு தீமையைச் செய்தாரை எதிர்க்காமல் தீமையை நீக்க முயலும் சாத்வீக முறையைத் தந்தவர். அம் முயற்சியில் எவ்வகையிலும் பிறர்க்குத் துன்பம் ஏற்படா வகையில் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றார். அவர் தந்நல மறுப்பில் சமுதாய நல உயர்வில் கண்ட நெறியே சாத்வீக எதிர்ப்பு நிலையாம் சத்தியாக்கிரக நெறி.

" நன்மையும் தீமையும் சமமாக மாட்டா நீங்கள்
நன்மையைக் கொண்டே தீமையைத் தடுத்துக் கொள்வீராக
அப்பொழுது யாருக்கும் உமக்கும் இடையே பகைமை
இருந்ததோ அப்பகைமை நீங்கி நட்பு வளரும் "

(திருக்குர்ஆன் பகுதி 24, அத்தியாயம் 41, வாசகம் 34)

என்று குர்ஆன் கூறுகிறது. இந்நெறியைப் பின்பற்றும் சமுதாயம் காண விழைந்தவர் நாவுக்கரசர். எனவேதான், பழையாறை வடதளியில் சமணர்கள் வஞ்சனையாகச் சைவர்களின் கோயிலை மறைத்துச் சமணர்களின் கோயிலாகச் செய்ததனைத் தவறு என்று உணரச் செய்து மீண்டும் சைவக் கோயிலாக மாற்றச் சாத்வீக முறையிலான உண்ணா நோன்பை நாவுக்கரசர் மேற்கொண்டு தாம் காண விரும்பிய சமுதாயத்திற்கு வழி காட்டியுள்ளார். அவர் "எம் பெருமானே! சமணர்கள் வஞ்சனையால் மறைத்த மறைப்பினை அகற்றி, எனக்கு உன் திருமேனி வண்ணத்தைக் கண்டு வணங்க வேண்டும். அவ்வாறு வணங்கி யன்றிப் போகேன்" என உண்ணாநோன்பு மேற்கொண்டு அமர்ந்தார். அரசன் உண்மை உணர்ந்து சமணர்கள் பொய்யாகச் சமைத்த விமானத்தை அகற்றினான். இதனைக் குறித்து

" தலையெலாம் பறிக்கும் சமண்கையருள்
நிலையினால் மறைத்தால் மறைக்க ஒண்ணுமோ
அலையி னார்பொழில் ஆறை வடதளி
நிலையினான் அடியே நினைந்து உய்ம்மினே. " (4.58.1)

நாவுக்கரசர் காண விரும்பிய சமுதாயத்தில் காந்தியடிகள் அருளியுள்ள சத்தியாக்கிரக நெறியே இடம் பெற வேண்டும் என்பதனை விரும்பி வாழ்ந்து காட்டியுள்ளார்.

**உடல் உழைப்பின் உயர்வு**

சமுதாயத்தில் அறிவால் உழைப்பவரும் உடலால் உழைப்ப வரும் கரத்தால் பணி செய்வாரும் கருத்தால் பணி செய்வாரும் உண்டு. இவர்களிடையே ஏற்றத்தாழ்வு இல்லை. என்றாலும், கருத்தால் பணிபுரிவார் கரத்தால் பணி புரிவாரை வஞ்சனையாய் அடிமைப்படுத்தி இரண்டாம் தரத்தினராக எண்ணியும் எண்ண வைத்தும் வருவது கண்கூடு. நாவுக்கரசர் இதயத்தின் துணை கொண்டு மூளையின் துணை கொண்டு வாழ்வுக்காம் நற்கருத் தமைந்த பாடல்கள் பல பாடியவர். அதே நேரத்து கைத்திருத் தொண்டு செய்த கருணையாளர். கைத்திருத் தொண்டின் பெருமையை நிலைநாட்டிய பெருந்தகை. சமுதாயத்தில் கருத்தால் உழைப்போர் வஞ்சனையற்ற வாழ்வினராய், உடல் உழைப்பின் உயர்வை உணர்பவராய் வாழ வேண்டுமாயின் உடல் உழைப்பை யும் மேற்கொள்ள வேண்டும் என்ற கருத்தை உடையவர் நாவுக்கரசர். எனவேதான், நாவுக்கரசர் ''மெய்த்திருத் தொண்டின் நெறிவாழ அவதரித்தவர்'' எனச் சேக்கிழார் பாடுகின்றார். எனவேதான் அவர்

" நின்ற மறையோர் கேளாநிலை யழிந்த சிந்தையராய்
நன்று அருளிச் செய்தீர்! நாண்இல் அமண் பதருடன்
ஒன்றிய மன்னவன் சூழ்ச்சி திருத்தொண்டின் உறைப்பாலே வென்றவர் "
(பெரி.பு. அப்பூதி - *13*)

என அப்பூதியடிகளார் வாயிலாக உரைத்து மகிழ்கின்றார். எனவே அப்பர் அடிகள் காண விரும்பிய சமுதாயம் உடல் உழைப்பிற்கு ஏற்றம் தரும் சமுதாயமாக விளங்கும்.

" அச்சமும் பேடிமையும் அடிமைச் சிறுமதியும் "

அற்ற சமுதாயம் காண விழைந்து வாழ்ந்து காட்டியவர் நாவுக்கரசர்.

நாட்டின் மன்னன் தவறான எண்ணம் கொண்டு, தான் நீதிக்கு அரண் செய்யும் மனையில் வாழ்பவன் என்ற நினைவு அகற்றிச் சமணர்தம் சூழ்ச்சி வலையில் சிக்கியதனை நன்கு உணர்ந்தவர் நாவுக்கரசர். நேர்மையற்றவனுக்குப் பணியக் கூடாது என்ற

உணர்வில் சமுதாயம் வாழ வேண்டும் என்ற உறுதியினர். எனவேதான் பல்லவ மன்னன் நாவுக்கரசரைக் கொணருமாறு ஆட்களை அனுப்பியபோது அவரால்

" நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம் " (6-98-1)

என்று எதிர்த்துப் பேச முடிந்தது. "அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை" (4-2-1) என்று கூற இயன்றது.

" மண்பாதலம் புக்கு மால்கடல் மூடி மற்றுஏழ் உலகும்
விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல் நெஞ்சே "
(4-94-9)

என்றெல்லாம் கூறி, நேர்மை இன்மையைக் கண்டு அடிபணியாது அஞ்சாது இருக்கும் சமுதாயத்தையே நாவுக்கரசர் காண விரும்பினார்.

## தாய்மொழி போற்றுக

நாவுக்கரசர் காண விரும்பிய சமுதாயத்தில் தாய்மொழி சிறப்பிடம் பெறும். காந்தியடிகள் தாய்மொழி வாயிலாகவே அனைத்தும் நடைபெற வேண்டும் என்பதில் ஆழங்காற்பட்டு நின்றவர். "தாய்மொழியைப் போதனா மொழியாக வைக்க வேண்டும். இதுபற்றி அரசாங்கத்தை வற்புறுத்த கல்விக் கழகங்கள் முன்வர வேண்டும்; கல்வி மாநாடுகள் நடைபெற வேண்டும். நீதிமன்றங்களும் சட்ட சபைகளும் தாய்மொழியில் நடைபெற வேண்டும்" (மகாத்மா காந்தி நூல்கள் 12ஆம் தொகுப்பு பக்கம் 25) நாவுக்கரசர்க்கும் இந்தக் கருத்து உண்டு. எனவேதான், அப்பரடிகள், ஞானசம்பந்தர்தம் திறம் செந்தமிழ் உறைப்பால் வந்த திறம் என்ற தெளிவால்

" திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தார் " (5-50-8)

என உவந்து பாடியுள்ளார். மேலும் பல இடங்களில்

" சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடு இசைபாடல் மறந்தறியேன் " (5-1-6)

" ...............தமிழ் மாலைகளால்
நாம் படிமக் கலம் செய்து தொழுதுஉய் மடநெஞ்சே " (5-102-3)

" பண்ணின் இன்மொழி கேட்கும் பரன் " (5-18-4)

" வாயி ருந்தமிழே படித்து தாளுறா
ஆயிரம் சமணும் அழிவு ஆக்கினான் " (5-58-9)

" பன்னிய செந்தமிழறியேன் " (6-91-1)

என்றெல்லாம் பாடித் தமிழ்ப்பற்று மிக்க தமிழ்ச் சமுதாயமாக வாழ வேண்டும் என்று உணருமாறு உரைத்துள்ளார். தாய்மொழி போற்றும் சமுதாயம் தழைக்கும் என்பது நாவுக்கரசர் கண்ட அனுபவம்.

## சிறுதெய்வ வழிபாடு வேண்டா

மக்கள் மனத்தை மாண்புறச் செய்யும் இறைவழிபாடு. அவ்வாறு செய்யாமைக்குக் காரணம் சிறுதெய்வ வழிபாடே ஆகும். ''இறைவன் ஒருவனே. எல்லாம் வ்ல்ல எல்லாம் அறிந்த எங்கும் நிறைந்த இறைவர் அட்பெருஞ்சோதியனாக விளங்கு கின்றார். அவரைத் தவிரப் பிற தெய்வங்கள் வணங்கத் தக்கவர் அல்லர்'' (வள்ளலார் வாழ்வும் வாக்கும்) என்பது வள்ளலார் கருத்து. இதற்கு வித்திட்ட பெருமை அப்பர் பெருமானையே சாரும். ''சிவன் எனும் நாமம் தனக்கே உரிய செம்மேனி எம்மான்'' ஒருவனே வணங்கத்தக்க பெருங்கடவுள்; ஏனைய தெய்வங்கள் சிறு தெய்வங்கள்; வணங்கத் தக்கன அல்ல என்பது திருநாவுக் கரசர் கருத்து. அவ்வாறு வணங்கும் முறையே சமுதாயத்தில் பிரிவினைகளை ஏற்படுத்துகின்றது. ஒருவனே தேவன் என்ற உணர்வில் ஒன்ற ஒன்றச் சமுதாயப் பிரிவுகள் மறைந்து ஒன்றுபட்டு உயரும் எனவும் அத்தகு சமுதாயம் அமைய வேண்டும் எனவும் எண்ணி எதிர்பார்த்தவர் நாவுக்கரசர். எனவே,

" அங்கதிரோன் அவனை அண்ணலாக் கருத வேண்டா "
(4-41-8)

" செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட்கு ஏறுமோ
அத்த னென்று அரியோடு பிரமனும்
துத்தி யம்செய நின்றநற் சோதியே. " (5-100-3)

" சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம் " (6-98-5)

" தற்பரமாய்ச் சதாசிவமாய்த் தானும் நானும் ஆகின்ற
தன்மையனை நன்மை யோடும்
பொற்புடைய பேசக் கடவோம் பேயர்
பேசுவன பேசுதுமோ பிழையற் றோமே (6-98-7)

என்றெல்லாம் கூறி, சிவன் ஒருவனே வணங்கத்தக்கவன் என்று வற்புறுத்தி யிருக்கின்றார். அவர் நோக்கமெல்லாம் ஏக தெய்வ வழிபாடே ஆகும் என்பது புலப்படுகின்றது.

## கொடையும் தொண்டும் நிறைக

நாவுக்கரசர் காண விரும்பிய சமுதாயம் ஒத்தும் உதவியும் வாழ்கின்ற மக்கள் நிரம்பிய சமுதாயமாக இருக்க வேண்டும் என்பதாகும். ''செல்வத்துப் பயனே ஈதல்'' (புறம்) என்ற அடிப் படை உணர்வோடு பொருள் பெற்றார் எல்லாம் பிறர்க்குக் கொடுத்து வாழ வேண்டும் என்பதே நாவுக்கரசர் எதிர்பார்ப்பு. எனவேதான்,

> " இரப்பவர்க்கு ஈய வைத்தார் ஈபவர்க்கு அருளும் வைத்தார்
> கரப்பவர் தங்கட் கெல்லாம் கடுநர கங்கள் வைத்தார் "(4-38-10)

எனப் பாடியுள்ளார். அவ்வாறு உதவும் உள்ளம் கொண்டார் தொண்டுள்ளத்தோடு பிறிது ஒன்றை எதிர்பாராத மனத்தோடு வாழ வேண்டும். அத்தகையோர் நிறைந்த சமுதாயம் அமைய வேண்டும் என்பதே நாவுக்கரசர் வேட்கை. ''என்கடன் பணி செய்து கிடப்பதே'' (5-19-9) என்று கூறி இதனை நினைவு படுத்துகிறார். கொடையும் தொண்டும் நிறைந்த சமுதாயமே அவர் காண விரும்பிய சமுதாயம். வாழ்க நாவுக்கரசர் வளர் புகழ்.



## 13. நாவுக்கரசர்தம் நல்லுருவம்

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே" என்றபடி உயர்ந்த உளம் கொண்டு மக்கள் நல்வாழ்வுக்கான நல்வாழ்வு வாழ்ந்து வழிகாட்டிய பெருமக்கள் புலால் உடலோடு வாழ்ந்த காலத்தும் மறைந்த பின்னரும் அவருடைய திருவுருவைக் கண்டு உள்வாங்கிக் கொள்வது நல்வாழ்வுக்கு வழியென ஞானியர் கூறுவர். "என் கடன் பணி செய்து கிடப்பதே" எனவும் இறை யருளோடு ஒன்றியிருப்பது ஒன்றே ஊனம் இன்றி வாழும் வழி எனவும் கூறி, வாழ்ந்து வழிகாட்டிய வள்ளல் திருநாவுக்கரசர் பெருமான் அவர்கள். அவர் திருவுருவம் எப்படி இருந்திருக்கும் என்பதனை அவர்க்குப்பின் ஐந்நூறு ஆண்டுகட்குப் பின்னர் வந்த அருண்மொழித் தேவராம் சேக்கிழார் பெருமான் பின் வருமாறு படம் பிடித்துக் காட்டுகின்றார்.

### அப்பர் திருவுருவம்

" மையல் துறையேறிய மகிழ்ந்து அலர்சீர் வாகீசர் மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய் விரவும் சிவசின்னம் விளங்கிடவே
எய்துற்ற தியானம் அறாவுணர்வும் ஈறுஇன்றி எழும்திரு வாசகமும்
கையில் திகழும் உழவாரமுடன் கைத்தொண்டு கலந்து கசிந்தனரே. "

பெ.பு. திருநாவுக்-77

" தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே. "

பெ.பு. திருநாவுக்-140

" கையும் தலைமிசை புனைஅஞ் சலியன; கண்ணும் பொழிமழை ஒயாதே
பெய்யும் தகையன; கரணங்களும் உடன்உருகும் பரிவின பேறுஎய்தும்
மெய்யும் தரைமிசை விழும்முன்பு எழுதரும் பின்தாழ் சடையோடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்கும்பிடும் அவர்ஆர்வம் பெருகுதல் அளவின்றால். "

பெ.பு. திருநாவுக்-167

" மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும் திருவடிவும் மதுரவாக்கில்
சேர்வாகும் திருவாயில் தீந்தமிழின் மாலைகளும் செம்பொன் தாளே
சார்வான திருமனமும் உழவாரத் தனிப்படையும் தாமும்ஆகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்துஏத்திப் பரவிச்செல்வார். "

பெ.பு. திருநாவுக்-225

" சிந்தை இடையறா அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தை மிகையாம் கருத்தும் கையுழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறும்
அந்தமிலாத் திருவேடத்து அரசு "

(பெ.பு. திருஞான-270)

ஆதாரம் உண்டா

இப்பாடல்களால் அறியவரும் செய்திகளாவன: அவர் திருவுருவத்தில் தூய்மையான திருநீற்றினை அணிந்திருந்தார். உருத்திராக்க மாலையை அணியாகப் பூண்டிருந்தார். சிவனார்தம் திருவடி நிலையில் மனம் இலயித்துத் தவ உணர்வில் நிறைந்து நின்றார். சிவன்பால் அன்பு காரணமாகக் கண்களில் கண்ணீரைப் பெருக்கிய இயல்பினர். எப்போதும் தேவாரத் திருமந்திரங்களை அவர் வாய் இடையறாது ஓதிக் கொண்டிருந்தது. உழவாரத்தைத் தாங்கிய திருக்கரத்தினராய் விளங்கினார். மேலே கண்ட பாடல்களின் மூலம் சேக்கிழார் தரும் நாவுக்கரசர் திரு வுருவம் இதுவாகும். கற்பனையாக இப்படி உருவகித்தாரா? அன்றி ஆதாரங்களோடு வடிவமைத்தாரா? ஆதாரங்களோடு வடிவமைத்துக் காட்டியுள்ளார் என்றால், அதற்குத் துணையாய் அமைவன நாவுக்கரசர்தம் திருவாக்குகளாகத்தான் இருக்க முடியும். அவை யாவை?

## திருநீறு பூசிய மேனியர்

அவர் திருமேனியில் நிறைய நீறு பூசி இருந்தார் என்பது அவர் வணங்கிய பரம்பொருள் ''மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனி'' (4-5-1)யை உடையது; ''நீறு மெய் பூச வல்லது'' (4-4-3) ''நீறுமெய் பூசி'' (4-51-3) நின்றது; என்றெல்லாம் இவர் பாடியிருத்தலால் அப்பரம்பொருட்கு உகந்த ஒன்றினை இவர் ஏற்றுப் போற்றியிருப்பார்; புனைந்து மகிழ்ந்திருப்பார் என்பதில் ஐயம் இல்லை. மேலும் ''நீற்றினை நிறையப் பூசி'' (4-64-8); ''திருவெண்ணீறு அணியாத திருவில் ஊரும்'' (6-95-6); ''வெந்தநீறு விளங்கி அணிந்திலர்'' (5-95-8); ''வெந்தநீறு மெய்பூசும் நல மேனியர்'' (5-8-6); நீற்றினை நிறையப் பூசி நித்தலும் நியமம் செய்து ஆற்று நீர் பூரித்தாட்டும் அந்தணனார் (4-49-2) ''மந்திரம் நமச்சிவாய ஆக நீறு அணியப் பெற்றால் வெந்தறும் வினை'' (4-77-4); ''சிவாயநம என்று நீறு அணிந்தேன்'' (4-94-6); ''அருநோய்கள் கெட வெண்ணீறு அணிந்தேன்'' (4-95-6) என்பன போன்ற அவர்தம் உரைகளால் நாவுக்கரசர் தம்முடைய திருமேனி ''தூய வெண்ணீறு துதைந்த நலன்மேனி''யாய் விளங்கியது என்பதில் ஐயம் இல்லை.

## உருத்திராட்சம் அணிந்தவர்

உருத்திராக்க மணிமாலையை அணிந்திருந்தார் என்பதனை, ''கண்டியிற் பட்ட கழுத்துடையார்'' (4-95-6) எனச் சிவனையும் சிவனில் இருந்து திருமாலையும் பிரமனையும் பிரிக்க ''கண்டி பூண்டு கபாலம் கைக் கொண்டிலர்'' (5-95-10) எனவும் நாவுக்கரசர் பாடியுள்ளதால் சிவன் எனும் நாமம் தமக்கே உடைய செம்மேனி எம்மான் உருத்திராக்க மாலை அணிந்தவர் என்பது தெளிவு. எனவே அவர் அடியவராம் அப்பர் சுவாமிகளும் கண்டி பூண்ட கழுத்தினர் என உணர்ந்து சேக்கிழார் உருத்திராக்க மாலை அணிந்தவர் என்று உணர்ந்து அவரை உருவகித்துள்ளார்.

## எளிய உடையினர்

கந்தை மிகையாம் கருத்தினர் எனக் கூறியுள்ளதனால் நாவுக்கரசர் தோற்றம் எளிமைத் தோற்றம் என்பதனை உணரலாம். அவர் வேண்டாமையை ஏற்றுப் போற்றியவர் என்பது அவர்தம் அருட்பாடல்கள் உணர்த்துவது. ''தீவினை ஒப்பத் தீர்த்திடும் ஒண்கழலார்க்கு அல்லது எப்பற்றும் இலன்'' (5-96-7) எனத்

தமது பற்றற்ற தன்மையைப் பகர்கின்றார். "கெடுவது இப்பிறவி சீசீ கிளரொளிச் சடையினீரே" (4-76-10) "எத்தாயர் எத்தந்தை எச்சுற்றத்தார் எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார் செத்தால் வந்து உதவுவார் ஒருவர் இல்லை" (6-22-1) என்றெல்லாம் பேசுவதாலும் அவர் ஆடையைக்கூடப் பெரும்பாரமாகவே கருதி அதற்கு அவ்வளவு சிறப்பிடம் கொடுத்திருக்க மாட்டார் என்பது தெரிகிறது.

## சிந்தை இடையறா அன்பினர்

தூய திருநீறு துதைந்த நல்மேனியராய், கண்டிகைகையே ஆரமாகக் கொண்டு எளிமைத் தோற்றத்தினராய் விளங்கிய நாவுக்கரசர் சிந்தையில் இறையன்பு நிறைந்திருந்தது என்கிறார் சேக்கிழார். அகத்தின் அழகு முகத்தில் என்றாற்போல நாவுக்கரசர் சிந்தைத் திருவழகு அவர்தம் தோற்றத்தில் வெளிப்பட்ட நிலையை உணர்ந்துதான் சிந்தை இடையறா அன்பினர் என்றார். அதற்கு அப்பர் பெருமான் பாடல்களே சான்றுகளாய் அமைந்துள்ளன.

" நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்
நினையாது ஒருபோதும் இருந்தறியேன் " (4-1-2)

" அளவு படாததோர் அன்போடு ஐயாறு அடைகின்ற போது " (4-3-11)

" என்னுள்ளம் கோயிலாக்கி அன்பிருத்தி " (4-5-2)

" தன்அடியார் மனத்து அன்பினை " (5-21-6)

" என்றும் இடையறா அன்பராம் அவர்க்கு அன்பர் ஆரூரரே " (5-7-4)

" கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவுளாரே " (6-95-10)

என்றெல்லாம் பாடித் தம் உள்ளத்தே இறையன்பும் இறையடியாரிடத்து அன்பும் இடையறாது நிறைந்து நின்றதனையும் கூறியுள்ளதனைச் சான்றுகளாகக் காட்டலாம்.

## கண்ணீர் ததும்பும் தண்ணியர்

மார்பு ஆர அன்பு நீர் பொழியும் திருவுருவினர் நாவுக்கரசர் என்கிறார், சேக்கிழார். இவ்வாறு இவர் கூறுவதற்கு நாவுக்கரசர் நன்மொழிகளே காரணமாயின.

"நேயமே நெய்யும் பாலாய் நிறையநீர் அமைய ஆட்டி" (4-76-4) ஆனந்தம் கண்டவர். அன்புளத்தின் வெளிப்பாடு கண்ணீர் என்பது வெளிப்படை. மேலும்,

> " கனிமனத்தொடு கண்களும் நீர்மல்கிப்
> புனிதனைப் பூவனூரானைப் போற்றுவார் " (5-65-6)

> " ஆர்ஒருவர் உள்குவார் உள்ளத் துள்ளே
> அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும் " (6-18-11)

என்றெல்லாம் பாடி. அன்பின் விளைவாக "அன்பிற்கும் அடைக்கும் தாழ் உண்டோ" என்றபடி இறையருளை எண்ணி எண்ணிக் கண்ணீர் சிந்தியவர் நாவுக்கரசர் என்பதனை நன்கு உணர்ந்தே அருண்மொழித் தேவர் மார்பாரப் பொழியும் கண்ணீர் உடையவர் என்கிறார். அவர்தம் உள நெகிழ்ச்சியால் கண்களில் நீர் ஆறெனப் பெருக்கெடுத்து ஓடியதனை "புண்ணியா உனக்கடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே" (6-99-1-10) என்ற மொழிகள் வாயிலாக மானசீகமாகக் கொண்டு போற்ற முடிகின்றது.

### எப்போதும் திருப்புகழ் பாடும் வாயினர்

சிவனடிக்கே அன்பு வைத்த செம்மை நலம் மிக்க திருநாவுக் கரசர்தம் திருவாய் எப்போதும் பதிகச் செய்யுள்களை ஓதிய வண்ணம் இருந்தது. ஈறு இன்றித் திருவாசகங்கள் எழுந்தன என்பதனைச் சேக்கிழார் உணர்ந்து நாவுக்கரசர் உருவத்தை அமைத்துள்ளார்.

> " தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்
> நலம்தீங்கினும் உன்னை மறந்தறியேன் " (4-1-6)

> " நமச்சிவாயவே நானறி விச்சையும்
> நமச்சிவாயவே நாநவின்று ஏத்துமே " (4-90-2)

> " நீதியால் நின்னையல்லால் நினையுமா நினைவிலேனே "
> (4-63-1)

> " அண்ணா மலையுளானே என்பொனே உன்னை யல்லால்
> ஏது நான் நினைவிலேனே " (4-63-3)

> " உன்னையல்லால் சொல்லுமா சொல்லிலேனே " (4-63-2)

> " உன்நாமம் என்நாவில் மறந்தறியேன் " (4-1-6)

> " படைக்கலமாக உன்நாமத்து எழுத்து
> அஞ்சும்என் நாவிற் கொண்டேன் " (4-81-8)

" மாற்றேன் எழுத்தஞ்சும் என்றன் நாவின் மறவேன் " (6-47-2)

" உனது அருளால் திருவாய் பொலியச் சிவாயநமவென்று
நீறு அணிந்தேன் " (4-94-6)

இப்படி இறைவன் திருநாமப் பெருமைகளை இடையறாது ஓதிக்கொண்டிருந்த செய்தியை நாவுக்கரசர் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார். எனவேதான், சேக்கிழார் கண்ட திருவுரு எப்போதும் பதிகச் செஞ்சொல் மேவிய திருவாயை உடையதாய் விளங்குகின்றது.

## நாயகன் திருவடி தைவரு சிந்தையர்

இறைவனுடைய திருநாமத்தை மறவாது ஓதி அவன் புகழ் பாடும் நிலை ஏற்பட வேண்டும் எனின், உள்ளத்தில் அந்த உணர்வு நிறைந்து நிற்க வேண்டும். இதனைத்தான், நாயகன் சேவடி தைவரு சிந்தையாய் விளங்கியது நாவுக்கரசர் திருவுருவம் என்கிறார் சேக்கிழார். இவ்வாறு அவர் கூறுவதற்கு

" சிந்தித்து எழு மனமே..... கழல் நாள்தொறும் நம்தமை ஆள்வனவே "
(4-82-5)

" மனத்துள் மாயனை மாசறு சோதியை
நினைத்திட்டு ஊறு நிறைந்தது என் உள்ளமே " (5-15-2)

" உள்ளம் உள்கலந்து ஏத்த வல்லார்க்கு அலால்
கள்ளம் உள்ளவர்க்கு அருள்வான் அலன் " (5-82-4)

" மனத்தகத்தான் தலைமேலான் வாக்கில் உள்ளான்
வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர் இனத்தகத்தான் "
(6-8-9)

" உள்ளமாய் உள்ளத்தே நின்றாய் போற்றி " (6-32-8)

என்பன போன்ற நாவுக்கரசரின் நல்வாக்குகளே காரணங்களாய் அமைந்துள்ளன.

## உழவாரப் படை ஏந்திய கையினர்

திருநாவுக்கரசர் திருக்கரம் உழவாரப் படையை எப்போதும் பற்றி நிற்பது. எனவேதான், சேக்கிழார் ''கையுழவாரப் படை'' ''உழவாரத் தனிப்படை'' என்றெல்லாம் கூறி நாவுக்கரசர் கையில் எப்போதும் உழவாரப் படையைத் தாங்கி நின்று மக்கட்குத் தொண்டாற்றி வந்தார் எனக் கூறுகின்றார். இவ்வாறு சேக்கிழார் திருநாவுக்கரசர் உருவத்தைக் கூறுவதற்குப் பல சான்றுகள் வேண்டா. ஒன்றே போதும்.

" நம்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே. " (5-19-9)

என்ற திருவாக்கு ஒன்றே போதும்.

" தொண்டலால் துணையும் இல்லை " (4-40-4)

" தொண்டர்கள் தொழவும் வைத்தார் " (4-38-4)

" தொண்டர் தொழுது ஏத்தும் சோதி ஏற்றார் " (6-10-5)

" உழைத்தும் துள்ளியும் உள்ளத்துளே யுருஇழைத்தும் " (5-16-8)

என்பன போன்ற நாவுக்கரசர் வாக்குகளால் அவர் கையில் உழவாரப் படை நீங்கா இடம் பெற்றிருந்ததனை உறுதிப்படுத்தும்.

## தளர்ந்த வயதினர்

"நாவரசருக்கு கி.பி. 656-ஆம் ஆண்டு 81 வயது. வாகீசர் நள ஆண்டு சித்திரை மாதம் 12-ஆம் தேதி (கி.பி. 656 ஏப்ரல் 24-ஆம் நாள்) தேய்பிறை 10-ஆம் நாள் ஞாயிறு சதய விண்மீன் நாள் அன்று திருப்புகலூர் புண்ணியனார் அடிசேருதல்" என வித்துவான் மா. சிவகுரு நாதப்பிள்ளை எழுதிய 'நாயன்மார்கள் வரலாற்றில் பலவகைச் செய்திகள்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

நாவுக்கரசர்க்கு வயது 65 ஆண்டானபோது ஞான சம்பந்தர்க்கு ஒரு வயது என்றும் நாவுக்கரசர் தமது 67-ஆவது வயதில் ஞானசம்பந்தப் பிள்ளையைச் சந்தித்தார் என்றும் கூறுகின்றார் இவ்வாசிரியர். எனவே, உலகம் அறிந்தவராகப் பல ஊர்கட்கும் சென்று வந்தவராக விளங்கிய காலம் அவரின் 65-ஆம் வயதுக்குப் பின்னர்த்தான் என்பது புலப்படுகிறது. எனவே, அவர் உலகத்தவர் கண்களில் வயோதிகராக அறிமுகம் ஆனதில் வியப்பு இல்லை. எனவேதான் சேக்கிழார் அவர்கள் "திருமேனி தனில் அசைவு' இருந்தது என்று குறிப்பிட்டுள்ளார். இதற்கு அவர்க்கு ஆதாரமாக இருந்தவை நாவுக்கரசர் தம் திருவாக்குகள் அவற்றுள் சில:

"வெண்மயிர் விரவி" "இருமியூன்றி" "இளையனும் அல்லேன்" "மிக்க அயர்வு" என்பன போன்ற தொடர்களால் நாவுக்கரசர் தம்மைக் குறிக்கின்றார்.

" முன்பெலாம் இளைய காலம் மூர்த்தியை நினையாதோடிக்
கண்கண இருமி நாளும் " (4-28-1)

" விளைக்கின்ற வினையை நோக்கி வெண்மயிர் விரவிமேலும்
முளைக்கின்ற வினையைப் போக முயல்கிலேன் இயல வெள்ளம்
திளைக்கின்ற முடியினான்தன் திருவடி பரவ மாட்டாது
இளைக்கின்றேன் இருமியூன்றி என்செய்வான் தோன்றினேனே "

(4-78-8)

இவ்வாறு வரலாறு கொண்டும் நாவுக்கரசர்தம் வாய்மொழிகள் கொண்டும் அருண்மொழித்தேவராம் சேக்கிழார் நாவுக்கரசர்தம் நல்லுருவத்தை நம் கண்கட்குப் புலப்படும்படி தம் நூலில் சொல்லோவியமாக்கி நாம் வழிபடுவதற்கு நமக்குக் கொடுத்துள்ளார்.

வாழ்க வையகம்.



# சுந்தரர்

## பொருளடக்கம்

# சுந்தரர்

## 1. சுந்தரர் வந்தார்

சுந்தரர்! பெயருக்கேற்ப, உருவால் சுந்தரர் - அழகர்! பெற்ற வாழ்வமைப்பால் சுந்தரர்! உற்ற துணைவியரால் சுந்தரர்! குதலையும் மதலையும் கூடிய வளர் பருவத்து இளமையில் தானே வந்தமைந்த அரச போக வாழ்வினால் சுந்தரர்!

இறைவனே அடியெடுத்துக் கொடுத்த சுந்தரச் சொல், 'பித்தன்' என்பது; சுந்தரத் தொடர், 'தில்லை வாழந்தணர்' என்பது; இவற்றைக் கொண்டு தொடங்கியே, பாமாலை புனைந்து வழிபட்டார்; இது பிற பல அடியார்களுக்கு அமையாத சிறப்பு! இதனாலும் இவர் சுந்தரர்!

தொண்டர்தம் பெருமை பரவவும், தமிழ்த்தாய், மேலும் நல்லதொரு அணிகலன் அணியவும், சேக்கிழாரின் கவித்துவ ஆற்றலை உலகறியவும் காரணம், 'திருத்தொண்டர் புராணம்'. இந்தச் சிறப்புக்கு மூலகாரணம், சுந்தரரின் திருத்தொண்டத் தொகையன்றோ? இதனை,

" மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திடத்
தீதிலாத் திருத்தொண்டத் தொகை தர... " (பெரிய-25)

என்கிறார், சேக்கிழார் பெருமான்.

சுந்தரர் பிறப்பு, மேலைக் கயிலை வாழ்வோடு தொடர்புபடுத்தி உரைக்கப்படுகிற பிறப்பு!

கயிலையில் ஆலால சுந்தரராய் - சிவனின் அணுக்கத் தொண்டராய் இருந்தார். அதுபோலவே, உமையவள் வழிபாட்டுக்காகப் பூப் பறிக்கும் பணிகொண்ட, அநிந்திதை -

கமலினி என இரு இளமகளிர் இருந்தனர்; இவர்களை நந்தவனத்தில் கண்ட ஆலால சுந்தரர், 'இளமை மீதூர இன்பத் துறையினில்' நாட்டம் கொண்டார். இதனை உணர்ந்த இறைவன்,

" மாதர் மேல் மனம் வைத்தனை; தென்புவி
மீது தோன்றிஅம் மெல்லிய லாருடன்
காதல் இன்பம் கலந்தணை வாய் " (பெரிய. திருமலை - 27)

என்றவாறு அருட்சாபமிட்டார். கயிலையில் இறைவன் திருவடிப் பணியைவிட்டு நீக்கிய சாபம் இது. என்றாலும், சாபத்தையே ஒருவரம் போல மாற்றிக்கொண்டவர். சராசரி மனிதனாய், மண்ணுலக வாழ்வின்பங்களில் மயங்கிவிடுகிறபோது, அதனைத் தடுத்திட வேண்டி இறைவனிடம் உறுதியும் பெற்றார்.

" முன்பு நீ, நமக்குத் தொண்டன், முன்னிய வேட்கை கூரப்
பின்பு நம் ஏவலாலே பிறந்தனை மண்ணின் மீது "

என்பார் சேக்கிழார். (பெரிய தடுத். 67)

ஆக, பலரைப்போலப் பழவினை நுகர்ச்சிக்காகவன்றி இறைவனின் நேரடி ஆணையாலே வந்தமைந்த பிறப்பு! இதனை, ''தானெனை முன் படைத்தான்'' என்ற திருநொடித்தான்மலைத் திருப்பதிகத்தாலும் அறியலாம். இது, பிற பல நாயன்மாருக்குக் கிடைக்காத பெரும் சிறப்பு!

மனிதராய்ப் பிறந்த எவரும், சீவபோதம் நீங்கிச் சிவபோதம் கனிந்த நிலையில், இறைவனின் திருவடி அணுகப் பெறுவர்; உடனிருக்கப் பெறுவர்; சிவ சோதியுள் கலந்தவர் சிலர். இது சித்தாந்த சைவ சமய நியதி.

" போத நிலை முடிந்தவழிப் புக்கு உடனானர் " [1]

திருஞான சம்பந்தர்.

" நண்ணிய சிவானந்த ஞான வடிவேயாகி
அண்ணலார் சேவடிக் கீழ் ஆண்ட அரசு அமர்ந்திருந்தார் " [2]

என்பது அப்பர் பெருமான் பெற்ற முத்திநிலை பற்றிய குறிப்பு.

" என்றும் என் வலத்தில் மாறிலாய் நிற்க " [3]

என்பது, இறைவனுக்குக் கண்ணளித்த கண்ணப்பர் பெற்ற இறுதிப் புனித நிலை. ஊன உடம்புடன், முத்திப்பேறு யாருக்கும் வாய்வதில்லை. ஆனால், ஊன உடம்போடும், உற்ற

1. பெரிய. திருஞான. 1253
2. பெரிய திரு நாவு. 427
3. பெரிய. கண்ண. 135

துணையாயிருந்த சேரமானுடனும், வெள்ளை யானை சுமக்கக் கயிலை அடைந்த பெருமை சுந்தரர் ஒருவருக்கே கிடைத்த சிறப்பு! சுந்தரரைச் சார்ந்திருந்ததால், சேரமானுக்கும் இச்சிறப்புக் கிடைத்தது.

" ஞான ஆரூரைச் சேரரை அல்லது யாம் அறியோம்
மானவ ஆக்கையொடும் புக்கவரை... "[4]

என்ற திருவாக்கால், நம்பியாண்டார் நம்பி புகழ்ந்துரைக்கிறார்.

மறையோதும் ஆதிசைவ மரபில் பிறந்து, அரசர் மகனாய் வள வாழ்வு பெற்று, 'முனைப்பாடி மன்னர்'[5] எனப் பெயர் பெற்ற பெருமைக்குரியவர் சுந்தரர்.

அன்றைய நடுநாட்டின் பகுதியாக விளங்கிய திருமுனைப் பாடிக்கு அண்மையில் உள்ளது திருநாவலூர். 'திரு நாம நல்லூர்'[6] என இன்று வழங்குகிறது. விழுப்புரம் - திருச்சி இருப்புப் பாதையில் உள்ள இருந்தை என்னும் நிலையத்துக்குக் கிழக்கே 4 கி.மீ. தொலைவிலுள்ளது.

இங்கு வாழ்ந்தவர் சடையனார். ஆதி சைவ மறையவர் மரபினர். இவர் துணைவியார் இசைஞானியார். இவர், திருவாரூரை அடுத்துள்ள கமலாபுரத்தில், கௌதம கோத்திரத்து ஞான சிவாசாரியார் மகள் என்பது திருவாரூர்க் கல்வெட்டொன்றால் அறியமுடிகிறது [7].

இவர்கள் முன்செய் தவத்தால் பிறந்தது ஓர் ஆண் குழந்தை. பிறந்த அக்குழந்தைக்கு 'நம்பி ஆரூரர்' எனப் பெயரிட்டு மகிழ்ந்தனர்.

இதனை,

" அம்மான்தன் திருப்பேர் கொண்ட தொண்டன் ஆரூரன் "[8]
" சீராரும் திருவாரூர்ச் சிவன் பேர் சென்னியில் வைத்த ஆரூரன் "[9]

என வரும் அகச் சான்றுகளால் அறியலாம்.

குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி தத்தித் தத்தித் தளர்நடை பயில்கிற காட்சி கண்டு, பெற்றவர்கள் பூரித்துப் போயினர். மற்றவர்கள் மகிழ்ச்சியில் மிதந்தனர்.

---

4. திருத்தொண்டத் தொகை 86
5. பெரிய. வெள்ளானை. 27
6. S.I.I. Vol. II Part ii No. 38
7. நால்வர்களும் கல்வெட்டுகளும் (2001) கோவை கிழார். ப 70.
8,9. சுந்தரர் தேவாரம் 89:11

அந்த நாட்டை ஆண்ட நரசிங்க முனையரையன் என்ற சிற்றரசனும் ஒரு நாள் இக் கோலம்மிகு காட்சியைக் காண நேர்ந்தது.

பிள்ளைமை தந்த அக் கொள்ளையழகுக் காட்சியில் மனம் பறிகொடுத்த அம் மன்னவன், பெற்றவர்களை அணுகித் தான் பெற்ற மன மகிழ்ச்சியை உரைத்தான். அக்குழந்தையைத் தன் குழந்தையாக வளர்க்க - 'மகன்மை' கொள்ள - விருப்பம் தெரிவித்தான். அவர்களும் உடன்பட்டனர். அன்று முதல்,

"பெருமைசால் அரசர் காதற் பிள்ளையாக
அரசிளங் குமரற் கேற்ப அன்பினால் 'மகன்மை' "[10]

கொண்டான்.

அரசருக்கும் மகனாகிச் சுந்தரர் வளர்ந்தார். மரபுக்கேற்ப, கலைகள் பலவும் பயின்றார்; மணப் பருவமும் அடைந்தார். தந்தை சடையனார், குலம் பேசிக் குணம் பேசிப் புத்தூர்ச் சடங்கவி சிவாச்சாரியார் மகளைச் சுந்தரர்க்குத் 'துணைவியாக' என முறைப்படிப் பேசி முடிவு செய்தனர்.

நரசிங்க முனையரையரொடும் கலந்து பேசி, மண நாளும் குறித்தனர். ஊர் திரண்டு வாழ்த்த வேண்டி மண ஓலைகளும் அனுப்பினர்.

மண நாளும் வந்தது. முளைப்பாலி கண்டனர். சுந்தரர் கையினில் கங்கணம் அணிவித்தனர். முரசு முழங்க,இன்னியம் ஒலிக்க புரவி மேலேற்றி மணப்பெண் வீட்டிற்கு அனுப்பி வைத்தனர்.

அங்கே, மணமகன் அலங்காரம் நிகழ்ந்தது. நகம் களைந்தனர். புருவம் திருத்தினர். வார்ந்த குடுமியை வாரிக் கட்டினர். சந்தனம் பூசினர். மண நீர் தெளித்தனர். பிணையல், மாலை, தார், துணர், இணர், கண்ணி, கோதை, தாமம், தொங்கல் எனப் பலவகை மலர் மாலைகளை ஏற்ற இடங்களில் அணியச் செய்தனர்.

மங்கல கீதங்கள் எழுந்தன. ஊராரும் உறவோரும் மறையவரும் சூழ்ந்திட மண வீடு அடைந்தார், சுந்தரர்.

அங்கே நிறைகுடம், தூபம், தீபம், பாலிகைகள், அறுகு, சுண்ணத் தெண்ணீர் முதலியன ஏந்தி, இள மகளிர் கூடி வரவேற்று மணமேடைக்கு அழைத்துச் சென்றனர்.

கண்டவர்கள் மகிழ்ந்தனர்! காணக் கண்ணிரண்டு போதாது, ஆயிரம் வேண்டுமென வியந்து நின்றனர்!

10. பெரிய. தடுத் 5

மணம் கொள்ளும் நேரமும் நெருங்கியது. அப்போது, நரைத்த முடியும், திரைத்த தோலும், தளர்ந்த உடலும் உடைய முதிய மறையவர் ஒருவர் அங்கு வந்தார். கூடியிருந்தோரை நோக்கி, 'அவையோரே! கேளுங்கள்; என் வழக்கைத் தீருங்கள்; இங்கே மணக்கோலம் கொண்டிருக்கும், ஆரூரன், என் அடிமை; இவன் தந்தைக்குத் தந்தை, 'நாங்கள் வழிவழி உனக்கு அடிமை' என, எனக்கு ஓலை எழுதித் தந்துள்ளான்; ஆகவே, அவன் பெயரனான இவனும் இப்போது எனக்கு அடிமை' என்றார்.

கேட்டோர் திகைத்தனர்; சிலர் கேலியாய் நகைத்தனர்; மணம் செய் வீட்டாரும், சுந்தரரும் சினந்தனர்; 'அந்தணர், அந்தணர்க்கு அடிமை ஆவதுண்டோ? அடாதது இது! அதிசயம் இது!' என எதிர்வாதம் பேசினர்.



*தடுத்தாட் கொண்ட வேதியர் கோயிலுள் புகுந்து மறைதல்*

'பித்தன் இவன்' எனச் சினந்து திட்டிய ஆரூரர், 'நீ அந்த அடிமை ஓலையைக் காட்டு' என முதியவரை அணுகினார். தேடியும் அறியாத் திருவடியினார், ஓடி ஒளிய முயன்றார். அதனை நீ காணத் தகுதியில்லை என மறுத்துரைத்தார். முதியவரிடமிருந்து ஓலையை வலியப் பறித்துக் கிழித்தெறிந்தார் ஆரூரர்.

''வழக்கு முடியாதிருக்கவும், வன்மைசெய்தான் இவன்; எனவே, என்வாதம் உண்மையாயிற்று'' என்ற முதியவர், ஓலமிட்டு அரற்றினார்.

‘‘உம் ஊர் எது? உம் இருப்பிடம் எது? நீர் சொல்வது உண்மையாய் இருந்தால், உம் ஊரிலேயே வந்து வழக்கைத் தீர்த்துக்கொள்ளலாம்?’’ என்றார் ஆரூரர்.

‘‘இவன் கிழித்த ஓலை, ‘படி’ ஓலை; மூல ஓலை என் ஊரில் உள்ளது; அங்குச் சென்று அதனை எடுத்துக் காட்டி வெல்வேன்’’ எனச் சொல்லி நடந்தார் முதியவர். அவர்பின் அனைவரும் சென்றனர்.

திருவெண்ணெய்நல்லூரில், ஆன்றோர் சபையைக் கூட்டி அங்கும் வாதிட்டார், அந்த முதியவர். ஆரூரர் கையில் கிடைக்காதபடி, அவையிலிருந்தோரிடம், மூல ஓலையையும் காட்டினார். ஆவணத்தை நுணுகி ஆய்ந்த அவையினர், உண்மை உணர்ந்தனர்.

‘‘ அந்தணர் வென்றார்; ஆரூரர் தோற்றார்;
அடிமை அவர்க்கு இவர் ’’

என்று தீர்ப்பு வழங்கினர்.

வேற்றாராய் வந்தவர்க்குத் தோற்ற ஆரூரரும் அவர்தம்மைச் சார்ந்தோரும், அவையோரும், செய்வதறியாது திகைத்து நின்றனர்.

வெற்றிப் பெருமிதம் கொண்டு நின்ற முதியவரிடம், ‘நீர், திருவெண்ணெய் நல்லூர்ரைச் சார்ந்தவரென்பது உண்மையானால், உம் வீட்டையும், உற்ற பிற உடைமைகளையும் எங்களுக்குக் காட்டுங்கள்’ என ‘மடக்கிப்’ பிடித்தனர் அவையோர்.

சரி என, முன்னே விரைந்து சென்ற முதியவர், வெண்ணெய் நல்லூரின் திருவருள்துறைக் கோயில் நோக்கி நடந்தார். நடை, பின்னர் ஓட்டம் ஆயிற்று! பின் தொடர்ந்தனர் அனைவரும்.

‘‘ காணக் காணாவே காணாமல் போனார், அந்த முதியவர் ’’

விரிந்த கண்கள் விரிந்திருக்க, வாய்களும் விரிந்திருக்க, தெரிந்த மொழி மறந்திருக்க, செய்வதும் மறந்திருக்க, திகைத்து நின்றனர் அனைவோரும்! ஆரூரர் நிலை, சொல்லவும் வேண்டுமோ! அந்நிலையில்,

‘‘ துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்துவந்து
நன்புல மறையோர்முன்னர் நாம் தடுத்தாட்கொண்டோம் ’’

என்ற ஒரு ஒலித்தொடர் வானில் எழுந்தது!. முன்னை நினைவுகள் மூண்டெழுந்தன; உண்மை உணர்ந்தார் ஆரூரர். தம்மைத் தடுத்தவர், கயிலைத் தம்பிரானே! அன்று, கயிலையில் அவரளித்த

சொற்பொருளே, இன்று நிகழ்ந்தது எனத் தெளிவு கொண்டார், ஆரூரர்! தாயின் குரல் கேட்ட, கன்றெனக் கதறினார்.

'வன் சொல் பேசி வாதம் செய்தனை; ஆதலால் நீ 'வன்தொண்டன்' என்னும் பெயர் பெற்றனை; நமக்கு ஏற்ற சிறந்த அர்ச்சனை பாட்டேயாகும்; ஆதலால், தமிழ்ச் சொல்லால் பாமாலை புனைந்து பாடுக! என்றருளினார், இறைவன்.

''யாதுமறியா நான், இறைவனிடமே வாது செய்தேனே! ஏது சொல்லிப் பாடுவேன்? எச் சொல்லால் பாடுவேன்?'' எனத் தயங்கினார்.



' ஏது சொல்லிப் பாடுவேன்.....

''பித்தன் என என்றனை அழைத்தாய்; அதனையே 'முதல்' ஆக்கிப் பாடுக, என்றருளிச் செய்தார்.

'' பித்தா பிறை சூடீ!, பெருமானே! அருளாளா! ''

என்று தொடங்குகிற, 'இந்தளம்' குழைந்த இசைப் பாப் பிறந்தது. அமுதம் தமிழாகியது; அழகே வடிவாகியது; இமையவள் கணவர் மேல் இசைவு பெருகியது. தொடர்ந்து பதிகங்கள் பல பிறந்தன.

தடைபட்ட மணத்தால் தவித்துப் போன மணமகள் - சடங்கவியார் மகள் - சுந்தரரையே நினைந்துருகியவராய்ச் சில நாளிருந்து, சிவலோக வாழ்வு பெற்றார்.

பித்தனை முத்தமிழால் பாடத் தொடங்கிய சுந்தரர், அப்பர் பெருமானைச் சைவத்துக்குத் திருப்பிய திருவதிகை முதலாம் பல தலங்களையும் வழிபடத் தொடங்கினார். அங்கு ஓரிரவு சித்தவட மடத்தில் தங்கினார்; முதியவர் வடிவில் அவர் இருந்த மடத்தில் தங்கிய பரமன், அவருக்குத் 'திருவடி தீட்சையும்' அருளினார்.

திருவதிகை நீங்கிய சுந்தரர், திருவளர் ஒளிசூழ் தில்லையை அடைந்தார். தடுத்தாட்கொண்ட பிரான், இங்கு, தம் எடுத்த பொற்பாதம் விளங்க ஆடும் கூத்துக் கண்டார்.

" ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள, அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணமொருமூன்றும் திருந்துசாத் துவிகமேஆக
இந்துவாழ் சடையான்ஆடும் ஆனந்த எல்லையில் தனிப்பெரும் கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார் "

சுந்தரர். அப்போது 'ஆரூரில் நம்மைக் காண வருக' என விண்ணிலிருந்து ஓர் ஆணை பிறந்தது; அது, இறைவாக்கு!

விரைந்தார் சுந்தரர்! நற்றமிழ்ச் சம்பந்தர் பிறந்த தோணிபுரம் எனும் சீர்காழி முதல், வழித்தலங்கள் பலவற்றையும் வணங்கிப் பண்ணிசை பாடித் திருவாரூர் வந்தடைந்தார்.

ஆரூரின் அம்மானை ஆரூரர் காண வந்தார், முதல் முறையாக. கோயில் வாயிலை அடையும் முன்னரே,

" கரையும் கடலும், காலையும் மாலையும் எல்லாம் "

என்னும் உரை கடந்த பாமாலை பிறந்தது! ஏழிசையாய், இசைப் பயனாய், இன்னமுதாகி விளங்கும் இறைவன், யாழினும் இனிய இசைப் பாமாலை பெற்று மகிழ்ந்தார்!

" தோழமையாக உமக்கு நம்மைத் தந்தனம் "[11]

என்றருளிச் செய்தார். 'நீ அன்று வெண்ணெய்நல்லூரில் கொண்டிருந்த திருமணக் கோலத்தையே இனி என்றும் கொண்டிருந்திடுக' என்று ஆணை அருளினார்.

ஆளாய் - அடிமையாய் இருந்த ஆரூரர், தோள் தொடும் உரிமை பூண்டு "தம்பிரான் தோழரானார்". ஒருநாள் மணக் கோலம் கொண்டிழந்தவர், நாளும் அதனையே கொண்டிருக்கும் நற் பேறு பெற்றார்! நாயன்மார் யாரும் பெற்றறியாப் பேறு இது!

11. பெரிய. தடுத் 127

பரவையார் உறவானார்

கயிலையயில், உமையவட்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தவர்கள், கமலினி - அநிந்திதை என இள மகளிர் இருவர். இவர்கள்மேல் மனம் வைத்ததனால் சிவனார் சினத்திற்கு ஆளான ஆரூரர் போலவே, இவ் இருவரும் அவர்மேல் ஆசை வைத்திருந்தனர்.

எனவே, ஆரூரர் மானுடப் பிறப்புப் பெற்றதுபோலவே, இவர்களும் மண்ணுலக வாழ்வு அடைய நேர்ந்தது.

இவர்களில், கமலினி, பரவை எனும் பெயரோடு திருவாரூரில் உருத்திர கணிகை (தேவதாசி - பதியிலார், தளிப்பெண்டு) மரபில் பிறந்தார்.

" மானோ! மண மலரோ! நெற்றி, கூனல் பிறை நிலவோ "

என அழகு விளங்க வளர்ந்தார். பழவினைத் தொடர்பால், சிவப்பணியே தவப்பணியாகக் கொண்டு வாழ்ந்தார். நாளும் தவறாது, தியாகேசர் கோவில் சென்று, தம் மரபிற்கேற்ற பணிகளை நியதி தவறாது செய்துவந்தார்.

வழக்கம்போல் ஒரு நாள் திருக்கோயிலுக்கு வந்த பரவையாரை ஆரூரர் கண்டார்.

" கற்பகமோ, காமன் உறைவிடமோ,
குவளைப் பூவோ, பவளப் பூவோ,
நிலவில் பூத்த மணவல்லியோ, அற்புதம்
இதனை அறியேனே! "

என்று அதிசயித்து நின்றார். முதல்வன் கயிலையில் முன்னையிட்ட ஆணை முன்னின்றது. அயல் மனம் அறியாமலேயே காதல் கொண்டார். பரவையார் நிலையும் இதுவே ஆயிற்று.

" முருகன் இவனோ, மாரன் இவனோ
தேவர் உலகினனோ, சிவனருள் பெற்றவனோ
என் மனம் புகுந்த இவன் யாரோ "

என்று நினைந்துருகிநின்றார்; பிற நினைவழிந்தார். அயலாரைக் கேட்டு, இருவரும் ஒருவரை ஒருவர் அறிந்தனர்; பின்னர் உணர்ந்தனர்; இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர்.

வேண்டுவார் வேண்டுவதே தரும் இறைவன், தாமே விரும்பித் தோழமை தந்த ஆரூரர் மன நிலை உணர்ந்து, இருவரும், முறைப்படி

திருமணம் செய்துகொள்ள உதவினார். அவனருளால், அடியார்கள் கூடினர்; ஆடினர்; பாடினர். அவர்கள் திருமணம் நிகழ ஆவன செய்தனர்.

"..................... திருநாவலர் கோன் மகிழத்
தாமக் குழலாள் பரவை வதுவை, தகு நீர்மையினால் நிகழச் செய்தார்"

என்பது சேக்கிழார் திருவாக்கு.

சங்க காலத்திலும் சரி, இடைக் காலத்திலும் சரி, தமிழகத்தில் காதல் திருமணங்களே நிகழ்ந்தன; சாதி, குலம் பாராத மணங்களே நிகழ்ந்தன, என்று யாரும் கருதிவிடக்கூடாது. காதல் திருமணங்களும் நடந்தன; அவற்றுக்கு எதிர்ப்புகளும் இருந்தன; மறுப்புகளும் இருந்தன.



*சுந்தரர் - பரவையார் திருமணம்*

'உடன் போக்கு' தமர் மறுத்துரைத்தல்' போன்ற அகத்துறைப் பிரிவுகள் நம் இலக்கியங்களில் இருந்தன என்பதை நாம் மறந்துவிடலாகாது! இவை, காதல் மணங்களைப் புறக்கணித்த -தற்கும் மறுத்ததற்கும் உரிய வலிமையான சான்றுகளாகும். இவற்றை அன்றைய சமூகம் ஏற்றது - தயக்கத்துடன்; இவை நிகழ்ந்தன - எதிர்ப்புகளுடன். ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளின் தமிழ்ச் சமூக வரலாறு இதுதான்! இன்றைய நிலையும் இதுதான். தவிர, ஆரூரர்க்கு முதலில்,

"குல முதல் அறிவின் மிக்கார், கோத்திர முறையும் தேர்ந்து" தான் திருமணம் செய்ய முயன்றனர். இதனையும் நினைதல் வேண்டும்.

ஆக சாதி, குலபேதங்கள், தழைத்துக் காலூன்றியிருந்த காலத்தில் நிகழ்ந்த திருமணம், ஆரூரர்-பரவையார் திருமணம். ஆரூரர், ஆதிசைவ மறையவர். திருக்கோயில்களில், கருவறை வரை சென்று, நாள்முறைச் சடங்குகளைச் செய்து, முப்போதும் இறைவன் திருமேனி தீண்டும் உரிமையுடைய மரபினர். பரவையாரோ, 'உருத்திர கணிகைமாராம்' 'பதியிலார்' குலத்துள் தோன்றியவர். தளிப்பெண்டுகள் என்று கல்வெட்டுகளும், தேவதாசி என்று சமூகமும் சொல்லிய குலம்.

இவர்கள் திருமணம், காதல் திருமணம்; முதல் கலப்புத் திருமணம்; இறைவனே ஆணையிட எல்லா வகைச் சிவனடியார்களும் உடன்பட்டு, உவந்து கூடிச் செய்த திருமணம், புரட்சித் திருமணம்.!

### யோகமும், போகமும்

சராசரி ஆணுக்குப் பெண் போகம் என்பது, உடலின்பம். ஆனால் இறைநெறி நிற்கும் அரனடியார்க்கு அது, உடலின்பம் அன்று; யோகம். ஆரூரர் கொண்ட போகமும் இதுவே!

> " பொன்னாரும் முலை ஓங்கல் புணர்குவடே சார்வாக,
> பன்னாளும் பயில்யோக பரம்பரையின் விரும்பினார் "[12]

என இக்கருத்தைக் கோடிட்டுக் காட்டுகிறது பெரிய புராணம். ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய வரிகள் இவை.

ஆசார்ய ரஜினிஷ் - ஓஷோ - காட்ட முயன்ற நெறியும் இதுவேதான் என்பர், அவர்தம் அன்பர். ஒப்பிடலாம்; தவறில்லை. ஆனால், சர்ச்சைக்கு உரிய செய்தி இது; உண்மை உணர்வதில் தவறு வரக்கூடாது.

### தொண்டர்க்குத் தொண்டரானார்

இவ் வண்ணம் கயிலையில் விரும்பிய காதல் வாழ்வு அந்தக் கயிலையார் அருளால், ஆரூரில் கிடைத்தது.

ஆயினும் செந்தமிழ்ச் சுந்தரர், சிவனடி மறந்திலர். அருச்சனை ஆகும் 'சொல் தமிழ் மாலை' சார்த்த மறந்திலர். நாள்தோறும் கோயிலை அடைந்து வழிபட்டார்.

---

12. பெரிய. தடுத் 181

ஒரு நாள் கோயில் வாயிலைக் குறுகுமுன், தேவாசிரியன் என்ற பந்தலைத் தாண்டிச் செல்லும்போது அங்கிருந்த சிவனடியார் கூட்டத்தைக் கண்டு மனம் நெகிழ்ந்தார்.

" இவர்களுக்கும் அடியவனாகும் நாள் எந்நாளோ? "

என மனம் கசிந்தார். ஆயினும், வழிமுறை அறியாது கலங்கினார். இவர் மன உணர்வு உணர்ந்த உமையவள் பங்கினர் - பித்தன் என்று சொல் கொடுத்துப் பாடச் சொன்ன அந்தப் பித்தனார் - இப்போதும் துணை நின்றார்.

"தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன் "

என அடியெடுத்துக் கொடுத்தார். இதனையே முதல் சொல்லாகக் கொண்டு பாடுக என ஆணை பிறந்தது. அப்போதே 'செந்தமிழ்ப் பயனாய் வந்த திருத்தொண்டத் தொகை' பிறந்தது! பதினொரு பாடல் கொண்ட ஒரு பதிகம் பிறந்தது!



*திருவாரூர் தேவாசிரிய மண்டபம் - திருத்தொண்டத்தொகை அருளல்*

சிவனினும் சிறந்தவர்கள் அவருடைய தொண்டர்கள் என்ற ஒரு கருத்துண்டல்லவா? சொல்லற்கரிய தொண்டர்தம் பெருமையை உலகறிந்ததற்கு இதுவே காரணமாயிற்று.

" தம்பிரான் தோழரவர் தாம் மொழிந்த தமிழ் முறையே
எம்பிரான் தமர்கள்திருத் தொண்டேத்த லுறுகின்றேன் "

என்பது சேக்கிழார் வாக்கு. ஆகவே, தமிழின் நலமெலாம் ஒருசேர வாய்க்கப்பெற்ற திருத்தொண்டர் புராணம் தோன்றவும் இறைவன் எடுத்தருளித் தந்த இந்தத் தொடரே காரணமாயிற்று!

சிவத் தொண்டர்களைப் புறக்கணிப்பவர், எனக் கருதியிருந்த விறல்மிண்டர் போன்ற தொண்டர்களும் மகிழ்ந்தனர். ஒருவகையில் திருத்தொண்டத் தொகை பிறக்க இந்த விறல் மிண்டரே 'முதல் காரணர்' என்று சொல்ல வேண்டும்.

" ......... திருத் தொண்டத் தொகையால் உலகு விளங்க வரும்
பேறுதனக்குக் காரணமாம் பிரானார் விறல்மிண்டர் "[13]

என்பது சேக்கிழார் வாக்கு.

## நெல்மலை தந்த சொல்மாலை

நாளும் செந்தமிழால் நம்பனைப் போற்றிப் பாடி, தலங்கள் பல சென்று வழிபட்டுவந்தார். பரவையார் மகிழும் வண்ணம் இல்லறமும் நிகழ்ந்தது.

இந்நிலையில் பருவம் பொய்த்தது; மாரி குறைந்தது; வாரி சுருங்கியது; நல்வயல்கள் வறண்டன. எங்கும் வறுமை மேலோங்கி நின்றது. சுந்தரர் - பரவையார் இல்லறம் குறைவற நிகழ, எப்போதும் நெல், பருப்பு முதலிய எல்லாப் பொருள்களையும் தவறாது அனுப்பிவந்த குண்டையூர் கிழார் என்னும் சிவனடியார் மனம் கவன்றார். உணவை மறந்தார். உறக்கம் துறந்தார்.

அன்றிரவு அவர் கனவில் தோன்றிய சிவனார், 'கவலை ஒழிக, ஆரூரன் பொருட்டு உனக்கு நெல்மலை தந்தோம்' என்று அருளிச்செய்தார். கண் விழித்தபோது, கனவு நனவாகியிருந்தது.

குண்டையூர் முழுதும் நெல் மலை. வியந்து நின்றார் குண்டையூர் கிழார். அப்போது சந்தித்த ஆரூரர், நிகழ்ந்ததறிந்தார். நிமலன் கருணை நினைந்து நெகிழ்ந்தார்.

" நீள நினைந்தடியேன் நினை நித்தலும் கைதொழுவேன்
வாளன கண்மடவாள், அவள் வாடி வருந்தாமே
கோளிலி எம்பெருமான் குண்டையூர்ச் சில நெல்லுப் பெற்றேன் "[14]

என்று, பதிகமும் பாடினார். இறைவன் அருளே அந் நெல் மலையைத் திருவாரூரிலும் கொண்டு சேர்த்தது. ஆரூரில் பரவையும், ஊரில் உள்ளார் பிறரும் நெல் பெற்றுப் பசி நீங்கினர்.

---

13. பெரிய. விறல் 11 14. சுந்தரர். தேவாரம் 20-1

தூய தமிழால், சொல்மாலை தொடுத்தணியும் பணி தொடர்ந்தது.

## பெறாது பெற்ற அப்பன்

திருநாட்டியத்தான்குடி, சிறப்புடைய சிவத்தலங்களில் ஒன்று. இங்கு வாழ்ந்தவர், கோட்புலியார், வேளாளர். சோழ மன்னனின் படைத்தலைமை ஏற்றவர்களில் ஒருவர். சிவன் கோயில்களில் நாள்வழிபாட்டுக்குரிய நெல் முதலாம் தானியங்களை அளிப்பதையே சிறந்த சிவபுண்ணியச் செயலாகச் செய்து வந்தவர்.

ஆரூரர் பெருமையை அறிந்திருந்தவர். ஆகவே, அவரைத் தம் ஊருக்கு எழுந்தருளுமாறு வேண்டினார். இதற்கிசைந்த ஆரூரரும் திருநாட்டியத்தான்குடிக்குச் சென்றார்.

முறைப்படி வரவேற்று, வழிபாடுகள் செய்தார். பின்னர் அன்புக்குரிய தம் இரு பெண் மக்கள் சிங்கடி, வனப்பகை என்பவர்களையும் அழைத்துச் சுந்தரரை வழிபடச் செய்தார். அவர்கள் இருவரையும், ஆரூரர், தம் அடிமைகளாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென வேண்டினார். கோட்புலியார் காட்டிய மெய்ம்மை அன்பில் நெகிழ்ந்தார் ஆரூரர்! அவர்கள் இருவரையும் தம்மருகே அழைத்து, மடியில் இருத்தி, உச்சி மோந்து, தலையை நீவித் திருநீறளித்து 'அன்பரே, இன்றுமுதல் இவர்கள் இருவரையும் என் மக்களாக ஏற்றுக் கொள்கிறேன்' என உறுதியளித்தார். இதனை,

" ...................
சேடார் பூங்குழல் சிங்கடியப்பன், திரு ஆரூரன் "[15]
" .......................
வளர் நாவலூரன், வனப்பகையப்பன், வன்தொண்டன் "[16]

என்றவாறு பல இடங்களில் அகச் சான்றாக வரும் அவரது பாமாலை வரிகளால் அறிய முடிகிறது.

## செங்கல் செய்த மாயம்

இவ்வண்ணம், தலங்கள் பலவற்றை வழிபட்டிருக்கும் சமயத்தில் திருவாரூரில் பங்குனி உத்திரத் திருவிழா வந்தது. அதனை நினைந்த ஆரூரருக்குத் திருவாரூர் திரும்பும் ஆசை மேலிட்டது. வழியில் திருப்புகலூர் இறைவனை வழிபட்டார். இரவு உணவு

---

15, 16. சுந்தரர் தேவாரம் 15-10, 87-10

உண்டபின், களைப்பு மிகுந்தது. அருகிலிருந்த செங்கல்லையே, தலையணையாக வைத்துத் திண்ணையில் கண்ணயர்ந்தார். விடிந்தது. துயில் கலைந்தார். எழுந்தார். வியந்தார். தலைக்கு வைத்த கல், கனக்கும் கனகக் கட்டியாயிருந்தது. திகைத்தார். திருவருளே இது என உணர்ந்தார்.

" தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினும்
சார்கினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை,
புகலூர் பாடுமின் புலவீர்காள்!
இம்மை யேதரும் சோறும் கூறையும்;
ஏத்தலாம் இடர் கெடலுமாம்;
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே! "[17]

என்று தொடங்கும் இனிய பதிகம் பாடி, மீண்டும் புகலூர் இறைவனை வழிபட்டார்.

மழபாடி மாணிக்கம்

பரவையார் மகிழ இல்லறமும் இறையறமும் நடத்திவந்த ஆரூரருக்குப் பரமசிவம் உறையும் பல தலங்களை வழிபடும் ஆசை பிறந்தது.

நன்னிலம், திருவீழி மிழலை, நாகேசுவரம், நல்லூர், முதலிய பல தலங்களை வழிபட்டுத் திருவாலம் பொழிலையும் வழிபட்டு அன்றிரவு அங்குத் தங்கினார். அப்போது கனவில் காட்சி தந்த இறைவன்

"மழபாடி வரவும் மறந்தனையோ"

என்ற வினவ, கேட்டுத் திடுக்கிட்டெழுந்தார். வாளா இருப்பாரோ வன் தொண்டர். அந்த மாணிக்கனைக் காணும் அவா மேலீட்டால் மழபாடிக்குப் புறப்பட்டார். கொள்ளிடக் கரையில் குடியிருக்கும் அந்த உள்ளங் கவர் கள்வனைக் கண்டார்.

" பொன்னார் மேனியனே புலித் தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழ பாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னை யல்லால் இனி யாரை நினைக்கேனே "[18]

17. சுந்தரர் தேவாரம் 34-1. 18. சுந்தரர் தேவாரம் 24-1.

எனத் தொடங்கும் அழகிய பதிகம் பிறந்தது. அன்னே உன்னையல்லால் இனி ஆரை நினைக்கேனே, என்று உருகிப் பாடிப் பிரியா விடை பெற்றார்.

பின்னர், தல வழிபாட்டின் ஒரு பகுதியாக திருப்பாச்சிலாச்சிராமம் என்ற தலத்தை அடைந்தார். அங்கிருந்தபோது, நாள் வாழ்வுக்குரிய பொருள் முட்டுப்பாட்டினை எண்ண நேர்ந்தது, பொன்தருவாய், பொருள் தருவாய் என வேண்டிப் பதிகம் பாடினார். உடனே கிடைக்கவில்லை; சிணுங்கினார்: அப்போதும் கிடைக்கவில்லை. சினமே வந்தது!

பித்தன் என முன்பு வைதவர், இப்போது இல்லாமையாலும், கேட்டது கிட்டாமையாலும், மீண்டும் வையவே தோன்றியது போலும்!

'என் தலையை உன்திருவடியில் வைத்தேன்; நாவால் புகழ்ந்தேன்; என் மனத்தில் வஞ்சகம் இல்லை. அது உனக்கே அடிமை ஆயிற்று. வேண்டியது கேட்டேன். ஆயினும் நீதரவில்லை. பித்தரைப் போன்றவர்தாம் நீர்! உன்னையன்றி இந்த உலகில் தலைவர் யாருமில்லையோ? - என்றவாறு

" பித்தரை ஒத்தோர் நச்சிலராகில்
இவரலாது இல்லையோ பிரானார் "

என்று கடிந்துரைத்தார். பின்னர் இறுதியில், தன்னை உணர்ந்தார். தணிந்தார். 'நான் யாது சொன்னாலும் பொறுத்துக் கொள்ள வேணும்; தர வேணும்; இல்லையெனில் உன்னைத் தவிர வேறு தலைவர் யாரும் இல்லையோ? என்று பாடினார். தோழர்க்கு இரங்கும் இறைவன், அவர் வைதது கண்டு வருந்தவில்லை சினமும் கொள்ளவில்லை. விரும்பியவாறு பொருள் வழங்கினார்.

பாச்சிலாச்சிராமம் வணங்கிய சுந்தரர், பைஞ்ஞீலி. திரு ஈங்கோய் மலை முதலான தலங்களை வழிபட்டுக் கொங்கு நாட்டுக் கொடுமுடி அடைந்தார். இதற்குக் 'கறையூர்' என்பது அன்றைய பெயர். இங்கு எழுந்தருளியுள்ள திருப்பாண்டிக் கொடுமுடி இறைவனைப் பதிகம் பாடி வழிபட்டார்.

கொங்கு நாட்டில் சுந்தரர் மேற்கொண்ட முதல் பயணம் இது. பின்னர்க் காஞ்சியாற்றின் கரையிலுள்ள பேருரை அடைந்தார். மேலைச் சிதம்பரம் என அழைக்கப்படும் இவ்வூர், இன்று கோவைக்கு மேற்கில் சிற்றூராய்க் காட்சி தருகிறது. காஞ்சிவாய்ப் பேருருக்குச் சுந்தரர் வந்து சென்ற செய்தி,

" கொங்கின் காஞ்சிவாய்ப் பேரூர் குறுகினார் "[19]

எனப் பெரியபுராணத்துள் குறிக்கப்படுகிறது. இங்கு நித்தம் நின்றாடும் கூத்தப் பெருமானைக் கண்டு மனம் உருகினார். இதனை,

" நித்தனார் தில்லை மன்றுள் நின்றாடல்
நீடிய கோலம் நேர்காட்டச்
கைத்தலம் குவித்துக் கண்கள்
ஆனந்தக் கலுழி நீர் பொழிதரக் கண்டார் "[20]

என்று குறிக்கிறது பெரிய புராணம், மேலும்,

" பொன்மணி மன்றுள் எடுத்த சேவடியார்
புரி நடம் கும்பிடப் பெற்றால்
என் இனிப் புறம்போய் எய்துவது"[21]

என்று அவர் பாடிய திருப்பதிக வரிகளையும் கூறுகிறது. தவிர, பேரூர்க் காட்சி கண்டு உவந்த ஆரூரர், தில்லையில் சென்று பாடிய 'மடித்தாடும்' என்ற பதிகத்தின் கடைகாப்பில்,

" பேரூர்ப் பெருமானை, புலியூர்ச்
சிற்றம்பலத்தே பெற்றாமன்றே "[22]

என, தாம் ''பேரூர் வந்து வழிபட்டதை நினைந்துள்ளார் என்று அறியமுடிகிறது. ஆயினும், இன்று பேரூர் பற்றிய சுந்தரர் பதிகம் கிடைக்கவில்லை.

இனி பேரூரை வழிபட்ட ஆரூரருக்கு, தில்லையம்பல வாணரைக் காணும் ஆவல் மிகுந்தது. புறப்பட்டார். போகும் வழியில், கரூரை அடுத்த வெஞ்சமாக் கூடல் இறைவனை வழிபட்டு, 'எறிக்கும் கதிர் வேய்முத்தம்' எனத் தொடங்கும் பதிகம் பாடி வழிபட்டார்.

பின்னர்க் கற்குடி, இன்னம்பர் முதலிய சோழநாட்டுத் திருப்பதிகளை வணங்கிக் கூடலையாற்றூரை அடையும் முன், திருமுதுகுன்றம் செல்லும் வழியைக் கேட்டார். இறைவன் வழியையும் சொல்லி, முதியவர் வடிவில். உடன் துணையுமாக வந்தார். வழி தெரிந்தது, முதுகுன்றம் அடையும்போது முதியவரைக் காணோம். திகைத்தார். பின் உணர்ந்தார்.

---

19. 20. 21. பெரிய. ஏயர் 88. 89. 91. 22 சுந்தரர் தேவாரம் 90-10

" அழகன் இவ்வழி போந்த அதிசயம் அறியேனே "

" அத்தன் இவ்வழி போந்த அதிசயம் அறியேனே "

" அறவன் இவ்வழி போந்த அதிசயம் அறியேனே "

என்று வியந்து பாடிப் பதிகத்தால் நன்றி தெரிவித்து, திருமுதுகுன்றம் எனும் விருத்தாசலம் அடைந்தார்.

## ஆற்றிலே போட்டாலும்.....

அங்கு வீற்றிருக்கும் பழமலை நாதரைப் பணிந்து பதிகம் பாடி வழிபட்டார். பரவையோடு நடத்தும், இல்லறம் நினைவுக்கு வரவே, பொருள் தேவையை எண்ணினார். முதுகுன்றர் உதவுவார் என்ற நம்பிக்கை எழுந்தது.

" முந்தி அடி தொழ நின்ற சீர் முதுகுன்றரே "

" ஐயா தந்தருளீர் அடியேன் இட்டளம் கெடவே "

" அத்தா! தந்தருளீர் அடியேன் இட்டளம் கெடவே "

என்றவாறு முடித்துப் பாடி வேண்டினார். பன்னீராயிரம் பொன் கிடைத்தது. மகிழ்ச்சிக்கு எல்லையில்லை, 'சரி. கொண்டதைக் கொண்டு போவதெப்படி?' மீண்டும் இறைவனையே வேண்ட, 'இங்குள்ள மணிமுத்தாற்றில் இடுக! அது, திருவாரூர்க் குளத்தில் கிடைக்கும்' என அருளாணை பிறந்தது.

திருவாரூர் சென்ற ஆரூரர், கமலாலயக் குளத்துக்குச் சென்றார். உடன் வந்த பரவையார் 'அங்கே ஆற்றிலிட்டது இங்கே குளத்தில் கிடைக்குமோ? ஆரும் நம்புவாரோ?' என்று கொஞ்சம் கேலி பேச, ஆரூரர் நம்பிக்கையுடன் அவ்வாறே தேட, அது கிடைத்தது! இந்த வரலாற்றை,

" செழுநீர் வயல் முதுகுன்றில் செந்தமிழ் பாடி வெய்ய
மழுநீள் தடக்கையன் ஈந்த பொன், ஆங்குக்கொள்ளாது வந்துஅப்
பொழில் நீள் திருவாரூரில் வாசியும் பொன்னும் கொண்டோன்
கெழுநீர் புகழ்த் திருவாரூரன் என்று நாம் கேட்பதுவே " [23]

என்று பதினொராம் திருமுறை உறுதி செய்கிறது.

---

23. நம்பி. திருத்தொண்டத்தொகை 77

## சோறும் நீறும்

பொன் பெற்று மகிழ்ந்த சுந்தரர், பிறையாளன் உறையும் தலங்கள் பல அடைந்து வழிபட்டார். இசைப் பதிகங்கள் பல பிறந்தன. கடவூர் வீரட்டம், கடவூர் மயானம், திருவெண்காடு, சாய்க்காடு எனப் பல தலங்கள்.

பின்னர்த் திருக்குருகாவூர் சென்றடைந்தார். கொன்றை சூடியைக் கும்பிட்டார். நீடிய பயணம்,கோடை வெயில், தாகம் தவித்தது. வயிறு பசித்தது. தோழர் துயர் பொறுப்பாரோ, இறைவன்? பசிக்குச் சோறும், தவிப்புக்கு நீரும் தர முன் வந்தார். நிற்க நிழல் பந்தலும், பசி நீங்கப் பொதிசோறும் 'முதிய மறையவர்' ஒருவர் தாமே கொண்டுவந்து கொடுத்தார். உண்ணாத இளைப்பும், சோர்வும் போயிற்று. இப்போது, உண்டதால் களைப்பு! கால் நீட்டிப் படுத்தார்; கண்ணயர்ந்தார்; துயிலுணர்ந்து பார்த்தபோது, அங்கு வந்தவரும் இல்லை! நிழல் தந்த பந்தலும் இல்லை! உற்றபோதெல்லாம் அற்றம் தீர்க்கும், உத்தமன் யாரென உணர்ந்தார்!

" பாடுவார் பசி தீர்ப்பாய்: பரவுவார் பிணி களைவாய்;
............... வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே " [24]

எனக் குருகாவூர் இறைவனைப் பதிகம் பாடி நன்றி தெரிவித்துக் கொண்டார்.

பின் தில்லையையும் திருநாவலூரரையும் வழிபட ஆரூரர், தொண்டை நாட்டில் பயணம் செய்தார். அப்போது, திருக்கச்சூர் ஆலக்கோயிலை அடைந்தார்; பாடி வழிபட்டார்; உடன் வருவோர், உடனில்லை; பசி தீர வழியில்லை; தொண்டர் உடல் துவண்டார்; 'தொண்டர் தலைவர்' மனம் துவண்டார். அவர் பசி போக்க அலைந்தார், தெருவெல்லாம்; இரந்தார் வீடுகள் தோறும். கிடைத்ததைக் கொண்டு, முதியவர் வடிவில் வந்து ஆரூரர் பசி தீர்த்தார்.

அன்பர் பசி தீர, அலைந்தும் திரிந்தும் உணவளித்த 'அவன்' அருளை நினைந்து மனம் நெகிழ்ந்தார்.

" கச்சேர் அரவொன்று அரையில் அசைத்துச் சிலம்பும்
கலிக்கப் பலிக்கென்று
உச்சம் போதால் ஊரூர் திரியக்கண்டால் அடியார் உருகாரோ " [25]

24, 25. சுந்தரர் தேவாரம் 29-3, 41-2

உச்சியில் திரியலாமோ? ஊரூர் அலையலாமோ? பிச்சை எடுக்கலாமோ? என்ற கருத்தமைந்த இப்பதிகம் பிறந்தது.

மகிழ்ந்த நினைவொடும், நெகிழ்ந்த உணர்வொடும் தலங்கள் பலவற்றையும் வழிபட்டபடி, காளத்தி அடைந்தார். கண் நெற்றி உடைய அண்ணலுக்கே திண்ணப்பராம் கண்ணப்பர்,கண்ணளித்த இடம் அது! அவர் அருள் பெற்ற இடம்! நெஞ்சுருகி நின்றார். அங்கிருந்தவாறே, திருப்பருப்பதம் (ஸ்ரீசைலம்), திருக்கேதாரம் முதலிய தலங்களைப் போற்றிப் பதிகம் பாடினார்.

பின்னர், திரு ஒற்றியூரை அடைந்து எழுத்தறியும் பெருமானை வழுத்திப் பதிகம் பாடியிருந்தார்.

## மலரைத் தொடுத்தவர்...

ஒரு நாள், திருமாலை மண்டபத்தருகே சென்றபோது, திரை ஒன்று விலகிச் சேர்ந்தது; இடையில் நிலவுமுகம் ஒன்று தோன்றி மறைந்தது.

அது, சங்கிலியார் திருமுகம்; கயிலையில் இருந்தபோது, ஆலால சுந்தரர்மேல் கொண்ட ஆசையால், மண்ணுலக வாழ்வு பெற்ற அநிந்ததையே இங்கு பிறந்து, சங்கிலி எனப் பெயர் பெற்றிருந்தார். இதனை,

" நாலாங்குலத்தில் புவிமேல் பெருகு நலமுடையார்
........... வேளாண்மை மிக்க திரு ஞாயிறு கிழவர்
பாலாதரவுதரு மகளாராகிப் பார்மேல் அவதரித்தார்,
ஆலாலஞ்சேர் கரைமிடற்றார் அருளால் முன்னை அநிந்ததையார் "[26]

எனக் குறிப்பிடுகிறார் சேக்கிழார். இந்நிலையில்தான்,

''அன்பு நாரர்(க) அஞ்செழுத்து நெஞ்சு தொடுக்க' அலர் தொடுத்தே மின்போல் மறையும் சங்கிலியார்தம்மை விதியால் கண்ணுற்றார், ஆலால சுந்தரர். ஏதோ ஒருவகை உவப்பால் மனம் திரிந்தது; சங்கிலியார் முகமே எங்கும் தெரிந்தது. அயலாரை அணுகி, அவள் யார் என அறிந்தார். காதல் பிறந்தது; கூடவே கவலையும் மிகுந்தது.

'கயிலைப் பணி செய்யுங்கால் கன்னியர் இருவர்மேல் கொண்ட காதலே, என்னை இங்குப் பிறக்கச் செய்தது; அந்த இருவரில், ஒருவர் பரவை; மற்றவர் இங்கு வந்த சங்கிலியாரோ' என உள்ளுணர்வால் ஐயுற்றார்.

---

26. பெரிய. ஏயர் 207

அந்நிலையிலும், ஆசை குன்றவில்லை. பரவையார் உறவாகி உடனிருக்கிறாரே! ஆகவே, மனத் தடுமாற்றம் மிகுந்தது. எனினும் நினைவெல்லாம் சங்கிலிமேல் நின்றது. ஆசையால், மீண்டும் ஒரு தவறா?.

துன்பமெல்லாம் துடைத்து, யான் செய்யும் துரிசுகளுக்கும் உடனாகி நிற்கும் அந்த இறைவனை அணுகுவேன்; அவனருளால் கவலை தீர்வேன் என உறுதி பூண்டார்.

'மங்கை ஒருபால்கொண்டு மகிழ்ந்தவனே! **ஒருத்தியொடு கங்கையையும் கொண்டவனே!** என் கவலையையும் தீர்த்தருள்' என வேண்டி நின்றார். சுந்தரர் செயல் எல்லாவற்றுக்குமே துணை நிற்கும் தூய பெருமான், இந்த வேண்டுதலையும் நிறை வேற்றுவதாக உறுதி தந்தார்.

அன்றிரவு, சங்கிலியார் கனவில் தோன்றினார்.

'சங்கிலி,கேள்! என்பால் அன்பன்; இன்று நின்பாலும் அன்பன்; திருவெண்ணெய்நல்லூரில், நான் ஆள, ஆட்பட்டவன்; நம்பி ஆரூரன்! உன்னை வேண்டி என்னை இரக்கின்றான்; அவனை மணந்திடுக! மகிழ்ந்திடுக!' என்றருளிச் செய்தாங்.

திடுக்கிட்டெழுந்து திகைத்து வியந்த சங்கிலியார், உவந்தார்; உடம்பட எண்ணினார்; ஆயினும் தயக்கம். பரவையார் உறவெண்ணி ஆரூரர் சென்றுவிடுவாரே, அதனை நினைத்ததால் வந்தது தயக்கம், இதனை இறைவனிடமே தெரிவித்தார்.

'மங்கையே நீ மயக்கித் தயங்க வேண்டாம்; அவன் உன்னை விட்டுப்பிரிவதில்லை எனச் சத்தியம் பெறுக; அவன் உடம்படுவான்; அது போதும்' என்றருளிச் செய்தார்.

பின்னர், ஆரூரை அணுகி 'நீ இன்றிரவே சங்கிலிபால்' சென்று 'உன்னைப் பிரியேன்' எனச் சத்தியம் செய்; அவள் உடம்படுவாள்; உன் எண்ணம் நிறைவேறும்' என்றருளிச் செய்தார்.

ஆரூரும், ஆரூர்ப் பரவையும் இப்போது நினைவில் வந்தனர். சத்தியம் தவறும் வாய்ப்பும் வரலாம் என எண்ணிய ஆரூரர், 'பெருமானே! நான் உன் சந்நிதி முன் சத்தியம் செய்ய நேருமானால், அப்போது, நீ அங்கிருந்து விலகி அருகில் இருக்கும் மகிழ மரத்தடியில் தங்கிடவேண்டும்' என வேண்டி, உறுதியும் பெற்றார். ஆனால், பிள்ளையைக் கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டுகிற திருவிளையாடல் செய்ய விரும்பிய செம்மேனி எம்மான், இந்த இடமாற்ற ரகசியத்தை, சங்கிலியாரிடமும் சொல்லி எச்சரிக்கை செய்து வைத்தார்.

சத்தியம் பெற வந்த சங்கிலியார், இறைவன் சன்னிதி வேண்டாம் என மறுத்து மகிழ மரத்தடியைக்குறிக்க, திகைத்த சுந்தரர், வேறு வழியின்றி அந்த மகிழ மரத்தடியிலேயே சத்தியம் செய்தார்!

அடியார்கள் கனவிலும், வந்து 'அண்ணலாருக்கு மணம் செய்திடுக' என அருளினார்.

திருமணமும் முறைப்படி நிகழ்ந்தது. சுந்தரரும் - சங்கிலியாரும் கயிலையில் தாம் கொண்ட காதல், இங்குக் கை கூடப் பெற்றனர்.

கண்டனர். கனிமொழி கொண்டனர். காதல் அமுதம் உண்டனர். ஒன்றாய் உயிர்த்தனர். உடலாலும் ஒன்றினர். ஒருகணம் ஊழியாயிற்று. ஊழி, ஒரு கணம் ஆனதும் உண்டு!

வசந்தம் வந்தது ஆரூரில் வசந்தவிழாவை நினைந்தார். ஆரூரில் பரவையார் பாடும் பண்ணும், ஆடும் நடமுமே நெஞ்சை நிறைத்தன.

நினைவின் இறுக்கம், செய்த சத்தியத்தை நெகிழச் செய்தது. திரு ஆரூர் ஈர்த்தது. சங்கிலியை மறந்து புறப்பட்டார்.

சிவத்தைச் சாட்சியாக்கிச் செய்த சத்தியம் இப்போது செயல்பட்டது. கண் பார்வை போய்விட்டது! உணர்ந்தார் சுந்தரர்; ஆயினும் பயணம் தொடர்ந்தது.

வட திருமுல்லை வாயில், வெண்பாக்கம் முதலிய தலங்களை அடைந்து வழிபட்டார். காணக் கண்ணில்லை; ஆயினும் உணர உள்ளமிருந்தது. வெண்பாக்கத்து விகிர்தர் தந்த ஊன்றுகோலும், தொண்டர்களும் துணையிருக்க, தமிழ் கைகொடுக்க வண்டமிழ்ப் பதிகங்கள் பல பிறந்தன. காஞ்சி வந்த சுந்தரர்,

"கண்ணாளா! கச்சி ஏகம்பனே! கடையானேன்
எண்ணாத பிழை பொறுத்து இங்கு யான் காண, எழில் பவள
வண்ணா! கண்ணளித்திடுக!"

என இறைஞ்சி வேண்டினார்.

பொங்கிய அன்போடு, உணர்ந்த உள்ளத்தோடும் பொங்கு தமிழ்ப் பாடல் கேட்ட மங்கைபாகர் இரங்காதிருப்பாரோ? இடக் கண் பார்வை தந்தார்.

" கண்ணும் மூன்றுடைக் கம்பன்
எம்மானைக் காணக் கண்
அடியேன் பெற்றவாறே "[27]

என்று பதிகம் பாடி வாழ்த்தினார்.

கண்ணொன்று பெற்ற அப்பண்ணிசைச் சுந்தரர், இடையில் உள்ள தலங்கள் பலவற்றை வணங்கித் திருவாரூர் அடைந்தார்.

பருகா இன்னமுதை உருகுவார்க்கு இரங்கியருளும் உத்தமனைக் கண்ணிரண்டாலும் கண்டு மகிழ ஆசை கொண்டார்.

எண்ணம் கனத்தது. கனம், சினமாயிற்று; இசைத் தமிழ் பாடிய வாய் வசைத் தமிழ் பாடத் தொடங்கியது.

'மீளா அடிமை நான்; உமக்கே ஆளானேன்; அடிமை என்னை நீர் விற்கவும் உரிமை உண்டு; அடகு வைக்கவும் உரிமை உண்டு; ஆயினும் நான் குற்றமொன்றும் செய்யவில்லை; ஒற்றைக் கண்தான் தந்தீர்; மற்றைக் கண்ணும் தருக! தரமாட்டீரோ? ஆயின், நீர் வாழ்ந்து (நாசமாகத்) தான் போவீர்' என அங்கதம் பாடினார்.

" எற்றுக் கடிகேள்! என்கண் கொண்டீர்நீரே பழிப் பட்டீர்;
மற்றறைக் கண்தான் தாரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே "

" மாயம் காட்டிப் பிறவி காட்டி மறவா மனம் காட்டி
காயம் காட்டிக் கண் நீர் கொண்டால், வாழ்ந்து போதீரே "

" இருந்தும் நின்றும் கிடந்தும் உம்மை இகழா தேத்துவோம்
வருந்தி வந்தும் உமக்கொன் றுரைத்தால் வாழ்ந்து போதீரே "

என்று (வசை-வாழ்த்துப்) பாடினார்.

குழந்தையின் கோபத்தைப் பெற்றோர்கள் பெரிதாக எடுத்துக் கொள்வதில்லையல்லவா? ஆகவே, வசையையே வாழ்த்தாகக் கொள்ளும் இறைவன் இங்கு அப்படியே கொண்டு இரங்கி, வலக் கண்ணும் பார்வை பெறுமாறு அருள் செய்தார்.

வேண்டியது பெற்ற ஆரூரர், விழுந்து வணங்கினார். மகிழ்ச்சியால் எழுந்து ஆடினார். கண்கள் களிக்கக் கண்டார். செந்தமிழின் 'பண்ணும் திறமும்' கனியக் கனியப் பதிகம் பாடினார்.

சுந்தரர் நிலை இதுவாக, பரவையார் நிலையோ வேறு. சங்கிலியை மங்கலம் கொண்ட செய்தி அறிந்த நாள்முதல்,

27. சுந்தரர் தேவாரம் 61:7

மனமெல்லாம் சினமாயிற்று. உண்பன வெறுத்தார், உறக்கமும் தவிர்ந்தது; கண்பனி நீங்கிலது; கலக்கமே ஓங்கியது.

இந்நிலையில், சுந்தரரைச் சார்ந்த சிலர், இந்தப் பிணக்கு நீக்கி, இணக்கம் காண முயன்று தோற்றனர்.

இருதலைக் கொள்ளியான சுந்தரர், என்றும்போல், இறைவனையே தொழுது நின்றார். வேறு என்ன செய்வார்?

வன்றொண்டர் துயர் களைவதே வழக்கமான அவர், இப்போதும் சுந்தரர்க்கு ஆறுதல் தந்தார்.

மாலும் அயனும் மற்றுள்ள தவத்தோரும் காண அரிய பெருமான், யோகியரும் முனிவோரும் சிவகணத்தோரும், பிறரும் உடன்வர, பரவை மாளிகையிருக்கும் தெருவில், நள்ளிரவில் கால் வருந்த நடந்தார்.

தன்னை மறைத்து, தவமுனிவர் கோலங்கொண்ட பிரான், பரவையை அடைந்து, 'பாவையே மறுக்காது செய்வதாயின், உற்றது உரைப்பேன்' என்றார்.

'பரமனே போல வந்த முனி பெருமானே! உள்ளம் இசைந்தால் தள்ளாது செய்வேன்' என்றார் பரவையார்.

செய்தி இன்னது என அறிவிக்கக் கேட்ட அவர் 'ஒற்றியூரில் ஒரு மங்கை சங்கிலியின் கை பற்றிய அவரோடு எனக்கென்ன உறவு? இது சொல்லவோ, இந்த நள்ளிரவில் வந்தீர்?' என மறுத்துரைத்தார்.

பின்னும் சிறிது விளையாட எண்ணிய இறைவன், நிகழ்ந்ததனைச் சுந்தரரிடம் சொன்னார்.

நெகிழ்ந்து நெகிழ்ந்து, மீண்டும் இரந்து நின்ற ஆரூரரைக் கண்டு கருணை கூர்ந்த இறைவன், மீண்டும் பரவையாரிடம் சென்று பேசப் புறப்பட்டார்.

கணநாதர்களும் தேவரும் முனிவரும் யோகியரும் இயக்கரும் சித்தரும் புடைசூழச் சென்றார்; திருவாரூர் வீதியே இப்போது சிவலோகமாயிற்று.

"திருவீதியினில் அழகர் அவர் மகிழும் செல்வத் திருவாரூர்
ஒரு வீதியிலே சிவலோகம் முழுதும் உளதாமால்" [28]

என்று பூரித்துப் பேசுகிறார், சேக்கிழார். கண்ட அளவிலேயே, தம்மை உணரத்தகும் கோலத்தொடு சிவன், தன் உண்மைத் தோற்றம் புலப்படுமாறு சென்று பரவையாரைக் கண்டார்.

28. பெரிய புராணம் 336

முதன் முறை முனிவர் வந்து சென்றபின், அதிசயம் பல நிகழவே, தடுமாறிக் குழம்பி, வந்தவர் இறைவனோ எனத் தியங்கிய பரவையார், இம்முறை வந்து நிற்பவர் இறைவனே என்பதறிந்தார்.

'தொண்டர் துயர் நீங்கத் தூயபெருமான் நீரே, இரவில் இங்கும் அங்கும் அலைந்து, வேண்டி நிற்பீர் என்றால், உடன்படாது வேறு நான் என்ன செய்வேன் - என ஒப்பி உரைத்தார்; பரவையார் ஊடல் ஒழிந்தது. பிரிந்தவர் கூடினர். புயல், தென்றலாயிற்று. இருவரும், திருவருட்கருணையை எண்ணி நெகிழ்ந்தனர். இரவு வந்தபோது

'ஒருவருள் ஒருவர் பேசும் நிலைமையில் உயிர் ஒன்றானார்''[29]

இந்த அதிசய நிகழ்ச்சி அயலெங்கும் பரவிற்று, அதிசயித்தனர் சிலர். அதிர்ந்தனர் சிலர். வியந்தனர் சிலர். சினந்தனர் சிலர்.

சினந்தவர்களில் ஏயர்குடிக்கே கோன் என வாழ்ந்த கலிக்காமர் என்பவரும் ஒருவர். சோழநாட்டுத் திருப்பெருமங்கலத்தில் வாழ்ந்தவர். தூது நடந்த தூயவன் செயலை நினைந்து கசந்தார். தூதனுப்பிய சுந்தரரை வெறுத்தார். 'என்முன் அவன் வந்தால் என்ன நிகழுமோ' எனச் சீறினார்.

ஆயினும், சுந்தரர் பெருமையை ஏயர்கோனுக்கு உணர்த்த விரும்பிய இறைவர், அவர் வயிற்றில் சூலை நோய் வருமாறு செய்தார். அவர் கனவில் வந்து 'சுந்தரன் வந்தால் இந்த நோய் தீரும்' - என அருளினார். திடுக்கிட்டெழுந்த ஏயர் கோன், மேலும் சினந்தார்.

'இறைவனை ஏவலாளாக்கிய அவன் வந்து நோய் தீர்வதைவிட, நான் வருந்தித் துன்புற்று இறப்பதே மேல்' என, உறுதியுடன் இருந்தார். இந்நிலையில் ஆரூரர் கனவில் தோன்றினார் இறைவன்.

'சூலை தீர்த்திடுக' - எனக் கனவின் உரை கேட்ட ஆரூரர், அவரைக் காணப் புறப்பட்டு ஊர் எல்லை அடைந்தார். இவர் வருவதறிந்த ஏயர்கோன் 'அவன்வருமுன் என் உயிர் நீப்பேன்' எனக் கைவாளால் குடலைக் கிழித்துக் கொண்டு சாய்ந்தார். சூலையும் போயிற்று; உயிரும் பிரிவதாயிற்று. உடன் உயிர் துறக்க எண்ணினார் அவர் துணைவியார்; அந்நிலையில் மாளிகையின் வாயிலடைந்த சுந்தரரைக் கண்டார், ஏயர்கோன் துணைவியார். 'என் நாதன் உயிர் பிரிகின்ற இப்போது ஏது செய்வேன்? சிவன் தோழரை வரவேற்பேனா? என் கணவர் மாய்ந்த நிலையை எண்ணிப்

29. பெரிய ஏயர் 381

புறக்கணிப்பேனா?' எனத் திகைத்த அவ்வம்மையார், பின் ஒருவகையாகத் தெளிவு பெற்றார். தம் கணவர் உடலைப் பக்கத்து அறையில் மறைத்தார்.

வந்தவரை முறைப்படி வரவேற்றார்; சுந்தரர் பதறியவாறு, உள்நுழைந்தார். உள்ள நிலையறிந்தார். குடர் சொரிய, உயிர் பிரியக் கிடந்த ஏயர்கோன் உடலைக் கண்டார்.

'இவர் உயிரிழக்க நானல்லவா காரணன்' என எண்ணிய சுந்தரர், இவர் உயிர் சென்று சேருமுன் என்னுயிரைப் போக்கிக் கொள்வேன், என அவருடலில் பதிந்திருந்த வாளை உருவித் தன் உயிரை மாய்த்துக்கொள்ள முனைந்தார். இறைவன் இந் நிகழ்வைப் பொறுப்பாரோ? உயிர் பிரியும் நிலையில் இருந்த கலிக்காமர் அவனருளால், திடுக்கென எழுந்து ஆரூரர் கையில் பற்றிய வாளைப் பறித்து வீசினார். அவர் திருவடியில் விழுந்து வணங்கினார். சுந்தரரும் எதிர்வீழ்ந்து வணங்கினார்.

இறைவனையன்றிப் பிறரடி வீழ்ந்து வணங்கியறியாத சுந்தரரே கலிக்காமர் காலில் வீழ்ந்து வணங்கினார் எனில், அவர் பெருமை உரைத்து முடியுமோ? பின்னர், திருப்புன்கூர் முதலிய தலங்களை வணங்கித் திரும்பிய ஆரூரர், திருநாகைக் காரோணம் சென்றடைந்தார்.

இம்மையே தரும் சோறும் கூறையும்; ஏத்தலாம், இடர்கெடலுமாம் என்றபடி, இம்மை வாழ்வுக்குரிய பொருள்களைப் பெற்றதுடன், பொன்னும் பூணும் அணியும் நவமணியும், நல்லாடைகளும் வேண்டிப்பாடினார்.

" .......... கந்தமுதல் ஆடை ஆபரணம்
பண்டாரத்தே எனக்குப் பணித்தருள" [30]

" நேசமுடை அடியவர்கள் வருந்தாமை அருந்த, நிறை
மறையோர் உறை வீழி மிழலைதன்னில் நித்தல்
காசருளிச் செய்தீர்; இன்றெனக்கு அருள வேண்டும் " [31]

"கறி விரவு நெய்சோறு முப்போதும் வேண்டும் " [32]

என்றெல்லாம் வேண்டினார்.

வேண்டுவோர் வேண்டுவதே தரும் ஆண்டவர், தாம் வேண்டித் தடுத்தாண்டு கொள்ளப்பட்ட ஆரூரருக்கும் அவ்வாறே அருளினார்.

---

30, 31, 32. சுந்தரர் தேவாரம் 46-5, 46-4, 46-10

### சேரமான் பெருமாள்

இன்று கேரளம் முன்பு சேரநாடு; இந்நாட்டிலுள்ள அரசர்களில், பெருமாக்கோதையார் என்பாரும் ஒருவர். மாகோதை (கொடுங்கோளூர்) எனும் பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்துவந்தார்.

அரசராய் ஆட்சிசெய்ததைவிடத் திரு அஞ்சைக்களத்து அரனுக்குப் பணிசெய்யும் தொழிலையே விரும்பிச் செய்து வந்தார். சிவம் பழுத்த சைவர். யாரும், யாவையும் எங்கிருந்து சொன்னவை யெல்லாம் அறியும் நுண்ணுணர்வு பெற்றவர். இவர் சிவபூசை செய்யும் போதெலாம், தில்லைக்கூத்தன் ஆடும் காலில் குலுங்கும் சிலம்பு செய்யும் ஒலி கேட்கும்.

" யாவும் யாரும் கழறினவும் அறியும் உணர்வு "[33]

பெற்றவர். ஆகவே 'கழறிற்று அறிவார்' - என இச்சேரமான் பெருமாள் குறிக்கப்படுகிறார்.

சுந்தரர் பெருமையும், அவர் இறைவனிடம் கொண்டிருந்த தோழமையுணர்வும் அறிந்தார். அவரைக் காணும் அவா மேலிட ஆரூர் வந்தார். அடியார் புடைசூழ முறைப்படி வரவேற்றார் சுந்தரர். காலில் வீழ்ந்து வணங்கிய சேரமானைக் கட்டித்தழுவி மகிழ்ந்தார். தாமும் அவர் தாள் வணங்கினார். சுந்தரர் அடியார் தாள் வணங்குவது இது இரண்டாம் முறை. சில நாள் வீட்டில் தங்கச் செய்து பரவையார் துணையுடன் விருந்து படைத்து மகிழ்ந்தார்.

இருவரும் கொண்ட நட்பு, ஒருவரை ஒருவர் நன்குணர்ந்த நட்பு. ஆகவே இருவரும் பாண்டிநாடு, சோழநாடு என நாடு - தொறும் சுற்றித் தலங்கள் பல பணிந்து பதிகம்பாடி வழிபட்டனர்.

சேரமான், தம் நாட்டுக்கு வருமாறு விரும்பி அழைத்தார். அழைப்பை ஏற்றார் சுந்தரர். அன்புத் தோழருடன், கொங்குநாடு வழியாகச் சேர நாடடைந்தார். திரு அஞ்சைக்களம் அடைந்து வழிபட்டபின் அரண்மனையடைந்தார். அரசர் அன்பினில் திளைத்தார். சேரமான் தர முன்வந்த அரசபதவியை வேண்டாம் என மறுத்தார். எல்லா உலகங்களும் தாமேயான இறைவனே தோழனாக இருக்கும்போது அரசு ஆட்சிப் பதவியோ பெரிது? நாட்கள் சில கடந்தன.

திருவாரூர் திரும்பிட ஆசை கொண்ட சுந்தரைப் பிரிய மனமின்றி அனுப்பி வைத்தார். பொன்னையும் பொருளையும் பொதியாக்கி, வீரர்கள் துணை வர அனுப்பி வைத்தார்.

---

33. பெரிய கழறி - 14

வரும் வழியில், கொங்கு நாட்டுத் திருமுருகன் பூண்டியில் முருக நாதரை வழிபடச் சென்றார். அப்போது அவர் வழிப்பட்ட வடுகவேடுவர்கள், சுந்தரருடன் வந்த செல்வப் பொதிகளைக் கொள்ளையிட்டனர். ஆயினும், இறைவனிடம் முறையிட்ட சுந்தரர்க்கு அவனருளாலே அவை மீண்டும் கிடைத்தன.

திருவாரூர் திரும்பிய சுந்தரர், பரவையார் அன்பிலும் பரமனார் அருளிலும் திளைத்தார். சேரமான் காட்டிய அன்பு, ஆரா அன்பு, தீரா அன்பு. அது அவரை மீண்டும் சேரநாட்டுக்கு இழுத்தது.

இரண்டாம் முறையாகச் சேரநாடு புறப்பட்டார்; இடைத்தலங்களையெல்லாம் வழிபட்டபடி அவிநாசியை அடைந்தார்.

அங்கே, சில ஆண்டுகள் முன் முதலையுண்ட சிறுவனை, மீண்டும் வளர்ந்த வடிவில் உயிருடன் எழுப்பித் தந்து அதிசயம் நிகழ்த்தினார்.

நாள் பல நடந்து, சேரநாட்டை அடைந்த சுந்தரரை சேரமான் அன்போடு வரவேற்றார். அருச்சித்து வழிபட்டார். நாளும் சிவபூஜை! நாளும் பதிகங்கள்! நாளும் விழாக் கோலம்! மகோதை நகரில் அஞ்சைக் களத்து அப்பனாய் விளங்கிய அரனார்க்கு ஆனந்தம்! ஆனந்தம்!

ஒரு நாள், நெஞ்சைவிட்டு நீங்காத அஞ்சைக்களத்தானை வழிபடத் திருக்கோயில் சென்றார். திருமஞ்சனமாடச் சென்று விட்டதால் அப்போது சேரமான் உடனிருக்கவில்லை.

அஞ்சைக்களத்தானைக் கண்ட சுந்தரர்க்கு, நெஞ்சு, பஞ்சாய் நெகிழ்ந்தது. ஏதோ ஓர் உணர்வு.

ஒட்டின் உள்ளேயே, உலர்ந்து ஒட்டாது உள்ஒடுங்கும் புளியம்பழம் போல ஒருநிலை, கடந்த சில ஆண்டுகளாய், கல்யாண சுந்தரராய் வாழ்ந்தவர். 'ஆள்' (அடிமை) எனக் கொண்டவனையே, ஆள்போல ஆக்கிக்கொண்டவர். கயிலைமலையில் பெற்ற கோபத்தையும் சாபத்தையும் வரமாக்கி வெற்றி கண்டவர் ஆரூரர். இப்போது ஏதோ ஓர் 'உவர்ப்பு'.

" வெறுத்தேன் மனை வாழ்க்கை, வேண்டேன் இந்த மண் வாழ்க்கை.
தடுத்த செய்கையும் போதும். இந்தத் தாரணி வாழ்வும் போதும்.
கயிலைப் பொருப்பில் நின்அடிப் பணியே வேண்டும், கண்ணுதல்
பெருமானே! "

என்று நெஞ்சுருக வேண்டினார்.

'தலைக்குத் தலைமாலை' - என்று தொடங்கி, அலைக்கும் கடல் கரையின் மகோதை அஞ்சைக் களத்துறை அப்பனைப் பணிந்து பதிகம் பாடினார். மலைவல்லி உடனாகிய கயிலை வள்ளல் மனம் இரங்கினார். அயன் முதல் தேவர்களை அழைத்து 'வெள்ளை யானையில் ஆரூரனை உடன் இங்கு அழைத்து வருக' என ஆணையிட்டனர்.

அவ்வாறே அஞ்சைக்களம் வந்த அவர்கள் இறைவன் ஆணையைத் தெரிவித்தனர். சுந்தரரைச் சுமந்தபடி வெள்ளை யானை புறப்பட்டது. போற்றினர் வானவர். பூ மழை பொழிந்தனர்.

நீராடி முடித்த சேரமான், சுந்தரரைத் தேடினார். நிகழ்ந்தவை அறிந்தார். அருகில் நின்ற குதிரை ஏறி அஞ்சைக்களக் கோயிலை அடைந்தார்.

களிறேறிய சுந்தரர், களிப்புடன் கயிலை செல்வது அறிந்தார். சேரமானும், தான் ஏறி இருந்த குதிரையின் காதில் 'சிவமந்திரத்தை' உரைத்து விரைந்து செலுத்தினார். விரைந்த குதிரை, வெள்ளை யானை முன்சென்றது.

" தானெனை முன்படைத்தான், அது அறிந்து தன் பொன்னடிக்கே "

என்று தொடங்கி, நொடித்தான் மலையாம் கயிலையில் விளங்கும் கண்ணுதல் மேல் பதிகம் பாடியவாறு சென்றார் ஆரூரர்.

இருவரும் கயிலை அடைந்தனர். உள்ளுருகி நெகிழ்ந்து திருவோலக்கம் அடைந்த சுந்தரர் - அம்மை அப்பனை வீழ்ந்து வணங்கினார்.

ஆயினும், உடன் வந்த சேரர்க்கு உள் நுழைய அனுமதி கிடைக்கவில்லை. சேரர் வந்த செய்தியைச் சுந்தரர் சொல்லக் கேட்ட இறைவன், அவரை இப்போது அழைத்தார். 'நாம்' அழையாதிருக்க நீ கயிலை வந்தது ஏன் என்றார்.

'சுந்தரரைப் போற்றியே வாழும் நான், அவரைத் தொடர்ந்தேன். தங்கள் அருள் வெள்ளம் என்னை இங்குச் சேர்த்தது' என்றார். (சேரர் வேண்டியபடி, அவர் பாடிய 'திருவுலாப்புறத்தையும்' - கேட்டு மகிழ்ந்தார், இறைவன்)

'சுந்தரரே' நீ, சேரமானுடன் இங்கே, சிவகணத் தலைவர்களாய் இருந்து பணி செய்க, என ஆணையிட்டார். ஆரூரர், மீண்டும் ஆலால சுந்தரரானார்.

சுந்தரர் மணந்து மகிழ்ந்த, பரவையாரும் சங்கிலியாரும் முன்னை வாழ்வெய்தி அன்னைக்குப் பணி செய்யும் பேறு பெற்று மகிழ்ந்திருந்தனர்.



# 2. சுந்தரர் செந்தமிழ்

மொழி ஒரு கருவிதான்! ஒலியும் வரைவும் ஆகிய எழுத்துக்களை உடையது. பொருளைக் கண்டபோது - அதன் பண்பை உணர்த்திய போது - செயலைச் செய்தபோது, பிறருக்கு உணர்த்த - உரைக்க, சொற்கள் பிறந்தன. கலைஞர்களும் அறிஞர்களும் ஞானிகளும் சுவைஞர்களும் கருத்தைப் பதித்தனர்; தொடர் பிறந்தது. கவி மலர்ந்தது. மேலும் மேலும், மொழிக்கு மெருகேற்றிப் பக்குவப்படுத்தினர். பட்டை தீட்டி ஒளிவிடச் செய்தனர்.

ஆக, மொழி என்பது இப்போது, வெறும் எழுத்துக் கூட்டமன்று; உணர்வுகளின் புற வடிவம்! எண்ணங்களின் வெளித் தோற்றம்! மனிதன் பெற்றெடுத்த நாகரிகத்தின் அடையாளம்! வரலாற்றின் அழியாத சின்னம்! அனுபவங்களின் பதிவுகள்! முந்தைய தலைமுறையினர் பிந்திய தலைமுறையினர்க்குத் தந்துவிட்டுப் போன பரிசு! இங்கே,

சுந்தரர் தமிழ், செம்மாந்த தமிழ்! 'தென்னா தெனாத் தெத்தனா' எனக் கற்பவரைக் களிப்பால் உள்ளம் குளிரச் செய்யும் தமிழ்! சுந்தரர் தமிழால், சிவனடியார்கள், ஆரூரர் சிவத்திடம் கொண்ட பேரன்பின் ஆழத்தை எண்ணி மகிழலாம்! தமிழ் வீச்சின் அழகைச் சுவைப்பவர்கள், அதன் நயம் உணரும் விமர்சகர்கள், மொழி நடைச் சிறப்பை உணர்ந்து மகிழலாம்!

### சொல்

பொருள், முந்தியது. சொல், பிந்தியது. கருத்துப்பொருளும் காட்சிப் பொருளும் ஆகிய இரண்டையும் காட்டவேண்டிப் படைக்கப்பெற்றவை சொற்கள். காணாத இடத்தும், கருதாத இடத்தும் சொற்களே துணை நின்று உணர உதவுகின்றன.

சொற்களில் மரபு வழிப்பட்டவையும் உண்டு. புதிதாய் ஆக்கிக்கொள்வதும் உண்டு. மரபுவழிப்பட்டவற்றிலிருந்து, சிறிதே மாறுபடுத்தி ஆக்கிக்கொள்வதும் உண்டு. பெயர்ச்சொல், வினைச்சொல் முதலியன புதியனவாக ஆக்கப்படுவதும் உண்டு.

ஆரூரர், அரனன்பர் மட்டுமன்றி கல்வி நலம் சான்ற நல்லறிஞர்; வல்ல கவிஞர். மொழியை லாவகமாய்க் கையாளும் திறம் படைத்த வித்தகர். இது, அவருக்கு இறைவன் தந்த வரம். அவர் காட்டிய சொற்கள் சில புதியவை, சில புது மரபு தருபவை.

கார் - கருமை, என்பது பொருள் கருமேகத்துக்கு ஆகிவருவதும் உண்டு. இது பெயர்ச்சொல். ஆயினும் வினைச்சொல்லாக்க -லாகுமோ? ஆகும்.

" கார்க்கின்ற மழையாய்ப் பொழிவானை " (7-59-3)

என்பது ஆரூரர் வாக்கு. கருமேகத்தால் வருகின்ற மழை....
எனப் பொருள் தந்து, கார் வினையாக்கப்பட்டுவிட்டது.

பாசம் என்பது, மரபுவழி வழங்கும் ஒரு பழஞ்சொல், பற்று என்று பொருள். இதனைச் சிறிது திருத்தி, 'பாசு' என ஒரு புதுச் சொல் தருகிறார் ஆரூரர்.

" பாசு அற்றவர் பாடி நின்றாடும் பழம் பதி " (7-50-7)

இங்கே பாசம் > பாசு ஆக்கப்பட்டுவிட்டது.

பன்னுதல், திரும்பத்திரும்பச் சொல்லுதல். பன்னு என்பது இதன் வினைப்பகுதி; இந்த வினைப்பகுதியைப் 'பனுவு' என ஆக்கி, ஆள்கிறார்.

" பாடுமா பாடிப் பணியுமாறறியேன் பனுவுமா பனுவிப்பரவு மாறறியேன் "[1]
என்பது அவர் வாக்கு.

குலாவு-விளக்கு, என்பது பழம்பொருள். ஆயினும், இதற்குப் புகழ் எனப்புதுப் பொருள் காண்கிறார்.

" சொல்லில் 'குலா' அன்றிச் சொல்லேன் "[2]

நான் சொல்வதெல்லாம் என்புகழ்ச் சொல்லன்றி வேறு சொல்வேனில்லை. குலாவுதல் புகழ்தல் எனப் புதுப் பொருளுடைய தாகிவிட்டது.

''இரைச்சல் - கூச்சல். இதுசெய்பவன் கூச்சலிடுபவன். ஆனால்,

1,2. சுந்தரர் தேவாரம் 67-6, 73-3

" இரைப்பனேனுக்குஓர் உய்வகை அருளாய் "[3]

என்று ஆண்டதன்மூலம், தொழில் பெயரை தன்மை வினையாலணையும் பெயராக்கி, ஒரு மரபு படைக்கிறார்.

சிறிது, என்பது ஒரு குறிப்புச் சொல். இது, அடுக்கிவரும்போது, 'சிறிது சிறிது' என்றே வரும் ஆனால்,

" சிறுச்சிறிதே இரப்பார்கட்கு ஒன்று ஈயேன் "[4]

என்று பாடியதின் மூலம், தமிழில் ஒரு புதிய ஆட்சி தருகிறார்.

திதி-நிலைத்தல்; ஸ்திதி என்ற வட சொல்லின், தமிழ் வடிவம்.

" திதையும் தாதும் தேனும் ஞிமிறும் துதையும் பொன்னி "

என்றவிடத்து, மலர்களில், மகரந்தப் பொடியும், தேனும், தேன் வண்டுகளும் நிறைந்து நிலைத்திருக்கும் - எனப் பொருள் காணச் செய்கிறார். ஸ்திதி > திதி > திதை > திதையும் என்றவாறு வடசொல்லை உருமாற்றி விட்டிருக்கிறார்.

நிண்டுதல் - பேச்சு வழக்கில் உள்ள ஒரு சொல்; கிளர்ந்தெழுதல், ஒடுங்கி இருந்தது மேலேழுதல், என்பன இதன் பொருள்கள். கலாம் - கலகம்; கலாமிடுதல் கலகம் செய்தல் - இது கலாய்த்தல் என ஆகிறது. இந்த இரு அரிய சொற்களை, அவரது செந்தமிழில்

" நெண்டிக் கொண்டேயும் கலாய்ப்பன், நிச்சயமே "[5]

என்ற இடத்துக்காண்கிறோம்.

அட்டுதல் - கொண்டுவருதல்; இது, பிற பல இலக்கியங்களில் காணாத ஆட்சி

" ஆளிலை, எம்பெருமான் அவை அட்டித்தரப்பணியே "[6]

இதே போல, இன்னொரு புதுச்சொல், மோறாத்தல். சோம்பியிருத்தல் என்பது பொருள்.

" மோறாந்து ஓரொருகால் நினையாதிருந்தாலும் "[7]

என்ற இடத்து இச் சொல்லை அறிமுகப்படுத்துகிறார். துன்பம், அதனால், வரும் வருத்தம் என்பன நாம் அறிந்த சொற்கள். ஆனால் இதனை ஒரு புதுச்சொல்லால் உணர்த்துகிறது சுந்தரர் தமிழ். பரவையாரை மணந்த ஆரூரர், அவள் இல்லறம் நிகழ்த்தப் பொருள் வேண்டி இறைவனைப் பாடுகிறார். பரவையார் படும் துன்பம்

---

3,4,5,6,7. சுந்தரர் தேவாரம் 60-2. 60-4. 73-8. 20-1. 21-3

இவருக்கும் துன்பம். அது நீங்கப் பொன் தாரும் என வேண்டிப் பெறுகிறார். சுந்தரருக்கும் பொன் கிடைத்தது.

" ஐயா தந்தருளாய் அடியேன் இட்டளம் கெடவே "
" அரசே தந்தருளாய் அடியேன் இட்டளம் கெடவே "
" கூத்தா தந்தருளாய் - அடியேன் இட்டளம் கெடவே "[8]

எனும் திருமுதுகுன்றப் பதிகத்தால், நமக்கோ 'இட்டளம்' என ஒரு புதுச்சொல் கிடைத்தது.

சிக்கனம் தேவை. பொருளைச் செலவிடுவதிலும் தேவை. சொல்லைச் செலவிடுவதிலும் தேவை. வள்ளுவர் பெருமைக்கு, அவரதுசொல் சிக்கனமும் ஒரு காரணம். இந்தச்சிக்கனத்தைச் 'செட்டு' எனக் குறிப்பிடுவதுண்டு, செட்டு உடையவனைச் 'செட்டி' எனலாம். உடையவளை - அவ்வாறு அழைக்கலாமோ?

'முதுகுன்றப் பெருமானே! நின் காதலி உமை, செட்டாக இருந்து, சேர்த்து, ஊர்தோறும் அறம் செய்கிறாள்; நீயோ பிச்சை எடுக்கிறாய்; இது பெருமையோ' என்கிறார்.

" செட்டி நின் காதலி ஊர்கள்தோறும் அறம்செய
அட்டுமின் பலி என்று அங்கடை நிற்பதே "[9]

என்கிற வரிகள், அவ்வாறழைக்கலாம் என வழி காட்டுகின்றன.

பெருமானே! வட்டக் குழல்ஆளும் பெண்களை மயக்கும் அழகுடைய நீர், அழகு நிலவுக் கீற்றைச் சடையில் அணிவதும் பொருத்தமாகவே தெரிகிறது.

" வட்டவார் குழல் மடவார் தம்மை மையல் செய்தல்
சுந்தரராய்த் தூ மதியம் சூடுதல் சுவண்டே "[10]

என்கிறவிடத்து, சுவண்டு - பொருத்தம், என ஒரு புதுச்சொல்லைக் காண முடிகிறது.

சுந்தரர் இறைவனிடம் வேண்டிப் பெறாத பொருள்களில்லை. இவரளவு வேண்டிப் பெற்ற அடியார்கள் பிறர் யாருமில்லை. பொன்னும் பொருளும், கத்தூரிச் சாந்தும், கமழ் சந்தனமும், முத்துநிரைத் தாழ்வடமும் என எல்லாமும் பெற்றார். பட்டாடை கேட்காமல் விடுவாரோ?

8,9,10. சுந்தரர் தேவாரம் 25-5.8.9. 43-9. 46-4

" காம்பினொடு, நேத்திரங்கள் பணித்தருள வேண்டும்" [11]

என வேண்டுகிறார். காம்பு, கேத்திரம் - என்பன பட்டாடையின் வகைகள். தமிழின் இரு அரிய சொற்கள். ஆரூரர் ஆடை பெற்றார். நாம் இரு அரிய சொற்களைப் பெற்றோம்!

மடவாள் இடங்கொண்ட மாதவனே! தாணுவே! ஆயினும் தாருகா வனத்துத் தையல் முதலானோர் மையல் கொள்ள நீர் இருத்தல் தகுமோ என ஆரூரர் இறைவனை வினவும் போது, மாதிமை என ஒரு சொல் பயன்படுகிறது.

" வட்டவார் குழல் மடவார்தம்மை மயல் செய்தல்
மாதவமோ! மாதிமையோ " [12]

மாதிமை - தகுதி. இது நம்மில் பலருக்குப் புதுச்சொல்.

உமையவள் ஊடலைத் தணிக்க வழியறியாது தவித்தார், இறைவன். அப்போது இராவணன் வந்து கயிலையைப் பெயர்க்க, அஞ்சி நடுங்கிய உமையவள், கணவரைக் கட்டித் தழுவ, ஊடல் ஓடியே போய்விட்டது; உமையவள் ஊடல் தீர, இறைவனே இராவணனிடம் சொல்ல, அதற்கு உடன்பட்டு இராவணன் வந்து அவ்வாறு செய்தானோ. இப்படி ஒரு கற்பனை. இதனைச் சொல்லும் ஆரூரார் வாக்கினால் அற்புதமான ஒரு சொல் நமக்குக் கிடைக்கிறது.

" தூமொழியாய் ஊடல் தொலையாக் காலத்து
ஓர் சொற்பாடாய் வந்து" [13]

சொற்பாடாய் வருதல் - சொல்லி வைத்து, அதற்கு ஏற்றபடியே வருதல்.

எந்தைபிரான், எல்லார்க்கும் இனியவர். என்றும் எண்ணத்தக்கவர். எண்ணினால் இதயத்தில் வந்திருப்பவர். சரி, எப்படி எண்ணலாம்? அவரை நினைப்பதும் ஒரு பெருமைதான் என்கிற எக்களிப்புடன் - மிக்க மகிழ்வுடன் எண்ணவேண்டும். கண்ணை மூடி, நம் கருத்துப் புறம்போகாதபடி எண்ணவேண்டும். இதனைச்,

" சிம்மாந்து, சிம்புளித்து சிந்தையினில் வைத்துகந்து
திறம்பாவண்ணம்
எம்மானை மனத்தினில் நினைத்தபோது அவர் நமக்கினியவாறே " [14]

என்ற வரிகளால் நமக்கு அறிவிக்கிறார், ஆரூரர்.

11,12,13,14. சுந்தரர் தேவாரம் 46-2, 46-4, 46-7, 36-1

மிகக் களிப்புக் கொள்ளுதலாகிய செம்மாந்து > சிம்மாந்து எனப் புது வடிவம்பெற்று நிற்கிறது. செயற்கையாகச் சிறிதே கண்மூடி இருத்தலைச் 'சிம்புளித்து' என்ற சொல் குறிக்கிறது. இந்த இரு சொல்லும் சுந்தரர் தமிழுக்குத் தந்த கொடை எனலாம்.

குள்ளமாய் இருப்பவன், குள்ளன். கள்ளம் செய்பவன் கள்ளன். இச்சொல் பெண்பாலுணர்த்த வரும்போது, குள்ளி, கள்ளி என வரும். இது மரபு. ஆனால் ஆரூரர், கள்ளம் கொள்ளும் மனத்தையே 'கள்ளி' (35 : 5) எனக் குறித்து ஒரு புதுமரபு படைக்கிறார்.

மனிதரில் ஆண், பெண் உண்டு. விலங்குகளிலும் பறவைகளிலும் ஆண் - பெண் உண்டு. மரங்களிலும் கூட ஆண் - பெண் எனப் பிரிவுகள் உண்டு. இவற்றைச் சொல்லிடத் தனிப்பெயரும் உண்டு. தேன் வண்டுகளில் பல வகை, ஞிமிறு, மிஞிறு, தும்பி, சுரும்பு என்பன சில. சுரும்பு, ஆண் வண்டினை உணர்த்தும். இது மரபு; ஆனால், சுந்தரர் செந்தமிழ் ஒரு மரபுப் புரட்சி செய்கிறது.

" காளை வண்டு பாட மயிலாலும் வளர் சோலை "[15]

என்ற இடத்து, ஆண்வண்டு 'காளைவண்டு' எனப்படுகிறது.

கிளி, நாம் அறிந்துள்ள் பறவை. இதில் ஆணும் உண்டு. பெண்ணும் உண்டு. இதனை உணர்த்த, ஆண் - பெண், என்ற அடைமொழி தவிர வேறில்லை. குஞ்சுக் கிளியை உரைக்க 'பார்ப்பு' என அடைமொழி சேர்த்து வழங்குவது மரபு. ஆயினும், ஆரூரர் ஒரு புதுமரபு தருகிறார்.

" மன்னிப் புனம் காவல் மடமொழியாள் புனம் காக்க
கன்னிக்கிளி வந்து, கவைக் கோலிக் 'கதிர் கொய்ய "[16]

என்ற இடத்தில், இளைய பெண் கிளிகளைக் 'கன்னிக்கிளிகள்' என்றழைப்பது மரபில் புரட்சியன்றோ!

சொற்களைச் சொல்லி, அதற்குப் பொருளும் உடன்தருவது பயனுள்ள ஒரு கவி மரபு.

" வாய்மை எனப்படுவது யாது எனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல் "

என்கிற வள்ளுவம், வாய்மை என்பதைச் சொல்லி உடன் அதற்குப் பொருளும் சொல்லவில்லையா? இதுபோல, ஓர் இடம்.

15,16. சுந்தரர் தேவாரம் 40-4, 79-3

" துன்மை எனும் தகவின்மையை ஓரேன் "[17]

என்பது, திருக்கழுமலப்பதிகம். இங்கே துர்-மை > துன்மை ஆயிற்று. இந்த வடமொழி மூலச் சொல்லுக்குப் பொருள் என்ன? தகவின்மை என அவரே பொருள் விளக்கமும் தருகிற அருமை, நினைந்து இன்புற வேண்டிய கவி மரபல்லவா?

இன்னொரு சொல்லாட்சி; சிந்தனையைத் தூண்டுகிறது. வாணிகமா? வாணிபமா?

" வாணிகம் செய்வார்க்கு வாணிகம், பிறவும்
தமபோல் பேணிச் செயின் "

என்பது வள்ளுவம். வணிகம் முதல் நீண்டு வாணிகம், ஆயிற்று. அது செய்பவரும் நீண்டு 'வாணிகர்' ஆனார். மக்கள் வாயில் பட்டபோது, வாணிகர் > வாணியர் (?) ஆனார். இது மொழி மரபுதான். ஆனால், வாணிபர் > வாணியர் ஆவாரோ. ஆகலாம். பேச்சுத்தமிழில் உண்டு. 'வாணியச் செட்டியார்' என்பது மக்கள் தமிழ். ஆனால், வாணியம் என்பது உண்டோ? அப்படி இருந்தால் அது புதுமை தானே!

" ............ எழு நெஞ்சமே"
சிறுகாலை நாமுறு வாணியம் புறம்பயத்துறை
பூதநாதன் புறம்பயம் தொழப்போது "[18]

என்று பாடிப் புதுமை காண்கிறார் ஆரூரர்.

வீடு உடையவர் வீட்டார்; காடு வாழ்பவர் காட்டார். ஒடு தூக்கி அலைபவர், ஒட்டாண்டி. இது வழக்கு, மரபு. வீடியர், காடியர், ஒடியர் என்பன வழக்கமல்ல. கவிஞனுக்கும், காட்டாற்றுக்கும் கட்டுப்பாடில்லை. ஆரூரர், வல்ல கவிஞனும் ஆவார். ஆகவே இவர் உரைக்கும் கட்டுப்பாடில்லை !

" ............ தருமிழலை வந்து நாடகம், வான நாடியர் "
ஆட, மாலயன் ஏத்த "[19]

என்கிறபோது, வான நாடுடைய மகளிர், வான நாட்டினர், நாட்டார் எனப்படாமல், 'வான நாடியர்' எனக் குறிப்பிடுகின்றனர். இது ஆரூரர் செய்த மரபுமாற்றம்.

---

17,18, 19. சுந்தரர் தேவாரம் 58-9, 35-3, 88-4.

## எதுகையும் மோனையும் சந்தமும்

கற்பனை, உவமை, அணிவகைகளை ஆளுதல், எதுகை-மோனை, தாளத்திற்கு ஏற்ற சந்தங்கள், ஆகிய இவற்றுடன் இசைப்பாக்கள் அமைதல் சிறப்புடையது.

கவி வல்ல ஆரூரர், இவையெல்லாம் அமையக் கவி புனைவதில் கைதேர்ந்தவர். இயற்கைப் புலமை கொப்பளிக்கும் அவர்தம் பாடல்களில் இத்தகைய சிறப்புக்கள் அமைந்துள்ளன.

" பாடுவார் பசி தீர்ப்பாய்; பரவுவார் பிணிகளைவாய் "[20]

என்ற இடத்து, அமைந்த மோனை நம்மை இன்புறுத்தும்.

" பண்ணிடைத் தமிழ் ஒப்பாய்;
பழத்தினில் சுவை ஒப்பாய்;
கண்ணிடை மணி ஒப்பாய்;
கடு இருள் சுடர் ஒப்பாய் "[21]

என வரும் வரிகளில் எதுகை இன்பமும், ஒப்பாய் எனும் சொல் வரிதோறும் உரிய இடத்தில் அமைந்து ஒலி நயம் தருவதையும் உணர்ந்து இன்புறலாம்.

" புள்ளி/ நள்ளிகள் / பள்ளி / கொள்ளும் புறம்பயம் "[22]

என வருமிடங்களிலும்

" காடு நும்பதி / ஓடு கையது / காதல் செய்பவர் பெறுவது என் "[23]
" பத்தர்கள் / சித்தர்கள் / பாடி ஆடும் பைஞ்ஞீலியே "[24]

என்ற பதிக வரிகளிலும், காடும்-ஓடும் பத்தரும்-சித்தரும், புள்ளியும் பள்ளியும் ஆகிய எதுகை அமைவுகள் இன்பம் தரக் காணலாம்.

" சுற்றும் / முற்றும் / சுழன்றுழலும் வெண்ணாரைகாள்
அற்ற/ முற்றப் / பகர்ந்தடிகள் ஆரூரர்க்குப்
பற்றுமற் / றின்மையும் / பாடுமற் / றின்மையும்
உற்றுமற் / றின்மையும் உணர்த்தவல் லீர்களே "[25]

பற்று அவரன்றி இல்லை; பாடு (பெருமை) எனக்கு வேறு இல்லை; உற்ற உறவும் இல்லை; அவர் நினைவால் வரும் துன்பம் தவிரப் பிற எனக்கில்லையே! சுற்றி ஆடும் நாரைகளே! இவற்றை அவர்க்கு உணர்த்துங்களேன்! - என நாரைகளை அழைத்து, ஆன்மத் தலைவி புலம்புவதாக அமைந்த பாடல், கற்க இனிமை தருவன. கருத

20,21,22,23,24,25. சுந்தரர் தேவாரம் 29-3. 29-6. 35-5. 36-7. 36-8. 37-8

நெகிழ்ச்சி தருவன வல்லொலியமைந்த சொல்லடுக்கு, நாவுக்கு இன்பம் தருவன.

" ............அடிகள் ஆரூரரை மறக்க கில்லாமையும் வளைகள்
நில்லாமையும் உறக்க மில்லாமையும் உணர்த்த வலலீர்களே " [26]

எனும் பாடல். எதுகை மோனை இன்பத்தொடு சந்த இன்பமும் தந்து நம் மனத்தைக் குழையச் செய்துவிடுகின்றது.

" பாடுவன், பாடுவன் பார்ப்-பதி தன்மை பற்றிநான்
தேடுவன், தேடுவன் திண்ணெனப் பற்றிச் செறிதர
ஆடுவன், ஆடுவன் ஆமாத்தூர் எம் அடிகள்ளைக்
கூடுவன், கூடுவன்............ " [27]

என வரும். அடுக்குச் சொல்மாலை, தமிழ்ச் சுவையின் உச்சிக்கே நம்மை அழைத்துச் செல்வன. இப்பதிகம் முழுதுமே, இவ்வாறு அடுக்கிய சொல்லால், அமைந்து சிறந்தது.

" வேழ முரிப்பர்; மழுவாளர்; வேள்வி யழிப்பார்; சிரம் அறுப்பர்
ஆழி அளிப்பர், அரிதனக்கு; ஆனஞ்சு உகப்பர்; அறமுரைப்பர்
ஏழைத் தலைவர், கடவூர் இறைவர்; சிறுமான். மறிக்கையர்;
பேழைச் சடையர், மயானத்துப் பெரிய பெருமானடிகளே " [28]

என்பது திருக்கடவூர் மயானப் பதிகப் பாடல். உரிப்பர், அரிப்பர், உரைப்பர், அளிப்பர், அறுப்பர், உகப்பர் - என வரும் சந்தச் சொற்கள் செந்தமிழின் சுந்தரம் எலாம் தருவன அல்லவா?

இன்னொரு இடம். மறைக்காடு உறையும் மணாளனைக் கண்டு மனமுருகிய சுந்தரர், நீலக்கடலையும் தாழை மலரையும், துள்ளும் கயலையும், தாழைப் புதர்களில் நுழையும் குள்ளக் குரங்கையும், கண்டு கண்டு - அழகை உண்டு உண்டு, உவந்து பாடுகிறார். உதடு பிரிய ஓதிப் பார்த்தால்,கை, தாளம் போடும்! கால் சதி ஆடும்! மனம் குதியாடும்!

" யாழைப்பழித் / தன்னமொழி / மங்கை ஒரு / பங்கன்
பேழைச்சடை / முடிமேல்பிறை / வைத்தான்இடம் பேணில்
தாழைப்பொழி / லூடே சென்று / பூழைத்தலை / நுழைந்து
வாழைக்கனி/ கூழைக்குரங் / குண்ணும்மறைக் / காடே " [29]

கூழைக்குரங்கிற்கு வாழைக்கனி கிடைத்தது, நமக்கு? யாழிசையினும் இனிய தமிழ் கிடைத்தது.

---

26,27,28, 29. சுந்தரர் தேவாரம் 37-2, 45-2, 53-8, 71-1

" அங்கங்களும்/மறைநான்குடன்/ விரித்தான் இடம் / அறிந்தோம்.
தெங்கங்களும்/நெடும்பெண்ணையும்/பழம்வீழ்மலை / படப்பைச்
சங்கங்களும்/இலங்கிப்பியும்/வலம்புரிகளும்/இடறி
வங்கங்களும்/உயர்கூம்பொடு/வணங்கும்மறைக்/காடே "[30]

என்ற பாடலைப் படிக்கும்போது, இது சங்கப்பாடலா? சங்கரர்க்குப் பாடலா? செங்கரும்புச் சாறு தடவிய சுவைப்பூச்சா? திகைத்துப் போகிறோம்! தெங்கு என்பதுடன் அம் சேர்ந்து தெங்கம் ஆகிவிட்டது. அதுபோல, சங்கு சங்கம் ஆயிற்று. எல்லாம் சந்த இனிமை வருதற்காக.

இன்னொரு இடம்; மணலால் லிங்க வடிவமைத்து, பால் முழுக்குச் செய்து வழிபட, தந்தை சினந்து காலால் உதைக்க, அடங்காப் பெருஞ்சினத்தொடு தந்தையின் கால்களையே வெட்டிய விசார சருமன்(சண்டீசன்) நிகழ்வுகளைச் சொல்கிற பகுதி.

" இண்டை மலர்/கொண்டு மணல்/இலிங்கமது/இயற்றி
இனத்தாவின்/பாலாட்ட /இடறியதா/தையைத்தாள்
துண்டமிடு/சண்டியடி/அண்டர்தொழு/தேத்தத்
தொடர்ந்தவனைப்/பணிகொண்ட விடங்கனது/ஊர்
மண்டபமும்/கோபுரமும்/மாளிகையும்/சூளிகையும்
மறைஒலியும்/விழவொலியும்/மறுகுநிறை/வெய்திக்
கண்டவர்கள்/மனங்கவரும்/புண்டரிகப்/பொய்கைக்
காரிகையார்/குடைந்தாடும்/கலயநல்லூர்/காணே "[31]

எதுகையும் மோனையும் ஆரூரர் ஏவியபடியெல்லாம் வந்தமைந்து இன்பந் தருகின்றனவல்லவா?

இதுபோல, ஒலி இனிமைக்கு இன்னொரு எடுத்துக் காட்டு:

" நீரும் மலரும் நிலவும் சடைமேல்
ஊரும் அரவும் உடையான் இடமாம்
வாரும் அருவி மணிபொன் கொழித்து
சேரும் நறையூர்ச் சித்தீச் சுரமே "
" கரியின் உரியும் கலைமான் மறியும்
எரியும் மழுவும் உடையான் இடமாம்
புரியும் மறையோர் நிறைசெய் பொருள்கள்
தெரியும் நறையூர்ச் சித்தீச் சரமே "[32]

யாப்பிலக்கண அமைதி ஒருபுறம்; பாடல்களின் வரிகளில் 'நிரைநேர்' எனும் ஈரசைச் சீர் வந்து ஒரே கதியிலான

30.31.32. சுந்தரர் தேவாரம் 71-1.3 16-3. 93-1.8

ஒலிக்கட்டமைப்பு. எதுகையும், மோனையும் இயல்பான அளவில் எளிதில் பதியும் ஒலி இனிமை.

" இலைகள் சில போதும் - ஏத்தி வழிபட !
தலைதாழ்ந்தால் போதும் - தவத்தோரும் ஆகலாம்! "

எளிய ஆனால், ஆழ்ந்த தத்துவம் நிறைந்த கருத்து, 'யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை' என்ற திருமூலர் நம் நினைவில் வருவார்.

இதனை,

" இலையால் அன்பால் எத்தும் அவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தார் இடமாம்;
தலையால் தாழும் தவத்தோர்க் கென்றும்
தொலையாச் செல்வச் சோற்றுத் துறையே! "[33]

என்று சோற்றுத்துறை இறைவனைச் சொல்லுதன் மூலம் நம்முள் மனத்தில் பதிய வைக்கிறார் ஆரூரர்.

### உவமை

உவமையில்லாக் கவி, உப்பில்லாச் சோறு; நாணமில்லா நங்கை; எழுத்தில்லா மொழி. ஒத்தபொருளைச் சொல்லி, உரைக்கவந்த பொருளை, நன்கு உணரச் செய்ய உதவுவது உவமை. 'கவித்துவம்' எனும் கவிதையழகுக்கு முதன்மை அணி, உவமைதான்! அணிவகைகளின் தாய் இந்த உவமைதானே! ஆரூரர், அழகர்; சுந்தரர். அவர் பாடிய இறைவழிப் பாடலிலும் அழகு தரும் உவமைகள் பலப்பல.

சிந்தையில் சிவ நெறி பதிய, இந்த உவமைகள் பெருந்துணை செய்கின்றன. உன் அருள் வேண்டிய அடியார்கள் அழுகின்றனர். தொழுகின்றனர். உள்ளம் உருகுகின்றனர். நெஞ்சம் நெகிழ் கின்றனர். வேண்டி வேண்டி, வேண்டியது கிடைக்காமலேயே அவர்கள் மாண்டு போனால், பின்னர் நீ அவருக்குச் செய்வது என்ன உள்ளது? அவர்க்கு அருள் அளிப்பது உனக்கு மிக எளிய செயல். பஞ்சினை அடைப்பதால் குடுவை உடைந்தாபோகும்? அருள், பஞ்சாகவும், அடியார் மனம், பஞ்சுக் குடுக்கையாகவும் உருவகிக்கப்பட்டது. பஞ்சை அடைப்பதால், பஞ்சும் பாழாகாது; அடியார் நெஞ்சும் பாழாகாது.

---

33. சுந்தரர் தேவாரம் 94-1

" நஞ்சிஇடை இன்றுநாளை என்றுஉம்மை நச்சுவார்
துஞ்சியிட்டால், பின்னைச் செய்வது என்அடிகேள் சொலீர்
பஞ்சியிடைப் புட்டில் கீறுமோ பணியீர்! அருள்
முஞ்சியிடைச் சங்கம் ஆர்க்கும் சீர் முதுகுன்றீரே " [34]

என்னும் பாடலில் இவ் அரிய செய்தியைக் காண முடிகிறது. (உவமைக்கும் உருவகத்திற்கும் இடை உள்ள வேறுபாடு மிக மெல்லியது. உவமை முதிர்ந்து கனிகிறபோது, அது உருவகம். இதனை இங்கே நினைதல் வேண்டும்.)

சங்கிலியாரிடம் செய்த, சத்தியம் தவறியதால், கண்ணிழந்தார் ஆரூரர். இருந்து, இழந்தால் வரும் துன்பம் பெரிது. கோல் கைக்கொண்டு, துணைமுன் செல்ல, அவர் இழுத்த இழுப்புக் கெல்லாம் இசைந்து போக வேண்டும். இது வாதனை; அந்தச் சோதனை இப்போது ஆரூரருக்கு. அதனை ஓர் உவமையால் சொல்கிறார்.

நாயைக் கழியொடு சேர்த்துக் கயிற்றால் கட்டி இழுப்பவர் 'கறகற' என இழுத்து முன் சொல்ல, நாய் அவ்வண்ணமே பின் சென்றாக வேண்டும். கண்ணிழந்த தம்மை நாயாகவும், தம் துன்பத்தை அந்த நாய் படும் துன்பத்தோடும் ஒப்பிடுகிறார்.

" கழித்தலைப் பட்ட நாயது போல "

" ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை
ஒழித்து நீ அரு ளாயின செய்யாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே ! " [35]

என்பன. அவர் தரும் உவமை வரிகள்.

மென்மையுடையார், மேன்மை அடைவார். வன்மை விரும்பினால், துன்மையே (தீமை) பெருகும் இது வாழ்வியல் விதி.

யானையைக் குழிவெட்டிப் பிடிப்பர். முயலை வலை கட்டிப் பிடிப்பர். துதிக்கலாம். பரவிப் பாடலாம்; இரங்கி வேண்டலாம். இதுவே முறை. இவ்வழிவிட்டு, வன் வழி விரும்பினால் பயனுண்டோ? இதனை, உவமையால் சுட்டுகிறார்.

முயல் வலையில் யானை விழுமோ? பேரருள் எனும் யானை கிடைக்க முயலுக்குரிய வழியில் முயலலாமோ? இதனை,

---

34.35. சுந்தரர் தேவாரம் 43-1. 54-5

" ........... முயல்வலை யானை படுமென
மொழிந்தவர் வழிமுழு தெண்ணி "[36]

என்ற பதிகப் பா வரியால் அறியலாம்.

குங்குமம், சிறப்புடையது. மதிப்புடையது. பூசைப் பொருள்களில் ஒன்று. சக்திக்கு உரியது என்பது நம்பிக்கை. உச்சிமுனையிலும் நெற்றிநடுவிலும் இட்டுக்கொள்பது மரபு. இவை, மனிதர்கள் அறிந்தவை. ஆனால், பொதி பொதியாய்ச் சுமந்தாலும், கழுதை இதன் பெருமை அறியுமோ? அறியாத போது அதனைச் சுமப்பதால் அதற்குப் பயன்தான் உண்டோ? கழுதை சுமந்து களைத்தாலும் பார்ப்போர் இரங்குவாரோ? ஒரு பக்கம் உன் திருவடித்தொண்டு செய்கிறேன்; மறுபக்கம் உலகியல் வாழ்வில் உழன்று. உவகையும் கொள்கிறேன். இந்நிலையில், உன் திருவடிப்பணியினால், பயன் எப்படிக் கிடைக்கும்? இந்த உண்மையை

"கழுதை குங்குமந்தான் சுமந்து எய்த்தால் கைப்பர் பாழ்புக, மற்றது போல்
பழுது நானுழன்று உள் தடுமாறிப் படுசுழித் தலைப்பட்டனன் எந்தாய்!
......................... இடை மருதுறை எந்தைபிரானே "[37]

என்ற இடைமருதூர்ப் பதிகத்தால் நமக்கு உணர்த்துகிறார்.

வளமையும் இளமையும், வாழ்க்கையும் யாக்கையும், நின்று நிலைப்பன அல்ல; சென்று தேய்ந்து கழிவன.

இந்த வகை நிலையாமைக் கோட்பாடு, இந்திய தத்துவச் சிந்தனையுள், குறிப்பிடத்தக்க இடம் பெற்றிருக்கிறது. சமண மெய்ப் பொருளே இக்கருத்தின் முன்னோடி என்பர். தெய்வமே ஆகிய திருவள்ளுவரும் இந் நிலையாமைகள்பற்றித் தனி அதிகாரமே வகுத்துள்ளார்.

'நில்லாதவற்றை நிலையின என்றுணரும் புல்லறி வாண்மை கடை' என்பது அவர் மறைமொழி. ஆயினும், நிலையாமை உணர்வு பலரிடமும் உரிய காலத்தில் பதிந்திருப்பதில்லை. எல்லாம் போன இறுதியில்தான் 'செல்வமே! சிவபெருமானே!' எனப் பரம்பொருளின் திருவருளை எண்ணி உருகுகின்றனர்.

மாதர்மேல் வைத்த காதலால் மண்ணுலக வாழ்வு பெற்ற ஆரூரரும் இந்த வழக்கத்திற்கு விலக்கல்லர்.

---

36. 37 சுந்தரர் தேவாரம் 58-7. 60-1

'புல் நுனிப் பனிபோலச் சிறிதே நின்று, வறிதாய்க் கழியும் இந்த மானுட வாழ்க்கை ஒரு பொருளாகாது' என உணராமல், இன்று இன்பம், நாளையும் இன்பம் என எண்ணி ஏமாந்தேன். இடர்தான் உற்றேன். ஆகவே, இப்போதே நான் உய்வகை காட்டி அருள வேண்டும் எனக் கசிந்துருகி வேண்டுகிறார்.

" புல் நுனைப் பனிவெங்கதிர் கண்டாற் போலும் வாழ்க்கை
பொருளிலை, நாளும்
என்னெனக்கினி, இற்றைக்கு நாளை என்றிருந்திடர் உற்றனன் " [38]

என்பது ஆரூரர் வாக்கு.

சங்கத்தமிழ் நூல்களில், மூத்தது எனும் பெருமைக்குரியது குறுந்தொகை. அதிலே ஒருபாடல்: குருகு ஒன்று. இரை வேண்டி நீர்க்கரையில் காத்து நிற்கிறது. 'பச்' சென்றிருக்கும் அதன்கால்கள், பார்க்கஅழகு! அரிந்துவிட்ட தினையின் தாள் போல இருக்கிறதாம். இப்படிக் குருகின் தாளின் பருமனும், நிறமும், தினைத்தாள் போல,' என்கிறது குறுந்தொகை.

" தினைத்தா ளன்ன சிறு பசுங்கால
ஒழுகுநீர் ஆரல்பார்த் திருக்கும்
குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே " [39]

என்பது அப்பாடல். இதனை அப்படியே படி செய்தது போலப் பாடுகிறார் ஆரூரர்.

" தினைத்தாள் அன்ன செங்கால்
நாரை சேரும் திருவாரூர் " [40]

என்பது ஆரூரரின் பதிக வரிகள். சங்க நூல்களை ஆரூரர் படித்திருப்பாரோ? இருக்கலாம்!

## கற்பனை

கற்பனை என்பது விற்பனம். கற்கச் சுவைக்கும். கருத இனிக்கும். இயற்கைத் தோற்றத்தையும், நிகழ்வுகளையும் அழகு பட உரைப்பது; ஒழுங்குபடுத்தி உரைப்பது; எளிமையாய்த் தோன்றுவதையும் எழில்பெறச் சித்திரிப்பது. இப்படிப் போல, கவிதைக் கற்பனைக்குப் பலவாறு விளக்கம் சொல்லலாம். எவ்வாறாயினும் கற்பனை, கவிதையின் அழகை மேலும்

38, 40. சுந்தரர் தேவாரம் 60-3, 95-6 39. குறுந்தொகை 25

மெருகேற்றுவது என்பதில் ஐயமில்லை. இளமை நலமும், சொகுசு வாழ்க்கையும் கொண்ட சுந்தரர் பாடல்களில் கற்பனைக்குப் பஞ்சமில்லை.

மா பழுத்தால், அதன் பழத்தால் இனியது. பளபளப்புடைய அதன் தளிர்கள், பார்க்க இனியவை. நெருப்புக் கொழுந்து போலச் செம்மையும் மஞ்சளும் பழுப்பும் நெகிழ்ந்து கலந்த அவற்றின் அழகு, கண்ணுக்கு விருந்து. குளிர்ந்த பழுப்பும், நெகிழ்ந்து கலந்த அவற்றின் அழகும், கண்ணுக்கு விருந்து. குளிர்ந்த நீரை உறிஞ்சி வளர்ந்த இவை, கொதிக்கும் நெருப்பின் தோற்றத்தைத் தருமோ! தந்திருக்கிறது-சோற்றுத்துறைச் சோலையில்.

" சீதப் புனல் உண்டு எரியைக் காலும்
சூதப் பொழில் சூழ் சோற்றுத்துறை "[41]

என்பது பதிகவரி. கொடிய நஞ்சை உண்ட பெருமான், குளிரக் குளிர அருளைத் தரவில்லையா? அதுபோலத்தான் இதுவும், என்பது குறிப்புப் பொருள். (சீதப்புனல்-குளிர்நீர்; காலும்-கக்கும்; சூதப் பொழில்-மாஞ்சோலை)

நீரும் நாரையும் நெருங்கிய நண்பர்கள். அதுபோல, வாளையும் பொய்கையும். பொய்கையில் மலர்ந்து, காற்றில் அசைந்தன வெள்ளை வள்ளை மலர்கள். இதனைக் கண்ட 'சள்ளை' எனும் மீன், அம்மலரை வெள்ளைக் குருகு என அஞ்சித் துள்ளியது. அதனால் தெறித்த நீர், அருகில் வாய்பிளந்த வாளை மீனின் வாயில் விழுந்தது. இது இயற்கையான நிகழ்வு. மருதநிலப் பொய்கை எனில், வள்ளை மலரும் சள்ளை மீனும், வாளைப் போத்தும் இருப்பது இயல்பு. இத்தகைய மருதம் சூழ்ந்த வாஞ்சியத்தின் இறைவனைப் பாடுகிறார் ஆரூரர்.

" சள்ளை வெள்ளையங் குருகு தான்
அதுவாம் எனக்கருதி
வள்ளை வெண் மலரஞ்சி மறுகி
ஓர் வாளையின் வாயில்
துள்ளு தெள்ளு நீர்ப் பொய்கைத்
துறை மல்கு வாஞ்சியத்தடிகள்"[42]

என்பது பதிகப் பாடல்.

களிறும் பிடியும் காதல் மிக உறவாடித் திரியும் காட்சியை நாம் ஐயாற்றுத் தேவாரத்தில் படித்து மகிழ்வதுண்டு. இங்கேயும்

---

41, 42. சுந்தரர் தேவாரம் 94-6, 76-4

அத்தகையதொருகாட்சி. களிறுகள் மலைவாசிகள். அவற்றைப் பழக்கி உழைப்பைப் பெறுவது மலை மக்கள் இயல்பு. ஓர் ஆண் யானையை அவ்வண்ணம் கொணர்ந்து கட்டிவைத்துள்ளனர் வேடர்கள். உண்ண உணவும் தருகின்றனர். ஆயினும், இயற்கை வாழ்வை இழந்த அது, முரண்டு பிடிக்கிறது. வற்புறுத்துகின்றனர். பிளிறி அலறி மறுக்கிறது. இதனைக் கண்ட பிற யானைகள் அஞ்சி அயல் யானைகளையும், தாம் காதல் கொண்ட உறவு யானைகளை யும் அழைத்தபடி சிதறி ஓடுகின்றன. பருத்துக் கருத்த பாறை போலும் யானைகள் கூட்டம் கூட்டமாய் ஓடுவது, கண் கொள்ளாக் காட்சி. பதிகத்தில் இது கற்பனை எனினும் இயற்கை நிகழ்வுதான்! இத்தகைய இயற்கைக் கோலம் காட்டும் மலை, சீபர்ப்பத மலை

" மலைச்சாரலும் பொழிற் சாரலும்
புறமேவரும் இனங்கள்
மலைப்பால் கொணர்ந்திடித்தூட்டிட
மலங்கித் தம் களிற்றை
அழைத்தோடியும் பிளிறியவை
அலமந்துவந் தெய்த்துத்
திகைத்தோடித்தம் பிடி தேடிடும்
சீபர்ப்பத மலையே "[43]

காதல், போட்டி, உலகப்பொது; பொறாமையும் ஏசலும் பூசலும் இங்கே நெருங்கிய உறவுடையவை. இது மனிதர்களுக்கு மட்டுமா? சண்டைகளுக்கும் சாவுகளுக்கும் சாம்ராச்சியங்களின் சரிவுகளுக்கும்கூட இந்தக் காதல் பூசல் காரணமாயிருந்த துண்டல்லவா? விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் கூட, உண்டு.

சீபர்ப்பத மலையில் ஒரு களிறும் பிடியும் காதல் கொண்டிருந்தன. இயற்கைச் சூழலில் இன்பமே கண்டன. ஆயினும், சந்தேகப் பேய் அந்தக் களிற்றைப் பற்றிக்கொண்டது. தனக்குரிய அந்தப் பெண்-பிடி, வேறொரு களிற்றைக் காதலிப்பதாக ஐயம் வந்தது. அவ்வளவுதான்! தன் உடைமை பிறர்க்காகலாமோ?

'நீ, பிற களிற்றை விரும்பிவிட்டாயா?' எனச் சீறியது. சினந்தது. துதிக் கையை உயர்த்திச் சுழற்றியது. மதநீர் பெருக, அதனைச் சிதறியது. கண்களில் தீப்பொறி பறக்கப் பிளிறியது. அப்பாவிப் பெண் யானை அஞ்சியது. நடுங்கியது. 'அலர்' தூற்ற வேண்டாம்.

43. சுந்தரர் தேவாரம் 79-2

எண்ணம் வேறில்லை; என்னைநம்பு' எனக் கண்ணீர் சிந்தக் கெஞ்சியது. சத்தியமும் செய்தது. இப்போது ஒருவாறு நம்பியது களிறு. இத்தகைய களிற்றுக் காட்சியைக் காணலாம் என்கிறது சீபர்ப்பதமலைப் பதிகத்தின் பாடல் ஒன்று.

" மாற்றுக்களி றடைந்தாய், என்ற மதவேழம் கையெடுத்து
மூற்றித்தழ லுமிழ்ந்தும்மதம் பொழிந்தும் முகம்சுழியத்
தூற்றத்தரிக் கில்லேனென்று சொல்லி அயலறியத்
தேற்றிச்சென்று பிடிசூளுறும் சீபர்ப்பத மலையே "[44]

என்பது அப்பாடல்.

மண்ணில் மனிதர்களிடை நிகழ்ந்திருக்கத்தக்க காட்சியை மலைமேல் நிகழ்வதாகக் கற்பனை செய்திருக்கிறார், சுந்தரப் பெருமான். களிறும்பிடியும் கலாம் செய்திருந்த காட்சி அது. இனி,

குரங்கினம், தம்முள் கூச்சலிட்டுப் பூசல் செய்த காட்சி ஒன்று.

தாய்க்குரங்கு ஒன்று, தேடி, தாவி, திரிந்தலைந்து, வாழைக் கனிகளையும் வருக்கைப் பலவின் பழுத்த சுளைகளையும் கொண்டு வந்து தன் குட்டிகளுக்குப் பங்கிட்டுக் கொடுக்கிறது. அவற்றில், என் பங்கு சிறியது; உன் பங்கு பெரியது எனப் பொருமிப் பூசலிட்டுக் கொள்கின்றன. பூசல் கைகலப்பில் முடிகிறது. தாழைத் தண்டையும் வாழைத்தண்டையும் பிய்த்து ஓங்கி உயர்த்தி அடித்துக் கொள்கின்றன. ஐயோ! பாவம்! இது அறிவுக் குறையன்றோ என நாம் அங்கலாய்க்கிறோம்.

" வாழையின் கனிதானும் மதுவிம்மு
வருக்கையின் சுளையும்
கூழை வானரம் தம்மில் கூறு இது
சிறிது எனக் குழறித்
தாழை வாழையந் தண்டால் செருச்செய்து
தருக்கு வாஞ்சியத்துள்
ஏழை பாகனை யல்லால் இறையெனக்
கருதுதல் இலமே "[45]

என்பது, வாஞ்சியத்துப் பதிகம்.

### எண்ணலங்காரம்

எண்ணம், கவிதைக்குக் கரு. எண்ணிக்கை கணிதத்துக்குக் கரு. எண்ணத்தை எண்ணிக்கையோடு இணைத்துக் கவிதை செய்யும் -

44, 45. சுந்தரர் தேவாரம் 79-6, 76-9

போது, கருத்தும் சிறக்கும். கவிதையும் உவப்பூட்டும். இது எண்ணலங்காரம்.

" ஒன்றவன்தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள்; நான்குணர்ந்தான்; ஐந்து
வென்றவன்; ஆறு விரித்தனன்; ஏழும்பர்ச்
சென்றனன்; தானிருந்தானுணர்ந்தெட்டே" [46]

எனவரும், திருமந்திரக் கடவுள் வாழ்த்துச் செய்யுளும், இவ்வகைப்பட்டதே ஆகும்.

'ஒன்று கொலாம்' எனத் தொடங்கும் அப்பரடிகளின் விடந் தீர்த்த பதிகமும்கூட இங்கு ஒப்பிடத்தக்கதே ஆகும். எண்ணலங்காரம் படப் பாடுதல் ஒரு கவி மரபு. இது, ஆரூரர் பதிகங்களிலும் பல இடங்களில் உண்டு.

" ஆறுகந்தார்; அங்கம் நான் மறையார்
எங்குமாகி அடல்
ஏறுகந்தார்; இசை ஏழுகந்தார் எழுத்து; [47]
ஆறும் அன்பர்
இட்டுகந்தார் மலர்ப்பூசை" [48]

எனவரும் பதிக வரிகளில், இந்த எண்ணலங்காரம் விரவி நிற்பதைக் கண்டு மகிழலாம்.

## சொல் வித்தகம்

வித்தகம்-பெருந்திறமை, சாதுரியம்; கவி-கவிதை பெருமை பெறுவது, கருத்தினாலும் கதையாலும்மட்டு மல்ல. அவன் சொற்களைக் கையாளும் பக்குவமும் அவற்றைத் தேர்ந்தெடுத்தலும் முக்கியம் இதனைச் 'சொல் வித்தகம்' எனலாம்.

" சொல்வித் தகத்தால் இறைவன் திருநணா ஏத்து பாடல்" [49]

என்பது திருஞானசம்பந்தர் வாய்மொழி".

எல்லாம் வல்ல இறைவன், இல்லார் போல இரப்பதும் உண்டு. கையில் கபாலம் ஏந்தித் திரிந்தலைந்து பிச்சைப் பலி ஏற்றது அன்பர்கள் அறிந்த செய்தி. இல்லோர் இரக்கலாம். இயல்பு.

46. திருமூலர் திருமந்திரம் 47, 48. சுந்தரர் தேவாரம் 19-4, 19-8
49. திருஞான. தேவாரம் 2-72 11.

உள்ளோர் இரக்கலாமோ? இழிவில்லையா? உலகம் மதிக்குமோ? இடுவோர் இதனை ஏற்பாரோ? இக்கருத்தை,

" இன்றியே இலராவரோ? அன்றி
உடையராய் இலராவரோ
அன்றியே மிக அறவரோ? நமக்கு
அடிகளாகிய அடிகளே" [50]

என்ற வரிகள் நமக்கு அழகுற அறிவிக்கின்றன. இன்றி-அன்றி என்பதில் சொல் முரணும், எதுகை நலமும் காண்கிறோம். உடையவராய்-இலராய் என்பவற்றில் கருத்து முரண் காண்கிறோம். அன்றியே, அறவரோ, அடிகளாகிய, அடிகளே என்பவற்றில் மோனை அமைந்து சிறக்கிறது. சுருங்கிய இருவரிகளில் பழிப்பது போலப் புகழ்தலும் உண்டு. உள்ளதைச் சொல்லும் தன்மை அணியும் உண்டு. எதுகை, மோனை, முரண் அணிகளும் உண்டு. ஆக ஐந்து அழகை இருவரியில் காட்டியது வித்தகம்தானே?

## சொல் - பொருள் அணி

" பற்றுக பற்றற்றான் பற்றினை" !

என வரும் திருக்குறள் பிரபலம். சொல் பொருள் பின்வரு நிலையணி என்ற வகையிலும் ஒரே சொல், ஒரே பொருளில் பலமுறை அடுக்கிவருவதே இதன் அழகு. இந்த அழகு, சுந்தரர் தமிழிலும் பல இடங்களில் உண்டு.

" பற்ற லாவதோர் பற்றமற்றில்லேன்
பாவியேன் பல பாவங்கள் செய்தேன்"! [51]

என்ற வரியில், சொற் பொருளணியும் எதுகையும் இணைந்து இன்பம் தருகின்றன. இதே போல

" பற்றினார்க் கென்றும் பற்றற்றவன் தன்னைப்
பாவிப்பார் மனம் பாவிக் கொண்டானை!
கற்றை வார் சடைக் கம்பன் எம்மானைக்
காணக்கண் அடியேன் பெற்றவாறே"! [52]

முன்னர்க் காட்டிய பாடல் போலவே இங்கும், பற்ற என்ற சொல்லும், பாவித்தல் என்ற சொல்லும், அடுக்கி வந்து இன்பம் தருகின்றன. பாவித்தல் ஏற்று இன்புறுதல், பரவியிருத்தல்.

தலமெலாம் சுற்றி நிலவெலாம் நீங்கப் பெற்ற ஆரூரர், திருவலிவலம் சென்றபோது பாடிய பதிகப் பாடல் ஒன்று.

---

50, 51, 52. சுந்தரர் தேவாரம் 33-3, 60-6, 61-2

" பாடறியேன், பணிவறியேன்
பனுவவும் அறியேன், பனுவலும் அறியயேன்
ஆயினும் அவன்என்னை, வருந்த வேண்டா "

என ஆவன செய்கிறான். என்பதான கருத்தமைந்த அரிய பாடல்.

" பாடுமா பாடிப் பணியுமாறியேன்
பனுவுமா பனுவிப் பரவுமாறறியேன்
தேடுமா தேடித் திருத்துமாறறியேன்
செல்லுமா செல்லச் செலுத்து மாறறியேன் "[53]

இங்கே, பாடு(மாறு), பனுவு(மாறு), தேடு(மாறு), செல்லு(மாறு), செலுத்து(மாறு)-என்ற, அடுக்குச் சொற்களில், 'ஆறு' என்பது 'ஆ' எனக் கடை குறைந்தது, ஒரு புதுமை. பொருள் மாற்றம் ஒன்றுமில்லை பன்னல் > பனுவுதலானது பின்னும் ஓர் புதுமை.

குழவியாகப் பிறந்து, கிழவனாகி இறக்கும்வரை இசை, நம்மோடு இசைந்திருக்கிறது. இசைந்த உணர்வொடு இறைவனை வழிபடவும் இசை துணை செய்கிறது. எனவே, இறைவழிபாடு செய்த நாயன்மார், பண்ணோடும் இசையோடும் பாடிப் பரவி வழிபட்டனர். இசை எனும்போது, குரலிசை மட்டு மன்றி குழல் முதலிய கருவிகளின் இசையும் அடங்கும். கருவிகள், அவைபல. மனிதன் மனமும் அறிவும் வளர்ந்தபோது வளரவளரக் கண்ட கருவிகள் பலப்பல. இவற்றைப்பட்டியலிட்டு, கருத்தையும் இசைத்துப் பாடுவது ஒருவகை வித்தகமல்லவா? இதோ ஒரு பாடல்.

" விட்டிசைப்பன கொக்கரைகொடு
கொட்டி, தத்தளகம்
கொட்டிப்பாடும் இத் துந்துமியோடு
குடமுழா நீர் மகிழ்வீர்
மொட்டலர்ந்து மணங்கமழும்
முருகன்பூண்டி மாநகர்வாய்
இட்ட பிச்சை கொண்டுண்ப தாகில்
எத்துக்கு இங்கிருந்தீர் எம்பிரானீரே "[54]

இங்கே, கொக்கரை, கொடுகொட்டி, தத்தளகம், தந்துமி, குடமுழா, எனும் ஐந்து தோற்கருவிகள் குறிக்கப்பட்டுள்ளன.

53, 54. சுந்தரர் தேவாரம் 67-6, 49-6

" தக்கை, தண்ணுமை, தாளம், வீணை
தகுணிச்சம், சங்கு, கிணை, சல்லரி
கொக்கரை, குடமுழவினோடு இசை
கூடிப் பாடி நின்றாடுவீர்" [55]

என்ற பாடலில், ஒன்பது கருவிகள் அடுக்கிக் கூறப்பெற்றுள்ளன. இவற்றுள், தாளமும் வீணையும் தவிர, பிற தோல் கருவிகளாம். இவ்வாறு இசைக்கருவிகளை இணைத்துப் பாமாலையாக்கும் மரபு முன்னேயும் உண்டு என்பதனை

" துத்தம் கைக்கிள்ளை விளரிதாரம்
உழை இளி ஓசை பண்கெழுமப் பாடிச்
சச்சரி கொக்கரை தக்கையொடு
தகுணிதம் துந்துபி தாளம் வீணை
மத்தளம் கரடிகை வன்கை மென்தோல்
தமருகம் குடமுழா மொந்தை வாசித்து
அத்தனை விரவினோடும் ஆடும் எங்கள்
அப்பன் இடம் திரு ஆலங்காடே "

என்ற காரைக்காலம்மையார் திருப்பாடலாலும் அறியலாம்.

## முரண் அணி

ஒன்றுக்கு ஒன்று எதிர்நிலை உடையதை முரண் என்கிறோம். கவிஞர்கள் இதனை, முரண் அணி என்பர்; இதுவும் அழகுதான். சொல்லளவில் முரண்படுவதும் பொருளாகிய கருத்து முரண் படுவதும் உண்டு. சுந்தரர் பதிகங்களிலும் இத்தகைய முரணணி பயின்றுவருதலைப் பார்க்கலாம். வாய்மை மனத்தொடு எண்ணுவார்க்கு இனியர். விலகி நிற்பார்க்கு என்றும் விலகியே நிற்பவர். அணுகி வருவார்க்கு, என்றும் அணுகிவருபவர்; இது பரம்பொருள் இயல்பு. இதனை,

" ........ பேர்ந்தவர்க்குச்
சேயோர்; அடியார்க்கு அணியவர்
ஊர், திருநின்றியூரே " [56]

என்ற பாடலில் காண்கிறோம் இது போலவே,

" பிழுக்கை வாரியும் பால்கொள்வர்
அடிகேள், பிழைப்பன் ஆயினும் பிழையேன் " [57]

55, 56, 57. சுந்தரர் தேவாரம் 36-9, 19-10, 54-1.

பிழைப்பன்-பிழையுடையவன், பிழையேன்-பிழை செய்யேன், எனவரும் முரண், அழகு தருவதன்றோ?

" தோன்ற நின்றளித்திட்டால்,
சொல்லுவாரை அல்லாதன சொல்லாய் "[58]

என இங்கும் முரணழகைக் காணலாம்.

" ........ கங்காளன்
சான்று காட்டுதற்கு அரியவன்; எளியவன்,
தன்னைத் தன்னிலா மனத்தார்க்கு "[59]

" எங்கும் நாடியும் காண்பரி யானை
ஏழையேற்கு எளிவந்த பிரானை "[60]

அவன் தன்னை, தன்னுள் பதித்திருக்கும் அடியார்க்கு எளியவன். ஆயினும் ஒப்புச் சொல்லுதற்கு அரியவன். எளிமையும் இதனில் முரண்பட்ட அருமையும் ஒரு சேர வந்தமை, நம்மை இன்புறுத்தும். நிறப் பண்புகளில், செம்மை-நேர்மையையும், வெண்மை-தூய்மையையும், கருமை-கொடுமை-அறியாமையும் உணர்த்தும் சொற்களாகக் கருதுவது வழக்கம். நேர்மையும் தூய்மையும் உடைய இறைவன், கொடுமைகளை அடக்கி விழுங்கியவன்.

" செம்பொன் மேனிவெண்ணீறணிவானைக்
கரிய கண்டனை மாலயன் காணாச்
சம்புவை.......... "[61]

எனவரும் வரிகளில் முரண்பட்ட பண்புகள் தொடர்ந்து வந்திருக்கின்றன. கண்டனை-காணா, என்ற சொற்களும், சொல்லளவில் முரண்பட்டுத் தோன்றுவதும். அழகன்றோ?

இதே போல,

" பேணா தொழிந்தேன் உன்னையல்லால் பிறதேவரைக்
காணா தொழிந்தேன்; காட்டுதியேல் இன்னம் காண்பன் நான்
பூண்நாண் அரவா! புக்கொளியூர் அவிநாசியே
காணாத கண்கள் காட்டவல்ல கறைக் கண்டனே "[62]

என்ற பாடலில், காணாதொழிந்தேன்-காட்டுதியேல், காணாத கண்கள் - காட்டவல்ல, எனச் சொல் முரண், அழகுபட அமைந்திருப்பதைக் காணலாம்.

---

58, 59, 60, 61, 62. சுந்தரர் தேவாரம் 54-4, 67-10, 68-5, 68-1, 92-8.

**சுருக்கம்**

சுருங்கச் சொல்லலும், 'சுருக்' எனச் சொல்லலும் கவிக்குப் பெருமை; கற்போர்க்கு இனிமை. வள்ளுவத்தின் பெருமைக்கு, இவ்வகைத் தன்மையும் ஒரு காரணமன்றோ? ஆரூரர் தமிழில் இந்த அருமையும் உண்டு. தவறு செய்தேன்; தவறுகளே செய்தேன், சினந்தாயில்லை; சீறவில்லை. திருந்துவேன் என எண்ணியிருந்தாய்; திருந்தவில்லை திருத்தினாய். இவ்வாறு 'சுருக்' எனச் சொல்கிறார்.

" திருத்தித் திருத்தி வந்து என் சிந்தை
இடங்கொள் கயிலாயா!
அருத்தித்து உன்னை அடைந்தார் வினைகள்
அகல அருள்வாயே "[63]

என்ற இடத்தில், திரும்பத் திரும்பத் தாம் தவறு செய்ததையும், 'அவன்' 'திருத்தித் திருத்தி' வந்து சிந்தை கொண்டு ஆண்டதையும் குறிக்கும்போது, நம்மையும் 'அவன்' வந்து திருத்துவானோ என எண்ணத் தோன்றுகிறது.

" தம்மையே புகழ்ந்து "

எனத் தொடங்கும் திருப்புகலூர்த் தேவாரம். இதற்கு இன்னுமொரு எடுத்துக்காட்டு.

சோறுண்டு; நீருண்டு; சுகமுண்டு; துயரில்லை. செத்தாலும் கவலையில்லை. சிவலோகமுண்டு. அது உறுதி.

" இம்மையே தரும், சோறும் கூறையும்
ஏத்தலாம்; இடர் கெடலுமாம்;
அம்மையே சிவ லோகம்
ஆள்வதற்கு யாதும்
ஐயுற வில்லையே "[64]

சுருங்கச் சொல்லிய, 'சுருக்' என்னும் வரிகளில்தான் எத்தனை உறைப்பு? எத்தனை நம்பிக்கை?

" மட்டார் பூங்குழல் மலைமகள் கணவனைக்
கருதார்தமைக் கருதேன்
ஒட்டாயாகிலும் ஒட்டுவன் அடியேன்
உன்னடி அடைந்தவர்க் கடிமைப்

---

63, 64. சுந்தரர் தேவாரம் 47-8, 34-1.

பட்டேனாகிலும் பாடுதல்ஒழியேன்,
பாடியும் நாடியும் அறிய
நட்டேன்; ஆதலால் நான் மறக்ககில்லேன்
நாட்டியத் தான்குடி நம்பீ "[65]

நீ விட்டாலும் நான்விடமாட்டேன். நீ ஒட்டாதுபோயினும் நான் ஒட்டுவேன். அடியார்க்கும் அடிமையாகிப் பாடுவேன் - சுருக் கென்னும் கருத்து; நறுக்கென்னும் சொற்கள்.

## தத்துவம்-யோகம்-தருக்கம்

சர்க்கரை எனும்போதே. இனிப்பு உள்ளடங்கும். சமயநூல் எனும் போதே தத்துவச் செய்திகளும், யோகக் கருத்துகளும் உள்ளுறை என்பது வெளிப்படை. உயிர்கள் பெறும் நிலை ஐந்து. கனவு - நனவு - உறக்கம் - பேருறக்கம் - உயிர்ப்படங்கல் என்பன அவை. இதில் நான்காம் நிலை 'துரிய நிலை' என்பர். இது நாலாம்தானம். முப்பொருள் உண்மை உணர்ந்து, முறையாய் ஒழுகும் ஞானியரின் நாலாம் நிலையில், இறைவன் இருப்பான். இது சைவ சித்தாந்தம். இந்த உண்மையை

" நாற்றானத்து ஒருவனை "

எனவும், சிவோகம் பாவனை உடையாரிடத்துத் தான் அவனாய் இருப்பான் எனும் கரு

" நானாய பரனை "

எனவும் நுட்பமாக உணர்த்தும் இடம் (7-38-4) நுணுகி அறியத் தக்கதாகும். சித்திகள் எட்டு; வழிபாட்டு மலர்கள் எட்டு. பரம் பொருளின் குணங்கள் எட்டு. இதுபோல, மூர்த்தங்களும் (வடிவங்களும்) எட்டு ஆகும். இதனை,

" எட்டினால் திகழும் திருமூர்த்தி
என்செய்வாய் அடியேன் எடுத்துரைக்கேன் "

என்ற வரிகளால் அறிவிக்கிறார் ஆரூரர்.

என்னை அவன் அறியான்; அவனை நானறியேன். அவனருளாலே அவனை அறிந்தேன். அடியன் ஆனேன். அவனும் என்னைத் தன் அடியான் என இப்போது அறிந்துகொண்டான். இக் கருத்தைத் தருவது,

" என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும்முன் ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன்னடியான் என்றறிதலும்
தன்னை யானும் பிரான்என் றறிந்தேன் "

65. சுந்தரர் தேவாரம் 15-5.

என்ற அப்பர் திருஉரை. இது ஒத்த கருத்தை ஆரூரர்வாக்கிலும் அறியலாம்.

" தன்னை முன்னும் நினைக்கத் தருவான்
உன்னப் படுவான் ஒற்றி ஊரே "[66]

நினைக்கத் தெரியாத எனக்கு அவனே நினைப்பைத் தருவான். பின் அவனே நினைக்கபபடுவான். என்ன அருமையான சிந்தனை!

உலகியல் வாழ்வுக்கும், உயர்நெறி வாழ்வுக்கும் கல்வி தேவை. எழுத்தும், எழுத்தாலாகிய சொல்லும், சொல்லுணர்த்தும் பொருளும் அறியக் கல்வி தேவை. அவன் உணர்த்துவது ஞானம்.

" சொல்லை நம்பி, பொருளாய் நின்ற நம்பி "[67]

சொல் நம்பி;(ஐ-சாரியை) பொருளாயும் நின்ற நம்பி, என்பது கருத்து.

" விண்தானே, மேலையார் மேலையார் மேலாய்
எண்தானே, எழுத்தொடு சொற்பொருள் எல்லாம் முன்
கண்டானே, கண்தனைக் கொண்டிட்டுக் காட்டாயே "[68]

எண்-எழுத்து-சொல்-பொருள்-எல்லாமும் அவனாகிறான். நம் கண் கருவியாக, அவற்றைக் காட்ட வேண்டுவதும் அவனே· என்ற செய்தியைத் தருகிறது இப்பதிகம்.

கல்வி இனியது; ஆகவே கற்றல் இனியது. ஆயினும் இதனினும் அவன் இனியவன்.

" கற்ற கல்வியிலும் இனியானைக்
காணப் பேணுமவர்க்கு எளியானை "[69]

என்பது திருநீடூர்ப் பதிக வரிகள். இனிமையே தேடும் மனிதர்கள் யாரைத் தேடவேண்டும் ஏன்பதனைச் சொல்லாமல் சொல்லிவிடுகிறார் சுந்தரர்.

ஓர்ந்துணர்வதுயோகம்; யோகம் கைவந்தால் ஒண்பொருள் கைகூடும்.

" ஓர்ந்தனன், ஓர்ந்தனன் உள்ளத்துள்ளே நின்ற ஒண்பொருள்
சேர்ந்தனன், சேர்ந்தனன்........... "[70]

உள்ளத்துள் ஓர்ந்து உணர்வாருக்கு இவ்வாறு, நாபி எனும் உந்திக்கு நாலுவிரல் மேலே உள்ள நடுவிடத்தில் தேடினால் கிடைப்பவன். இதனை,

66, 67, 68, 69, 70. சுந்தரர் தேவாரம் 91-4, 63-8, 96-3, 56-5, 45-4

" தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள்; நாடொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலே ஓர் நால்விரல் " [71]

என்பது ஆரூரர் மொழி.

நிலையாமைபற்றி முன்பும் பார்த்தோம். யாக்கை நிலை, வாழ்க்கை நிலை, பிறப்பிறப்பு நிலை என்பன மாய்மால உறவுகள். இந்தக் கருத்து என்றும் நம் சிந்தையில் இருக்கத் தக்கன. இதனை நமக்கு உணர்த்தும் வகையில்,

" தோற்றமுண்டேல் மரணமுண்டு துயரமனை வாழ்க்கை " [72]

" செத்தபோது ஆருமில்லை; சிந்தையுள் வைம்மின்கள் " [73]

" செடிகொள் ஆக்கை சென்று சென்று தேய்ந்து ஒல்லை
வீழாமுன் " [74]

" இன்ப முண்டேல் துன்பமுண்டு ஏழை மனை வாழ்க்கை " [75]

" தந்தை யாரும், தவ்வை யாரும் எள்தனைச் சார்வாகார் " [76]

" வாழ்வாவது மாயம், மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல்......... " [77]

" பொய்த்தன்மைத் தாய மாயப் போர்வையை மெய் என்று எண்ணும்
வித்தகத் தாய வாழ்வு " [78]

" மணமென மகிழ்வார் முன்னே
மக்கள் தாய் தந்தை சுற்றம்
பிணமெனச் சுடுவார் பேர்த்தே,
பிறவியை வேண்டேன் நாயேன் " [79]

என வரும் வாக்குகள் ஆழ்ந்து சிந்திக்கத் தக்கன அல்லவா?

தருக்கம் என்பது ஒரு கலை, காரணம் கூறிக் காரியம் சுட்டலும், காண்பது காட்டிக் காரணம் கேட்டலும், வினாவை எழுப்பி விவாதம் செய்தலும், தருக்கக் கலையின் சில வெளிப்பாடுகள். சங்கிலியார் மேல் வைத்த ஆசை சங்கடத்தில் முடிந்தது. சங்கிலி கிடைத்தார். ஆயினும், சத்தியம் தவறியதால், கண் பார்வைபோயிற்று. 'வினைப்பயன் மேல் வர, உன் ஆணையால்தான் பிறந்தேன். சங்கிலியை விரும்பியதால்தான் என்கண் போயிற்றோ? ஆயினும்

71. 72. 73. 74. 75. 76. 77. 78. 79. சுந்தரர் தேவாரம் 45-9. 7-2. 7-1. 7-3. 7-8. 7-9. 78-1. 8-9. 8-6.

உன் திருவடி. மறவேனல்லனோ? ஆகவே கண்ணைப்பறித்தது என் நியாயம்? இதனை

" கட்டனேன் பிறந்தேன் உனக்காளாயக் காதல் சங்கிலி காரணமாக
பெட்டனாகிலும் திருவடிப் பிழையேன்,
பிழைப்பனாகிலும் திருவடிக்கடிமை " [80]

என்ற பதிகவரிகள் உணர்த்துகின்றன.

''எல்லாருக்கும் இரண்டு கண்; உனக்கு மூன்று கண்; நீ பரம்பொருள். ஆகவே இது நியாயம் என்றேவைத்துக் கொள்ளலாம். உனக்கு மூன்று கண்ணிருக்கவும், எனக்குள்ள கண்ணைப் பறிக்கலாமோ? என்ன கணக்கு அது? இது, என் பேராசைத்தவறு என்று கொண்டால், என்ன தவறு? சரி, ஊன்றி நடக்க ஒரு கோலாவது கொடு, ஒற்றியூரனே'' - என்கிறார்.

" மூன்று கண்ணுடையாய், அடியேன் கண் கொள்வதே
கணக்கு வழக்காகில்
ஊன்று கோலாவ தெனக் கொன்று அருளாய்,
ஒற்றியூர் எனும் ஊர் உறைவானே " [81]

உனக்கு மூன்று கண்ணிருக்க, என் கண் உனக்கு எதற்கு என்பதே தருக்கத்தின் மையப்பொருள்.

## வள்ளுவரும் சுந்தரரும்

வள்ளுவர், காலத்தால் முற்பட்டவர். கருத்தாலும் மேம்பட்டவர். அவரது தாக்கம் பெறாத கவிஞர்கள் இல்லை. வாழ்க்கை நெறியாலும் தாக்கம் உண்டு.

எழுத்தின் முதல், 'அ' (அகரம்). உலகங்களின் முதல், பகவன்.

" அகர முதல எழுத் தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு " [82]

என்பது வள்ளுவம். இதனையே

" அகரம் முதலின் எழுத்தாகி நின்றாய்,
அடியேன் உய்யப்போவதோர் சூழல் சொல்லே " [83]

என்று காட்டுகிறார் ஆரூரர்.

உறக்கம் உயிர்கட்கியல்பு; விழிப்பு அதன் மறுபக்கம். இது உவவ.மயாகி, இறப்பையும் பிறப்பையும் எடுத்துச் சொல்கிறது வள்ளுவம்.

---

80, 81, 83. சுந்தரர் தேவாரம் 54-2, 54-4, 3-7 82. திருக்குறள் கடவுள் வாழ்த்து 339

" உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு "[84]

என்ற திருக்குறள் நாமறிந்த ஒன்று. இதனை ஆரூரரும் அறிந்துள்ளமை வியப்பில்லை.

" ஒஒடு புனல் கரையாம் இளமை;
உறங்கி விழித்தா லொக்கும் இப்பிறவி "[85]

என்பது ஆரூரர் பாடிய பதிகப் பாடல் ஒன்றின் வரி. ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

ஐம்பொறிகளின் செயல்பாடே மானுட வாழ்க்கை; பொறிகள் நெறி மாறினால் மானுடம் நிலைமாறும். ஐம்பொறிகளை வழிப்படுத்தும் வல்லமை நம்மில் பலர்க்கு இல்லை. ஆயினும் அது தேவை.

" பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார் "

என்பது வள்ளுவம். இந்தக் திருக்குறளின் எதிரொலி ஆரூரரின் தேவாரப் பதிகத்திலும் உண்டு. இதனை,

" வறிதே நிலை யாதஇம் மண்ணுலகின்
நானாக வகுத்தனை; நான் நிலையேன்;
பொறிவாயில் இவ்வைந்தினையும் அவியப்
பொருது உன்னடியே புகும் சூழல் சொல்லே "[86]

என்ற வரிகளால் அறிகிறோம். (அவியப் பொருதல் வென்றடக்குதல்.)

## தோழமை

திருநாவலூரில் பிறந்தவருக்கு, நம்பி ஆரூரர் என்பது பெற்றோரிட்ட பெயர். இது தவிர, அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளை யொட்டி, பிற பல பெயர்களால் சுட்டப்படுகிறார். நாவலூராளி, வன்தொண்டன், ஆளுடைய நம்பி, தம்பிரான் தோழர் என்பன சில.

இவற்றுள், தம்பிரான் தோழர் என்பது குறிப்பிடத்தக்கது, சிறப்புடையது. தம்பிரானே - சிவபரம்பொருளே - இவரை விரும்பி ஏற்றுத் தோழமை தந்நதார். இதனை,

---

84 - திருக்குறள் கடவுள் வாழ்த்து - 339. 85. 86. சுந்தரர் தேவாரம் 3-4, 3-2.

" இவ்வுலகில் அந்தணராய் இருவர் தேடு
ஒருவர்தாம் எதிர் நின்றாண்ட
சைவ முதல் திருத் தொண்டர்;
தம்பிரான் தோழனார்; நம்பி " [87]

என்ற சேக்கிழார் மொழிகளாலும் அறியலாம்.

தவிர, ஆரூரர் பாடிப் பரவிய பதிகங்கள் சிவற்றிலும் இது பற்றிய சான்றாதாரங்கள் இருப்பதைக் காணலாம்.

" ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி
மாழைஒண்கண் பரவையைத் தந்தாண்டானை, மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன், என் ஆரூர் இறைவனையே " [88]

என்ற இடத்தில், தோழனானான்; என் தவறுகளுக்கும் உடன்பட்டிருந்தான் எனும் கருத்தைக் காணலாம். மேலும்,

" வேதனை, வேத வேள்வியர் வணங்கும்
விமலனை, அடியேற்கு எளிவந்த
தூதனைத் தன்னைத் தோழமை அருளித்
தொண்டனேன் செய்த துரிசுகள் பொறுக்கும் " [89]

என்ற பதிகவரிகளும் அகச்சான்றாக நின்று இச் செய்தியை உறுதி செய்கின்றன.

## கண்டிப்பு-மிரட்டல்-சாபம்-கெஞ்சல்

இறைவனுக்கும், ஆரூரருக்கும் இருந்த உறவு, பிற நாயன்மார்களினின்றும் முற்றிலும் வேறுபட்டது. ஆண்டான் - அடிமை என்ற நிலைமை குறைவு. உருவமும், பருவமும், உள்ளமும் ஒத்த தோழர்களுக்கு உரிய உறவு. எனவே, சுந்தரர் நிகழ்வுகளில் இறைவனோடு சிணுங்கல், சினத்தல், சீண்டல், மிரட்டல், சாபம், வசை, கெஞ்சல் எனப் பல நிலைகளும் உண்டு.

பொருள் வேண்டும் எனக்கு, பொன் வேண்டும் அதற்கு; பாச்சிலாச்சிராமத்து அடிகளே! அடிமை நான் என்றேன்; அருளுக என்றேன். வாயினால் கூறினேன். மனத்தால் நினைத்தேன். ஒருமைப் பிறப்பில் மட்டுமன்றி, எழுமையும் அடியேன் என்றேன். என் நாவும் நெஞ்சும் தலையும் உனக்கே உரியது என்றேன். தாயை நினைத்திலேன், தந்தையை எண்ணிலேன், நீயே எல்லாம் என எண்ணினேன். இரவில்லை, பகலில்லை, எப்போதும் கை

87 - பெரிய. தடுத். 171 88, 89. சுந்தரர் தேவாரம் 51-10. 68-8.

தொழுதேன். புகழ்ந்தபோது மகிழ்வார்; விட்டுப்போனால் மறப்பார்; எல்லாரையும் ஆட்கொள்ளும் இவர் இப்போது ஏதும் பேசுகின்றாரில்லையே, தருகின்றாரில்லையே ஓ! இவரைத் தவிர வேறு தலைவர் இல்லையோ இப்படி அடுக்கடுக்கான செய்திகளை அடுக்கிய பதிகம், திருப்பாச்சிலாச்சிராமப் பதிகம்.

இப்படித் தம் ஆதங்கத்தை, கடிய சொற்களால் வெளிப்படுத்துகிற ஆரூரர், கண்ணீர் சிந்திக் கெஞ்சுகிற பாங்கும் உண்டு.

'அடிகேள்! என்னமுதே எனக்கு ஆர்துணை? நீயலதே' [90]

'என்தாதை, பெருமான் எனக்கு ஆர் துணை நீயலதே' [91]

'ஐயா, என்னமுதே எனக்கு ஆர் துணை நீ அலதே' [92]

என்றவாறு, கடவூர் வீரட்டத்து இறைவனைக் கெஞ்சி வேண்டி உருகியதும் உண்டு.

சங்கிலிக்குச் செய்துதந்த சத்தியம் தவறிய போது, கண்ணிரண்டிலும் பார்வை போயிற்று. அதன் காரணம் ஆரூரர் அறிவார். ஆயினும் 'அவனை' வேண்டி அழுதுநிற்பது தவிர வேறு வழியில்லை.

"வழுக்கி வீழினும் திருப்பெயரல்லால்
மற்று நான் அறியேன் மறுமாற்றம்
ஒழுக்க என் கண்ணுக்கு ஒரு மருந்து உரையாய்" [93]

"ஊனமுள்ள தீர்த்தருள் செய்யாய்
ஒற்றியூரெனும் ஊர் உறைவானே" [94]

"முற்றும் நீ எனை முனிந்திட அடியேன்
கடவது என்? உனை நான் மறவேனேல்,
உற்ற நோயுறு பிணிதவிர்த்தருள்வாய்
ஒற்றியூரெனும் ஊருறைவானே" [95]

"...........
வருந்தி யான் உற்ற வல்வினைக் கஞ்சி
ஊடினால் இனி ஆவது ஒன்றுண்டோ?
ஒற்றியூரெனும் ஊருறைவானே" [96]

இப்படிக் கெஞ்சிக் கண்ணீர் விட்ட ஆரூரர், வேண்டியது கிடையாத போது, ஆண்ட அவனுக்கே சாபமிட்டுப் பாடியதும் உண்டு.

90. 91. 92. 93. 94. 95. 96. சுந்தரர் தேவாரம் 28-1. 28-3. 28-5. 54-1. 54-6. 54-7. 54-8.

சனிக்கோள், மகநட்சத்திரத்தில் வரும்போது, நாட்டிற்கும் மக்களுக்கும் தீங்கு நேரும், என்பது சோதிட நூலோர் சொல்லும் கணிப்பு. இதனை நினைத்த சுந்தரர்,

" மகத்தில் புக்கதோர் சனி எனக்கு ஆனாய்;
மைந்தனே! மணியே! மணவாளா? " [97]

என்பது அவர் பதிகத்தின் வரி.

வருத்தம் வந்தால், சினப்பதும் உண்டு. சீறுவதும் உண்டு, வசை பாடுவதும் உண்டு.

எல்லாம் பெற்றபோது, இறைவன் இசையை இசைத்தமிழால் இசைத்தார்.

" பண்மயத்த மொழிப்பரவை
சங்கிலிக்கும் எனக்கும்
பற்றாய பெருமானே!
மற்று ஆரை உடையேன் " [98]

என வாய் நிறைய வாழ்த்தி இசைத்தவர், இப்போது, கண் ஒளிபோன நிலையில் வசைத்தமிழ் பாடுகிறார். மீளா அடிமை உமக்கே ஆளான எனக்கு இருகண்ணும் போயிற்று. கெஞ்சிக் கேட்டேன். ஒரு கண் தந்தாய். நான் உன்னடிமை; என் அல்லலை வந்து சொன்னால், அவை நீங்க வேண்டாமோ? சும்மாவே இருப்பீரோ! அப்படியானால், நீர் வாழ்ந்து போவீர்! (நாசமாகப் போவீர்) எனச் சாபமே தருகிறார் ஆரூரர்.

" ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர், திருவாரூரீர் வாழ்ந்து போதீரே! " [99]

" இருந்து நின்றும் கிடந்தும் உம்மை இகழாது ஏத்துவோம்
வருந்தி வந்தும் உமக்கொன்றுரைத்தால் வாழ்ந்து போதீரே " [100]

" பாரூர் அறிய என்கண் கொண்டீர்; நீரே பழிப்பட்டீர்.
வாரூர் முலையாள் பாகங்கொண்டீர், வாழ்ந்து போதீரே " [101]

என்னும் அவரது பதிக வரிகள், அவர் கொண்டிருந்த உரிமைச் சினத்தை வெளிப்படுத்துவனவாகும்.

**உருக்கம்**

உருக்கம், நெருக்கத்தின் வெளிப்பாடு; கள்ளம் தொலைந்தால்; உள்ளம் உருகும், காதல் மிகுந்தாலும் உள்ளம் உருகும்.

---

97, 98, 99, 100, 101. சுந்தரர் தேவாரம் 54-9, 46-1, 95-1, 95-10, 95-11

" கல்லும் புல்லும் கண்டுருகப்
பெண் கனி நின்றாள் "

என்பது கம்பன் தமிழ். ஆரூரர் ஆரூரன்பால் கொண்ட காதல், பெரிது எனவே அவர் தமிழ், சொல்லச் சொல்ல நம்மை உருக்கும்.

நீ அஞ்சும் அரவம் பூண்டாய். ஆயினும் நானஞ்சேன். பிணம் சுடும் காடே, நீ ஆடும் மேடை; ஆயினும் இகழ மாட்டேன். நீ என்னைப் புறக்கணிப்பாய்; ஆயினும் உன் பெருமை நானறிவேன். பிறவாமையே வேண்டுவேன்; எனினும்; உன்னை மறவாமை வேண்டேன்; என்னைக் காணாமலும் கருதாமலும் இருப்பாய்; என்றாலும், நான் கருத்தால் கருதுவேன், எனினும் உன்னைப் பாட மறவேன். இத்தகைய நெகிழ்வினை

" பூண்நாண் ஆவதோர் அரவம் கண்டு அஞ்சேன்
புறங்காட்டு ஆடல்கண்டு இகழேன்
பேணாய் ஆகிலும், பெருமை உணர்வேன்;
பிறவேன் ஆகிலும் மறவேன்;
காணாய் ஆகிலும் காண்பன் என் மனத்தால்;
கருதாய் ஆகிலும் கருதி
நானேல் உன்னடி பாடுதல் ஒழியேன்;
நாட்டியத்தான்குடி நம்பி! " [102]

என்ற பதிகச் செஞ்சொல் நமக்கு உணர்த்தும்.

உன்னை வாழ்த்தி வணங்கும் அடியவரை, இகழேன்; அவ்வாறு இகழ்ந்த நாள், எனக்குக் கெட்ட நாள்; - உன்னை மறந்த நாள்; அது நான் இறந்த நாள்! என்னைப் பாடைமேல் வைத்துச் சுமக்கும்நாள்!

" இட்டன், உன்னடி ஏத்துவார்
இகழ்ந்திட்ட நாள் மறந்திட்ட நாள்
கெட்டநாள் இவை, என்றலால்
கருதேன்.........." [103]

" ஓவுநாள், உணர்வழியும் நாள்;
உயிர் போகும் நாள்; உயர்பாடைமேல்
காவும் நாள் இவை என்றலால்
கருதேன்..........." [104]

ஆரூரர், ஆரூர்ப் பெருமானிடம் கொண்ட அன்பு இது!

---

102, 103, 104. சுந்தரர் தேவாரம் 15-1, 48-2, 48-3

காதல் கொண்டதால் கலந்து கொண்டவர், பரவையார், சங்கிலியார் இருவரும். பரவையொடு மகிழ்ந்து இல்லறம் நடத்தியவர் ஆரூரர். அவள் வாடி வருந்தாமே, இறைவனிடமே வேண்டியது வேண்டிப் பெற்றவர். இவர்களைப் பிரிந்த போது சிறிது வருந்தியதும் உண்டுதான்! ஆயினும், ஆரூர்ப் பெருமானைப் பிரிந்தபோது அவர் உற்ற வருத்தமே பெரிது. பிரியவே விரும்பாத பொருள் ஒன்று உண்டு எனில் அது ஆரூர்ப் பெருமான்தான் என்பதில் ஐயமில்லை.

" முத்தினை, மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனைநாள் பிரிந்திருக்கேன், என் ஆரூர் இறைவனையே" [105]

" மையணவு கண்டத்து வளர் சடை எம்ஆரமுதை,
எவ்வணம் நான் பிரிந்திருக்கேன், என் ஆரூர் இறைவனையே" [106]

" ஒப்பரிய குணத்தானை இணையிலியை அணைவின்றி
எப்பரிசு பிரிந்திருக்கேன், என் ஆரூர் இறைவனையே " [107]

என்பது பதிகம்.

சங்கிலியோடு எனைப் புணர்த்த தத்துவனை - என்று சங்கிலிபால் உள்ள பேரன்பை வெளிப்படுத்தும் ஆரூரர், அதே பாடலில் அவளைப் பிரிந்துவிட்டிருக்கேனே என்று வருந்தியதாகக் குறிப்பிடாமல்;

" சங்கிலியோடு எனைப் புணர்ந்த தத்துவனைச் சழக்கனேன்
எங்கு உலக்கப் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே " [108]

என்று, ஆரூர் அம்மானைப் பிரிந்த வருத்தத்தையே பெரிதாகப் பேசுவது நெஞ்சுருக்கும் பகுதியாகும்.

பரவை நல்லாளை என்னுடன் சேர்த்துவைத்த அப் பரமனை மறக்க முடியுமோ?

" ..........காரிகை காரணமாக
ஆரூரையும் மறத்தற் கரியானை " [109]

என்கிறார். பரவை மறந்தது பற்றிக் குறிப்பிடாமல் பரவையைத் தந்த இறைவன் பற்றிய குறிப்பே மேலோங்குகின்றது.

" பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப்
போகமும் திருவும் புணர்ப்பானைப்
பின்னை என் பிழையைப் பொறுப்பானைப்
பிழைஎலாம் தவிரப் பணிப்பானை

---

105, 106, 107, 108, 109. சுந்தரர் தேவாரம் 51-1, 51-2, 51-5, 51-11, 59-11

இன்ன தன்மையன் என்றறி வொண்ணா
எம்மானை, எளிவந்த பிரானை,
அன்னம் வைகும் வயற் பழனத்தணி
ஆரூரனை மறக்கலும் ஆமே" [110]

என்ற பாடல், ஆரூரர் ஆரூரனை மறக்க இயலாமை கூறும் பாடல், நாமும் மறக்க இயலாத பாடலல்லவா?

## எளிவந்த தன்மை

இறைவனை, 'சர்வ வியாபி' - என்பர். அதாவது எங்கும் நிறைந்திருப்பவன் என்பது இதன் பொருள்.

" பார்க்குமிடமெங்கனும் "
நீக்கமற நிறைந்த பரிபூர ணானந்தமே,

என்பார் தாயுமானவர். அண்டமும் பிண்டமும் அவனே என்பர் தத்துவஞானிகள்.

" உள்ளம் பெருங்கோயில்; ஊனுடம்பு ஆலயம்;
வள்ளல் பிரானார்க்கு, வாய் கோபுரவாசல் ".

என, நம் உடம்பையே 'அவன்' உறையும் கோயில் என உரைக்கிறது, திருமூலர் தவமொழி. இத்தகைய இறைவன், எளியவர்க்கு எளியவன், எண்ணி இரந்தால், இரங்கி அருள்வது 'அவன்' இயல்பு. எங்கிருந்து நினைந்தாலும் போதும், அங்கே வருவான், உற்றது தீர்ப்பான், உவகைதருவான், உடனாகி நிற்பான்.

" எங்கேனும் இருந்து உன்னடியேன் உனை நினைந்தால்,
அங்கே வந்தென்னோடும் உடனாகி நின்றருளி
இங்கே என் வினையை அறுத்திட்டு எனையாளும்
கங்கா நாயகனே! கழிப்பாலை மேயானே " [111]

என்பது ஆரூரர் வாய்மொழி.

" நானேல் உன்னடியே நினைந்தேன்; நினைதலுமே
ஊன்நேர் இவ்வுடலம் புகுந்தாய்; என் ஒண்சுடரே " [112]

இதனை முன்னும் உரைத்தார் ஆரூரர். தேட அரியவன்; எனினும், நாட எளியவன் என்பதனை நமக்கு உணர்த்துகிறது இப்பதிகம்.

## வேண்டினார்; பெற்றார்

" வேண்டத் தக்க தறிவோய் நீ; வேண்ட
முழுதும் தருவோய் நீ "

110, 111, 112. சுந்தரர் தேவாரம் 59-1. 22:2. 21-6

என்பது மணிவாசகர் திருமொழி. மனிதப் பிறப்பெடுத்தோர், இறைவனை வேண்டுதல் இயல்பு; வேண்டியது பெறுதலும் இயல்பு; இதனை அடியார் வரலாற்றில் நாம் அறிந்த பகுதியால் அறியலாம். தேவார மூவருடைய வரலாற்றிலும் பிற பல அடியார்கள் வாக்கிலும் இதற்கான அகச் சான்றுகள் உள்ளன. அவை முழுதும் குறிக்கப் பெருகிப் பல்கும்.

நம்பி ஆரூரர் வரலாற்றில், அத்தகைய நிகழ்வுகள் பல உள்ளன. அவற்றுக்குரிய அகச் சான்றுகளும் உள்ளன. திருத்தொண்டர் புராணமும் அவற்றை உரிய முறையில் எடுத்துரைத்துள்ளது.

'வேண்டிப் பெறல் - என்று பார்த்தால், அப்பரும் சம்பந்தரும் பெற்றதைவிடப் பலமடங்கு பெற்றவர் ஆரூரர். சுந்தரர்க்கு முன்னும் பின்னும் சிந்தையில் சிவம் கனிந்த அடியார் பலர் இருந்தனர். அவர்களில் எவரும் பெறாதவையெல்லாம் பெற்றவர்; சரியாகச் சொல்வதானால், அவரது வாழ்க்கை நிகழ்வுகளில் பல பகுதிகள் வேண்டிப் பெற்றவையே! கெஞ்சிப் பெற்றதும் உண்டு. மிஞ்சிப் பெற்றதும் உண்டு. சும்மா, கேட்டுப் பெற்றதும் உண்டு. துரிசுகளே செய்யினும் கிடைத்தது உண்டு. கயிலையில் காதல் வசப்பட்ட போது,

" மாதர் மேல் மனம் வைத்தனை, தென்புவி
மீது தோன்றி அம் மெல்லியலாருடன்
காதல் இன்பம் கலந்தணைவாய்.......... " [113]

எனத் தண்டனை கிடைத்தது. கலங்கிப் போன ஆரூரர்,

" ........... செய்ய சேவடி நீங்கும் சிறுமையேன்
மையல் மானுடமாய் மயங்கும் வழி
ஐயனே! தடுத்தாண்டருள் செய் " [114]

என வேண்டினார். இது ஆரூரரின் முதல் வேண்டுகோள். அன்டர்க்கு இரங்கும் அரனார் அவ்வாறே அருள் செய்தார். திருமணக் கோலம் கொண்டவரைத் தடுத்தாட்கொண்டார். ஆரூரர் வேண்டிப் பெற்ற முதல் பேறு இது.

பின்னர், திருவதிகையை வணங்க விரும்பி வந்தார். 'நாவரசர் ஞானம் பெற்ற தலம் இது. என் காலால் மிதியேன்' - என அருகிலுள்ள சித்தவட மடத்தில் இரவில் தங்கியபோது, முதியவர்

113, 114. பெரிய திருமலை 27, 28

வடிவில் வந்த முதல்வனால், 'அடிகொண்டு முடிமேல் வைத்திடும்' பேறு (திருவடி தீட்சை) பெற்றார். ஒரு முறையன்று; பலமுறை

" இங்கென்னைப் பல காலும் மிதித்தனை; நீ யார் என்னக்
கங்கை சடைக்கரந்தபிரான், அறிந்திலையே எனக் கரந்தான் " [115]

இது, கேட்காமலே கிடைத்த பேறு ஆகும்.

பரவை நாச்சியாருடன் மகிழ்ந்து இல்லறம் நிகழ்த்திய காலத்தில், பஞ்சம் ஒன்று வந்தது; செஞ்சாலி வயல்களும், வறண்டன. செய்வதறியாது திகைத்தனர் எல்லாரும். சுந்தரர் துன்பமும் பெரிது, இறைவனை வேண்டுதல் தவிர வேறுவழியில்லை வேண்டினார்.

" பரவையவள் வாடுகின்றாள் " [116]

" பரவை பசிவருத்தம் " [117]

" அது நீயும் அறிதியன்றே " [118]

என்றெல்லாம் பாடினார். மலைமலையாய் நெல் குவிந்தது. குண்டையூரிலிருந்து பரவையும் தானும் இருக்கும் திருவாரூருக்கு எடுத்து வர வேண்டுமே?

" ஆளிலை எம் பெருமான்
அவை அட்டித் தரப்பணியே,"

என ஆள் வேண்டியும், பதிகம் இசைத்தார். அப்படியே ஆயிற்று. துயரும் நீங்கிற்று. இது வேண்டிப் பெற்ற இன்னுமொன்று.

இதே போலப் பின்னும் ஒரு நிலை. ஆழ அன்பும், பாடத் தமிழும் போதுமோ? வாழப் பொருள் வேண்டுமே!

திருப்புகலூர் இறைவனை வழிபட்டடிருந்தபோது, வாழ்க்கை பற்றிய துன்பம் மனத்தை வாட்டியது. உண்ணவுணவும், உடுக்கத் துணியும், இருக்க இடமும் அடிப்படைத் தேவைகளல்லவோ? பொய்ம்மையாளரின் பொய்ம்மையை மறைத்துப் பாடினும் கிடைத்தது, பொய்யேயன்றி வேறில்லை; என்ன செய்வது? தமிழே ஆகிய அத் தலைவனையே வேண்டிப் பாடினார்.

" நலமிலா தானை நல்லனே என்று
நரைத்த மாந்தனை இளையனே என்று
குலமிலா தானைக் குலவனே என்று
கூறினும் கொடுப்பாரில்லை " [119]

115. பெரிய தடுத். 87. 116. 117. 118. 119. சுந்தரர் தேவாரம் 20-3. 20-6. 20-8. 34-6

ஆகவே,

" ..........புகலூர் பாடுமின் புலவீர்கள்;
இம்மையே தரும் சோறும், கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம் " [120]

என உருகிப் பாடினார். கேட்டது கிடைத்தது. வாட்டம் தொலைந்தது, வாழ்தல் இனிதாயிற்று.

" தென்புகலூர் அரன்பால்
தூய செம்பொன் கொள்ள வல்லன் " [121]

என்று இச் செய்தியைக் குறிக்கிறார், நம்பியாண்டார் நம்பி.

கேட்டவை கிடைத்ததுண்டு, தாராமல் காலம் தாழ்த்ததும் உண்டு; கிடைத்தால் புகழ்வதும், இல்லையெனில் இகழ்வதும் இயல்பு. மனிதப் பிறப்பு உற்ற நம்பியின் இயல்பும் அதுதான்!

முன்பைப் போலவே, வாழ்க்கை நிகழ்வுக்குப் பொன் வேண்டினார், பொன்னார் மேனியனோ, இவர் பாடலை வேண்டியதால் சிறிது காலம் தாழ்த்தார். அவ்வளதான்! இசை வசையாயிற்று, புகழ்மொழி இகழ் மொழியாயிற்று.

இப்போதும், எப்போதும் இவருக்கே நானடியேன். உரிமைதந்த ஆவணத்தால் இவர்க்கு நான் உரியவன். ஆயினும் அருள்வதில்லாரோ? பேசுவது பெருமை. செய்வது சிறுமையோ?

" ஒருமையே அல்லேன், எழுமையும் அடியேன்
அடியவர்க்கு அடியனும் ஆனேன்
உரிமையால் உரியேன்; உள்ளமும் உருகும்;
பெருமைகள் பேசிச் சிறுமைகள் செய்யில்
இவரலாது இல்லையோ பிரானார் " [122]

'இவைத்தவிர வேறு இறைவனில்லையோ' என்று வெடித்துரைத்தார்.

இப்படி, வெடிப்புரை கூறியது, சுந்தரர்க்கே விருப்பமில்லாத ஒன்று. எனவே, அது நினைந்து வருந்தியவர் மன்னிப்பும் வேண்டுகிறார்.

பிரானே! நான் கடுஞ்சொல்லால் பேசிய எல்லாம், உன்னை இகழும் கருத்துடன் சொல்லியன அல்ல; நாளும் நின் புகழ்

---

120, 122. சுந்தரர் தேவாரம் 34-1, 14-11
121. நம்பி. திருத்தொண்டர் திரு அந்தாதி - 57

பேசுபவன் நான்; உன் திருவடிப் பெருமையே என்றும் எண்ணுபவன், நான், எனவே, என் கடுஞ்சொற்களைப் பொறுத்தருள வேண்டும்.

" ஏசின அல்ல; இகழ்ந்தன அல்ல;
எம்பெருமான் என்று எப்போதும்
பாயின புகழான்; பாச்சிலாச்சிராமத்து
அடிகளைத் தொழப்பன்னாள்
வாயினால் கூறி, மனத்தினால்
நினவான் வளவாய் நாவலாரூரன் " [123]

என்று, பொறுத்தருள வேண்டிக்கொண்டார் 'நீ அப்படிப் பொறுத்தருளமாட்டீரோ? ஆயின் உன்னையன்றி வேறு இறைவன் இல்லாது போயினரோ?

" பேசின பேச்சைப் பொறுத்ததிலராகில்
இவரலது இல்லையோ பிரானார் "

என்று முடிக்கிறார். இதனால், ஆரூரானார். இறைவனிடம் கொண்ட பற்றும் மதிப்பும் மிக அதிகம்; கொண்ட உரிமையும் அதைவிட அதிகம் என எண்ணத் தோன்றுகிறது.

இப்படி வேண்டிய ஆரூரர், வேண்டியவாறு பொன் பெற்றாரா? இது அப் பதிகத்தால் குறிக்கப்படவில்லை. எனினும்,

" புன்மைகள் பேசவும் பொன்னைத்தந்து
என்னைப் போகம் புணர்த்த
நன்மையினார்க்கு இடம் ஆவது
நம்திரு நாவலூரே " [124]

என்ற திருநாவலூர்ப் பதிக வரிகளால், புன்மை பேசியும், பொன்தரப் பெற்றார் என்ற உண்மையை உணர முடிகிறது.

இதே போல, வாழ்க்கைச் செலவுக்காகப் பழமலை நாதரைப் பணிந்து பொன் வேண்டினார். பாடல் பயன் கொண்ட அவ்விறைவனும், பன்னீராயிரம் பொன் அருள் செய்தார். திருமுது குன்றமும் திருவாரூரும் இடைத் தொலைவு மிகுந்தவை. எப்படி எடுத்துவருவது? இறைவனிடமே வேண்டினார். "இங்குள்ள மணி முத்தாற்றில் இட்டுத் திருவாரூரில் பெறுக" என ஆணை பிறந்தது. ஆரூரர் அவ்வாறே இட்டார். இதனை

123, 124. சுந்தரர் தேவாரம் 14-12. 17-2.

" நாயனார் முதுகுன்றர்
நமக்களித்த நல்நிதியம்
தூயமணி முத்தாற்றில் புகவிட்டோம் " [125]

என்பதால் அறிகிறோம்.

பின்னர், அப்பொன்னைத் திருவாரூர்க் கமலாலயக் குளத்தின் வடகிழக்குப் பகுதியில் இறங்கித் தேடினார். உடனிருந்த பரவையார்

" ஆற்றினில் இட்டுக்
குளத்தில் தேடுவீர் அருளிதுவோ
சாற்றும் என " [126]

கேலியாகக் கேட்டார். சுந்தரர்க்குச் சிறிது வருத்தம்; குளக்கரையில் இருந்தபடியே

" பொன் செய்த மேனியினீர் "

எனத் தொடங்கும் பதிகம் பாடி, முதுகுன்றமர்ந்த பெருமானை வேண்டினார். பதிகத்தின் எட்டுப் பாடலளவும், அங்கு கொட்டிய பொன்கிட்டவில்லை. இதனை

" ......... எனும் திருப்பாட்டு
எட்டளவும் பொன் காட்டா தொழித்தருள " [127]

என்கிறது, பெரிய புராணம். பின்னர் ஒன்பதாம் பாடலில்,

" பூத்தாரும் குழலாள் பரவை இவன் தன்முகப்பே
கூத்தா தந்தருளாய் கொடியேன் இட்டளம் கெடவே " [128]

எனப் பாடியபோது, ஆற்றிலிட்ட அப்பொன், இங்கு மாற்றுக் குறையாத பொன்னாய்க் கிடைத்தது. பரவையாரும் பிறரும், என்னே இது என்று அதிசயித்தனர்.

ஆரூரர் வேண்டிப் பெற்றதில் இதுவும் ஒன்று. தல வழிபாட்டின் போது சீர்காழி அடைந்த ஆரூரர், கோலக்காவை வணங்கி வலம் வந்து, திருக்குருகாவூர் சென்றார்.

பித்தனே, என்று முன்பு வசைபாடியவர் ஆரூரர்; இங்குள்ள வெள்ளடை ஆலயத்தில் அருள் செய்யும் வித்தகனைக் கண்டு நெகிழ்ந்தவர், பித்தனே என்று உனைப் பேசுவார், பிறரெல்லாம்' - என நெகிழ்ந்துருகி நின்றார். (பித்தன் என்று பேசியது இவர்தான்)

" பண்ணிடைத் தமிழும், பழத்தினில்
சுவையும் கண்ணிடை மணியும்
கடு இருள் சுடரும் "

---

125, 126, 127. பெரிய புராணம் - 127. 131. 133. 128 சுந்தரர் தேவாரம் 25-9.

ஆகிய இறைவனைக் காண விரைந்தார். வேனில் வெம்மையும் வழிநடந்த களைப்பும் வாட்டியது. இறைவனே வழியில் எதிர்ப்பட்டு நிழற்பந்தரும், நீரும், சோறும் தந்து இளைப்பாற்றினார். நன்றி மறப்பாரோ, ஆரூரர்.

" ஆவியைப் போகாமே தவிர்த் தென்னை ஆட்கொண்டாய் " [129]

" பாடுவார் பசிதீர்ப்பாய்; பரவுவார் பசிகளைவாய் " [130]

" வெப்பொடு பிணியெல்லாம் தவிர்த் தென்னை ஆட்கொண்டாய் " [131]

என்றபடி புகழ்ந்தார்; மனம் நெகிழ்ந்தார்.

சுந்தரர் சோர்வறிந்து, தொண்டர்தம் களைப்பறிந்து, இறைவனே வேண்டி வந்து செய்த நலம் இது.

ஊர்தோறும் ஊர்தோறும் சென்று, உவந்து உவந்து பாடுவதே செயலாக வாழ்ந்த சுந்தரர், திருக்கழுக்குன்றத்தை வணங்கிப்பின், திருக்கச்சூர் சென்றார். வேணவாக் கொண்ட ஆரூர்நம்பி, உச்சிப் போதில், ஆலக்கோயில் தியாகேசனைக் கண்டு வணங்கினார். காலை-மாலை, கடும்பகல்-உச்சி எனப் பாராது அலைந்து வழிபடும். ஆரூரர், 'பெருமானே! நீர் உச்சி வெயிலில் பலிகேட்டுத் திரியலாமோ? உம் அடியார் கண்டால், மனம் கசியமாட்டார்களோ? தலையோட்டில் பலிகொள்ளலாமோ? உம் மெய்யடியார் கண்டால், தலைகுனிய மாட்டாரோ? பொய்புகன்றாலும், பொய்யாய்ப் புகழ்ந்தாலும் இகழாது ஏற்கும் எம்மானே! நீ ஐயம் (பிச்சை) கொள்ளும் அழகு இதுதானோ?' என்றவாறெல்லாம் பாடிக் கசிந்தார். பசி வேளை; உச்சி வேளை, சோர்ந்து துவண்டார். ஆலக்கோயில் தியாகேசர் பொறுப்பாரோ?

" மெய்ப்பசியால் மிகவருந்தி இளைத்திருந்தீர் வேட்கைவிட
இப்பொழுதே சோறிரந்து இங்கு யானுமக்குக் கொணர்கின்றேன்;
அப்புறம் நீர் அகலாதே சிறிது பொழுதமரும் எனச்
செப்பி அவர் திருக்கச்சூர் மனைதோறும் சென்றிரப்பார் " [132]

இவ்வாறு அவர் 'வழக்கப்படி' தெருத்தோறும் திருவோடு தூக்கி அலைந்தார். கிடைத்ததைக் கொண்டு வந்து சுந்தரர் பசி தீர்த்தார். சுந்தரர், வேண்டிக் கேளாதபோதும் அவர் சோர்வும் துன்பமும் தீர, செய்த கனிவுச் செயல் இது!

ஆரூரர், வேண்டாமலே பெற்றவை சில. திருக்கச்சூர் ஆலக் கோயிலில் பசிக்கு உணவு பெற்றது போல - என்றும் மாறாத மணக்கோலம் போல - வேண்டிப் பெற்றவை பல.

---

129, 130, 131. சுந்தரர் தேவாரம் 29-2, 29-3, 29-4. 132. பெரிய புராணம் - 177.

செல்வத்தை மறைத்து வைத்திருக்கும் சிவனே, முத்தாரம் வேண்டும்; வைரமணி மாலை வேண்டும்; மேனி, மணம் மாறாதிருக்கக் கஸ்தூரி வேண்டும். சந்தனமும் வேண்டும். உடுத்தப் பட்டு வகை வேண்டும். வீழிமிழலையில், 'செல்லும்' நல்ல காசு அருளிய செல்வரல்லவா நீர்? எனக்கும் அது வேண்டும்; என்ன பேசாமல் இருக்கின்றீர்? நான், வழிவழி உன்னடிமையல்லவோ? என்னை வாழவைப்பதாகச் சொல்லித்தானே ஆளடிமை கொண்டீர்? திருவாரூரில் நீர் சேர்த்து வைத்துள்ள செல்வக் களஞ்சியத்தை நான் அறிவேன். அதில் மூன்றில் ஒரு பங்கு எனக்குத் தரவேண்டும்! தராவிட்டால், இங்கிருந்து நீர் ஓர் அடிகூட நகர விடமாட்டேன்! உம்மை இறுக்கிக் கட்டிப் பிடித்துக்கொண்டுவிடுவேன்.

நீர் சத்தியமாய்ச் சொன்ன சொல் என்னுடன் இருக்கிறது. ஆகவே, தந்தாக வேண்டும். சுரிகை(சரிகை) ஆடை வேண்டும். அதில் பதிக்கப் பொற்பூவும் வேண்டும். காய்கறி கலந்த சோறு வேண்டும். அதில் நெய்கலந்திட வேண்டும். இது முப்போதும் வேண்டும். (இவை அன்றாட வாழ்வுக்கும் ஆடம்பரப் பிரியருக்கும் உரியவை.) நாகைக் காரோணத்தின் இறைவனை, ஆரூரர் பாடிய பாடல்கள் பதினொன்று. இவையெல்லாம் வேண்டியன கேட்ட கருத்துடைய பாடல்களே ஆகும். மண்ணும் விண்ணும் உமதாட்சி. உமக்கு இருவர் சிறுவர்; மூத்தவன் கணபதி. சோற்றுப் பிரியன். வயிறன். இளையவன் ஏதும் அறியாச் சிறுவன். (பா. 9 இது கேலிமொழி). ஆகவே உன் ஆரூர்ச் சொத்தில் மூன்றில் ஒரு பங்கு வேண்டும்.

" ஆற்றவேல் திருவுடையீர்! நல்கூர்ந்தீ ரல்லீர்!
அணியாரூர்ப் புகழ்பெய்த வருநிதிய மதனில்
தோற்றமிகு முக்கூற்றில் ஒரு கூறு வேண்டும்
தாரீரேல் ஒரு பொழுதும் அடியெடுக்கவொட்டேன் "

என்று மிகு உரிமை கொண்டு கேட்டது பொருளுடைய வாசகம்.

சங்கிலியாரைத் திருமணம் செய்துகொள்ளும் முன் 'அவரைப் பிரிவதில்லை' எனச் சத்தியம் செய்யவேண்டிய ஒரு நெருக்கடிச் சூழல். (இது இறைவன் புரிந்த திருவிளையாடல்) அவ்வாறே செய்தார். பின்னர் ஆரூர்ப் பெருமானைக் காணவேண்டும் என்ற ஆவல் உந்தியது.

" மங்கல நாள் வசந்தம் எதிர் கொண்டருளும்
வகை நினைந்தார் "

" பூங்கோயில் அமர்ந்தாரைப் புற்றிடம் கொண்டிருந்தாரை
நீங்காத காதலினால், நினைந்தாரை நினைவாரை
ஈங்குநான் மறந்தேன், என்று ஏசறவால் மிக அழிவார் "[133]

இது மட்டுமன்றி, பரவையாரைப் பார்க்கவும் ஆசை.

" பண்ணமரும் மொழிப்பரவை யார்பாடல் ஆடல்தனைக்
கண்ணறமுன் கண்டு கேட்டார் போலக் கருதினார் "[134]

ஆகவே, சங்கிலியாரை மறந்து திருவாரூர் நோக்கிப் புறப்பட்டுவிட்டார். சூளுரை (சத்தியம்) முறிந்தது. ஆகவே இருகண் பார்வையும் மறைந்தது. காரணம் இன்னதெனச் சரியாகவே உணர்ந்தார். மனம் கலங்கியபடியே பயணத்தைத் தொடர்ந்தார். திருவெண்பாக்கத்து இறைவனை வணங்கியபோது ஆற்றாமை மீதூர,

" குழைவிரவு வடிகாதா! கோயிலுளாயோ "[135]

எனப் பொருமினார். வேறு என் செய்வார்? தவறு இவர் செய்ததல்லவா?

" ஈன்றவனே! வெண் கோயில் இங்கிருந்தாயோ "

என்று பொருமல் உரையாய்ப் பதிகத்தை முடிக்கும் போது ஊன்ற ஒரு கோல் (மட்டும்) கிடைத்தது.

இதுவும் ஒருவகையில் வேண்டாமல் கிடைத்ததுதான்.

பின்னர்த் தலம் பல சென்றவர், காஞ்சீபுரத்தை அடைந்தார். கண் பெறவில்லை. ஆயினும், பண்ணிசை பாடினார்.

" எண்ணாத பிழை பொறுத்து இங்கு யான்காண எழிற்பவள
கண்ணா! கண்ணளித் தருளாய் என வீழ்ந்து வணங்கினார் "[136]

இரங்கிய இறைவன் இடக்கண் (மட்டும்) பார்வை திரும்பச் செய்தார். நன்றிப் பெருக்கோடு, ஞாலம் உவந்தருளும் ஆலகாலனை,

" ஆலந்தான் உகந்து அமுது செய்தானை "

எனத் தொடங்கி

" கம்பன் எம்மானைக் காணக்கண் அடியேன் பெற்றவாறே "

என்று முடித்துப் பாடினார். இது வேண்டிப் பெற்ற பரிசு.

---

133, 134. பெரிய புராணம் - 272, 271 · 135. சுந்தரர் தேவாரம் 89-1
136. பெரிய புராணம் - 286.

ஆயினும், வலக்கண் பார்வை மீளவில்லையே! அவர் வருத்தம் முழுதும் தீரவில்லையே!

" கண்ணிலேன் உடம்பில் அடுநோயால்
கருத்தழிந்து உனக்கே பொறையானேன் "

எனத் திருவாவடுதுறை இறைவனிடத்தும் வேண்டினார். பயனில்லை. பின்னர்த் திருவாரூர்த் தியாகப் பெருமானை அணுகி "இங்கெமது துயர் களைந்து கண் காணக்காட்டாய், என்று அங்கணர்தம் முன்னின்று பாடி அருந்தமிழ் புனைந்தார்; தாழ்ந்து கருத்தினை நிரப்பிக் கண்தாரும் எனத் தாழ்ந்தார்"

" மற்றைக் கண்தான் தாராதொழியில் வாழ்ந்து போதீரே "

எனச் சபிக்கவும் செய்தார்.

இவர் புலம்பலுக்கு இரங்கிய புற்றிடங்கொண்ட நாதர் மற்றை வலக்கண்ணும் தந்தார். இது காறும் துன்பமே கொண்டு அழுந்திய ஆரூரர் இப்போது

" விழுந்தும் எழுந்தும் பலமுறையால்
மேவிப்பணிந்து மிகப்பரவி,
எழுந்த களிப்பினால் ஆடிப்பாடி,
இன்ப வெள்ளத்தில்
அழுந்தி இரண்டு கண்ணாலும்
அம்பொன் புற்றிடை எழுந்த
செழுந்தண் பவளச் சிவக் கொழுந்தின்
அருளைப் பருகித் " [137]

திளைத்தார். வேண்டிப் பெற்றவற்றில் இதுவும் ஒன்று.

## பெற்றதை இழந்தார்; இழந்ததைப் பெற்றார்.

உயிர் நண்பர், கழறிற்றறிவார் - சேரமான் பெருமாள், அரசராய் வீற்றிருந்தவர். அவர் வேண்டி அழைக்க, சென்றார் ஆரூரர். அஞ்சைக்களம் முதலாம் பதிவணங்கிப் பதிகம் பாடி விருந்தாய்ப் பல நாள் இருந்து மகிழ்ந்தார். திருவாரூர்க்குத் திரும்புமுன்னே சேரமான், பொன்னும் பொருளும் பட்டு வகைகளும் பரிசாகத் தந்தார். பெற்று மகிழ்ந்த ஆரூரர், தொண்டர் துணையுடன் திருவாரூர் திரும்பினார். வழியில் கொங்குநாட்டுத் திருமுருகன் பூண்டி அருகே சென்றபோது

137 பெரிய புரா - 311.

வழிப்பறித் திருடர்களாகிய வடுகவேடுவர்கள், ஆரூரர் ஆட்களை வெருட்டி மிரட்டி எல்லாவற்றையும் பறித்துக் கொண்டனர். அருகிலிருந்த இறைவர் கோயிலை அடைந்து, ஆரூரர் முறையிட்டார்.

" கொடுகுவெஞ்சிலை வடுக வேடுவர் "

எனத் தொடங்கிப் பதிகம் பாடி, 'இத்தகைய இடத்தில் எத்துக்கு இருந்தீர்' என வினவினார். விடையேறிய விகிர்தன் அருளால் வழிப்பறி செய்யப்பட்ட எல்லாமும் அப்படியே கிடைத்தன. இதுவும் ஆரூரர் வேண்டிப் பெற்ற நிகழ்ச்சியாகும்.

## பழிப்பதுபோல........ இழிப்பது போல.......

பழிப்பது போல ஒருவரைப் புகழ்வதும், புகழ்வது போலப் பழிப்பதும், பாவல்லோர் கையாளும் ஒரு உத்தி. "நிந்தாஸ்துதி" என இதனைக் குறிப்பர். வஞ்சப்புகழ்ச்சி என்பதும் உண்டு. ஊருக்குத் தலைவனையும் உலகுக்கு இறைவனையும் பாடுவோர் இந்த வகை உத்தியைக் கையாள்வது வழக்கம்தான். (உரைநடையிலும் உண்டு). உரையால் நேரடியாகக் கருத்தைச் சொல்வதிலும் கவிதை முறையில் சுவை மிகுந்திடக் காணலாம்.

அப்பர் அடிகள் போலும் மெய்யன்பர்கள் பாடிய பதிகங்களிலும், பிற அடியார்கள் பாடிய பாடல்களிலும் இத்தகைய முறையைக் காணலாம். ஆரூரர் பரவிப் போற்றிய பதிகங்களிலும் இப்போக்கு உண்டு. அவற்றில் சில காண்போமா?

"பேர் ஆயிரம்; பெண் ஒருகூறு; ஆண் ஒருகூறு. ஆக, இவர் ஆணுமல்லர், பெண்ணுமல்லர். நஞ்சு உண்டு கருத்த கழுத்து. அணிவது பாம்பு. இது தெரிந்த பின் நாம் இவர்க்கு ஆட்பட முடியுமோ?

" பேரும் ஓர் ஆயிரம் பேருடையார்;
பெண்ணோடு ஆணுமல்லர் "[138]

என வரும் பாடல் கருத்து இது.

உடுப்பது புலித்தோலும், மான் தோலும்; போர்த்திக்கொள்வது யானைத் தோல். பன்றிக் கொம்பையும் ஆமைக் குட்டியையும் கோத்து அணிந்தமாலை. ஊர்ந்து ஏறிவருவது ஒற்றை எருது. உறைவது காடு. இது என்னய்யா திருக்கோலம்?

138. சுந்தரர் தேவாரம். 18-3

"ஏனக் கொம்பும் இள ஆமையும்
பூண்டு, அங்கு ஓர் ஏறும் ஏறி
கானக் காட்டில் தொண்டர்
கண்டன சொல்லியும் காமுறவே
மானைத் தோல் ஒன்றுடுத் துப்புலித்
தோஒல் பியற்குமிட்டி
யானைத்தோல் போர்ப்பதறிந்தோம்" [139]

எங்களுக்குத் தாயாய் இருந்து ஊட்டும், உன் நிலை இதுதானே? ஊராரிடும் பிச்சை தவிர வேறில்லையே?

"ஊட்டிக் கொண்டு, உண்பதோர் ஊணிலர்,
ஊரிடு பிச்சையல்லால்" [140]

பிச்சையெடுக்கவாவது, நல்ல பாத்திரம் உண்டா? செத்தவர் தலையோடுதானே உணவுண்ணும் கலனாயிற்று? இதுதான் உமக்குள்ள செல்வமோ?

"செத்தவர்தம் தலையில் பலி
கொள்வதே செல்வமாகி" [141]

இவர் மகனுக்கு மனைவி, ஒரு குறப்பெண்! இவர், குறவர் சம்பந்தி, அதற்கேற்ப, இவர் காட்டில் பன்றியைத் துரத்திக் கொண்டு ஓடுகிறார்!

"குறவனார்தம் மகள் தம்மகனார்
மணவாட்டி; கொல்லை
மறவனாராய், அங்கோர் பன்றிப்பின்
போவது மாயம் கண்டீர்!" [142]

இதுதான் இவர் பெருமை! இவருக்கு நாம் ஆட்பட முடியுமோ? ஆட்பட மாட்டோம்! இப்படி முடிகிறது பதிகப்பாடலின் இறுதி.

தொண்டர்கள் கூடுவார். குறையிரந்து ஆடுவார். பாடித் தொழுவார். பல நேரம் உம்மைத் தேடித் தேடி அலைவார். அழுதழுது நெக்குருகி நிற்பார். சித்தம் இரங்குவதில்லை.

"கூடிக் கூடித் தொண்டர் தங்கள்
கொண்டபாணி குறைபடாமே
ஆடிப்பாடி அழுது நெக்கங்கு
அன்புடையவர்க்கு இன்பம் ஓரீர்" [143]

என்ன சொல்லி வாழ்த்தினாலும், வாய் திறப்பதில்லை; இல்லை என்றும் நீ சொல்வதில்லை; உண்டு என்றும் சொல்வதில்லை.

---

139, 140, 141, 142, 143. சுந்தரர் தேவாரம். 18-4, 18-5, 7, 6, 5:5

" வல்ல தெல்லாம் சொல்லி உம்மை
வாழ்த்தினாலும் வாய் திறந்து ஒன்று
இல்லை என்னீர்: உண்டும் என்னீர் " [144]

இவ்வகைக் கருத்து வெளிப்பாடுகள் உண்மையைச் சொல்வனவே! ஆயினும் அதில் சிண்டலும் கேலியும் நிறைந்திருக்கும். பழிப்பது போன்ற தோற்றமும் தெரியும். எனினும், இது பழிப்பதாகாது; புகழ்ச்சியே ஆகும்.

என்னைத் தடுத்தாளத் திருவெண்ணெய் நல்லூர் வந்த போது, இடுப்பில் நல்ல துகில் ஆடை; போர்த்தியிருந்ததோ, உயர்ந்த பட்டாடை. நல்ல செல்வத் தோற்றம், ஆயினும், நான் உமக்கு ஆளாகிவந்து வாழ்த்தும்போது பார்த்தாலோ, கோவணம் தவிர வேறில்லை; இது என்ன வேடமோ?



அருட்டுறை அத்தன்
பெருங்கோயில்
(திருவெண்ணெய் நல்லூர்)

ஆவணம் செய்து ஆளும்
கொண்டவரை துகில்லொடு பட்டு வீக்கிக்
கோவணம் கோவையாக....... " [145]

இப்படிச் சொல்லுவதும் புகழ்ச்சியே!

இவ்வண்ணம், சுந்தரர் பாடிய பதிகங்கள் பலவற்றிலும் கொஞ்சல் - கெஞ்சல், நெருக்கம் - உருக்கம், கிண்டல் - கேலி, வசை - வாழ்த்து, இங்கிதம் - அங்கதம் - எல்லாச் சுவைகளும் நிரம்பியுள்ளன. ஆகவே, அவர் பாடிய பதிகங்கள் தமிழுக்கு அணிசேர்த்தன; பக்தர்களுக்கு இனிமை சேர்த்தன என்பதில் ஐயமில்லை!.



144, 145. சுந்தரர் தேவாரம். 5:4. 5:10

# 3. சுந்தரர் தரும் சிந்தனை

இந்தியா மெய்ப்பொருளியலில் பக்திக்கும் (பரம் பொருளிடத்துப் பேரன்பு) ஒரு முக்கியப் பங்கு உண்டு. பக்தியின் வெளிப்பாட்டில் பல நிலைகள்.

பாடிப் பரவுதல், பாடி ஆடிப் பரவுதல். பெயர் பல சொல்லிச் சொல்லி (நாம சங்கீர்த்தனம்). உள்ளுருகி நிற்றல். தன்னையே இழத்தல். ஆண்டாள் போல, வடநாட்டு மீரா போல. தான் அதுவாகவே 'பாவித்தல்' - நடன கோபால நாயகி சுவாமிகள் போல, ஆழ்வார்கள் சிலரைப் போல.

மனத்தளவில் - பூசலார் நாயனார் போல, செயல் வடிவில் - கோச்செங்கண் சோழன் போல, கண்ணப்பர் போல. செயல் வடிவிலும், இசைப்பா வடிவிலும் - மணிவாசகர் போல, அப்பரடிகள் போல மனத்தளவிலும், இசைப்பா வடிப்பதிலும் கருவூர்த் தேவர்போல, ஆரூரர் போல. இப்படிப் பல நிலைகள்.

இவர்களில் ஆரூரர் வாக்கும் வாழ்வும் இங்கே நம் சிந்தனைக்குரியவை. அவரது வரலாறு, நிகழ்வுகள் ஆகியவற்றைத் திருத்தொண்டர் புராணத்தால் அறியலாம். அவர் பாடிய பதிகங்களாலும் (அகச் சான்றாக) அறியலாம். நம்பி பாடிய திருத்தொண்டத் தொகையாலும் சிறிதறியலாம். வேறு சில சான்றாதாரங்களும் உள்ளன.

இவற்றால் நாம் அறிந்தன பல. உவப்பும் உவர்ப்பும் இன்றி, நடுநிலை ஆய்வாளராக இருந்து பார்க்கிறபோது நம்முள் கிளர்ந்தெழும் சிந்தனைகள் பல.

ஆரூரர், திருவெண்ணெய் நல்லூர்ச் சடையனார் - இசைஞானியார் திருமகனாகப் பிறந்தவர். இதுபற்றிச் சுந்தரர் பதிகத்தின் பல இடங்களில் சான்று உண்டு. இவ்விருவர்க்கும், வேறு மக்கள் இருந்ததாக எங்கும் குறிப்பில்லை. ஆகவே, ஒரு மகனாகிய

அவர் செல்லமாகவே வளர்க்கப்பட்டார். சுந்தரர் என்ற முன்னைய பெயருக்கு ஏற்ப, அவர்மிக்க அழகர் என்றே எண்ண முடிகிறது. இதனால்தான் 'நரசிங்க முனையரையர்' - எனும் சிற்றரசர் ஆருரரை மகன்மை (சுவீகாரம்) கொண்டார் போலும்.

ஆரூரர், வேதியர் எனப்படும் மறையவர் குலத்தில் - குறிப்பாகச் சொல்வதானால் சிவ வேதியர் குலத்தில் பிறந்தவர். இவர்கள் அந்தணர் எனவும் அழைக்கப்பட்டனர். மறையவர், வேதியர் - என்பதற்கும், அந்தணர் என்பதற்கும், உண்மையில் பொருள் வேறுபாடு மிக உண்டு. அந்தணர் என்பதற்கு, மிக மேலாய சான்றோர் என்பது பொருள்.

" அந்தணர் என்போர் அறவோர்,மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான் "[1]

என்பது வள்ளுவர் வாக்கு. மறையவர் என்பதற்கு, சமஸ்கிருத வேதங்களைப் பாராயாணம் (அத்யயனம்) பண்ணுகிறவர்கள் என்பது பொருள். மறையவர்களில் சிலர் அந்தணராகலாம். மறையவர்க்குப் பிறந்த எல்லாருமே அந்தணர் என்ற தகுதிக்கு உரியவர்கள் எனச் சொல்லமுடியாது.

காலச் சூழலும் அரசுகளின் ஆட்சியும், சமூக மாற்றமும் இந்த இரு சொற்களையும் ஒரு பொருளுடையதாக்கிவிட்டன. சேக்கிழார் போலும் பேரறிஞர்களும், திருவள்ளுவர் போல 'உறைத்து' நிற்க முடியாமல், இவ்விரு சொற்களுக்கும் ஒரே பொருளை ஏற்றுப்பாட வேண்டிய சூழலுக்குத் தள்ளப்பட்டிருந்தனர் என்பது வெளிப்படை.

ஆரூரர் பிறந்தது, சிவவேதியர்-ஆதிசைவர் குலம். வேதியர் குலம் என்று பொதுப்படையாகத்தான் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும், அவருக்கு மணமுடிக்க உறுதி செய்த பெண், புத்தூர் சடங்கவி மறையோன் மகள், (பெயர் தெரியவில்லை) இப்பெண்ணுக்குச் சுந்தரருடன் பேசிய மணம் நின்றுபோனபின், ஆரூரரையே நினைத்து நினைத்து உருகியவராய்ச் சிவலோகம் பெற்றார் என்றவிடத்தில்,

" .......... புத்தூர் வரு சிவவேதியன் மகளும் "[2]

என வருவதாலும், ஆரூரருக்கு மணப்பெண் தேடி உறுதி செய்யும் முன்

1. திருக்குறள் 2. பெரிய.தடுத். 77

" குலமுதல் அறிவின் மிக்கார் கோத்திரமுறையும் தேர்ந்தார்,
நலமிகு முதியோர் சொல்லச் சடங்கவி நன்மை ஏற்று "[3]

என்று பெரியபுராணம் கூறுகிறது. குலம் கோத்திரம் பார்த்துச் செய்யப்பட்ட திருமணம் இது. இப்பெண்மணி 'சிவவேதியர்' குலம் என்பதால் ஆரூரரும், மறையவரில் சிவ வேதியர் குலத்தினர் என அறிய முடிகிறது.

## மணம் நிகழ்ந்த பருவமும் மரபுகளும்

அந்நாளில், மறையவர்கள் மறைநெறிப்படி வேள்வி செய்தல் வேண்டும். வேள்வி செய்ய மனைவி இருத்தல் வேண்டும். ஆகவே மணம் செய்து கொண்டர்க வேண்டும். இதனை,

" ................. கோதில் மறை நெறிச் சடங்கு,
காட்டவரும் வேள்வி பல புரிவதற் கோர் கன்னிதனை
வேட்டருள வேண்டும்............ "[4]

என, சம்பந்தர் வரலாற்றுப் பகுதியால் அறிகிறோம்.

இனி,

" மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத் "[5]

திருமணம் செய்து கொண்ட கோவலனும் -

" இருநிதிக் கிழவன் மகன் ஈரெட்டாண் டகவையான் "[6]

எனப்படுகிறான். பதினாறு ஆண்டுக்கு 'உட்பட்ட' வயதினான் என்பது அடியார்க்கு நல்லார் உரை. தலைவன், பதினையாண்டும் பத்துத் திங்களும், தலைவி பதினொரு ஆண்டும் பத்துத் திங்களும் உடையவராக இருத்தல் வேண்டும். இதனை இறையனார் களவியல் (அக. 32) சூத்திர உரை விளக்கத்தால் அறியலாம்.

எனவே "மறைவழிகாட்ட" திருமணம் செய்துகொண்ட கோவலனும், வைதிக "மறைநெறிச் சடங்கு காட்டத்" திருமணம் செய்து கொண்ட (பெரிய திருஞான. 1158) சம்பந்தரும் பதினாறுவயது நிரம்பச் சிறிது முன்னர்த் திருமணம் செய்து கொண்டவர்களாதல் வேண்டும்.

இதுபோலவே, வேதிய சுந்தரர்க்கும் பதினாறு வயது நிரம்பிடச் சிறிது முன்னர்த் திருமணம் நடந்திருக்க வேண்டும் என அறியலாம்.

ஆரூரர் திருமண நாளுக்கு முதல்நாள், மணமகனுக்குக் கையில் 'மணக்காப்பு' (கங்கணம்) அணியப்பெற்றது. மேளதாளங்கள்

3. பெரிய. தடுத் 8
4. பெரிய திருஞான. 1156 5, 6. சிலப்பதிகாரம் மங்கலவாழ்த்து .... 52, 34

முழங்கின. பொழுது விடிந்தது. சோதிடர் குறித்த நல்ல நேரத்தில் எண்ணெய் பூசி நீராட்டினர். மார்பில் பூண்நூல் இருந்தது. மேனியில் மஞ்சள் பூசினர். நூலாடையால் தலை புலர்த்தினர். அகில் முதலாம் மணப்பொருள்கள் புகைப்பட்டன. பட்டு ஆடை அணிவித்தனர். பன்னீர் தெளித்தனர். சந்தனம் பூசினர். கத்தூரி தீற்றினர். புதுமுப்புரிப் பூணூல் அணிந்தனர்; கையில் பவித்திரம் சூட்டினர். உடமபெங்கும் பல இடங்களில் வகை வகையான மலர் மாலைகளை அணிவித்தனர். நெற்றியில் திருநீறு மின்னியது.

ஆரூரரை, யோகப் புரவியில் ஏற்றி அழைத்து வந்து, சிவிகையில் அமர்த்தினர். ஆரூரர் மணக் கோலம் கொண்டு புறப்பட்டார். மாலைகள் பல அணிந்த மைந்தர்களும், மகளிர்களும் உடன் வந்தனர். சாமரை வீசினர். சந்தனம் தெளித்தனர். மயில் பீலி வீசினர்.

இவ்வாறு மணங்கொள்ளப் புறப்பட்டார் ஆரூரர். திருமணம் பெண் வீட்டில் நிகழ்ந்தது. ஆகவே, புத்தூர் வந்து சேர்ந்தார். அங்கே அட்ட மங்கலப் பொருள்களோடும் எதிர்கொள்ளப்பட்டார்.

இதனால், செல்வமும் செல்வாக்கும் உடையவர் வீட்டில் நிகழ்ந்த, வைதிகத் திருமண நிகழ்வுகளை அறியலாம்.

### சுந்தரர்தம் பெற்றோர்

திருவெண்ணெய்நல்லூர்ச் சடையனாரும் அவர்தம் துணைவியார் இசைஞானியாரும், சுந்தரரின் மண்ணுலக வாழ்வின் பெற்றோர்.

சுந்தரர்தம் வாழ்க்கை நிகழ்ச்சியில் இவர்களின் பங்குபற்றிய குறிப்பு மிகக் குறைவு. திருத்தொண்டத் தொகையிலும், ஆரூரர் பாடிய திருப்பதிகங்களில், 'சடையன்தன் காதலன்' , இசைஞானி சிறுவன்' என்பன போலச் சில சில இடங்களில் பெயர் குறிப்பிடப்படுவதோடு சரி.

பெற்றனர். பெயர் சூட்டினர். முந்நூல் அணிவித்தனர். கலை பயிலச் செய்தனர். மகன்மையாக் கொடுத்தனர். மணம் பேசி முடித்தனர். மணமேடையில் வழக்கு எழுந்தபோது, அதனைத் தீர்க்கச் சென்றவர்களோடு உடன் சென்றனர். அவ்வளவுதான்! வேறு செய்திகள் இல்லை!

சுந்தரரின் திருவாரூர் வாழ்க்கையிலோ, பரவையார் மணத்திலோ, சிவத்தலப் பயணத்திலோ சங்கிலியாரை

மணந்ததிலோ, இவர்களுக்குற்ற பங்கு ஏதுமில்லை. இதற்கான குறிப்புகள் இல்லை.

இசைஞானியார், திருவாரூரை அடுத்துள்ள கமலாபுரத்தைச் சேர்ந்தவர் என்ற செய்திமட்டும் கல்வெட்டுகளால் அறியக் கிடைக்கிறது. இதுபற்றித் தொடக்கப்பகுதியில் கண்டோம். இனி, விறல்மிண்ட நாயனார் கொண்டிருந்த ஆதங்கத்திற்கேற்பவும், சிவனடியார்கள்பால் தமக்கிருந்த இயல்பான பெருமதிப்புக் காரணமாகவும், ஆரூரர் திருத்தொண்டத்தொகை பாடினார். இதில் கூறப்பெற்ற தனியடியார்கள் சுந்தரர் உட்பட அறுபத்து மூவர். அது என்ன அறுபத்து மூன்று என்கிற கணக்கு? சமண அழிப்பு முயற்சிக்கும் இந்த எண்ணிக்கைக்கும் தொடர்புண்டு. இது பற்றி விவரிக்க இங்கு இடமில்லை.

தனியடியார்கள் ஏறத்தாழ எல்லாருமே, ஒவ்வொரு வகையில் செயற்கரிய செய்தவர்கள்; செயற்கு உரியவற்றைச் சிறப்புடன் செய்தவர்கள். சடையனார், இசைஞானியார் இருவரும் இவ்விருவகையிலும் சேர்க்கத்தக்கவர்கள் ஆகார். ஆகவே, பெற்ற தாய்-தந்தையர்க்கு நன்றி பாராட்டுகிற முறையில், இத்தொகையில் இடம் பெற்றவர் என்றே கொள்ள வேண்டியிருக்கிறது. குடும்பமே நாயன்மார் குடும்பம்!

## பரவையாரும் சங்கிலியாரும்

கயிலையில், இறைவிக்கு அணுக்கத் தொண்டு செய்து வந்தவர்கள், அநிந்திதை (நிந்தனைக்கு அப்பாற்பட்டவர் என்பது பொருள்)யும் கமலினி (கமலம் போல் இனியவள் என்பது பொருள்)யும்.

இவர்கள் இருவரும் நந்தவனப் பணி செய்திருந்த காலத்தில், ஆரூரர் அங்கு வர, அவர்மேல் 'மனம்' வைத்த தவறுக்காக மண்ணுலக வாழ்வு பெற்றவர்கள்.

அவர்களில் கமலினி திருவாரூரில் பதியிலார் குலத்தில் பிறந்து 'பரவையார்' எனும் பெயர் பெற்றார். அநிந்திதை,

> " நாலாங் குலத்தில் பெருகுநலம் உடையார் வாழும் ஞாயிற்றின்
> மேலாம் கொள்கை வேளாண்மை மிக்க திருஞாயிறுகிழார்
> பாலாதரவு தருமகளாராகி ....... அவதரித்தார் " [7]

7. பெரிய ஏயர். 20

என்கிறது பெரியபுராணம். சற்சூத்திர (பெரிய.) வேளாளர்க்கு ஒரு மகளாய்ப் பிறந்தவர். சங்கிலியார் எனும் பெயர் பெற்றவர்.

இருவருமே, ஆரூரரை இங்கும் விரும்பி மணந்துகொண்டனர். பரவையார், பதியிலார் குலத்துள் பிறந்தவராகையினால்தானோ என்னவோ, தந்தை பெயர் குறிக்கவில்லை. தாய் பெயர் கிடைக்கவில்லை போலும்!

ஆரூரருக்கு முதலில் பெற்றோர் ஏற்பாடு செய்யப்பட்ட திருமணம், குலம் கோத்திரம் பார்த்து முடிவு செய்யப்பட்டது. ஆனால், பரவையாருடனான திருமணம், இறைவனே செய்த ஏற்பாடு. அடியவர்கள் கூடிநின்று நிகழ்த்திய திருமணம். சாதி, குலம், தடையாக இல்லை! சிவவேதியர்கள் யாரும் தடையாக இல்லை! காதல் திருமணம்! குலபேதங்கள் ஊன்றி நிலவிய காலத்தில் நடந்த கலப்புத் திருமணம்!

சங்கிலியாருடனான திருமணமும், கலப்புத் திருமணம். காதல் திருமணம். இங்கே ஒரு நெருடல் உண்டு. பரவையாரை 'விரும்பி' மணந்தவர் ஆரூரர் என்பது தெரிந்த பின்னும் - அவர் திருவாரூர் நினைவில், தன்னை மறந்து சென்றுவிடலாம் என ஐயமுற்றபின்னும் இறைவன் வகுத்துக் கொடுத்த உத்தியினால், சிவனருள் பெற்ற ஒருவரையே மணப்பேன் எனக் கொண்டிருந்த உறுதி காரணமாக நிகழ்ந்த திருமணம்.

சுந்தரரால், இவ்விருவரும், இவ்விருவரால் சுந்தரரும் 'நிலையிறக்கம்' பெற்றனர் என்றால், அது ஒருவாறு பொருந்தும். தவிர, ஆருரர்க்குத் திருவாரூரில் 'மகிழ்ச்சிக்களம்' ஒன்று இருந்தது.

" மன்னும் திருவா ரூரின்கண்
அவர்தாம் மிகவும் மகிழ்ந்துறைவார் " [8]

என்று தெரிந்த பின்னும் (இது பரவையாரை ஆரூரர் மணந்து மகிழ்ந்திருக்கும் செய்தியைக் குறிப்பால் உணர்த்தியது). சிவனருள் பெற்றவர் என்ற ஒரே காரணத்தால் இறைவன் செய்த பரிந்துரையால் மணக்க இணக்கம் தெரிவித்தவர்,

" கோவா முத்தும் சுரும்பேறாக்
கொழுமென்முகையும் போல்வார் "

ஆகிய சங்கிலியார். ஆயினும் இவ்விருவர்க்கும் 'நாயனார்' எனும் தகுதி கூறப்படவில்லை.

8. பெரிய ஏயர். 242

மிகச் சிறந்த சிவனடியார்களாய் அறிமுகப்படுத்தப்பட்ட இவ்விருவரும், ஆரூரருடன் சிவத்தல யாத்திரை செய்த குறிப்பே இல்லை.

ஆரூரர் பொருட்டு, பரவையாரின் ஊடல்தீரத் தூது சென்ற இறைவன், 'தன் உருவிலேயே, சென்று சமாதானம் செய்திருக்கிறார். இதனை,

" வெறியுறு கொன்றை வேணி விமலருந் தாம் ஆம்தன்மை
அறிவுறு கோலத்தோடும் அளவில்பல பூத நாதர்
செறிவுறு தேவர் யோக முனிவர்கள் சூழ்ந்து செல்ல
மறுவில்சீர்ப் பரவை யார்தம் மாளிகை புகுந்தார் வந்து "[9]

என்று தெரிவிக்கிறது பெரியபுராணம். மண்ணுலகில் சிவபரம்பொருளை நேரில் காணும் பேரு யாருக்கும் வாய்த்ததில்லை. சிவனடியார் பலர்க்கு வாய்க்காத இச்சிறப்பு சிந்திக்கத்தக்கது! திருமண வாழ்க்கைக்குப் பின் இவ்விருவரும், அங்கொன்றும் இங்கொன்றுமாக ஆரூரர் பதிகங்களில் குறிக்கப்படுகின்றனரே தவிர, தல யாத்திரையில் உடனிருந்ததாதக் குறிப்பு ஏதுமில்லை.

திருமணமே செய்துகொள்ளாமல் இருந்திருந்தால், இவ்விருவருமே, மேலும் இரு காரைக்காலம்மையாராகி இருந்திருக்கக்கூடுமோ என்று நாம் சிந்தனை செய்யுமளவுக்குச் சிறந்த சிவபக்தைகள். ஆயினும் வரலாற்றுக் குறிப்பு இடந்தரவில்லை.

சிவபரம் பொருளை நேரில் - இயல்பான உருவிலேயே - பார்த்திடும் பேறு பெற்ற பரவையார், திருத்தொண்டத் தொகையில் இடம்பெறவில்லை என்பது, உண்மையான சிவபக்தர்களுக்குக் கொஞ்சம் 'உறுத்தலாக'வே இருக்கும் என்பதில் ஐயமில்லை. இவர்கள் மண்ணுலக வாழ்வு,

" ............ பரவையார் சங்கிலியார் என்னும்
நலத்தின் மிக்கவர் வல்வினைத் தொடக்கற நாயகி அருளாலே
அலத்த மெல்லடிக் கமலினியாருடன் அநிந்ததை யாராகி
மலைத்த னிப்பெரு மான்மகள் கோயிலில் தந்தொழில் வழிநின்றார் "[10]

என்ற அளவிலே நிறைவு பெறுகிறது. சேரமான் பெருமாளும் சுந்தரரும், மண்ணுலகில் பெற்றிருந்த தசை உடலோடு கயிலை

9. பெரிய.ஏயர் 361 10. பெரிய வெள்ளானை 50

சென்றார்கள், என்று திரு. புராணம் கூறுவதால் அறிகிறோம். ஆனால், இவர்கள் இருவருக்கு - இது போன்ற குறிப்பொன்றும் கிடைக்கவில்லை.

## அவதார நோக்கம்

நம்மைப்போலும் மனிதர்கள் எல்லாம் ''பிறந்தவர்கள்'' ஆனால், சுந்தரர் பிறப்பு, 'பிறப்பு' ஆகாது; 'அவதாரம்' ஆகும். இந்த வடமொழிச் சொல்லுக்கு, ''மேலிருந்து இறங்குகை'' என்று பொருள் குறிக்கிறது தமிழ் லெக்சிகன். சுந்தரர் இசைஞானியர் திருவயிற்றில் பிறந்தார் என்பது ஒரு 'சம்ப்ரதாயமே' தவிர அவதரித்தார் என்றுதான் சொல்லவேணும்.

சுந்தரர் மண்ணுலகில் பிறந்தது இரண்டு + ஒன்று = மூன்று நோக்கங்களுக்காக.

1. தென் திசை வாழ்ந்திடவும்
2. குற்றமற்ற திருத்தொண்டத்தொகை தோன்றவும்
3. மாதர் மேல் மனம் வைத். 'தவறு'க்காகவும்,

" மாத வம்செய்த தென்திசை வாழ்ந்திடத்
தீதிலாத் திருத்தொண்டத் தொகைதரப் போதுவார் "

என்கிறது பெரியபுராணம்.

இந்த இரு நோக்கங்களும் நிறைவேறும் வகையில், 'மாதர்மேல் மனம்வைத்த' குற்றத்திற்கு நிலையிறக்கம் பெற்று, மண்ணுலகில் மனித்தப் பிறப்பெடுப்பது, மூன்றாவது நோக்கம். இந்த மூன்று நோக்கங்கள் கருதியே சுந்தரர் வருகை அமைந்தது. இது தெய்வச் சேக்கிழார் வாக்கினால் நாம் அறியமுடிகிறது.

எல்லாச் சிவனடியார்களும் மண்ணில் பிறந்து, சிவன் திருவடி மறவாத சிந்தையாராகி - மேலே - கயிலை சென்று இறைவனைக் கண்டின்புற்றிருப்பது வழக்கம். ஆனால் ஆலால சுந்தரரோ, கயிலையிலிருந்து கீழிறங்கி வந்து மண்ணுலக வாழ்வைச் சில காலம் பெற்றிருந்தவர்.

## சுந்தரர் காலமும், வாழ்ந்திருந்த கால அளவும்

தமிழகத்தைப் பொறுத்தவரை, வரலாற்றில் இடங்கொண்ட பலரது பிறப்பும், வாழ்காலமும் தெளிந்த குறிப்புடையனவாக இல்லை. சில அகச் சான்றுகள், சில புறச்சான்றுகள் வைத்து 'யூகம்' செய்ய வேண்டியுள்ளது.

பெருமை மிக்க சைவத் தொண்டர்கள் சிலரின் அருஞ்செயல்கள் வெளிவரக் காரணராயிருந்த நம்பி ஆரூரரின், வரலாறும் இவ்வாறே உள்ளது. அவர்தம் பெற்றோர், ஊர், நாடு பற்றிய செய்திகள் சேக்கிழார் நூலால் அறியமுடிகிறது. ஆனால், எந்த நூற்றாண்டில் பிறந்தார் - வாழ்ந்தார்? துல்லியமான தகவல்கள் இல்லை.

இதனை ஆராய்ந்து தெளிவுபடுத்த முயன்ற பலர், பல கட்டுரைகள் எழுதியுள்ளனர். இவை நூற்றுக்கணக்கில் உள்ளன.

" அப்பருக் கெண்பத்தொன்று, அருள்வாத வூரர்க்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம் - இப்புவியில்
சுந்தரர்க்கு மூவாறு, தொன்ஞான சம்பந்தர்க்கு
அந்தம் பதினாறு அறி "

என்பது ஒரு தனிப்பாடல். இப்பாடற் செய்தியை அப்படியே பலரும் ஏற்றுக் கொண்டுள்ளனர். நாமும் ஏற்றுக் கொள்வோம். எனவே, ஆரூரர் மண்ணுலகில் வாழ்ந்த காலம் பதினெட்டு ஆண்டுகள்.

" பாடிய சம்பந்தர் வைகாசி மூலம்; பயிலும் அப்பர்
நீடிய சித்திரை மாதச் சதயம்; நிறைவன் தொண்டர்
ஆடியில்சோதி; திருவாதவூரர் நல்ஆனி மகம்:
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசம் சிறந்தனரே "

எனவரும் தனிப்பாடல் ஒன்று, நாயன்மார்கள் வாழ்வு நீத்த விண்மீன் நாட்களைக் குறிக்கிறது. இதில் ஆடிமாதம் சுவாதி நட்சத்திரம் சுந்தரரின் மண்ணுலக வாழ்வின் இறுதிநாள் ஆகும்.

பதினாறு நிரம்பும் நிலையில், ஆரூரருக்குத் திருமண நிகழ்ச்சி நடக்க இருந்தது. அது நின்று போய், 'சிவமே பொருள்' எனத்தல யாத்திரை செய்யத் தொடங்கினார்.

பதினெட்டாம் வயதில் மண்ணுலகம் நீத்துக் கயிலை சென்றடைந்தார்.

நம்பி ஆரூரர், வன்றொண்டராகி - நாடறிந்த சிவபத்தராகி - திருத்தொண்டத் தொகை பாடிப் - பலதலங்களைச் சென்று வழிபட்டு - பரவையாரையும் சங்கிலியாரையும் மணந்து - சிலச்சில இடறல்களுடன் வாழ்ந்து - யானை வரப்பெற்றுக் கயிலை சென்று... இவையெல்லாம் சுமார் இரண்டாண்டின் நிகழ்ச்சிகளே.

சுந்தரர் பிறந்த திருநட்சத்திரமும் பிறந்த ஆண்டும் இதுவரை அறியக்கூடவில்லை. ஆயினும், சுந்தரர் வாழ்ந்த காலம் எது என்பது விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

கி.பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதி என்கிறார், திரு. கா.சு. பிள்ளையவர்கள். திரு. சதாசிவ பண்டாரத்தார், திரு. ஔவை துரைசாமிப்பிள்ளை, திரு.க.வெள்ளைவாரணனார் ஆகியோர், எட்டாம் நூற்றாண்டின் தொடக்க காலம் என்கின்றனர். ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்கிறார், திரு. மா. இராசமாணிக்கனார். துல்லியமான காலக் கணக்கு ஒன்றும் இதுவரை கூறப்படவில்லை.

## சுந்தரர் பதிகங்களும் பண்ணிசையும்

ஆலால சுந்தரர் இன்றும் போற்றப்படுவதற்குக் காரணம், இறைவனோடு நேரடித்தொடர்பு கொண்ட அற்புதங்கள் நிறைந்த அவரது சிவபக்தி வாழ்க்கைதான் காரணமா? அதுவும் காரணம். வாழும் சுந்தரராக இன்றும் நம்மோடு இருந்து, அவரை நம் கண்முன் நிறுத்தி வைத்திருக்கின்றன - அவரது தமிழ்ப் பதிகங்கள்!

அவற்றின் சொல்லாட்சி - சொல்லாக்கம் - கவித்துவம் - பாடுபொருள் - அதனை வெளிப்படுத்துகிற நேர்த்தி - முதலியன முக்கிய காரணம்.

மிக உயர்ந்த செம்மொழியாம் தமிழ் பெற்ற செல்வஅணி, இவரது பதிகங்கள்! உள்ளடக்கம் பக்திதான். இதனை வெளிப்படுத்திட அவர் கையாண்ட உத்தி, அவர் காலத்தில் மொழி பெற்றிருந்த மேன்மையை உணர்த்தத் தவறவில்லை.

" தமிழின் பெருமாள் " [11]

என்று சொல்லி மகிழ்கிறார் சேக்கிழார். பாடுபொருளில் - உள்ளடக்கத்தில், அது பற்றிய தத்துவ முடிவுகளில் மாற்றுக் கருத்துடையவர்களும், உச்சிமேல் வைத்துப் போற்றுவர்!

அவர் பண்ணோடும் இசையோடும் பாடிய பாடல்கள் பல ஆயிரம் இருக்கலாம். கறையானுக்கும் கனலுக்கும் கல் நெஞ்ச, மத வெறியர்களின் சூதுக்கும். நம் 'அருமை' முன்னோரின் அலட்சியத்துக்குமாக அழிந்தவை போக, தருமையாதீனப் பதிப்பின்படி (1964) இன்று கிடைக்கும் பாடல்கள் 1026 ஆகும். பதிகங்கள், திருத்தொண்டத்தொகை உட்பட 100 ஆகும். இவற்றை இசைக்க அவர் கொண்ட பண்கள் 17 ஆகும். பாடிய சிவத் தலங்கள் 83. பொதுப்பதிகம் 5. திருத்தொண்டத்தொகை 1.

11. பெரிய வெள்ளானை - 21

## மொத்தப் பண்கள் 17

இந்தளம்(12), காந்தாரபஞ்சமம்(1), காந்தாரம் (5), காமரம் எனும் சீகாமரம் (4), குறிஞ்சி (4), கொல்லி (7), கௌசிகம் (1), செந்துருத்தி (1), தக்கராகம் (4), கொல்லிக்கௌவாணம் (9), தக்கேசி (17), நட்டபாடை (5), நட்டராகம் (14), பஞ்சமம் (5), பழம் பஞ்சுரம் (7), பியந்தைக்காந்தாரம் (1), புறநீர்மை (3) = ஆக 100.

தக்கேசி, மருதப் பண்ணின் அகநிலையாகும். இப்போது காம்போதி ராகமாகப் பாடப்படுகிறது. 'டக்க கைசிகம்' என்பர் சாரங்கதேவர். இளிவரல், அச்சம் என்னும் சுவைகளை வெளிப்படுத்தப் பயன்படுவது என்பர்.

நட்ட ராகம், குறிஞ்சிப்பண்ணின் புறநிலையாய் அமைந்திருப்பது. நகை, உவகைச் சுவைகளுக்கு உரியது. இக்காலத்தார் பாடும் இந்தோளத்திற்கு ஒப்பானது என்பர், யாழ் நூலார் விபுலானந்த அடிகளார். ஆயினும், இந்த நட்டராகத்தைப் பந்துவராளியில் பாடிவருகின்றனர் இக்காலத்தார். இந்த இரு ராகங்களும் சுந்தரர்க்கு மிகவும் பிடித்தவை போலும்!

## சுந்தரரும் நாயன்மார்களும்

நாயன்மார் அல்லது நாயனார் என்போர் சிவனடியார்கள். பெரிய புராணத்தில், அறுபத்து மூவர், நாயன்மாராகப் பெயர் சொல்லிச் சிலர் சிறப்பு அடைமொழியுடன் சேர்த்துக் கூறப்படுகின்றனர். சிவனடியார் எனப் பாராட்டத்தக்க தகுதியுடையோர் பலர் இருந்திருப்பர்; எனினும்; சுந்தரர் - தம் 'திருத்தொண்டத் தொகை' ப்பதிகத்தில் குறிப்பிடப்பட்டவர்கள் மிகப் பெருமையுடையவராகக் கருதப்படுகின்றனர்.

சுந்தரர்தம் திரு. தொகையில் பெயர் சொல்லிக் குறிப்பிட்டவர்களில் பலர் அவருக்கு முன்னே இருந்தவர்கள்; சிலர், அவர்காலத்தில் வாழ்ந்தவர்கள்; சிலர் அவரோடு தொடர்புடையவர்கள்.

சடையனார், இசைஞானியார் ஆகிய இருவரும், நம்பி ஆரூரரைப் பெற்றதனால் மட்டுமே நாயன்மார் எனும் சிறப்பைப் பெற்றவர்கள்.

**விறல்மிண்டர் :** சுந்தரர், அடியவர்களை மதிப்பதில்லை எனக் கருதி அவர்மீது சினந்தவர். திருத்தொண்டத்தொகை பாடியபின் இக்கருத்தை மாற்றிக்கொண்டார்.

கோட்புலியார் : ஆரூரரிடத்தில் பேரன்புடையவர், சிங்கடி, வனப்பகை எனும் தன் இரு பெண்மக்களையும் 'அடிமையாக ஏற்க வேண்டுமென' ஆரூரை வேண்டிக் கொண்டவர்.

நரசிங்க முனையரையார் : நம்பி ஆரூரரின் அருமை பெருமைகளை இளமையிலேயே உணர்ந்து அவரைத் தம் 'மகனாக'த் தத்து எடுத்துக்கொண்டவர், வளர்த்தவர்.

கழறிற்றறிவார் (சேரமான் பெருமாள்) நாயனார் : ஆரூரரின் நெருங்கிய தோழர். ஆரூரால், வீட்டுக்கு அழைக்கப்பட்டு, விருந்து படைக்கப்பெற்ற ஒரே நாயனார் இவர் மட்டுமே. சேரநாட்டின் ஒரு பகுதிக்கு அரசர். தம் அரச செல்வத்தை - ஆட்சியை ஆரூரருக்குத் தர முன் வந்தவர். சுந்தரர் நட்பினால், மண்ணுலக உடலோடு கயிலை செல்லும் அரிய சிறப்பு பெற்றவர்.

ஏயர்கோன் கலிக்காமர் : சோழநாட்டில் திருப் பெருமங்கலத்தில், ஏயர்குடியில் பிறந்து, சோழ அரசர்க்குச் சேனாதிபதியாய் இருந்தவர். பெண்ணாசையால், இறைவனையே தூதனுப்பினார், எனக்கருதி, ஆரூரர்மேல் சினங்கொண்டவர். பின்னர் இறைவன் திருவிளையாடலால், இந்தச் சினம் நீங்கி ஆரூரர்பால் பேரன்பு மிக்கவரானார். ஆரூரரால், வீழ்ந்து வணங்கப்பட்ட பெருமையுடையவர்.

இவர்களைத் தவிர, சுந்தரர் காலத்தில் வாழ்ந்தவர்களும், அவரது பதிகங்களில் குறிப்பிடப் பெற்றவர்களும் ஆகிய நாயன்மார்களும் சிலர் உள்ளனர். கண்ணப்ப நாயனார், கணம்புல்லர், சண்டேசுவரர், சம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாளைப்போவார், சூதன் எனும் மூர்க்க நாயனார், சாக்கியர், கோச்செங்கண் சோழர், தண்டியடிகள் ஆகிய இவர்கள் ஆரூரர் பதிகங்களில் வைத்துக் குறிப்பிடப் பெற்றவர்கள்.

தவிர "நாயன்மார்கள்" என்று சிறப்புத் தந்து, திருத்தொண்டத் தொகையில் குறிப்பிடப் பெற்ற எல்லாத் தனியடியார்களும் தொகையடியார்களும் இங்கே குறிக்கத் தக்கவர்கள் ஆவர்.

## உடலோடு உயர்நிலை?

பிறப்பின் இறுதிநிலை என்ன? எல்லோரும் அறிந்த ஒன்று. அது இறப்பு!

"தோற்றமுண்டேல் மரணமுண்டு"[12]

என்ற சுந்தரர் பதிகவரியும் இதனையே உறுதிசெய்கின்றது. சரி. ஆடவும், பாடவும், ஊடவும், கூடவும், தேடவும், தெளியவும்

12. சுந்தரர் தேவாரம் 7-2

இன்னும் பிறபல இயக்கங்களுக்கெல்லாம் துணை நின்ற உடம்பின் இறுதிநிலை என்ன? அழியும் அல்லது அழிக்கப்படும். இது பொது நியதி.

உயிர் என்ன ஆகும்? சித்தாந்த சைவ முடிவின் படி, சிவநெறி பிறழாது வாழ்ந்தவர்களின் ஆன்மா முத்திபெறும்; முத்திநிலை பலவகை. இது ஒன்பது வகைப்படும் என்பர் சைவ சித்தாந்தப் பேரறிஞர்கள். அதுபற்றி விவரிக்க இங்கு இடமில்லை. என்றாலும், உடலோடு முத்தி பெறுதல் என்பது இல்லை.

இந்த மரபிற்கு விலக்காக, ஆரூரர் உடலோடு கயிலை சென்றார் என்பது சிந்திக்கத்தக்க செய்தி.

" வெறுத்தேன்மனை வாழ்க்கையை;
விட்டொழிந்தேன்........... " [13]

என்ற வரிகள் அவர் மணவாழ்க்கை மேல்கொண்ட உவர்ப்பை உணர்த்தும். 'முப்போதும் கறிவிரவு நெய் சோறு வேண்டும்' என்று கேட்டவர், பரவையார் வேண்டும், சங்கிலியார் வேண்டும், நெல் மலைவேண்டும், பொன் வேண்டும் என்று பெற்றவர், இப்போது மனைவாழ்க்கை வேண்டாது வெறுக்கும் நிலைக்கு மனம் பழுத்திருந்தார். பரவையார், சங்கிலியார், பெற்ற தாய் தந்தையர், ஏயர்கோன், சிங்கடி, வனப்பகை, தன்னை ஆசையுடன் வளர்த்த நரசிங்க முனையரையர் என எல்லாரையும் மறந்தார். உயிர்த்தோழரான சேரமான் அரண்மனையில்தான் இப்போது இருக்கிறார். அவரையும் மறந்தார்.

பரமரைப் பண்டு தாம் பிரிந்தெய்தும் இவ்வாழ்வு வெறுத்தது. 'அவனியில் விழுந்தெழுந்து அலைப்புறும் மனை வாழ்க்கை சரிய' வேண்டும் என்ற விருப்பம் ஒன்றுமட்டுமே மேலிட்டிருந்தது. இறைவன், தடுத்தாட்கொண்டு தந்திருந்த வாழ்க்கை முடிந்திருந்தது. இந்நிலையில்,

" ...........நம் ஊரனை உம்பர் வெள்ளானையின் உடனேற்றிச்
சென்று கொண்டிங்குவாரும் " [14]

இறைவன் கட்டளையிட, அவ்வாறே நிகழ்ந்தது. வெள்ளானையில் ஏறிய ஆரூரர், மண்ணுலகில் பெற்ற உடலோடு கயிலை அடைந்தார். இதனை,

13. சுந்தரர் தேவாரம் 4-8    14. பெரிய வெள்ளானை 31

" பொங்கு மாமதம் பொழிந்த வெள்ளானையின்
உம்பர் போற்றிடப் போந்த
நங்கள் நாவலூர் காவலர் நண்ணினார்
அண்ணலார் திருமுன்பு " [15]

என்ற சேக்கிழார் திருவாக்கும் உறுதி செய்கின்றது.



சுந்தரர்த்தி சுவாமிகள் கயிலை சேர்தல்

" சிந்தை மகிழும் சேரலனார் திருவாரூரர் எனுமிவர்கள்
தம்தம் மணிமேனிகள் வேறாம் எனினும் ஒன்றாம் தன்மையராய் " [16]

என்கிறார் சேக்கிழார். ஆகவே,

சுந்தரர் சென்றதறிந்த சேரலனார், குதிரை மேல் ஏறி, அதன் காதில், சிவ மந்திரத்தை ஓதி உடலோடு கயிலை சென்றார். இவ்விருவரும் உடலோடு கயிலை அடைந்த செய்தி, சைவ உலகில் நிகழ்ந்திராத அதிசயம் ஆகும்!

15, 16. பெரிய வெள்ளானை 41, 20

" ஞான ஆரூரைச் சேரரை
அல்லது நாம் அறியோம்
மானவ ஆக்கையொடும் புக்கவரை;
வளரொளிப் பூண்
வானவராலும் மருவற்
கரிய வடகயிலைக்
கோனவன் கோயில் பெருந்தவத்
தோர்தங்கள் கூட்டத்திலே " [17]

என்று வியந்து போற்றுகிறார், நம்பியாண்டார் நம்பி.

எந்தச் சைவ அடியவர்களுக்கும் இதுவரை கிடைக்காத பெரும்பேறு என்பது நாம் சிந்திக்கத்தக்கதாகும்!

## சேரர் பேறு

சுந்தரர், பிறர் பெறாத பெரும் பேறு பெற்றது போலவே அவரையே சார்ந்து வாழ்ந்த சேரமான் பெருமாளும் பெறற்கரிய இரண்டு பேறுகளைப் பெற்றவர்.

ஆலால சுந்தரர், பிற சிவனடியார்கள் யாரினும், சிவனது அன்புக்கு உரியவராய் இருந்தார் என்பதை அவரது கயிலை வாழ்வாலும் மண்ணுலக வாழ்வாலும் நாம் அறிந்திருக்கிறோம். சிவபரம் பொருளின் 'செல்லப் பிள்ளையாகவே' இருந்தார் என்று கருதினால், அதில் மிகை ஒன்றுமில்லை.

திருவாரூர்த் தியாகேசரிடம், அவர் சேர்த்துவைத்த செல்வத்தில் மூன்றில் ஒருபங்கு வேண்டும் என்று கேட்டதை இங்கு நினைத்தல் வேண்டும். மகன், தந்தை சொத்தில் பங்கு கேட்பது அன்றும் உள்ள வழக்கம்தான்!

இத்தகைய ஆரூரரால் பெருமைப்படுத்தப்பட்டவர் சேரமான் பெருமாள். சிவன் எனும் செம்மேனி எம்மான், ஆரூரர்க்குத் தோழரானார். ஆரூரர், சேரமான் தோழரானார். இதனை,

" பான்மை நண்பால் சேரமான் தோழர்
என்று பார்பரவும் " [18]

என்கிறார் சேக்கிழார். மேலும் ஆரூரர் வீட்டிற்குச் சென்றபோது, ஆரத் தழுவினார் அன்போடு வணங்கினார்.

---

17. திருத். தொகை 86. 18. பெரிய கழறி. 66.

" என்பும் உருக உயிர் ஒன்றி உடம்பும் ஒன்றாம் "

என ஆனார்.

அவர் செய்த உபசாரம், மிக மிக உயர்ந்த அன்பின் மரபை உடையது.பரவையாரை அழைத்து அறுசுவை விருந்து ஆக்குமாறு பணித்தார். விருந்து உணவு தயாரானதும், சேரரைக் கைப்பிடித்து வேண்டி, அமுதுக்கழைத்தார். உடனிருந்து உண்டார். இது அக்ரபோஜனம் என்னும் உயர் சிறப்பாகும்.

விருந்து முடிந்ததும் சேரலர்க்குப் பனி நீரும், கருப்பூரமும் கலந்த சந்தனம் தெளித்தார்; கத்தூரி தீற்றினார். மலர்மாலை தந்து போற்றினார். பணிப்பெண்கள் தாம்பூலம் தந்தனர்.

இப்படி ஆரூரரின் ஆருயிர்த் தோழரானது முதல் பேறாகும். சுந்தரர் தோழமையினால் அவரைப் போல உடலொடு கயிலை அடைந்தது இரண்டாவது பெரும் பேறு ஆகும்.

## வைப்புத் தலங்கள்

ஆழ்வார்கள், தம் பாசுரங்களினால் பாடிப் பெருமைப்படுத்திய திருமால் தலங்களை, 'மங்களாசாசனம்' பெற்ற தலங்கள் என்றும் 'திவ்ய தேசங்கள்' என்றும் போற்றுவது வைணவர்களின் மரபு.

தேவாரம் பாடிய மூவரும், தாம் நேரில் சென்று தொழுது பதிகம் பாடிய சிவத் திருவூர்களைப் 'பாடல் பெற்ற தலங்கள்' எனப் பெருமையுடன் குறிப்பிடுவது மரபு. நம்பி ஆரூரர் 'தேவார மூவருள்' ஒருவர். இப்பெருமகனார் தமிழகத்திலும் பிறபகுதிகளிலும் சென்று வணங்கிப் பதிகம் பாடிய தலங்கள் பற்றி முன்னரே குறித்தோம்.

இவ்வண்ணம் நேரில் சென்று காணாமல், ஆனால் பதிகம் பெற்ற தலங்களை 'வைப்புத்தலங்கள்' என்பர். இத்தலங்களில் சிலவற்றுக்கு நிறைவு பெற்ற பதிகங்களும் இருக்கின்றன.

தவிர, தாம் பாடிய பிற பதிகங்களில் பெயரை மட்டும் குறித்துப் போற்றிய தலங்களும் உண்டு. இவற்றையும் வைப்புத் தலங்கள் என்பர். இவ்வகையில் நம்பி ஆரூரர் பாடிய வைப்புத் தலங்கள் பல. வைப்புத் தலமாக அவர் பாடிப் பதிகம் பெற்ற தலங்களைப் பட்டியலிடலாம். அவை :

அண்ணாமலை, ஆழியூர், (திரு) ஆறைமேற்றளி, இன்னம்பர், இராமேச்சுரம், ஈழநாட்டு மாதோட்டம், என்னூர் (வட) கஞ்சனூர், கடம்பந்துறை, கடம்பூர், கடைமுடி, கண்டியூர், கச்சிக் காமகோட்டம், கருப்பூர், கிழையம், கிள்ளிகுடி, கீழ்வேளூர்,

கீழையில், கீழைவழி, குடப்பாச்சில், குடமூக்கில், குண்டையூர், குரக்குத்தளி, குரங்கணில் முட்டம், குற்றாலம், குறுக்கைநாட்டுக் குறுக்குகை, கைம்மை, கொங்குநாட்டுப் பேரூர், கொண்டல் நாட்டுக் கொண்டல், கோத்திட்டை, கோவல், கோளிலி, சிராப்பள்ளி, தக்களூர், தகட்டூர், 'தஞ்சை' தண்டங்கூறை, தண்டந்தோட்டம். தண்டலையாலங்காடு, தருமபுரம், தாழையூர், திருமலை, தெள்ளாறு, தென்பனையூர், தென்னூர், தேங்கூர், தேவனூர், நாங்கூர் நாட்டு நாங்கூர், நாலனூர், நெடுங்களம், நெய்த்தானம், நெல்லிக்கா, பழனம், பழையாறு, பாசூர், பாம்பணி, பாம்புரம், பிடவூர், புகலி, புரிசை நாட்டுப் புரிசை, பூங்கூர், பொன்னூர், நாட்டுப் பொன்னூர், மாகோதை, மருகல் நாட்டு மருகல், மிழலை நாட்டு மிழலை, மூலனூர், வலஞ்சுழி, விளத்தூர் நாட்டு விளத்தூர் வெண்ணிக் கூற்றத்து வெண்ணி, வெண்ணி நாட்டு மிழலை, வெற்றியூர், வேலனூர், வேளாநாட்டு வேளூர் என்பனவாக எழுபத்து நான்கு தலங்கள்.

இவற்றை அவர் பாடிய பதிகங்களில் வரும் எளிய குறிப்புகளாலும், சேக்கிழாரின் பெரிய புராணத்தாலும் அறிகிறோம்.

தடுத்தாட்கொள்ளப்பட்டது முதல் திருவஞ்சைக்களத்திலிருந்து வெள்ளை யானையேறிக் கயிலை சேர்ந்தது வரையிலான காலம், ஏறத்தாழ இரண்டாண்டுகள்.

இந்த இரண்டாண்டுகளும் தலயாத்திரை செய்தே கழிந்திருக்கிறது. வேறு செயல் இருந்ததாகத் தெரியவில்லை. எனவே, மேலும் பல பதிகங்கள் அவர் பாடியிருக்க வேண்டும். மேலும் பல ஊர்கள் வைப்புத்தலப் பட்டியலிலும், இடம் பெற்றிருக்கலாம்.

## பரவையார், சங்கிலியார், புறக்கணிப்பு

நம்பி ஆரூரரை விரும்பி மணந்துகொண்டவர் பரவையார். அவர் மனம் மகிழ இல்லறத்தை நல்லறமாக நடத்தியவர். சேரமான் பெருமாள் ஆரூரர் வீட்டிற்கு விருந்தினராய் வந்தபோது பரவையாரின் 'விருந்து பேணிய' செயல்களினாலும் இதனை அறியலாம்.

ஆரூரரும், பரவையாரிடத்து வைத்திருந்த அன்பு, பேரன்பு. அவர்தம் பதிகங்களில் பரவையார் பற்றிக் குறிப்பிடும் இடங்களால், இதனை நாம் புரிந்துகொள்ள முடியும். சுந்தரர் கண்ணிழந்தற்குப் பரவையாரிடத்து வைத்த பேரன்பும் ஒரு காரணம்.

தவிர, ஆலால சுந்தரர் போலவே கயிலை வாழ்வு பெற்றிருந்தவர். அவர் 'நிலையிறக்கம்' பெற்ற அதே காரணத்துக் காகவே இவரும் நிலையிறக்கம் பெற்றவர். மேலும், மண்ணுலக வாழ்வில், சிவபரம் பொருளை வேறு வடிவங்களாலன்றி, அதன் இயல்புக் கோலத்திலேயே காணும் பேறு பெற்றவர்.

சங்கிலியார் நிலையும் ஏறத்தாழ இதுதான். 'சிவனருள் பெற்றவர்க்கன்றி மற்றவர்க்கு நான் ஆளாகேன்' என்ற உறைப்புடன் இருந்தவர். ஆரூரர் முதலில் ஒரு மணம் கொண்டவர் என்பதறிந்தும், மணந்து கொண்டவர்.

ஆயினும் இவர்கள் நாயன்மார் பட்டியலில் இடம் பெறவில்லை, என்பது வியப்புக்குரியது!

மண்ணுலகத் தொடர்புடைய சடையனாரும் - இசைஞானி யாரும் நாயன்மார் பட்டியலில் இடம் பெற்றிருக்கும்போது, கயிலைத் தொடர்புடைய இவ்விருவரும் இப்பட்டியலில் இடம் பெறவில்லை என்பது வினாவுக்குரியது.

## நூல் போன சங்கிலியார்

நம்பியாண்டார் நம்பி, தேவார மூவர் பாடிய, பதிகங்களை வெளிவரச் செய்ததில் பெரும் பங்கு கொண்டவர். தமிழர்களின் நன்றிக்கு உரியவர். நம்பி ஆரூரர் பிறந்த 'சிவவேதியர் குலத்தில்' பிறந்தவர். தாம் பாடிய 10 நூல்களையும், 'திருமுறைகளோடு' சேர்த்து வைத்தார் என்பர்.

இது ஏற்கத்தக்க கருத்தாயில்லை. 8, 9, 10, 12 - ஆம் திருமுறை என வேறு பல நூல்களைத் திருமுறைகளோடு சேர்த்தவர்களே இவர் நூல்களையும் பதினொராம் திருமுறைகளோடு சேர்த்திருக்க வேண்டும் என்று தோற்றுகிறது.

திருத்தொண்டத் தொகையை ஒட்டி, 'திருத்தொண்டர் திருவந்தாதி' என்று ஒரு நூல் பாடியுள்ளார். இது பதினொராம் திருமுறையில் இடம் பெற்றுள்ளது. இந்நூலின் 69 ஆம் பாடலில், ஆரூரர் - சங்கிலியார் திருமணம் பற்றிய இவரது கருத்து சர்ச்சைக்குரியதாய் இருக்கிறது.

" தகு மகட் பேசினோள் வீயவே
நூல்போன சங்கிலிபால்
புகுமணக் காதலினால் ஒற்றி
ஊர் உறை புண்ணியன் தன்

மிகுமலர்ப் பாதம் பணிந்தரு
ளால்இவ் வியனுலகம்
நகும் வழக் கேநன்மை யாப்புணர்ந்
தான், நாவலூர் அரசே "[19]

சங்கிலியாரை மணம்பேசி ஒருவன் பெண் கேட்க, அதனால் 'மங்கல நூலிழந்தவராகிவிட்ட' சங்கிலியாரைக் காதல் மணம் கொண்ட ஆரூரர் செயல், கேலிபண்ணிச் சிரிக்கத்தக்கது. ஆயினும் ஒற்றி இறைவனருளால், இதனை நற்செயலாக்கிக் கொண்டார் நாவலூரார் - என்பது இப்பாடலின் பொருள்.

1. சங்கிலியார் ஒரு விதவை (நூல் போனவர்)

2. இவரை மணக்க விரும்பிய ஆரூரர் செயல் சிரிப்புக்குரியது.

என்பது மையக்கருத்து. இவ்விரண்டுமே கொச்சையான கருத்துகள் என்பதில் ஐயமில்லை.

ஆரூரருக்கு முதலில் ஏற்பாடு செய்யப்பட்ட திருமணம், 'மானுடமாய் மயங்கும் வழி' தடுத்தாட்கொள்ள வேண்டுமென்ற, ஆரூரரின் கயிலை வேண்டுகோள்படித் தடுக்கப்பட்டது. இத்தடையை ஆரூரரும் ஏற்றார். பின்னர் நடந்த பரவை-சங்கிலி திருமணங்கள்'

" புவிமீது தோன்றி
காதல் இன்பம் கலந்தணைவாய் "[20]

என்ற இறைவன் கட்டளைப்படியே நடந்தவை, சைவத்தையும் சிவபரம்பொருளையும், அவர்தம் அருளிச்செயல்களையும் ஏற்கிற எவரும், 'இறைவன் கட்டளைப்படி' நடந்தது என்பதை ஏற்பர் என்பதில் ஐயமில்லை. இதில், 'நகும்வழக்கு' என்ன இருக்கிறது? எங்கு இருக்கிறது?

இனி, இவர் கருதிய படி, சங்கிலியார் 'நூல் போனவர்' அதாவது விதவை! திருநாவுக்கரசரின் தமக்கை, திலகவதியாரைக் கலிக்காமர் எனும், சேனாபதிக்கு மணம் செய்து கொடுப்பது என 'நிச்சயம்' செய்தனர். திலகவதியாரும் உடன்பட்டிருந்த போது, போர்முனை சென்ற கலிப்பகையார் உயிர் துறந்தார். இதனை அறிந்த திலகவதியார் 'என்னைப் பெற்றவர்கள் என்னை அவர்க்குத் தர

19. பதினொராம் திருமறை (1963) காசி மடம்பதிப்பு பக். xxix
20. பெரிய. திருமலை 27

நிச்சயம் செய்தனர்; ஆகவே நான் அவருக்கு உரியவள்; இப்போது அவர் இல்லை; இனி, நான் 'பொன்மணி நூல்' தாங்கும் தகுதி உடையவளல்லேன்: ஆயினும், சிறுவனாகிய என்தம்பி நலமுடன் வளர, நான் உயிர்தாங்கியிருக்கிறேன்' எனச் சொல்லித் துறவு பூண்டிருந்தார்.

" இங்கே 'நூல்' என்பதற்கு, மாங்கல்ய சூத்திரம் என்று பொருள். இதே பொருள், 'நூல்போன' சங்கிலி என்பதற்கும் உண்டு. "

சங்கிலியார் திருமணம், நிச்சயிக்கப்படாத திருமணம்; பெண்ணும், பெண்வீட்டாரும் இசைவு கூறாத திருமணப்பேச்சு; ஒருவன் சங்கிலியாரைப் பெண்கேட்டுச் சிலரை அனுப்பினான். அவ்வளவுதான்! இது தவிர வேறு எதுவும் நிகழவில்லை.

இந்நிலையில், பெண் பேசிய 'அவன்' இறந்தான். இதனால் சங்கிலியார் நூல் போனவர் ஆவாரோ? 'விதவை' ஆவாரோ? நிகழ்ச்சி இதுவாக, சங்கிலியாருக்கு விதவைப்பட்டம் சூட்டுவதும், அவரை ஆரூரர் மணந்தது, 'நகும் வழக்கு'எனச் சித்தரிப்பதும் கொச்சையான செயல் என்பதில் ஐயமில்லை.

சைவத்தின் மேல் வைத்த பெருமதிப்பால், திரு.வி.க. போன்ற மகான்களும், நம்பி கருத்தை, நம்பினார்கள்.

சிறந்த சைவரும், சைவத்திருமுறை ஆராய்ச்சியில் முத்திரை பதித்தவரும் பேரறிஞருமாக்ய க. வெள்ளை வாரணர் அவர்கள், நம்பி கருத்தை ஏற்க விரும்பவில்லை. நம்பியிடம் வைத்த பெருமதிப்பால் மறுக்கவும் விரும்பாமல், 'நூல்போன' என்பதற்கும் 'நகும் வழக்கு' என்பதற்கும், வேறு வகையாக வித்தகப் பொருள் சொல்லியிருக்கிறார்கள்.[21]

| | | |
|---|---|---|
| நூல் போனசங்கிலி | - | நூல்களைக் கற்றுக் தேர்ந்த சங்கிலி |
| நகும் வழக்கு | - | சுந்தரர் இரு மனைவி கொண்டவர் என்பதற்காக இகழ்ந்து சிரிப்பது. |

இது, அவரது தருக்கத் திறமையையும், திருமுறை ஆசிரியர்களைக் குறைசொல்ல மனமில்லை என்பதையும் புலப்படுத்துகிறதே தவிர, உண்மை என ஏற்பதற்கில்லை.

21. பன்னிருதிருமுறை வரலாறு - முதல்பகுதி அ.ப.கழகம் (1961) ப. 307, 308

## நம்பி ஆரூரரும் திருமணங்களும்

ஆரூரருக்கு, முதலில் ஏற்பாடு செய்யப்பட்ட திருமணம் தடைபட்டுப் போயிற்று. முதுவேதியார் வடிவில் வந்த பரம் பொருளால் தடுத்தாட் கொள்ளப்பட்டார்.

" ......................
செய்ய சேவடி நீங்கும் சிறுமையேன்
மையல் மானுட மாய்மங்கும் வழி
ஐயனே! தடுத்தாண்டருள் செய்க...... "[22]

என ஆலாலசுந்தரர் வேண்டியபடியே நிகழ்ந்த செயல் இது.

பின்னர் இரண்டு திருமணங்கள் நிகழ்ந்தன - இறைவனே முன்னின்று எல்லா ஏற்பாடுகளும் செய்தபடி.

முதல் திருமணம் நிகழ்ந்திருந்தால், அது 'மானுடமாய் மயங்கும்' நிலை பெற்றதாகி விடும். பின்னர் நடந்த திருமணங்கள்

" காதல் இன்பம் கலந்தணைவாய் "[23]

-என இறைவன் கட்டளைப்படி நடந்த திருமணங்கள். ஆகவே, பின் நடந்த திருமணங்கள் 'மானுடமாய் மயங்கச்' செய்யாத திருமணங்கள் என்றே கொள்ள வேண்டும்.

மானுடத்தில் மயங்குவதற்குத் திருமணம் ஒரு முக்கியக் காரணமாயிற்று என்று கருத வேண்டியிருக்கிறது.

## அஞ்சைக்களமும் - நொடித்தான் மலையும்

சுந்தரர் வாழ்வு, பல விந்தைகள் நிறைந்தது. இது பற்றி முன்னர்ப் பல இடங்களில் கண்டோம்.

இவ்வுலக வாழ்வில் அவரது இறுதிநாளும் நேரமும் திருவஞ்சைக் களத்தில் கழிந்தன. அந்நிலையில் அங்கு அவர் பாடிய பதிகம், கனிவின் வெளிப்பாடு. முற்றிய கனியின் சுவைப்பாடு. முதிர்ந்து முறுகிய சிந்தனையின் முறைப்பாடு. இப்பதிகத்தின் சில பாடல்கள். நம் போலும் எளியவர்களையும் ஆழச் சிந்திக்கச் செய்துவிடுவன.

வெறுத்தேன் மனைவாழ்க்கை; விட்டொழிந்தேன், (4:8) என்று அவர் சொன்னது இந்த அஞ்சைக்களப்பதிகத்தில்தான்!

---

22, 23. பெரிய.திருமலை 28, 27

வீடுபேறு என்பது முத்திநிலை; முடிவு நிலை. நாம் வேண்டுவதும் அதுதான். சைவமும், வேறுபிற அகச் சமயங்களும் இதனையே உரைக்கின்றன. வீடு பேற்றுக்குத் தடை எது? பிறவியும், இங்குப் பெறும் அனுபவங்களும் அதன்மேல் கொண்ட பற்றும் தடையாகிவிடுகின்றன. எனவே, சக்கரவாழ்வாய் அமையினும் பிறவியும் வீடு பேறும் ஒன்றுக்கு ஒன்று முரண்பட்டவை. எனவே, பிறவி வேண்டாம். 'வீடு' வேண்டும் என்றே ஞானிகள் பலர் வேண்டினர்.

ஆனால், சுந்தரர் சிந்தனை, இக்கருத்தினின்றும் வேறுபட்டது. பிறவித் தடைகளை நீங்கி, வீடு பேறு அடைவதால்தான் என்ன பயன்? இதனைத் தடுக்கிற பிறவியால்தான் என்ன பயன்? இந்த முரண்பாடுகளை எங்களுக்கு அளித்தது நீயே அல்லவா?

" வீடின் பயன் என்? பிறப்பின்
பயன் என்? " [24]

என்கிறார். ஆக, சுந்தரர் வெறுத்தது மனை வாழ்க்கை மட்டுமன்று; பிறவி மட்டுமன்று; வேண்டிநின்றது, வீடு பேறுங்கூட அன்று! இதற்கும் அப்பாலாகிய ஒரு நிலையையே அவர் விரும்பி நின்றார் என்றே எண்ணமுடிகிறது! அது எது! - ஞானிகள்தான் முடிவு செய்ய வேண்டும்!

இன்னொரு கருத்தும் நம் சிந்தையைக் கிளர்த்தும். கற்று முற்றியோர் எழுதுவர்; அவர்களுக்கு நன்கு 'எழுத வரும்; ஆனால் கற்க முயல்வோர் எழுதுவாரோ? இயலாது, இழுத்து இழுத்துக் கோடு ஆக, கொம்பாக வளைவாக, மெல்ல மெல்ல இழைத்து இழைத்து எழுத்து ஆக்க முயல்வர்.'

இழைத்தல் என்பது தொடக்கநிலை; எழுதுதல் என்பது பழகிய நிலை, இந்த இரு சொற்களுக்கும் இடையே உள்ள மிக நுட்பமான வேறுபாட்டைத் தம் பதிகப்பாடல்வரிகளால் நமக்கு உணர்த்துகிறார் ஆரூரர்.

" இழைக்கும் எழுத்துக்கு
உயிரே ஒத்தியால் "

இறைவன் என்பவன் இருக்கின்றானா? இல்லை, அவன் இல்லையா? காலங்காலமாகத் தொடர்ந்து கருத்து மோதலுக்குரிய

24. சுந்தரர் தேவாரம் 4-5

வினா இது! ஆனால், சுந்தரர் வாக்கு. இந்த வினாவுக்குச் சுருக்கமான விடையை நமக்குத் தருகிறது. 'இல்லை' என்கிற விவாதத்துக்கு ஆதாரப் பொருளாய் 'இருப்பவனும்' நீதானே என்கிறார்.

" இலையே ஒத்தியால்;
உளையே ஒத்தியால் " 25

இல்லை என்று மறுக்கப்படுவதாலேயே அவன் இருக்கிறான் என்கிற ஒரு உடன்பாட்டுக் கருத்துக்கு மையப்பொருளாகி விடுகிறான்! சிவத்தின் செல்லப்பிள்ளைக்குத் தருக்கஞானம் படித்தா வரவேணும்? தானே அமையும்!

## நொடித்தான் மலை

நொடித்தான் மலை என்பது கயிலைமலை. நொடித்தல் - அழித்தல்; அழித்தல் கடவுளுக்குரிய கயிலைமலை.

மண்ணுலகில் பிறப்பு பெற்ற நம்பி ஆரூரர், மண்ணுலகு வாழ்விலிருந்தும் விடுபட்டு வெள்ளானை ஏறிக்கயிலை வழியில் பாடியது; பாடத் தொடங்கியது விண்ணில்; பாடிமுடித்தது கயிலையில். ஆகவே பிறபதிகங்களுக்கு இல்லாத சிறப்புடையது. பிற நாயன்மார்கள் செய்யாத புதுமை இது!

மேலும் சில நுட்பச் செய்திகளையும் இப்பதிகம் நமக்குத் தெரிவிக்கிறது. 'மண்ணுலகிலிருந்து நான் விடுபட்டேன். ஆயினும் துஞ்சுதல் (இறப்பு) இல்லை. 'இறப்பு' என்று இருக்குமானால் உடல் இங்கேயே இருந்தாக வேண்டும். என் உடல் யானையில் செல்லவைத்தான்'.

ஆரூரர் மண்ணுலகில் இல்லை என்பது போலவே, அவர் ஊனுடலும் இங்கு இல்லை. இது அதிசயிக்கத் தக்க பேறு!

" விண்ணுலகத்தவர்கள் விரும்ப வெள்ளை யானையின்மேல்
என் உடல் காட்டுவித்தான் நொடித்தான் மலை உத்தமனே " 26

" துஞ்சுதல் மாற்றுவித்துக் தொண்டனேன் பரமல்லதொரு
வெஞ்சின ஆனை தந்தான் நொடித்தான்மலை உத்தமனே " 27

அவர் ஊன் உடலோடு, யானை ஏறிக் கயிலைக்குச் சென்றார் என்பதற்கான அகச்சான்று இப்பதிக வரிகள்; ஆரூரர் கயிலை செல்லும் போது, வாணன் எனும் தேவர் கணத்தலைவன் வழிகாட்டிச் சென்றான்.

---

25. 26. 27. சுந்தரர் தேவாரம் 4-4. 100-5. 6

கயிலை அடைந்தபோது, இந்திரன் வந்து எதிர்கொண்டான். திருமாலும் பிரமனும், தேவர்களும் எதிர்கொண்டார்கள்.

அங்கிருந்த முனைவர்கள் 'ஆர் இவர்' என்று கேட்க

" இவன் நம்தமர் "

என்று இறைவனே விடை சொன்னார். இச் செய்திகளை

" இந்திரன் பிரமன் எழிலார் மிகு
தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ள என்னை மத்த
யானைஅருள் புரிந்து
மந்திரமா முனிவர் இவன் ஆர் என
எம்பெருமான்
" நம்தமர் ஊரன் " என்றான்
நொடித்தான் மலை உத்தமனே " [28]

இங்கே ஒரு நுட்பக் குறிப்பு உண்டு.

'ஊரன்' என்ற பெயர், மண்ணுலகத் திருநாவலூரில், சடையனார் - வைத்த பெயர். கயிலையில் பழம் பெயர் ஆலால சுந்தரர் என்பது. இறைவன் மண்ணுலக வாழ்வால் பெற்ற பெயரைச் சொல்லிக் குறித்தது புதுமை!

இப்பதிகம், கயிலையில் முடிவுபெறப் பாடப்பட்டது. மண்ணுலுகின் அஞ்சைக்களத்து அப்பனுக்கு உரிமையுடையதாய் வருணன் மூலமாக அனுப்பப்பட்டது. இது இப்பதிகத்துக்குரிய தனிச்சிறப்பாகும்.

## கிடைத்த செய்தியும் கிடைக்காத பதிகமும்

திருஒற்றியூரிலும் தில்லையிலும் பெரும் பற்றுடையவர், வடலூர் இராமலிங்க வள்ளலார். தில்லையிலும் திருப்பெருந் துறையுறை சிவனிடத்தும் தனித்த பேரன்புடையவர் மணிவாசகர். இதே போல தில்லையுடையான் திருக்கூத்திலும், பேரன்புடையவர் நம்பி ஆரூரர்.

தில்லை அம்பலவாணர் நிகழ்த்தும் கூத்து, உலக அதிசயங்களில் ஒன்று. நுட்பமான சமய தத்துவங்களைக் குறிப்பால் உணர்த்துவது.

---

28. சுந்தரர் தேவாரம் 100-9

இந்தக் கூத்தினைக் கண்டு வியக்காத சிவனடியார்கள் இல்லை. வேண்டாம் பிறவி என்று வெறுத்தவர்கள், கூத்துக்காட்சியைக் கண்டபின், வேண்டும் பிறவி என்று வேண்டி நின்றனர்.

" குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால்வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே " [29]

என்பது அப்பர் தேவாரம்.

நம்பி ஆரூரரும் இந்த அனுபவத்தைப் பெற்றவர். திருவதிகையை வணங்கித் திருவடி தீக்கை பெற்ற நம்பி ஆரூரர், தில்லைக்கு வந்தார். கருமூலம் அறுக்கும் திருமூல நாதனைக் கண்டு பணிந்தார். பின் திருச்சிற்றம்பலம் கண்டார். களிற்றுப்படியில் ஏறினார். கண்ணுதல் இறைவன், அம்பலவாணனாக ஆடும் கூத்தை கண்குளிரக் கண்டார்.

" நானே பிறந்த பயன்படைத்
தேன்அயன் நாராணன்எம்
கோனே எனத்தில்லை அம்பலத்
தேநின்று கூத்துகந்த
தேனே திருவுள்ள மாகிஎன்
தீமையெல் லாம்அறுத்துத்
தானே புகுந்தடி யேன்மனத்
தேவந்து சந்திக்கவே " [30]

என்று பிற்காலத்துப் பட்டினத்தடிகள் கண்டு பரவசமாகிப் போன அதே ஆடல் காட்சியை, ஆரூரர் அன்று கண்டு தன்வசம் இழந்தார்.

ஐம்பொறி அறிவையும் கண்களே தந்தன. அந்தக்கரணங்கள் நான்கும் சிந்தையுள்ளே ஒடுங்கி நின்றன. முக்குணங்கள் ஒரு குணமாகி, அது சாத்துவிகம் ஆயின. அவன் ஆடும் திருக்கூத்தே அனைத்தும் ஆயிற்று! இன்பமே எங்கும்! திளைத்தார்! திகைத்தார்! இந்தக் காட்சியைக் காண, என்றும் வேண்டும். மனித்தப் பிறவி என்றெண்ணினார்.

" மாதர் மேல் மனம் வைத்ததனால், தென்புவி
மீது பிறந்திடுக "

எனக் கயிலையில் இறைவன் அளித்த தண்டனை கேட்டு நடுங்கிய ஆலால சுந்தரர் இப்போது,

---

29. அப்பர் தேவாரம் 30. கோயில் நான்மணிமாலை 10

" தெண்ணிலா மலர்ந்த வேணியாய்
உன்றன் திருநடம் கும்பிடப் பெற்று
மண்ணிலே வந்த பிறவியே
எனக்கு வாலிதாம் இன்பம் ஆம் " [31]

என்று வேண்டி நின்றார். தில்லைக்கூத்தனும் அவன் ஆடிய கூத்தும் செய்த ரசவாதம் இது!

பேரூரில், கூத்தப் பெருமானில் ஆடல் காட்சியைக் கண்டபோதும் இந்த உணர்வையே ஆரூரர் பெற்றார்.

" பொன்மணி மன்றுள் எடுத்த சேவடியார்
புரிநடம் கும்பிடப் பெற்றால்
என் இனிப் புறம் போய் எய்துவது " [32]

என்று பூரித்துப் போகிறார்.

இந்தச் செய்தியைப் பெரியபுராணம் கூறுகிறது. அவர் பாடிய திருமுறை வரிகளையும் சுட்டிக்காட்டுகிறது. ஆனால், அந்தப் பதிகங்கள் இப்போது கிடைக்கவில்லை. அற்புதமான இரு பதிகங்கள் கிடைக்காமல் போனது, சைவர்களின் தவக்குறையே!

வைணவர்கள், இராமபிரானைத் தெய்வம் என்றும், தெய்வ அவதாரமாய் வந்த மானுடம் என்றும் பெருமையுடன் கருதுவர்.

வாலிவதை, மானுட இராமனுக்கு அழிக்க முடியாத ஒரு கரும்புள்ளி. ஆனால், அவதார இராமனுக்கு, அது அவதார நோக்கம் நிறைவேறியதன் ஒரு பகுதியே தவிர, கரும்புள்ளியாகாது என்பதும், அவதார நிலைபெற்று வந்த பெருமக்களின் செயல்களைத் தருக்கத் திறமை கொண்டு அளந்தறிய முயலக்கூடாது என்பதும், தீவிர வைணவர்களின் முடிவான கருத்து.

சிவம் கனிந்த சைவராகிய முனைவர் ம.ரா.போ. குருசாமி அவர்கள் தம்முடைய நூலில்,

" மூளை கொண்டு, இலக்கியமாக மட்டும் இராமாயணத்தைக் கணிப்பது பொருந்துமா என்பதை அறிஞர் உலகம் கருதிப் பார்க்கவேண்டும் " [33]

என்கிறார்! என்றாலும் வாலி வதை சர்ச்சை தொடர்கிறது, தொடரும்.

---

31. பெரியபுராணம் தடுத். 107 32. பெரிய. ஏயர் 91

33. காசில் கொற்றம் - முதல் பதிப்பு - 2002 ப.108

 

ஆனால், ஆலால சுந்தரர், தெய்வமாயிருந்து, 'ஒரு சிறந்த நோக்கத்திற்காக' மானுடமாய் வந்தவரல்லர். தெய்வத் திருமுன்பு இன்ப நிலை பெற்றிருந்தவர்; அங்குக் கூடாத எண்ணம் ஒன்றைக் கொண்டதனால், இறைவன் இட்ட கட்டளைப்படி, மண்ணுலகில் மானுடமாய் வந்தவர். ஆகவே, இவரை 'அவதாரம்,' என்று ஏற்பதில் கொஞ்சம் நெருடல் உண்டு!

ஆலாலசுந்தரர், பரவை திருமணத்தை மறைத்து, பொய்ச் சத்தியம் செய்து சங்கிலியாரை மணந்துகொண்டது ஒரு கரும்புள்ளி என்று கருத இடமுண்டு. பரவை-சங்கிலியார்களை நாயன்மார் பட்டியலில் சேர்க்காததும் குறையுடைய செயல் என்று கருத இடமுண்டு. ஆயினும்,

இறைவன் கட்டளைப்படி மானுடமாய் வந்த 'நம்பி ஆரூரர்' செயலைக் கரும்புள்ளி எனக் கருத வேண்டியதில்லை என அமைதி கூறலாம்.



## சான்றோர்களைப் பற்றி எழுதிய அறிஞர்கள்

**1**

திருஞான சம்பந்தர் *(மறைமலை மைந்தன் முத்தையா)*
திருநாவுக்கரசர் *(பேராசிரியர் இராம.இருசுப்பிள்ளை)*
சுந்தரர் *(புலவர்மணியன்)*

**2**

மாணிக்கவாசகர் *(முனைவர் தெ.ஞானசுந்தரம்)*
காரைக்கால் அம்மையார் *(முனைவர் தரணி பாஸ்கர்)*
சேக்கிழார் *(முனைவர் செல்வக்கணபதி)*

**3**

ஆண்டாள் *(முனைவர் நிர்மலா மோகன்)*
குலசேகர ஆழ்வார் *(முனைவர் கா.அரங்கசாமி)*
திருமங்கையாழ்வார் *(முனைவர் அமுதன்)*

**4**

பெரியாழ்வார் *(முனைவர் தரணி பாஸ்கர்)*
நம்மாழ்வார் *(முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்)*
வேதாந்ததேசிகர் *(முனைவர் பிரேமா நந்தகுமார்)*

**5**

ஸ்ரீமத்வர் *(டாக்டர் சுதா சேஷையன்)*
ஸ்ரீராமானுசர் *(முனைவர் ம.பெ. சீனிவாசன்)*
வள்ளலார் *(முனைவர் ம.ரா.போ.குருசாமி)*

**6**

திருமூலர் *(முனைவர் அ.அறிவொளி)*
மெய்கண்டார் *(முனைவர் ந.இரா.சென்னியப்பன்)*
தாயுமானவர் *(முனைவர் இ.சுந்தரமூர்த்தி)*

**7**

வீரமாமுனிவர் *(முனைவர் ம.செ.இரபிசிங்)*
குணங்குடி மஸ்தான் *(முனைவர் தக்கலை பஷீர்)*
மகாகவி பாரதியார் *(முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்)*

**8**

சாந்தலிங்க சுவாமிகள் *(தவத்திரு.சாந்தலிங்க இராமசாமி அடிகளார்)*
கந்தசாமி சுவாமிகள் *(புலவர் ப.வெ.நாகராசன்)*
சுவாமி சித்பவானந்தர் *(வழக்கறிஞர் மு.மாரியப்பன்)*

**9**

சிவப்பிரகாசர் *(முனைவர் ம.மனோன்மணி)*
சிவஞான முனிவர் *(முனைவர் வே.செல்லாத்தாள்)*
வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் *(முனைவர் நெல்லை ந.சொக்கலிங்கம்)*

**10**

ஆதிசங்கரர் *(எஸ்.வைத்தியநாத கிருஷ்ணன்)*
அருணகிரியார் *(முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன்)*
குமரகுருபரர் *(முனைவர் இரா.மோகன்)*